# குன்றக்குடி அடிகளார்

## நூல்வரிசை

15 தொகுதிகள்
6000 பக்கங்கள்

## தொகுதி 10

## சமயம்

முதன்மைப் பதிப்பாசிரியர்
தவத்திரு பொன்னம்பல அடிகளார்

விற்பனை உரிமை

**மணிவாசகர் பதிப்பகம்**
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதல் பதிப்பு : டிசம்பர், 2001
திருவள்ளுவர் ஆண்டு : 2032
உரிமை : திருவண்ணாமலை ஆதீனம்
மணிவாசகர் வெளியீட்டு எண் : 893

**விலை : ரூ. 90-00**

பதிப்பாசிரியர் குழு :
தமிழாகரர் தெ. முருகசாமி
நா. சுப்பிரமணியம்
குன்றக்குடி பெரியபெருமாள்
க. கதிரேசன்
மரு. பரமகுரு

செயலர் :
பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பன்

கிடைக்குமிடம் :
**மணிவாசகர் நூலகம்**
12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608 001.
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 108.
9, சிவப்பிரகாசம் தெரு, தி.நகர், சென்னை - 600 017.
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625 001.
15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641 001.
28, நந்தி கோயில் தெரு, திருச்சி - 620 002.

தொலைபேசி :

| | | |
|---|---|---|
| சிதம்பரம் | : | 30069 |
| சென்னை | : | 5361039 |
| தி. நகர் | : | 4357832 |
| மதுரை | : | 622853 |
| கோயமுத்தூர் | : | 397155 |
| திருச்சி | : | 706450 |

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை 600 021.
தொலைபேசி : 5954528



தமிழ் மாமுனிவர்
தவத்திரு குன்றக்குடி அடிகளார்
1925 - 1995

தமிழ்மாமுனிவர் அருள்நெறித் தந்தை

# தவத்திரு குன்றக்குடி அடிகளார்

## வாழ்க்கைக் குறிப்புகள்

| ஆண்டு | நிகழ்வுகள் |
|---|---|
| 1925 | • தோற்றம் |
| | • பூர்வாசிரமம் : தந்தையார் : திரு. சீனிவாசம் பிள்ளை<br>தாயார் : திருமதி. சொர்ணத்தாச்சி |
| | • பிள்ளைத் திருநாமம் : அரங்கநாதன் |
| | • தோற்றம் பெற்ற ஊர் : தஞ்சை மாவட்டம் திருவாளப்புத்தூர் அருகேயுள்ள நடுத்திட்டுக் கிராமம். |
| 1931 - 1936 | • சிதம்பரம் அண்ணாமலை நகரில் வாசம்.<br>• 'சொல்லின் செல்வர்' ரா.பி. சேதுப்பிள்ளை, நாவலர் நாட்டார், சுவாமி விபுலானந்தர் ஆகியோர் தொடர்பு. |
| 1937- 1942 | • தமையனார் திரு. கோபாலகிருஷ்ண பிள்ளை வீட்டில் கடியாபட்டியில் வாழ்தல். |
| | • பள்ளியிறுதித் தேர்வு எழுதுதல். |
| | • 1942 விடுதலைப் போராட்டத்தில் ஈடுபாடு. |
| | • 'வினோபா பாவே படிப்பகம்' தொடங்கி நடத்துதல். |
| 1945 | • தருமபுரம் ஆதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம் கயிலைக் குருமணி அவர்களிடம் கந்தசாமித் தம்பிரான் என தீட்சாநாமத்துடன் தம்பிரானாதல். |
| | • தருமபுரம் தமிழ்க் கல்லூரியில் பயிலுதல். |
| 1947 - 1948 | • சீர்காழிக் கட்டளைத் தம்பிரான் - திருஞான சம்பந்தர் திருமடம் தூய்மைப் பணி; திருமுறை வகுப்பு, விழா நடத்துதல். |
| 1949 | • குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் இளவரசு பட்டம் ஏற்பு. திருநாமம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள். |
| 1951 | • காரைக்குடிக் கம்பன் விழாவில் 'புதரிடைமலர்' என்ற தலைப்பில், அறிஞர்களின் நெஞ்சம் கவர்ந்த சொற்பொழிவு. |
| 1952 | • குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் 45ஆவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளல். |

- அருள்நெறித் திருக்கூட்டம் தோற்றம்.
- 'மணிமொழி' என்னும் பெயரில் இயக்கப் பத்திரிகை வெளியிடல்.

1953
- ஆதீனத்தின் அருளாட்சியிலுள்ள பிரான்மலைத் திருக்கோயில் சித்திரைத் திருவிழாவின்போது (சங்க கால வள்ளல் பாரி வாழ்ந்திருந்த மலையில்) வள்ளல் பாரி விழாத் தொடங்குதல்.
- பல்லக்கில் பட்டணப் பிரவேசம் வருதலைத் தவிர்த்தல்.
- இலங்கைப் பயணம் - இரண்டு வாரம் சுற்றுப் பயணம்.

1954
- இராசாசி தலைமையில் தேவகோட்டையில் அருள்நெறித் திருக்கூட்ட மாநாடு.
- திராவிடர் கழகத் தலைவர் பெரியார் சந்திப்பு.
- தாய்லாந்து, இந்தோசீனா, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் சுற்றுப்பயணம் (3 திங்கள்)

1955
- அருள்நெறித் திருப்பணி மன்றம் தொடங்குதல்.
- 'தமிழ்நாடு' நாளிதழ் தவத்திரு குன்றக்குடி அடிகளார் என்ற பெயரை அறிமுகப்படுத்துதல்.

1956
- அறிஞர் அண்ணா குன்றக்குடி திருமடத்திற்கு வருகை.
- ஆச்சார்ய வினோபா பாவே திருமடத்திற்கு வருகை.

1958
- குன்றக்குடியில் உயர்நிலைப்பள்ளி தொடங்குதல்.

1959
- ஆ. தெக்கூரில் பள்ளிச் சீரமைப்பு மாநாடு நடத்துதல்; பாரதப் பிரதமர் நேரு மாநாட்டிற்கு வருகை.

1960
- மத்திய அரசு சேமநலக் குழு உறுப்பினராதல்.

1962
- சீனப்போரின்போது தங்க உருத்திராட்ச மாலையைத் திருவொற்றியூர்க் கூட்டத்தில் ஏலம் விட்டு ரூ. 4000 தருதல்.
- மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் திருக்கோயிலில் திருமுறைத் தமிழ் அருச்சனை தொடங்குதல்.

1965
- இந்தி எதிர்ப்புப் போராட்டம்; அரசு வழக்கு தொடர்தல்.

1966
- தமிழ்நாடு தெய்வீகப் பேரவைத் தோற்றம்.

1967
- திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம் தோற்றம்.
- திருக்கோயில் கருவறைக்குள் சீலமுடைய அனைவரும் சாதி வேறுபாடின்றி திருமுறை நெறிப்படி - போதொடு நீர் சுமந்தேத்தி வழிபாடு செய்வதெனத் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம் தீர்மானம் நிறைவேற்றுதல்.

1968
- இரண்டாம் உலகத் தமிழ்மாநாடு - 'திருக்குறள் உரைக்கோவை' நிகழ்ச்சி தொடக்கவுரை நிகழ்த்தல்

- திருக்குறள் இந்திய நாட்டின் தேசிய நூலாக வேண்டுமென்று இம்மாநாட்டில் வலியுறுத்தல்.

- இலங்கைப் பயணம். இரண்டு வாரங்கள், இலங்கை யாழ்ப்பாணத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் திருக்கோயில் நுழைவுக்காக உண்ணா நோன்பிருத்தல்.
- கீழவெண்மணித் தீவைப்பு நடந்த இடத்தைப் பார்வையிட்டுப் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதல் கூறுதல்; புத்தாடை வழங்குதல்.

1969
- பாபநாசம் பொதிகையடி திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி ஏற்பு;
- கலைஞர் மு. கருணாநிதி பாரி விழாவிற்கு வருகை
- கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் விருப்பத்தின் வழி தமிழ்நாடு சட்டமன்ற மேலவை பொறுப்பேற்றல்
- தமிழ்நாடு தெய்விகப் பேரவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெறல்.

1970
- சட்டமன்ற மேலவையில் இந்து அறநிலையத் திருத்த மசோதா - சாதி வேறுபாடின்றி அனைவரையும் அர்ச்சகராக நியமனம் செய்தல் பற்றிப் பேசுதல்.

1971
- தமிழ்நாடு சமாதானக் குழுத் தலைவராதல்.
- சோவியத் பயணம்; 22 நாள் சுற்றுப் பயணம்.

1972
- பாபநாசம் பொதிகையடி திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி, திருவள்ளுவர் கலைக் கல்லூரியாக உருவாதல்.
- சென்னை, மயிலாப்பூர் திருவள்ளுவர் திருக்கோயில் திருப்பணிக்குழுத் தலைவராக நியமனம்; வள்ளுவர் கோட்டம் திருப்பணித் தலைவராக நியமனம்.
- குன்றக்குடித் தருமைக் கயிலைக் குருமணி உயர்நிலைப் பள்ளிக்குப் புதிய இடத்தில் கட்டடம் கட்டித் திறத்தல்.

1973
- திருக்குறள் பேரவைத் தோற்றம்.
- திருச்சியில் தமிழ்நாடு தெய்விகப் பேரவை இரண்டாவது மாநில மாநாடு நடத்துதல்.
- "கோயிலைத் தழுவிய குடிகளும் குடிகளைத் தழுவிய கோயிலும்" என்ற முழக்கம் நாட்டளவில் வைக்கப்பெற்றது.
- குன்றக்குடி கிராமத்தைத் தன்னிறைவுக் கிராமமாக ஆக்கும் திட்டம் உருவானது.

1975
- நாகர்கோவிலில் தமிழ்நாடு தெய்விகப் பேரவை மூன்றாவது மாநில மாநாடு நடைபெறல்.

- சென்னைப் பல்கலைக் கழகத்தில் சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ஏ.பி.சி. வீரபாகு சைவசித்தாந்த அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- இராமநாதபுரம் இனக் கலவரம் - அமைதிப்பணி.

1982
- குமரி மாவட்டம் மண்டைக்காடு கலவரம் - அமைதிப் பணியாற்றல்.
- மண்டைக்காடு அமைதிப்பணி பற்றிச் சட்ட மன்றத்தில் முதல்வர் மாண்புமிகு எம்.ஜி.ஆர். பாராட்டுதல்.
- திருவருட்பேரவை தொடங்குதல்.
- மலேசியா, கொரியா, ஹாங்காங், ஜப்பான், செஞ்சீனா முதலிய நாடுகளில் சுற்றுப்பயணம்.
- புளியங்குடி இனக்கலவரம் - அமைதிப்பணி.

1984
- பாரதத் தலைமை அமைச்சர் திருமதி. இந்திராகாந்தி அவர்கள் குன்றக்குடிக் கிராமத் திட்டக்குழுவின் பணிகளைப் பாராட்டல்.

1985
- நடுவணரசு திட்ட ஆணைக்குழுப் பிரதிநிதிகள் குன்றக்குடி வருகை; கிராம வளர்ச்சிப் பணிகளைப் பார்வையிட்டுப் பாராட்டுதல்.
- பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் வளர்ச்சிப் பணிக்குத் திட்டக்குழு அமைத்தல்.
- மணிவிழா

1986
- தமிழ்நாடு அரசின் முதல் திருவள்ளுவர் விருது பெறுதல்
- இந்திய அரசு திட்டக்குழு குன்றக்குடித் திட்டப் பணியைப் பாராட்டி "Kundrakudi Pattern" என்று அறிவித்தது.

1989
- இவர் எழுதிய 'ஆலயங்கள் சமுதாய மையங்கள்' என்னும் நூல் தமிழ்நாடு அரசின் முதற்பரிசு பெற்றது.
- அண்ணாமலைப் பல்கலைக்கழகம் கௌரவ டாக்டர் (D.Litt) பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

1991
- இந்திய அரசின் அறிவியல் செய்தி பரப்பும் தேசியக்குழு, தேசிய விருது வழங்கிச் சிறப்பித்தது.
- இலண்டன், அமெரிக்கா சுற்றுப்பயணம்.
- அரபு நாடுகள் பயணம்.

1993
- மதுரை காமராசர் பல்கலைக்கழகம் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' விருது வழங்கிச் சிறப்பித்தது.

1995
- இறைநிலை யடைதல்.



# அடிகளாரின் சமயப் பணிகள்


பதிப்புச்செம்மல் **ச. மெய்யப்பன்**

நிறுவனர் : **மெய்யப்பன் தமிழாய்வகம்**


தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழ்கூறு நல்லுலகில் சமய மறுமலர்ச்சிக்கு வழிகண்டவர். அடிகளார் பூர்வாசிரமத்தில் செட்டிநாட்டில் எங்கள் ஊராகிய இராமச்சந்திரபுரத்தில் உயர்நிலைக் கல்வி பயின்றார்கள். எங்கள் தந்தையார் குங்கிலியம் பழ. சண்முகனார் அவர்களும், அடிகளாரின் அண்ணன் அவர்களும் விநோபா பாவே வாசகசாலையைத் தொடங்கினர். அடிநாள் தொட்டு அடிகளாரை நான் நன்கறிவேன். அடிகளார் திருவண்ணாமலை ஆதீனத்தில் பொறுப்பேற்ற பின்னர் சிறந்த சொற்பொழிவாளராக விளங்கினார்கள். முதன்முதலில் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களும் அடிகளார் அவர்களும் நாங்கள் நடத்திய தமிழர் திருநாள் திருக்குறள் விழாவில் ஒரே மேடையில் பேசினர். அப்பொழுது ஆத்திகமும் நாத்திகமும் ஒரே மேடையில் சந்திக்கின்றன என்ற செய்தியை வியப்புடன் நாளிதழ்கள் வெளியிட்டன.

50, 60களில் அடிகளார் தமிழ்மேடைக்குத் தம் பேச்சால் புதிய வலிமை சேர்த்தார்கள். தமிழகம் முழுவதும் அடிக்கடி பயணம் செய்யும் நான் அடிகளாரின் நூற்றுக்கு மேற்பட்ட பொழிவுகளைச் செவிமடுக்கும் நல்வாய்ப்பைப் பெற்றேன். அடிகளார் நூல் பலவற்றைப் படிக்கும் பேறும் பெற்றேன். அப்பொழுதெல்லாம் அடிகளார் சிந்தனைகள் அனைத்தையும் ஒருசேரத் தொகுத்துப் பார்க்க வேண்டும் என்ற வேணவா என்னுள்ளத்தில் முகிழ்த்தது. அது இன்று கைகூடுகிறது.

தமிழ் மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழ்நாடு செய்த தவப்பயனால் 1925இல் தோன்றி 70 ஆண்டு காலம் தமிழகத்திற்குப் பல்வேறு பணிகள் வாயிலாகக் கடமை ஆற்றிய நாட்டுத் துறவியாவார்.

தவத்திரு அடிகளாரைப் புரட்சித்துறவி என்றும், மிகச் சிறந்த சொற்பொழிவாளர் என்றும் நாடு கருதும்.

அடிகளார் எழுத்துக்கள் அனைத்தையும் நூல்வரிசையாகத் தொகுக்கும் போது ஒவ்வொரு தொகுதியிலும் 400 பக்கங்களுக்குக் குறையாமல் 15 தொகுதிகளாக மொத்தம் சற்றொப்ப 6000 பக்கங்கள் அளவில் விரிந்தன. தம் 50 ஆண்டுப் பொது வாழ்வில் அடிகளார் எழுதிய 60 நூல்களையும் பதிப்பாசிரியர் குழு 5 தலைப்புக்களில் வகைப்படுத்தியது. நூற்றொகுதி அனைத்தையும் ஒருசேர வைத்து நோக்கும்போது அடிகளார் மிகச் சிறந்த நூலாசிரியராகச் சிறப்பதை நாம் உணர்கிறோம்.

1999 டிசம்பர் திங்களில் முதல் தொகுதி முகிழ்த்தது. 2001 நவம்பரில் தொகுதிகளின் அச்சுப் பணி முடிந்தது. திருக்குறள் பற்றி மட்டும் அடிகளார் கட்டுரைகள் 4 தொகுதிகளாகச் சற்றொப்ப 1600 பக்க அளவில் விரிந்துள்ளது.

தருமபுரம் ஆதீனம், பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க அடிகள் ஆகியோர் அளித்துள்ள அணிந்துரைகளில் அடிகளாரின் இறையுணர்வையும், பக்திவழி நாட்டுக்கு ஆற்றிய பங்களிப்பையும், சைவத்திற்கும், தமிழுக்கும் அடிகள் ஆற்றிய அளவிடற்கரிய பணிகளையும் போற்றியுள்ளனர்.

தமிழ்நாட்டின் மிகச் சிறந்த திறனாய்வாளர்களான சிலம்பொலி செல்லப்பர், வா.செ. குழந்தைசாமி, தமிழண்ணல், வை. இரத்தினசபாபதி, ஔவை நடராஜன், சிற்பி பாலசுப்பிரமணியன், ச.வே. சுப்பிரமணியம், கு. சுந்தரமூர்த்தி முதலியோர் அடிகளார் நூல்வரிசையை ஆராய்ந்து, தேர்ந்து, தெளிந்து அடிகளாரின் சிந்தனை வளத்தையும், சமூக உணர்வினையும், பல்துறை அறிவினையும், மனித நேயத்தையும், தமிழாற்றலையும், அழுத்தமாக எடுத்துக் கூறும் பெற்றியினையும் தங்கள் அணிந்துரைகளில் சான்றுகளுடன் விளக்கி உள்ளனர்.

பொதுவாக 15 தொகுதிகளிலும் அடிகளாரின் ஆளுமை வெளிப்பட்டாலும், மூல இழையாகச் செல்வது தமிழ்ச் சமூகத்திற்குரிய விழுமங்கள், உன்னதங்கள், உயர்வுகள், சிறப்புக்களே. பழந்தமிழ் இலக்கியமாகிய பத்துப்பாட்டு, எட்டுத் தொகையில் தொடங்கி பாரதி பாடல்வரை தமிழரின் தனி அடையாளங்களின் வேர்களை அவை இனங்காட்டுவன. அயல் வழக்கினைத் தமிழ் வழக்கு வென்ற திறத்தினை அடிகளார் அழுத்தம் திருத்தமாக ஆவணமாக்கி விடுவார்.

சமயக் கட்டுரைகள் பொதிந்துள்ள இத்தொகுதிகள் வாழ்முதலாகிய இறைவனைப் பற்றிய அடிகளாரின் சிந்தனைப் பதிவுகளைக் கொண்டன. இந்தப்புலம் அடிகளாரின் ஆன்மா விரும்பும் விருப்பமான நிலம். அவர்கள் நாளும் பயணம் செய்யும் ஞானபூமி. ஆதலால் சமயம்பற்றி அடிகள் கொண்ட அனைத்துக் கருத்துக்களின் கருவூலமாக இத்தொகுதிகள் திகழ்கின்றன. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல, கோயிலைத் தழுவிய குடிகளும், குடிகளைத் தழுவிய கோயிலும் என்னும் கொள்கை உருவாக்கம் அடிகளாரின் தனிக்கொடை.

தமிழ் இலக்கியம் சமயம் சார்ந்த இலக்கியம். சமணமும் தமிழும், பௌத்தமும் தமிழும் எனப் பகுத்தாலும் இலக்கிய நிலப்பரப்பில், பங்களிப்பில் சைவமும் தமிழும்தான் தனிச்சிறப்பு பெறுகிறது.

அடிகளார் சிவநெறியினைச் சிரத்திலும் சிந்தையிலும் வைத்துப் போற்றிக் கூறிய, எழுதிய கருத்துக்கள் சைவ சமயத்திற்குப் புத்துணர்வையும், புத்தொளியையும் நல்குவன. புரட்சித் துறவியாகிய அடிகளாரின் புதிய பார்வை திருமுறைகளை மறுமைக்கு மட்டுமின்றி இம்மைக்கும் வழிகாட்டும் என நிறுவுவன. மனிதனை மேம்படுத்தும் எண்ணங்களை, சீரிய செவ்வறங்களைக் கூறுவன திருமுறைகள்.

அடிகளார் அப்பரடிகளிடம் கொண்ட அன்பு அளவிடற் கரியது. நாவுக்கரசர் காட்டிய நல்லறங்களை நாளும் சொல்லி மகிழ்பவர். எட்டாந் திருமுறை ஆகிய திருவாசகத்தை எண்ணி எண்ணி எப்போதும் இறும்பூது எய்துபவர். சேக்கிழார் இயற்றிய 12ஆம் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தை நிகழ்கால சமூக வாழ்க்கையோடு இயைத்துக்காட்டி, சைவ சமயம் என்பது தமிழர் வாழ்க்கை நெறி என்பதை ஒல்லும் வகையெலாம் உணர்த்தியவர்.

கோயிற் பண்பாடு என்னும் கோட்பாட்டை விளக்குவதில் அடிகளார் முதல் வரிசையர். சைவ சமய, தோத்திர, சாத்திர சரித்திரக் கருத்துக்களில் ஆழங்கால் பட்டவர். பரந்துபட்ட தமிழ்நூற் பயிற்சியும் வாழ்வியல் அனுபவங்களும் இத் தொகுதிகளில் ஒளி வீசுகின்றன.

இறைவன், பிறவித்துன்பம், வினைக் கொள்கை, ஊழ் உண்மை, ஓதி உணர்தல், புலனடக்கம், மெய்ப்பொருளை உணர்தல், விண்ணும் மண்ணும், வீட்டுலகம் முதலியன பற்றி அடிகளார் கூறிச் செல்லும் கருத்துக்கள் ஆழ்ந்த சிந்தனைகளின் வெளிப்பாடு.

அடிகளார் தெளிவுற அறிந்திடுதல், தெளிவுற மொழிந்திடுதல் என்ற இரு நிலையிலும் சிறப்பாக விளங்கியவர் என்பதனை இத்தொகுதிகள் பறைசாற்றுகின்றன. இலக்கியக் கட்டுரைகளாயினும் சரி, சமயக் கட்டுரைகளாயினும் சரி அடிகள் மனித குல மேம்பாடு ஒன்றிற்கே உயர்வளிப்பவர் என்பது விளங்கும்.

இந்நூல் வரிசையால் அடிகளாரிடம் தமிழ் முனிவர் திரு.வி.க.வின் சமுதாயப் பார்வையும், சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம் அவர்களின் சமுதாய அரசியற் பார்வையும் இலங்கியதை அறியலாம். தமிழ் தேசியம் வேர்கொள்ள அடிகளார் ஆற்றிய பணி தமிழர் வரலாற்றில் பதிவு செய்யப் பெற்று விட்டது.

அருள் நெறித் திருக்கூட்டம், தெய்வீகப் பேரவை, திருக்குறட் பேரவை, திருவருட் பேரவை முதலிய அமைப்புக்களைத் தோற்றுவித்து, தமிழ் இனம், நாடு முன்னேறப் பல்லாற்றானும் பணிசெய்தவர்.

உலகின் பெரும் பகுதியினைப் பலமுறை வலம் வந்தவராதலால் இவர் தம் எழுத்தும் பேச்சும் சமூக உணர்வுடன் சிறந்து விளங்கின. பயணத்திற்குப் பயணம் இவரது அனுபவ அறிவு செழுமை பெற்றதை இந்நூல்வரிசை பரிணாம முறைப்படி உணர்த்துகிறது. சமுதாய உய்வுக்கு அடிகள் உரைத்த பொன்மொழிகளின் படிமுறை வளர்ச்சியை, வாழ்வியல் அறங்கள் பற்றிய அடிகளாரின் நோக்கும் போக்கும் மாற்றம் பெற்ற திறத்தினை இவ்வரிசை நூல்கள் உயிரோவிய மாக்குகின்றன. தமிழகத் துறவிகள் வரலாற்றில் அடிகளாரைப் போல அனைத்துலகையும் வலம் வந்தவர் வேறு எவரும் இலர்.

பரிபாடலின் பக்திநெறி பற்றிப் பேசினாலும், பாரதியின் பக்திமைபற்றிப் பேசினாலும் பக்திநெறியில் அடிகளின் பார்வை புதியது. 'பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம், பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்' என்கிற கோட்பாட்டை, 'நாமார்க்கும் குடி அல்லோம்' என்னும் நாவுக்கரசரின் குரலோடு இணைத்து சுதந்திரக் குரலாக எடுத்துரைப்பார். விடுதலை வேள்விக்கு வித்திட்டவர் என வீறார்ந்த மரபை விளக்கிக் கூறுவார்.

கடவுட் பற்றும், கவிதைப் பற்றும், கட்சிசாரா நாட்டுப் பற்றும் அடிகளார் எழுத்துக்களில் எங்கும் பரக்கக் காணலாம்.

பாரதியாரை ப. ஜீவானந்தம் ஆரவாரமாக, உணர்ச்சி பொங்கச் சொல்லிக் கூத்தாடுவார், அடிகளாரோ ஆரவாரமின்றி ஆழ்ந்த அமைதியோடு அழகு தமிழில் ஆற்றொழுக்காக எடுத்துரைப்பார். இவர் எழுத்து நடை திரு.வி.கவைப் போல, பேச்சு நடை தழுவியது. சிறிய தொடர்கள் சிந்தனையைத் தூண்டுபவை.

ஒட்டுமொத்தமாக எழுத்துக்கள் அனைத்தையும் ஒருசேரத் தொகுத்துப் பார்க்கிறபோது அடிகளாரின் அறிவாற்றலும், எழுத்தாற்றலும், தமிழாற்றலும் நம்மை வியப்படையச் செய்கின்றன. ஒரு நொடியும் வீணாக்காது தமிழினம் உய்ய அடிகள் ஆற்றிய அரும் பணிகளின் ஆழத்தையும், அகலத்தையும் விரிவையும் இந்நூல் வரிசைகள் விளக்குகின்றன. உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை.

# அணிந்துரை

முனைவர் ச.வே. சுப்பிரமணியன், தமிழூர்.

அடிகளார் என்று தமிழகத்தில் சொன்னால் குன்றக்குடி அடிகளாரை மட்டுமே குறிக்கும். பட்டித்தொட்டிகளில் எல்லாம், தமிழர் வாழும் உலக நாடுகளில் எல்லாம் அடிகளார் சென்று பேசியிருப்பார். அடிகளாரை அறியாத தமிழர் இருக்க இயலாது. அடிகளார் எல்லாத் தமிழ் நெஞ்சங்களிலும், குடிகொண்டு இருப்பவர். துறவிகளில் தனித்தன்மை உடையவர். இவரைப்போன்ற துறவியை எங்கும் காண இயலாது.

அடிகளார் ஒரு சிந்தனைச் சிற்பி. சமுதாயச் சிற்பி. சமுதாயத்தில் பல மாற்றங்களைச் செய்யவிரும்பியவர். அவர் வாழ்நாள் முழுவதும் சமுதாயத்தொண்டு செய்தவர். அருள்நெறி திருக்கூட்டம், திருக்குறள் பேரவை போன்றவற்றைத் தொடங்கி தமிழகம் முழுவதும் திருக்குறளைப் பரப்பியவர். பேச்சாற்றலில் வல்லவர் என்று நினைத்துக்கொண்டு இருப்பவர்களுக்கு அவர் எழுத்தாற்றலிலும் வல்லவர் என்பதை அவருடைய எழுத்துக்கள் நமக்கு உணர்த்துகின்றன. அவர் எழுதியவைகளைப் பல தொகுதிகளாக மணிவாசகர் பதிப்பகம் வெளியிட்டு வருகிறது.

அடிகளாரின் பத்தாவது தொகுதியாகிய திருவருட் சிந்தனை என்ற நூலுக்கு அணிந்துரை தரவேண்டும் என்று அடிகளாரின் வழித்தோன்றல் பொன்னம்பல அடிகளார் விரும்பியதாகக் கூறி அத்தொகுதியை என்னிடம் தந்தனர். அப்போது நான் 10-ஆவது ஆளாகத்தான் நினைக்கப் பெற்றேனா? என்று சிந்தித்தேன். அதில் கூட ஒரு சிறப்பு இருக்கிறது. அடிகளாரே அதை எழுதுகிறார்.

“இறைவா நான் பூஜ்யமாகி உன் பொன்னடி போற்றும் வாழ்வினை அருள்க” (ஜனவரி - 8)

இறைவா! கணக்கில் பூஜ்யத்திற்கு மதிப்புண்டு. ஆம். இறைவா, ஒரு சாதாரண பூஜ்யம் ஒன்றுக்குப்பின் வருமானால் எண்ணிக்கையைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டுகிறது. நான் ஒரு பூஜ்யமானாலும், உனக்குப் பின்னால் நின்றால் எவ்வளவு மதிப்பு பெருமை. ஆம். இறைவா அருள் கூர்ந்து நீ எப்போதும் எனக்கு - முன்னால் இடக்கைப்புறமாக நின்றருள் செய். உன்னைச் சார்ந்து. உன்

வலப்பக்கத்தில் பூஜ்யமாக நான் நிற்பேன், இதுவே போதும் இறைவா இறைவா, நான் பூஜ்யமாவது எளிதான காரியமா? இல்லையே. ஆயிரம் ஆயிரம் எண்ணங்கள், ஆசைகள் விருப்பு வெறுப்புகள் இவ்வளவையும் நான் தொலைத்துப் பூஜ்யமாவது எப்போது? இப்பிறப்பில் நடக்குமா? நடக்காதா? இது என்ன ஜோசியம்! நின் கருணையிருந்தால் நடக்கும்.

திருவருட் சிந்தனை என்ற நூல், தினசரி தியானம் போன்று தினந்தோறும் மூன்று நிமிடங்கள் இறைவனைச் சிந்திப்பதற்கு வழிவகுக்கிறது. ஜனவரி முதல் நாளில் இருந்து டிசம்பர் 31-ஆம் நாள் வரை, அவர் இறைவனோடு உரையாடும் நிலையில் தம் எண்ணங்களைத் தருகிறார். மனித வாழ்க்கைக்கு மிகுதியாகப் பயன்படும் நூல். இறைவனோடு பேசுகிறார். அப்பேச்சை அவ்வாறே வெளிப்படுத்துகிறார். பல இடங்களில் அவருடைய தெளிவான எண்ணங்கள் வெளிப்படுகின்றன.

தமிழில் பக்தி இலக்கியங்கள் மிகுதி. அதை நன்றாகக் கற்றவர் அடிகளார். அவருக்குத் தமிழ் இலக்கியம் முழுவதும் தெரியும் என்பதை இந்நூல் காட்டுகிறது. பெரும்பாலும் பழுத்த அனுபவம் பெற்ற பின்பே இதை எழுதியுள்ளார், என்பது வெளிப்படுகிறது. திருக்குறள், தேவாரங்கள், திருவாசகம், திருமந்திரம், திருத் தொண்டர் புராணம், தாயுமானவர், இராமலிங்க சுவாமிகள், பாரதி இவர்களின் பாடல்களின் பிழிவாகத் திருவருட் சிந்தனை உள்ளது.

சிறந்த மனிதனாகவேண்டும் என்று அடிப்படையில் நினைக்கிறார். சமுதாயத்தில் மக்களே போல்வர் கயவர் என்ற நிலை உள்ளதைப் பல இடங்களில் வெளிப்படுத்துகிறார். உலக சமுதாயம் அன்புடனும் அமைதியுடனும் மிகுந்த உழைப்புடனும் வாழவேண்டும் என்பதை விரும்புகிறார். முதல் நாள் திருவருட் சிந்தனையில் உழைப்பு! உழைப்பு!! உழைப்பு!!! இதுவே இந்த ஆண்டின் குறிக்கோளாகக் கூட்டித் தருக இறைவா! என்று கேட்கிறார்.

கணக்கில் கூட்டல் உள்ளதுபோல் நல்லவைகளைக் கூட்டிக்கொள்ளவேண்டும். மனிதர்களைக் கூட்டி தனிமனிதனாக வாழாமல் கூட்டத்தோடு வாழவேண்டும் என்பதை நினைக்கிறார். தீயவைகளைக் கழித்தல் வேண்டும் என்பதையும் சிந்திக்கிறார். பன்மடங்காக ஆற்றல் பெருகி பெருக்கமுற வாழ்தல் வேண்டும்

என்றும் கூறுகிறார். வகை, தொகையாக என்று கூறுவதுபோன்று தொகுத்தும் வகுத்தும் வாழவேண்டும் என்று கருதுகிறார்.

வாழைமரம்போல் வாழவேண்டும் என்று நினைக்கிறார். வாழைமரத்தின் எல்லா உறுப்புக்களும் பயன்படுகின்றன. இலை, காய், கனி, தண்டு, தடை அனைத்தும் பயன்படுகின்றன. அதோடு வாழையடி வாழையாக என்று கூறும்போது ஒரு வாழைமரத்தின் கீழ் பத்துக் கன்றுகள் தோன்றும். வளர்ச்சியில் அவை அதிகம். அதனால் வாழைபோல் வாழ அருள்க. என்கிறார். (ஜனவரி 14).

'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழம்பொருளே, பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றியனே' என்ற திருவாசகப் பகுதியை அப்படியே எடுத்தாள்கிறார். 365 நாட்களுக்கும், 365 தலைப்புக்கள் தந்துள்ளார். அத்தலைப்புக்களைப் படித்தாலே அவருடைய எண்ணங்கள் தெரியும். அதிர்ஷ்டம் என்பது ஒரு குருட்டுப்போக்கு என்பது அவர் கருத்து (ஜனவரி 22).

அவருடைய சொல்லாட்சி அழுத்தமாக அமைந்துள்ளது. உயிரின் தரத்தை உயர்த்தி அருள்க என்பார். மெய்ப்பொருள் நாயனார், கண்ணப்பர் போன்ற நாயன்மார்கள் பலரின் வாழ்க்கைச் செய்திகளை எடுத்துத் தம் எண்ணத்திற்குத் தக அமைக்கிறார். 'இறைவா! நான் விரும்புவனவற்றை அருள்செய்க என்பது என் பிரார்த்தனையல்ல. நான் பெறுவதற்குத் தகுதியுடையவற்றைப் பெற அருள் செய்க!' என்று கேட்கிறார். (பிப்ரவரி 7)

"ஆசை தற்சார்புடையது. அன்பு பிறர் நலச் சார்புடையது, தியாகத்தன்மையுடையது." (பிப்ரவரி 10) போன்ற தொடர்கள் ஆழமாக சிந்திக்கத் தகுந்த தொடர்கள்.

மனிதர்களோடு வாழ்வது-இது கடினமாக உள்ளதை ஒரு நாள் சிந்தனையில் தருகிறார். 'இறைவா! எத்தனையோ இயற்கை வனப்புமிக்க சூழ்நிலைகளை அமைத்துத் தந்தாய், நான் மகிழ்வோடு வாழ. ஆனால், மோசமான சில மனிதர்களையும் கூடவே படைத்தாயே, ஏன்? இந்த மனிதக் கூட்டத்தில் வாழ்வது எளிதாக இல்லையே. ஆம்! வழுக்கலில்தானே காலூன்றும் பயிற்சி கிடைக்கும். பொய்ம்மையில் தானே மெய்ம்மையின் தெளிவு தெரியும். வெயில் தானே நிழலின் அருமையைக் காட்டுகிறது.

இறைவா, இந்த மனிதர்களோடு சேர்ந்து அழிந்து போகாமல் காப்பாற்று. நான் உன் ஆணையை மீறவில்லை. அவர்களுடன் வாழ்கிறேன். அவர்களுக்காகவும் வாழ்கிறேன். நான் எந்த மனிதரையும் அலட்சியப்படுத்தமாட்டேன். என்னுடைய பகைவனையும் நான் மதிப்பேன், அன்பு காட்டுவேன். மனிதகுலம் முழுவதும் என் சுற்றம் எனக்கொண்டு ஒழுகுவேன். இறைவா, இங்ஙனம் வாழும் திறனை அருள்செய்க! (பிப்ரவரி 23).

கல்லைப் பிசைந்து கனியாக்கு என்ற தொடர் பல பகுதிகளில் வருகிறது. என்னை மனிதனாக்கு இறைவா! (மார்ச் 22). எனது உடம்பை இள்ளக்கச் செய்து வருகின்றேன். அது இளைத்துவிடும். நீ உள்ளொளி பெருக்கிவிடு, என்னைக் காப்பாற்று, என்னை முதலில் நல்ல விலங்காக்கு, பின் மனிதனாக்குக. பின் நின் திருவருளிலேயே தங்கியிருக்க அருள் புரிக! என்று கேட்கிறார்.

இந்த உடல் எனக்குக் கருவியாக இல்லை. நான்தான் உடலுக்குக் கருவியாகிவிட்டேன் என்று வருந்துகிறார். ஐம்புலன் களின் போராட்டம் பற்றிப் பல இடங்களில் குறிப்பிடுகிறார்.

"இன்று முதல் நான் நல்லனவே எண்ணுவேன். நல்லனவே செய்வேன். இது உறுதி!" (மார்ச் 24) என்று பல இடங்களில் எழுதுகிறார்.

அவர் மிகுதியாகப் பயன்படுத்தும் சொற்கள் தொண்டு, உழைப்பு, அன்பு, அருள், மகிழ்ச்சியும் களிப்பும் போன்றன.

அம்மம்ம என்ற வியப்புத் தொடர் பல இடங்களில் பயன் கொள்ளப்பட்டுள்ளது. பட்டிமன்றம் என்றாலே தமிழகத்தில் அடிகளார் தலைமை வகிப்பார் என்பது தமிழகம் அறிந்த செய்தி. பேசிப்பேசிப் பேச்சையே வெறுத்த நிலையும் அவர் எண்ணத்தில் காண்கிறோம்.

இறைவா, இனிப் பேசுவது வேண்டாம். பேச்சுக் கச்சேரி போதும். அரட்டை அடித்தல் வேண்டாம். பெரிய பெரிய பேச்சாளர்கள் கூட, பெரிய காரியங்களைச் செய்ததாக வரலாறு இல்லை. வாய்ப்பந்தல் வாழ்வளிக்காது அல்லவா?.. இறைவா இனி நான் பேசாதிருக்கும்படி அருள்செய். நாளும் மௌன நிலையிலேயே காரியங்களை இயற்றிடும் இனிய பழக்கத்தினை அருள் செய்க, பேசா வரம் அருள்க. மௌனத்தில் பழகும் பெருவாழ்வினை அருள்செய்.

பொறிகள் - புலன்கள் அனைத்தும் மௌனத்தில் ஈடுபடும் அருள் நயந்த வாழ்வினை அருள் செய்க. (மே 27) மனமும் ஐம்பொறிகளும் ஒத்திசைத்து இயங்கும் வாழ்க்கையே சிறந்த வாழ்க்கை என்று எண்ணுகிறார், தருகிறார். தீமை மடியவேண்டும் என்றும் நன்மை பெருகவேண்டும் என்றும் தீமையோடு சமரசம் செய்தல் கூடாது என்றும் பல இடங்களில் குறிப்பிடுகிறார். "உழைப்பே உலகு! உழைப்பே தெய்வம்!" (ஜூன் 12) என்பது அவருடைய கருத்து. சாமர்த்தியங்கள் சாதனைகளாகி விடா என்பது அவர் நம்பிக்கை. வாழ்க்கைக்கு மூலதனம் அன்பு. அவர் எண்ணம், பிறர்க்கென வாழ்தல். பெரிய நோன்பு அவருடைய நம்பிக்கை.

புழுவை எறும்பு அரித்தொழிப்பது போல, என்னைப் புலன்கள் அரித்தொழிக்கின்றனவே, நாள்தோறும் வெம்பி வெம்பிச் சாகின்றேனே. என்றெல்லாம் புலன்களின் ஆற்றலை எண்ணித் துன்புறுகிறார். நகைச்சுவையாகப் பல இடங்களில் கருத்துக்களைத் தெரிவிக்கிறார். மனிதன் கருணையோடு வாழவேண்டும். இரக்கத்தோடு வாழவேண்டும் என்பது எண்ணம். இன்று என்னிடம் ஏது கருணை? கருணைக் கிழங்கு தான் இருக்கிறது. இறைவா, மன்னித்துக்கொள் என்கிறார். (ஜூலை 24).

உலகத்திலேயே இராமலிங்க சுவாமிகள் மட்டும்தான் மரணமில்லாத பெருவாழ்வு பெற்று, தன் உடலை ஐம்பூதங்களோடு இணைத்துவிட்டார். அடிகளாரும் மரணமிலாப் பெருவாழ்வு வாழவேண்டும் என்று நினைக்கிறார்.

இறைவா, மரணமிலாப் பெருவாழ்வை அடையும் நெறிகளை எனக்குக் கற்றுத்தா. எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரிடத்தும் ஒத்த உரிமை பாராட்டி வாழும் இயல்பினை அருளிச் செய்க. (ஆகஸ்டு 2) என்று கேட்கிறார்.

ஆகஸ்டு 15 சுதந்திரநாளில் சுதந்திரம் பற்றி நினைக்கிறார். தானும் முழுச் சுதந்திரத்தோடு வாழவேண்டும் என்று கேட்கிறார். மனம் ஒரு குப்பைத் தொட்டி என்பது அவருடைய கருத்து. (ஆகஸ்டு 17).

அம்மம்ம மாநகராட்சிக் குப்பைத் தொட்டியை விட மோசமான குப்பைகள் என் மனத்தில் குவிந்துள்ளன. என் மனம் எங்கெங்கோ சுற்றுகிறது. எதை எதையோ எடுத்துக்கொண்டு

வருகிறது. என் மனம் எளிதில் பற்றிக் கொணர்ந்த செய்திகள் எதுவாலும் எனக்கு யாதொரு பயனும் இல்லை. இறைவா என் மனம் உலைப்பானையில் நின்று திளைத்தாடும் ஆமைபோல் களிக்கிறது. மனம் போகும் போக்கில் நான் செல்லாமல் இருக்க அருள் செய்க. என் மனத்தின் மீது மேலாணை தந்து அருள் செய்க. மனத்துக்கண் மாசிலானாக வாழ்ந்திட அருள் செய்க. (ஆகஸ்டு 17).

இறைவனிடம் நேரடியாகப் பேசுவதுபோன்று நான் பேசுவதற்கு நீ என்னசொல்கிறாய் என்று கேட்பார். அதோடு இறைவனிடம் என்ன சிரிக்கிறாய் என்று வினவுவார். (அக்டோபர் 1)

வாழ்க்கையில் தோல்விகளும் வெற்றிகளே என்பது அவருடைய எண்ணம். "ஒரு வெற்றியை விட தோல்வி போற்றத்தக்கது. பெருமைப் படத்தக்கது. வரலாற்றில் நிலைத்து நிற்கக் கூடியது. உலகியல் நெறிப்படி ஏசுபெருமான் தோற்றார். ஆனால், வாழ்வியல் நெறிப்படி வென்றார். இன்றும் மனித உலகத்தைவென்று வாழ்கின்றார். என் வாழ்க்கையில் உயர் குறிக்கோளை எடுத்துக் கொள்வேன். என் வாழ்க்கையைப் போர்க்களமாக்கிக் கொள்வேன். ஓயாது போராடுவேன்."

இந்த நடைப்பயணத்தில் நான் சந்திக்கும் துன்பங்களைக் கண்டு துவண்டு விழுந்துவிடமாட்டேன். சோர்ந்து விடமாட்டேன். என் பயணத்தை இடையில் நிறுத்தவும் மாட்டேன். நான் தோல்விகளைச் சந்தித்தாலும், அழுது கலங்கமாட்டேன். அத்தோல்விகளை, வெற்றிப் பயணத்தின் படிக் கற்களாக்கித் தொடர்ந்து நடப்பேன். இறைவா, இது உறுதி. எனக்குத் தோல்விகளும் வெற்றிகளே என்றுணர்த்திய உன் கருணைக்கு நன்றி. போற்றி! போற்றி!

இன்று உலகம் எங்கும் தீவிரவாதிகளின் செயல்களால் உலக மக்கள் துன்புறுகின்றனர். தீவிரவாதத்தை எவ்வாறு அடக்குவது என்பதைப் பற்றி உலகமே சிந்திக்கும் நிலை ஏற்படுகிறது. உலகில் அமைதியும் இன்பமும் அன்பும் எங்கு கிடைக்கும்? என்று ஏங்குகின்றனர், உலக மக்கள்.இன்றைய நிலைக்கும் தகுந்த நிலையில் அவருடைய சிந்தனை அமைகிறது.

"இறைவா, உனது மறு பெயர்கள் அமைதி, இன்பம் என்பன. ஆனால் இறைவா! உன்னை நான் அமைதியாகக் கண்டு

ஆராதித்தேனில்லை. இன்பமாக நினைந்து ஏத்திப் புகழ்ந் தேனில்லை. ஆம் இறைவா அமைதியின் தரிசனம் கிடைப்பதே இல்லை. எங்கு நோக்கினும் பதற்றநிலை. பழைய காட்டுமிராண்டி களைப் போலவே அடுதலும் தொலைதலும் நிகழ்கின்றன. இந்த நிலை வீட்டிலிருந்து நாடு வரை உள்ளது.

இறைவா, இந்தக் கலக உலகை மீட்டு அமைதிக்குக் கொண்டு வர வேண்டுமா? ஆம் இறைவா! நிச்சயம் கொண்டுவர வேண்டும். ஆழ்ந்த அறிவிலேயே அமைதி தோன்றும். தெளிவான சிந்தனையிலேயே அமைதி தோன்றும். தன்னல மறுப்பிலேயே அமைதி தலைகாட்டும். பிறர்க்கென முயலும் பண்பிலேயே அமைதி வந்தமையும். இதுவே நியதி.

அன்பே இன்பம், இன்பமே அன்பு! அமைதியே வழிபாடு இறைவா, அமைதியை அருள் செய்க! உலகில் அமைதி நிலவ அருள் செய்க (அக்டோபர் 3).

தமிழ்நாட்டில் கோயில் வழிபாடு தமிழில் நடைபெற வேண்டும் என்று பல போராட்டங்கள் நடந்தன; நடந்துகொண்டு இருக்கின்றன. இதுபற்றியும் அடிகளார் சிந்திக்கிறார். தன் எண்ணத்தை வெளிப்படுத்துகிறார்.

“இறைவா, புலித்தோல் உடுத்திய முதல்வா! உண்மையைச் சொல்! சமஸ்கிருதம், தமிழ் - இவ்விரண்டு மொழிகளில் எந்த மொழியைக் கேட்பதில் உனக்கு விருப்பம் அதிகம்? இறைவா, நாடறிந்த ஓர் உண்மைக்குக் கேள்வியா என்று கேட்கிறாய்! ஆம், இறைவா! இன்று சிலர் சமஸ்கிருதம் தான் உனக்குரிய மொழி, தமிழ் அல்ல என்று கூறுகின்றார்கள், வழக்காடுகிறார்கள். நீ உன் விருப்பத்தைச் சொல்லி வழக்கைத் தீர்த்து வைக்கக் கூடாதா?

நீ அன்று படிக்காசு கொடுத்துப் பைந்தமிழைக் கேட்டாய். பண் சுமந்த பாடல்களைப் பரிசாகப் பெறுவதற்கு வைகை ஆற்றங்கரையில் மண் சுமந்தாய். சுந்தரரின் செந்தமிழுக்காகத் திருவாரூர்த் தெருவில் நடந்தாய்.

தமிழ் மந்திரத்தை எழுதி நெருப்பிலிட்ட ஏடு எரியவில்லை. வெள்ளத்தை எதிர்கொண்டு கரை ஏறியது, ஆம் இறைவா! தமிழ், நீ விரும்பும் மொழி, இல்லை, இல்லை, தமிழே நீ, நீயே தமிழ். என்ன இறைவா கூறுகிறாய்?

கு. X. 1A.

திருக்கோயில்களில் தமிழை அகற்றி, சமஸ்கிருதத்தை நுழைத்ததால்தான் தமிழிருக்கும் இடம் தேடிப்போய் விட்டாயா? அதனால் தான் உன்னைத் திருக்கோயிலில் தேடிப்பார்த்துவிட்டு, "கடவுள் இல்லை" என்று கூறுகிறார்களா?

இறைவா, எங்கள் தவறை மன்னித்து அருள். நாங்கள் நல்ல தமிழில் வழிபாடு செய்கிறோம். இறைவா, திருக்கோயிலுக்கு வா! எழுந்தருளி வாழ்த்துக." (நவம்பர் 27)

"சாதி ஆசாரங்கள் சிறு பிள்ளை விளையாட்டு என்பது அவர் கருத்து." (டிசம்பர் 6)

பக்தி இலக்கியக் கருத்துக்கள் எல்லா இடங்களிலும் உள்ளன. தத்துவ எண்ணங்கள் பல உள்ளன. நான் எனது என்ற ஆணவத்தை அழித்தல் வேண்டும் என்ற உணர்வு பல பகுதிகளில் வெளிப்படுகிறது. இந்நூல் மிகுந்த மனப்பக்குவத்தோடு எழுதப்பெற்றுள்ளது. அடிகளாரின் இறுதி ஐந்து ஆண்டுகளில் இந்நூல் எழுதப்பெற்றிருக்கலாம் என்று தோன்றுகிறது. அடிகளாரை இந்நூல் முழுநிலையில் பிரதிபலிக்கிறது. இன்று என் பிறந்தநாள். (ஜூலை 11) என்று எழுதுகிறார். இன்று மிகுதியாகத் துன்புற்றேன் என்றும் எழுதுகிறார். இவ்வாறு கால உணர்வைப் பற்றிய குறிப்புக்கள் பல இடங்களில் உள்ளன. காலத்தை முக்கியமாகக் கருதவேண்டும் என்று அவர் கருதுகிறார். தினந்தோறும் மூன்று நிமிடங்கள் திருவருட் சிந்தனையைப் படித்தால் வாழ்க்கையை வெற்றிகரமாகச் செலுத்தமுடியும் என்பதில் எனக்கு ஐயமில்லை.

அடிகளார் என்றும் வாழ்கிறார். தமிழ் இருக்கும் வரை வாழ்வார். உலகம் இருக்கும் வரை தமிழ் இருக்கும். அதனால் உலகம் இருக்கும் வரை அடிகளார் வாழ்வார் என்பது இந்நூல் வழியாக நாம் முழுநிலையில் உணர்கிறோம்.

இருக்கும் காலத்து தொண்டு செய்ததுபோன்று காலம் கடந்த பின்பும் அவர் நூல்கள் வழியாக அடிகளார் தமிழக மக்களுக்கு வழிகாட்டியாகத் தொண்டு செய்கிறார் என்பதை நூல் நிறுவுகிறது.

வாழ்க அடிகளாரின் புகழ்!



தவத்திரு

குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# முன்னுரை

## தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

குன்றக்குடி அடிகளார் எனக் குவலயத்து மக்களாலும், தமிழ் மாமுனிவர் எனத் தமிழ் நெஞ்சங்களாலும், அடிகளார் என அன்பு உள்ளங்களாலும் அருள்நெறித் தந்தை என்று அருள்நெறி அடியார் திருக்கூட்டத்தினராலும், திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் என்று மரபு வழியாலும் நீள நினைத்து நித்தமும் கை தொழுது போற்றப் பெறும் நம் அடிகள் பெருமானின் திருவருட் சிந்தனை, திருவருளாலும் குருவருளாலும் முகிழ்த்திருக்கிறது. வாழும் வள்ளுவராய், செயல்புரியும் செந்தண்மைச் சேக்கிழாராய், நடமாடும் அப்பர் பெருமானாய் நாளும் தமிழ்த்தொண்டு, சமயத் தொண்டு, சமுதாயத் தொண்டு ஆற்றி வந்தார், அடிகள் பெருமான்! உண்மையிலேயே இவர் யார்? என்ற வினாவிற்குத் திருவருட் சிந்தனை அடிகளாரை இவர் இன்னார் இல்லை, இனியார் இவரைப் போல்? இனியார்? என்ற வகையில் நம்மிடம் அகப்பட வைத்து விடுகின்றது.

பிரார்த்தனை என்பது தன் ஆசைகளை, அபிலாசைகளை விண்ணப்பிப்பது அல்ல, பற்றற்ற நிலையில் தன் மனதை மேம்படுத்தி உலக நன்மைக்குத் தன் பங்களிப்பை ஏற்று அருள வேண்டுவது உண்மையான பிரார்த்தனை! தன் நன்மையும் உலக மேன்மையும் உராய்ந்து கொள்ளாமல் ஒன்றை ஒன்று இணைந்து உயர - வாழ வேண்டுவது உண்மையான பிரார்த்தனை என்பதை மகாசந்நிதானம் அடையாளம் காட்டுகின்றார்கள்.

“இறைவா! இந்த ஆண்டினை ‘உழைப்பு ஆண்டாக’ச் செலவிட உறுதி எடுத்துக் கொள்ள அருள்செய்! வீணான

விவாதங்களைத் தவிர்த்திடக் கருணை பாலித்திடுக! யாரோடும் பகை கொள்ளாமல் வாழும் வண்ணம் அருள்! எல்லோருக்கும் அன்பு செய்யும் விரிந்த இதயத்தைத் தா! உழைப்பு! உழைப்பு! உழைப்பு! இந்த ஆண்டின் குறிக்கோளைக் கூட்டித் தருக!" என்று மகாசந்நிதானம் இறைவன் சந்நிதானத்தில் மன்றாடுகின்றார்கள். இப்படி யார் இன்று, இறைவன் சந்நிதானத்தில் உலக நன்மைக்கும் தன் மேன்மைக்கும் பிரார்த்திக்கின்றார்? பிரார்த்தனை என்பது மனிதர்கள் செய்யும் அநியாயத்தில் இறைவனையும் இணைத்துக் கொள்வதால் தானே உண்டியல் பெட்டகத்தில் பணக் கத்தைகள்! பாவத்தை நீக்கும் பரம்பொருளிடம் செய்த பாவத்திற்குக் காணிக்கை தந்து இறைவனையும் தாங்கள் செய்த பாவத்தில் கூட்டுச் சேர்த்துக் கொள்கின்றனர்.

கோடியை, இலட்சத்தை, மாடியை, தோட்டத்தை, மாளிகையை இறைவனிடம் கோரவில்லை, எல்லோருக்கும் அன்பு செய்யும் விரிந்த இதயத்தைக் கேட்கின்றார்கள். "உழைக்காமல் கைகளைக் கட்டி அமர்ந்து கொள்வேன்! உன் பெயரைச் சொன்னால் மட்டும் செல்வம் சேர்ந்து விடவேண்டும்," என்று இறைவனிடம் கோரவில்லை, உழைப்பு! உழைப்பு! உழைப்பு! இறைவனிடம் உழைக்க மனமும், உடலும் நலமாய் இருக்கப் பிரார்த்திக்கும் பிரார்த்தனை, உலகத்தின் உன்னதமான பிரார்த்தனை!

"ஊருக்கு உழைத்திடல் யோகம் – நலம்
ஓங்கிடு மாறு வருந்துதல் யாகம்!"

என்று பாரதி உண்மையான வேள்வியைச் சுட்டுகின்றான், இன்று அந்த வழிபாட்டு நிலை வளர்ந்தால் ஆடம்பர வேள்விகளும் ஆரவாரச் சடங்குகளும் தேவைதானா? என்ற நிலை ஏற்படும்.

தான் மட்டும் வாழ வேண்டும் என்பது சிலரின் பிரார்த்தனை! இல்லை, அது பிரார்த்தனை அல்ல, பேராசை! ஊரோடு கூடி வாழ்வதுதான் உண்மையான பிரார்த்தனை! அடிகள் பெருமான் பின்வருமாறு பிரார்த்திக்கின்றார்.

தனிமனிதன் என்ற நஞ்சிலிருந்துதானே தனி உடைமை பிறந்தது. தனி உடைமை உணர்வினால்தானே களவும், காவலும், பூட்டும், சாவியும், போரும் இன்றி வாழ்ந்த பொதுமை நம்மிடமில்லை. சமுதாயத்தைச் சீரழித்து விட்டது! ஏராளமான பிரிவினைகள்! பிரிவினை உணர்வுகளால் ஏற்படும் மோதல்களின் பயன் வறுமை நிறைந்த சமுதாயம், ஆதலால், தனிமனிதனாக வாழலாம் என்ற தன்னல நயப்பிலிருந்து விடுதலை பெறப் பலரோடு கூடி வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். பலர் கூடித் தொழில் செய்வதன் மூலம் செல்வம் பெருகும்; தண்ணளி ஊற்றெடுக்கும்." கூடி வாழப் பிரார்த்திக்கும் பிரார்த்தனை நம் ஆழ் மனதைத் தொடுகின்றது. தனக்கு இரண்டுகண் கெட்டாலும் எதிரிக்கு ஒருகண் கெடவேண்டும் என்ற பிரார்த்தனை தான்! (வஞ்சனை) மலிந்து காணப்படுகின்றது. ஜேம்ஸ் ஆலனின் சிந்தனைகள் போல் தமிழ்வழியில் 'திருவருட் சிந்தனை' நமக்குக் கிடைத்த அற்புதக் கருவூலம் ஆகும்.

"நமது நிலையில் சமயம் சமுதாயம்" என்ற நூல் சமயத்தைப் பற்றிய சமூகப் பார்வை, சமயம் தன்னைச் சுற்றி இரும்பு வேலி எழுப்பிக் கொண்டு மனிதர் அண்ட முடியா மதமாக இருக்கின்ற பொழுதுதான், இரும்பு வேலியை அடித்து நொறுக்கிச் சமயத்தை மக்களுக்குரியதாக மாற்றுகின்ற மாபெரும் புனருத்தாரணப் பணிதான் 'நமது நிலையில் சமயம் சமுதாயம்' என்ற நூல்.

"தீண்டாமை விலக்குப் பணியைப் பாராளுமன்றத்தின் ஆணைகள் செய்த அளவுக்குக் கூட நமது வழிபடு கடவுளின்

ஆணைகள் சமய உலகத்தில் செயற்படுத்தவில்லை. தீண்டாமை விலக்குப் பணியில் புகைவண்டி கண்ட அளவுக்கு வெற்றியை நமது சமய நிறுவனங்கள் அடையவில்லை; அடைய முயலவும் இல்லை. இது வேதனைக்குரிய செய்தி. தீண்டாமையை நமது சமயத்தில் இருந்து அறவே அகற்றிக் கோடானு கோடி மக்களின் வாழ்க்கையில் ஒளியேற்றத் தவறி விடுவோமானால் நமது கடமையை நாம் செய்யத் தவறியவர்களாவோம்" என்று சமய உலகத்தை உண்மையான ஆன்ம பரிசோதனைக்குத் தயார்படுத்துகின்றார்கள்.

அடிகள் பெருமானின் மலேசியச் சொற்பொழிவு நம்மை மிக ஆழமாகச் சிந்திக்க வைக்கின்றது. அடிகள் பெருமான் தங்கியிருந்த பயணியர் மாளிகைக் கடிகாரம் ஓடுகின்ற சப்தம் கேட்கின்றது. பெண்டுலம் ஆடி அசைகின்றது. முள் நகர்ந்த பாடில்லை. இது ஒரு சாதாரண நிகழ்வுதான்! ஆனால் இதை வாழ்க்கைப் போக்கோடு ஒத்துப் பார்ப்பதுதான் அடிகள் பெருமானின் தனிச் சிறப்பு, பெண்டுலம் அசைந்தும் முள் நகராத கடிகாரம் போல, நம் நாட்டில் வழிபாடுகள் நிகழ்ந்து கொண்டு இருக்கின்றன, வாழ்க்கையை நெறிகளிலே மட்டும் நகர்த்தத் தவறிவிடுகின்றோம். காரணம் நம்முடைய இதயத்தில் அதனுடைய உணர்வுகள் பதிவதில்லை!"என்ற சிந்தனை மறுக்க முடியாதது.

"விண்ணோர்கள் அமுதுண்டு சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்!"

என்றார் இளங்கோவடிகள், இது நமக்குத் தெரிந்த கதைதான், தேவர்களும் அசுரர்களும் போட்டிப் போட்டுக் கொண்டு பாற்கடலைக் கடையும் பொழுது அமுதம் தோன்றவில்லை. ஆலகால விடம்தான் தோன்றுகின்றது. விடத்தை உண்ண எவரும் தயாராய இல்லை, விடத்தை உண்டும் இறைவன் ஜீவிக்கின்றான். இறைவன் என்ற ஒரே காரணத்தால் மட்டும்

இறைவன் ஜீவிக்கவில்லை. இறைவனுக்கு இருக்கின்ற சில குணங்கள், சில இயல்புகள்தான் காரணம். தாம் வாழ்வதை விட, மற்றவர்கள் வாழ்வது பெரிது என்று நினைக்க வேண்டும். அப்படி வாழ்கின்ற வாழ்க்கைதான் பெரிய வாழ்க்கை, அந்த மாதிரி சாதனையை மனிதனும் முயன்றால் செய்ய முடியும் என்று மனிதத்தைத் தெய்வமாக்க வழி காட்டுகின்றார்கள்.

"உலக அரங்கத்தில் மிகப் பெரிய சமூக மறுமலர்ச்சியை உருவாக்க முனைந்த சாக்ரட்டீஸ் நஞ்சு கொடுத்துச் சாகடிக்கப்பட்டார். ஏழாம் நூற்றாண்டில் தமிழ் மண்ணில் மிகப் பெரிய சமய சமுதாய மறுமலர்ச்சியை உருவாக்கிய அப்பரடிகளுக்கும் நஞ்சு கொடுக்கப்பட்டது. நஞ்சு உண்ட சாக்ரட்டீஸ் மடிந்து போனதுபோல் நஞ்சு உண்ட நாவுக்கரசு பெருமான் சாகவில்லை. நஞ்சு உண்டும் உயிர் வாழ்ந்தார். நஞ்சு உண்டும் வாழுகின்ற கலையை அப்பர் பெருமான் யாரிடம் கற்றார் என்ற வினாவினை எழுப்பி அதற்குரிய விடையை அடிகள் பெருமான் தருகின்றார்.

நஞ்சு உண்டும் வாழுகின்ற கலையைத் திருவள்ளுவப் பெருமான் கற்றுத் தந்தார்.

"பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர்; நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்று நஞ்சு உண்டும் வாழும் கலையை வள்ளுவப் பெருமான் போதிக்கின்றார். எல்லோருக்கும் நன்மை விரும்பும் உள்ளமுடையோரின் "உடலில் ஓடும் செங்குருதிக்கு நஞ்சை முறிக்கும் ஆற்றல் உண்டு" என்கிறார்கள்.

"ஆலயங்கள் சமுதாய மையங்கள்" என்ற நூல் தமிழக அரசு விருது பெற்ற நூல், "கோயிலைத் தழுவிய குடிகள்; குடிகளைத் தழுவிய கோயில்" என்ற அருள்நெறித் தந்தையின் தாரக மந்திரத்தை நடைமுறைப்படுத்துவதாக உள்ளது. கல்லெல்லாம் பேசும் பொற்சிலைகளாக உருமாறிய

திருக்கோயில்கள், மண் எல்லாம் விண்முட்டும் கோபுரங்களாக உருமாறிய திருக்கோயில்கள், வண்ணங்கள் எல்லாம் உயிர்ப்புடைய ஓவியங்களாக உருமாறிய திருக்கோயில்கள் இறைவன் தங்கியிருக்கும் இருப்பிடம் மட்டுமல்ல; மனித சமூகம் கூடிக் கலந்து வாழ்கின்ற அறப்பண்ணைகள்; அருள் நிலையங்கள்! என்ற அற்புதக் கருத்தினை வலியுறுத்தும் 'ஆலயங்கள் சமுதாய மையங்கள்' நமக்குக் கிடைத்த அற்புதப் பெட்டகமாகும்.

திருவாசகப் பெரும் பேரின்பத்தைத் துய்த்துத் துய்த்துத் தேக்கித் தேக்கித் திகழும் அருள் நிறை நெஞ்சம் போற்றிப் புகழ்ந்திருந்து பொய் கெட்டு மெய்யானார் என்ற அருளனுபவத் திருநிகழ் நெஞ்சம் உலக மக்களுக்கு வழங்கும் வாழ்வியல் வழிகாட்டியே இந்நூல், சமய சமூகச் சிந்தனை ஒருங்கிணைந்த புதிய சமயப் பாதைக்கு இந்நூல் அழைத்துச் செல்லும்.

இந்நூலைச் சிறப்பாக அச்சிட்டு வெளிக் கொணரும் மணிவாசகர் பதிப்பக ச. மெய்யப்பன் அவர்களுக்கும் இந்நூலுக்கு ஆக்கம் தரும் அணிந்துரை வழங்கியுள்ள **முனைவர் ச.வே. சுப்பிரமணியன்** அவர்களுக்கும் நூல் தொகுக்கும் பணியில் இரவு பகல் பாராது பணியாற்றிய ஆதீனக் கவிஞர் மரு. பரமகுரு, இராமசாமி தமிழ்க் கல்லூரி முன்னாள் முதல்வர் தமிழாகரர் தெ. முருகசாமி ஆகியோருக்கும் நெஞ்சு நிறை நன்றிகள்; நல்வாழ்த்துக்கள்; பாராட்டுக்கள் உரியனவாகுக.

# திருவருட் சிந்தனை

## ஜனவரி 1

### இறைவா! காலத்தை முறையாகப் பயன்படுத்தக் கருணை செய்க!

*இறைவா! காலத்தின் காலமாக நின்றருளும் இறைவா! நீ காலத்தைக் கடந்தவன். நானோ இரண்டு நிலையும் இல்லாதவன்! நான் கால எல்லைக்குள் சிக்கித் தவிக்கின்றேன்! அதனால் காலத்தைக் கடத்த முயற்சி செய்கிறேன். என்னால் காலத்தை வெல்ல முடியும். ஆனால் காலத்தைக் கடத்தி விடுவதில் எனக்கு ஒரு அற்ப திருப்தி.*

*வீணே காலம் கடத்தப் பெறுமானால் ஆற்றல் மிக்க காலம் வறிதே போகுமே. காலத்தை முறையாகப் பயன்படுத்துவேன், கடமைகளைச் செய்வேன்! இறைவா, நான் அறிந்து தவறு செய்யவில்லை. நீ எனக்கருளியுள்ள ஆணை ஒரு தேரை இழுத்து நிறுத்து என்பது. உன் ஆணையை நிறைவேற்றுவது என் கடமை! ஆனால் தேரை எப்படி ஒருவர் இழுப்பது? சிலரைத் துணைக்குச் சேர்த்துக் கொண்டேன். இறைவா, என் துணைவர்களுக்கு நல்லெண்ணத்தைக் கொடு. காலத்தைப் போற்றிக் கடமையைச் செய்ய வேண்டும் என்ற ஆவேசத்தைக் கொடு. அவர்களையும் வாழ்த்து!*

*இறைவா இந்த ஆண்டினை "உழைப்பு ஆண்டாக"ச் செலவிட உறுதி எடுத்துக்கொள்ள அருள் செய்! வீணான விவாதங்களைத் தவிர்த்திடக் கருணை பாலித்திடுக! யாரோடும் பகை கொள்ளாமல் வாழும் வண்ணம் அருள் பாலித்திடுக! எல்லோருக்கும் அன்பு செய்யும் விரிந்த இதயத்தைத் தா! உழைப்பு! உழைப்பு!! உழைப்பு!!! இதுவே இந்த ஆண்டின் குறிக்கோளாகக் கூட்டித் தருக, இறைவா!*

கு.ச.உ.

## ஜனவரி 2

### எல்லாரிடமும் அன்பு செய்யும் இதயம் தந்தருள்க!

இறைவா, நீ இயக்கும் உலகத்தில் தனித்தன்மை உடையது எதையும் நான் காண்கிலேன்! ஐம்பூதங்களின் கூட்டியக்கமே உலகியக்கம். உலகில் நான் காணும்—நுகரும் பொருள்கள் அனைத்துமே ஒன்றுக்கு மேற்பட்ட பல்வேறு பொருள்களின் கூட்டமைப்பேயாம். ஏன், இறைவா? என் உடம்புகூட நூற்றுக்கணக்கான பொருள்களின் கூட்டமைப் புத்தானே. இது மட்டுமா இறைவா? இந்த உடம்பில் உள்ள வேறுபட்ட அமைப்புகள் ஒன்றோடொன்று ஒத்திசைந்து இயங்கும்போதுதானே நான் வாழ்கின்றேன். ஒன்றோ டொன்று ஒத்திசையாத பொழுது அல்லது வேறுபாட்டை இயக்கத்தில் காட்டும் பொழுது நோயாளியாகின்றேன், அல்லது பைத்தியக்கார னாகின்றேன். இறைவா, இது மட்டுமா? உடம்பில் கிடக்கும் பல்வேறு தாதுப்பொருள்கள் தம்முள் மிகாமலும், குறையாமலும் இருக்கும்பொழுது வாழ் கின்றேன்.

எங்கும் கூட்டமைப்புக்களையே பார்க்கும் நான் மட்டும் ஏன் தனித்தன்மை கோருகின்றேன். எனது தனித் தன்மைக்காகப் போராடுகிறேன். மற்றவர்களை அழிக்க ஆசைப்படுகிறேன். இந்தப் புத்தியை நீ திருத்தக் கூடாதா? எங்கும் எதிலும் பொதுத்தன்மை காணும் அறிவைத் தரக் கூடாதா? பொதுமையில்தானே தனித்தன்மை விளங்கும்.

இறைவா, கூடிவாழத் தடையாக இருக்கும் எதுவும் எனக்கு வேண்டாம்; வேண்டவே வேண்டாம்! இறைவா அருள் செய்! எல்லோரிடமும் அன்பு செய்யும் இதயத்தைக் கொடு. மற்றவர்க்குத் தருவதிலே மகிழ்ச்சியடையும் மனத்தைத்தா. மற்றவர் சொல்லும் செய்திகளைக் கேட்கும் பக்குவத்தை அருள் செய்! யாரோடும் பகை கொள்ளாத அருள் உள்ளம் பாலித்திடு! அருள் செய்க!

## ஜனவரி 3

### கூட்டலே—மனித நிலையில் அறம்

இறைவா! கணிதம் எனக்கு அவ்வளவாக வராது. ஆனால் கணிதத் தத்துவங்களின் அருமையை என்னென்று புகழ்வது? இறைவா, கூட்டல். ஆம். நாம் நாள்தோறும் வாழ்க் கையின் ஆதாரமாக அமைந்துள்ள அறிவைக் கூட்டிக் கொள்ள வேண்டும். அது மட்டுமா? இறைவா! தனி "மனிதன்" அம்மம்ம! நினைத்துப் பார்க்கவே பயமாக இருக் கிறது! இந்தத் தனிமனிதன் என்ற நஞ்சிலிருந்து தானே, தனி உடைமை பிறந்தது. தனி உடைமை உணர்வு தானே, களவும், காவலும், பூட்டும் சாவியும், போரும் இன்றி வாழ்ந்த பொதுமை நலம்மிக்க சமுதாயத்தைச் சீரழித்துவிட்டது. ஏராளமான பிரிவினைகள், பிரிவினை உணர்வுகளால் ஏற் படும் மோதல்கள். பயன், வறுமை நிறைந்த சமுதாயம்!

ஆதலால், "தனிமனிதனாக" வாழலாம் என்ற தன்னல நயப்பிலிருந்து விடுதலைபெறப் பலரோடு கூடி வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். பலர் கூடித்தொழில் செய்வதன் மூலமே செல்வம் பெருகும். அன்பெனும் தண்ணளி ஊற்றெ டுக்கும். மரங்கள் அடர்ந்து வளர்ந்ததே காடு; காடுகளே மழை பொழியத் துணைசெய்யும். அதுபோல இதயத்தால் ஒன்று பட்ட பலர் கூடி வாழ்தலே சமூகம்; சமுதாயம். இத்தகு சமுதாய அமைப்பே வளம் பல படைக்கும். இன்ப நலன்களைத் தோற்றுவிக்கும்.

இறைவா, பலரோடு கூடிவாழும் பண்பாட்டைக் கற்றுத்தா. மற்றவர் நலத்தை என் நலமாகக் கருதும் உயர் ஒழுக்கத்தினை ஏந்த அருள் செய்! இறைவா, கூட்டமாகக் கூடிவாழக் கருணை பாலித்திடு! அதுவும் அர்த்தமுள்ள கூட்டமாகக் கூடி வாழவேண்டும். இறைவா, எந்தச்சூழ்நிலை யிலும் மனிதர்களைக் கழித்துக் கட்டும் இழிநிலை எனக்கு வேண்டாம். மனிதநிலையில் கூட்டலே அறம். இறைவா அருள் செய்க!

## ஜனவரி 4

### ஆகாதவற்றைக் கழித்தாலே வெற்றி விளையும்

இறைவா, கணிதத்தில் கழித்தல் என்பது ஒன்று! ஆம், இறைவா! வாழ்க்கையிலும் கழித்தல் இன்றியமையாத ஒன்று. ஏன்? கழித்தல் இருந்தால்தான் மற்ற கூட்டல், பெருக்கல், வகுத்தல் எல்லாமே நடைபெறும். ஆக, இறைவா! கணக்கில் மையம் கழித்தல். வாழ்க்கையிலும் அப்படியேதான்! உடலில் தோன்றும் கழிவுப் பொருள்களை அவ்வப்பொழுது கழித்து விட்டால் நோயே வராதாம். உடலின் கழிவுகள் அன்றாடம் கழிக்கப்பட்டால் அற்புதமான நலம் இருக்குமாம். இறைவா; இது மட்டுமா? என்னுடைய கெட்ட குணங்களை— கெட்ட நடைமுறைகளைக் கழித்தால்தானே நல்ல பழக்கத்தை ஏற்க முடியும்! நாள்தோறும் நேற்றைய தவறுகளை— தவறுக்கான காரணங்களைக் கழித்தால்தானே அவ்வழி வெற்றிகள் வந்தமையும். இறைவா! என்னுடைய இன்ப துன்பத்திற்கு நீ காரணமல்ல; உலகமும் காரணமல்ல; நானேதான் காரணம்! என்னுடைய செயல்களே காரணம்! என்னுடைய ஊழே காரணம். இறைவா, ஊழ் என்பது வேறு ஒன்றும் அல்லவே. என்னுடைய பழக்கவழக்கங்களின் பயன்பாடுகள் அனுபவத் திற்கு வரும்பொழுது ஊழ், விதி, வினை என்று நாமகரணம் செய்து கொள்கின்றன. இறைவா, இன்றுமுதல் ஆகாதன கழித்தலில் கவனமாக இருப்பேன்!

இறைவா, தன் முனைப்பைக் கழிக்க வேண்டும். அம்மம்ம, இறைவா "நான்" கெடுத்தது கொஞ்சமா? இறைவா எனக்குக் கோபம் உண்டு! இறைவா, கோபத்தைக் கழிக்க வேண்டுமா? சரி! கோபத்தையும் கழித்து விடுகிறேன். இறைவா, இந்த கழித்தல்கள் நடைபெற உறுதியைத் தா!

## ஜனவரி 5

### இறைவா! பெருக்கமுற வாழ அருள் செய்க!

இறைவா! கணிதத்தில் பெருக்கல். ஆம், இறைவா! வாழ்க்கையிலும் பெருக்கல் தத்துவம் செயற்பட வேண்டாமா? இறைவா, நீயே ஒரு பெருக்கலின் வடிவம் தானே! நின் திருவருள் நோக்கிலிருந்திக் கோடான கோடி உயிரினத்தை அறியாமையிலிருந்து மீட்டு வாழ்வளித்து உன் புகழ் பாடும் வண்ணம் செய்திருக்கிறாயே!

ஆம், இறைவா! நானும் என் அறிவை நாள்தோறும் முயன்று கற்றும்கேட்டும் பன்மடங்கு பெருக்கிக் கொள்ள வேண்டும். எண்ணற்ற காரியங்களைச் செய்ய வேண்டும்! என் ஆற்றலையும் பல மடங்கு பெருக்கிக் கொள்ள வேண்டும். என் செல்வமும் ஒன்றுக்குப் பலமடங்காகப் பெருக வேண்டும்! இது பேராசையல்ல! நான் மனிதகுலத்தை வறுமையிலிருந்து மீட்க வேண்டாமா? என்னுடைய தோழர்களை மகிழ்வோடு வாழவைக்க வேண்டாமா? ஆதலால், நிறைய செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டும்! இறைவா, என் இதயமும் இதயத்தில் ஊற்றெடுக்கும் அன்பும், பெருகியதாக விளங்க வேண்டும். அன்பின் பெருக்கு மனித குலத்தைப் பிடித்திருக்கின்ற அத்தனை இழிவுகளையும் அடித்துக் கொண்டு செல்லவேண்டும்! இறைவா, பெருக்கல் கணக்கில் எண், பன்மடங்காகப் பெருகி வளர்வதைப் போல என் அறிவு, ஆற்றல் செல்வம், அன்பு, தோழமை முதலியன பெருகி வளர வேண்டும்!

இறைவா, கற்றது போதும் என்ற முட்டாள் தனத்தை அறவே ஒழிக்க வேண்டும்! அன்பெனும் ஆறு, சாதி, சமய வாய்க்கால்களில் பாயாமல் மனித குலத்தை நோக்கிப் பேராறாகப் பெருக்கெடுத்துப் பாயவேண்டும். ஆம், இறைவா! எல்லாவற்றையுமே பெருக்கி வாழ்ந்தால் தானே, வளரும் உலகத்திற்கு ஈடுகொடுக்க முடியும். இறைவா, அருள் செய்! பெருக்கமுற வாழ அருள் செய்!

## ஜனவரி 6

### வகுத்தறிந்து வாழும் கூட்டுறவே இனி என் வாழ்க்கையாகட்டும்!

*இறைவா, வகுத்தல்! ஆம், இறைவா, கணிதத்தில் வகுத்தல்! இறைவா, வாழ்க்கையிலும் வகுத்துக்கொடுத்து வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். ஆம் இறைவா! வாழ்க்கையில் காலம், ஆற்றல் இரண்டையும் முறைப்படுத்தி வகுத்துப் பயன்படுத்தினால் நிறைய காரியங்கள் செய்யலாம். வேலை நேரத்தில் என்ன வேலை செய்யலாம் என்று ஆலோசித்தல் அல்லது எங்கு வைத்தோம் என்று தேடுதல் நல்ல பழக்க மன்று. வாழ்க்கையின் அனைத்துத் துறையிலும் வகுத்தலின் வீச்சு பிரதிபலித்தல் நல்லது. இறைவா, அவ்வண்ணமே அருள் செய்!*

*இறைவா! செல்வத்தின் பயன் நுகர்வே. கூடி மகிழ்ந்து வாழ்தலே! என்னுடையதுதான் செல்வம் என்பது குருட்டுத் தனமானது சட்டங்களின்படிதான். ஆனால், நியாயப்படி என்னுடையது அல்ல. இறைவா, நம்முடையது. என்னுடைய செல்வத்தை வகுத்துக் கொடுத்தால் வறுமையே மிஞ்சும். நுகர்வுப் பொருள்களை முறையாகத் தேவைக்கேற்ப வகுத்துக் கொடுத்து வாழ்வளித்துப்பின் வாழவேண்டும். வையகம் உண்ண வேண்டும். வையகம் உடுத்த வேண்டும். இறைவா, இங்ஙனம் வகுத்துக் கொடுக்கும் பெருவாழ்வு கிடைத்து விட்டால் எனக்கேது குறை. வகுத்துண்ணும் சமுதாய அமைப்பில் களவு இல்லை; கலகம் இல்லை; சிறைச்சாலை இல்லை.*

*இறைவா, வகுத்தளித்து வாழ்ந்திடும் வாழ்க்கையை நடத்த அருள் செய்க! தனியே உண்ணும் பழக்கத்தை நான் விரும்பியதில்லை! இனியும் விரும்பமாட்டேன். என்னுடைய வாழ்வில் தனிமை இல்லை. இனியும் இருக்காது. வகுத்தளித்து வாழும் கூட்டுறவே இனி என் வாழ்க்கை! இறைவா! அருள் செய்!*

## ஜனவரி 7

### இன்ப வட்டமாக வாழ்க்கை அமைந்திட இன்னருள் புரிக!

*இறைவா! கணிதத்தில் க்ஷேத்திர கணிதம்* (GEOMETRY) *என்று ஒன்று உண்டு. இதில் வட்டம் போடுவதற்கு ஒரு கருவி உண்டு. அதனைக் காம்பஸ்* (Compus) *என்பர். காம்பசின் நீண்ட பகுதியை வட்டத்தின் மையத்தில் நிறுத்திப் பிறிதொரு சிறிய பகுதியில் எழுது கோலைப் பொருத்தி வட்டம் போட்டால் வட்டம் அழகாக அமையும். இறைவா, எனக்கும் தான் ஆசை, என் வாழ்க்கை இன்பவட்டமாக அமைய வேண்டும் என்று. ஆனால் இறைவா, வாழ்க்கையை வட்டமாக்கும் முயற்சிக்குப் பதிலாக வாழ்க்கையைக் கோழிமுட்டையாக்கிக் கொண்டே வருகிறேன்; அதனால் எண்ணற்ற துன்பங்கள். இறைவா, எனக்கு வாழ்க்கையை வட்டமாக்கும் யுக்தி தெரியாமல் இல்லை. தெரிந்ததைச் செய்யவிடாமல் தடுப்பது உடற் சோம்பல்.*

*இறைவா, என் மனம் நின்னருளில் நாட்டம் கொண் டிடுதல் வேண்டும். பின், என் புத்தியைப் பயன்படுத்தி வாழ்க்கை முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். இறைவா, அப்போது என் வாழ்க்கை இன்ப வட்டமாக அமையும். ஐயமில்லை! இறைவா, என் மனம் நின்னருளில் நாட்டம் கொண்டிருத்தலைப் பாதுகாத்தருள் செய்க! முயற்சியுடைய வாழ்க்கை, தவ வாழ்க்கை! அந்த வாழ்க்கை இன்ப வட்டமாக அமையும். இறைவா, அருள் செய்!*

## ஜனவரி 8

### இறைவா! நான் பூஜ்யமாகி உன் பொன்னடி போற்றும் வாழ்வினை அருள்க!

இறைவா, கணக்கில் பூஜ்யத்திற்கு மதிப்புண்டு. ஆம், இறைவா! ஒரு சாதாரண பூஜ்யம் ஒன்றுக்குப்பின் வருமானால் எண்ணிக்கையைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டுகிறது! நான் ஒரு பூஜ்யமானாலும், உனக்குப் பின்னால் நின்றால் எவ்வளவு மதிப்பு! பெருமை! ஆம், இறைவா! அருள் கூர்ந்து நீ எப்போதும் எனக்கு-முன்னால் - இடக்கைப்புறமாக நின்றருள் செய்! உன்னைச் சார்ந்து உன் வலப் பக்கத்தில் பூஜ்யமாக நான் நிற்பேன்; இதுவே போதும் இறைவா! இறைவா, நான் பூஜ்யமாவது எளிதான காரியமா? இல்லையே! ஆயிரம் ஆயிரம் எண்ணங்கள்! ஆசைகள்! விருப்பு வெறுப்புகள்! இவ்வளவையும் நான் தொலைத்து பூஜ்யமாவது எப்போது? இப்பிறப்பில் நடக்குமா? நடக்காதா? இது என்ன ஜோசியம்! நின் கருணையிருந்தால் நடக்கும்!

இறைவா! நீ என் மனத்துள் வீற்றிந்தருளத் திருவுளங் கொண்டால் போதும்! நீ எழுந்தருளிய உடனேயே கதிரவன் ஒளி கண்ட பனித்துளி போல என் மனத்திற்குள் ஒன்றாக குடித்தனமாகப் புகுந்து காலப் போக்கில் ஆதிபத்தியம் செய்த ஆசைகள் அனைத்தும் அகன்று போகும்.

இறைவா என் மனக்கோயிலுள் எழுந்தருள்க! என்னை பூஷ்யமாக்குக! எனக்கு முன் இருந்து எனக்குப் பூஜ்யத்தின் மதிப்பைத் தந்தருள் செய்க! இறைவா, நான் பூஜ்யம். எனக்கு முன் நிற்கும் ஒன்று நீ!

## ஜனவரி 9

### கோபுரம் போல் என் வாழ்க்கை உயர அருள்க!

*இறைவா, தஞ்சைப் பெருவுடையார் கோயில் கற்றுத் தரும் பாடத்தினை உணர்ந்தறியும் பேற்றினை அருள் செய்க! என் வாழ்க்கை, அந்தக் கோபுரத்தைப் போல உயர்தல் வேண்டும். ஆம்! இறைவா, அதுவே என்னுடைய விருப்பம். கோபுரம் உயர வேண்டுமானால் அடிப்படை மிக அகல மாகவும், ஆழமாகவும் போடவேண்டும். அது போல என் வாழ்க்கை, சமுதாயத்தை நோக்கி விரிந்ததாகவும், அன்பின் ஆழம்பட்டதாகவும் அமைய அருள் செய்க! அந்தக் கோபுரத் தின் உச்சி - கலசத்தின் நிழல் பூமியில் விழாது!*

*இறைவா, வாழ்க்கையின் உச்சி செல்வம். கலசம் புகழ்! இவை என்மேல்-என்னைச் சுற்றியிருப்பவர்கள் மேல் நிழ லாக விழுந்துவிடக்கூடாது! ஆம், இறைவா! என்னைச் செல் வத்தாலும் புகழாலும் வரும் செருக்கிலிருந்து காப்பாற்று.*

*வாழ்க்கையின் வெற்றிக்குரிய ஆழமான அன்பினை அருளிச் செய்க! உயரிய குறிக்கோளினை ஏற்று வாழ்ந்திட அருள் பாலித்திடுக! சமுதாய மனிதனாக்கிவிடு. செல்வமும் புகழும் என்னைக் கெடுத்திடா வண்ணம் அடக்கத்தினைப் பொருளாகக்கொள்ளும் நெறியில் நிறுத்துக. இறைவா, அருள் செய்க!*

## ஜனவரி 10

## இறைவா! அறிவார்ந்த ஆள்வினையில் என்னை ஈடுபடுத்தியருள்க!

*இறைவா வலிமையான கட்டடத்தைத் தாங்க நிலத்திற்கும்கூட வலிமை சேர்க்க வேண்டியிருக்கிறது. இறைவா, என் வாழ்க்கை, கட்டிய மாளிகையாக - நெடு நாள் நிற்கும் மாளிகையாக - நிற்கவேண்டுமானால் வலிமை தேவை, உறுதி தேவை! 'பொக்கு' என்ற நிலையில் ஆசைகளுக்கும் அச்சத்திற்கும் இரையானால் எப்படி என் வாழ்க்கை மாளிகையாகும்? இறைவா, பெரிய காரியங்கள் செய்யப் பிறந்தவன் நான். என் வாழ்க்கை வெறும் ஆசைகளால்-அச்சத்தால் அழிந்து விடாமல் காப்பாற்று.*

*ஓயாது உழைத்திடும் வலிமையை உடலிற்குத் தந்தருள் செய்க! எடுத்த குறிக்கோளை நோக்கி அசைவிலாத-இடையீடு இல்லாத முயற்சியினை மேற்கொண்டு செல்ல வழி காட்டு!*

*என்னை அறிவார்ந்த ஆள்வினை நெறியில் ஈடுபடுத்துக. ஊக்கம் நிறைந்த உள்ளத்தினை உவந்தே தந்தருளல் வேண்டும். அறிவில் தெளிவையும், அசைவில், உழைப்பையும் வழங்கி வாழச் செய்திடுக. வாழ்வாங்கு வாழ்ந்திட அருள் செய்க!*

## ஜனவரி 11

**இறைவா, எல்லாம் நன்மைக்கே என்று எண்ணும் உள்ளம் தா.**

*இறைவா, நன்று உடையானே, தீயது இல்லானே, இறைவா நன்மை எது? தீமை எது? உலகத்தின் நிகழ்வுகளில் நன்மை இல்லை; தீமை இல்லை. அந்த நிகழ்வுகளை அனுபவிக்கும் எனது உளப்பாங்கிலேயே நம்மை இருக்கிறது அல்லது தீமை இருக்கிறது. இறைவா, நிகழும் நிகழ்வுகள் அனைத்தும் நன்மையே-நன்மைக்கே என்று ஏற்றுக்கொள்ளும் நல்ல மனதைத் தா! நான் நல்லவனானால் என்னைச் சுற்றிலும் நன்மையே நிகழும். இது நியதி.*

*இறைவா, தீமையையும் நன்மையாக ஏற்கும் பேருள்ளத்தினைத் தந்தருள் செய்க! நல்லனவே எண்ணும் இதயத்தினைத் தந்தருள் செய்க! நல்லனவே நினைக்கும் உள்ளத்தினை உவந்தருள் செய்க! எங்கும், எதிலும், எந்தச் சூழ்நிலையிலும் நன்மையையே காணும் பேரருள் உளத்தினை வழங்கி அருள் செய்!*

*நன்மையே என் வாழ்வின் முதல். நன்மையை என் வாழக்கையின் ஆதாரச் சுருதியாக அமைத்து வாழ்ந்திட அருள் செய்க!*

## ஜனவரி 12

### உண்மையாக நடந்திடும் உள்ளத்தினைத் தந்தருள்க!

*இறைவா, முன்னைப் பழைமைக்கும் பழைமையனே! பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே! அறிவில் புதுமை தேடலாம், படைப்பில் புதுமை தேடலாம்.*

*ஆனால், அன்பில் புதுமை உண்டா? அன்பு செய் வோரில் மாற்றம் வேண்டும். இறைவா, அன்பில் பழமை ஏது புதுமை ஏது? ஆனால் இறைவா, புதுமை என்ற பெயரில் நான் பல தவறுகளைச் செய்கிறேன்! இறைவா, எல்லாவற்றி லும் புதுமை நாடல் பைத்தியக்காரத்தனம்! எனக்கு இருப் பதில் மனநிறைவு இல்லை. இந்தப் பெரிய பிழையிலிருந்து என்னைக் காப்பாற்று, நான் எனக்கு வாய்த்தவர்களிட மெல்லாம் உண்மையாக நடந்து கொள்ளும் உள்ளத்தினைத் தந்தருள் செய்க! மனிதர்களில் புதியவர்களைத தேடுதல் வேண்டாம்! அன்பில் பழைய அன்பு-புதிய அன்பு என்ற வேற்றுமை இல்லை.*

*அலையும் மனத்தினை அடக்கி ஆண்டிடும் ஆளுமை யைத் தந்தருள் செய்க! பொறிகளை நல்ல நெறியில் பயிற்றிப் பயன்கொள்ளும் பாங்கினைத் தந்தருள் செய்க! பழை யோனே! பழைய அடியாரோடு கூட்டுவித்து வாழ்வித்திடு. இறைவா, அருள் செய்க!*

## ஜனவரி 13

### வாய்மையே வாழ்வாக, தவமாக ஏற்கும் உறுதியினைத் தா!

*இறைவா, கணக்கு வழக்கினைக் கடந்த கடவுளே! கணக்கில் 'கிராப்' என்று ஒரு பகுதி உண்டு! இந்தக் கணித முறையின் மூலம், ஒன்றின் வளர்ச்சியை, உயர்வை அல்லது தேய்மானத்தை, கண்ணுக்குப் புலனாகக் கூடிய கோடுகள் மூலம் காட்டலாம்! இறைவா, என் வாழ்க்கையின் வளர்ச்சியை இப்படி வரைபடம் போட்டுப் பார்த்தால் அழுவதா? சிரிப்பதா? என்ற நிலை தோன்றும்.*

*பொய் பெருகி வளர்கிறது. பொழுது சுருங்குகிறது. இறைவா, கள்ளமறியாத குழந்தையாக இருந்தபொழுது "பொய்" எனக்கு அறிமுகம் இல்லை. இன்றோ இறைவா "பொய்யின்றிப் பொருளுடைய வாழ்வில்லை" என்ற நிலைக்கு ஆளாக்கப் பெற்றுள்ளேன். "பொய்ம்மையும் வாய்மையிடத்த" என்ற திருக்குறள்தான் இன்றுள்ள ஒரே சமாதானம். நம்பிக்கை. இறைவா, ஏன் என்னை இந்தப் பொய்ம்மை நிறைந்த வாழ்க்கையில் ஈடுபடுத்தி விளையாடு கிறாய். பொய் பொய்தான்! இறைவா, பொய்ம்மையே வேண்டாம். வேண்டவே வேண்டாம்! அருள் செய்க!*

*வாய்மை நெறி நிற்க அருள் செய்க! வாய்மையே பேச வேண்டும். பொய் கலப்பில்லாத் தூய வாழ்க்கை வாழ அருள் செய்க. வாய்மையே வாழ்வாக, தவமாக ஏற்கும் உறுதி யினைத் தந்தருள் செய்க! வாய்மையில் சிறந்த பிறிதொன்று இல்லை. இறைவா, வாய்மை வழுவாத நிலை அருள் செய்க!*

## ஜனவரி 14

### வாழைபோல் வாழ அருள்க!

இறைவா! அழகு, பூரணத்துவத்தின் பொலிவு இல்லையா? இறைவா நீ அழகன்! நின் படைப்புகள் எல்லாம் அழகுடையன. இயற்கையில் கிடக்கும் அழகுப் பொலிவை, கைபுனைந்தியற்றாக் கவின்மிகு வனப்பை என்னென்று புகழ்வது; போற்றுவது. வாச மலரெலாம் வண்ணக் களஞ்சியம் அல்லவா! இறைவா, வாழ்க்கையின் மங்கல நிகழ்ச்சிகளுக்கெல்லாம் வாழை மரம் கட்டுதல், வாழைப்பழம் படைத்தற் சடங்குண்டு. இறைவா, இது ஏன்?

இறைவா, வாழைமரத்தின் தத்துவ விளக்கம் அருமையாக இருக்கிறது. இறைவா, ஒழுங்காக அடுக்கப் பெற்ற வாழைமட்டைகள். பிசிறே இல்லாத வழுவழுப்பு. முறையாக அடுக்கிவைத்த வாழைத்தார். இறைவா, வாழையின் அமைப்பு, ஒழுங்கை உணர்த்துகிறது.

இறைவா, இவ்வளவு அழகை இரசித்து அனுபவிக்கும் நான் ஏன் அழகைப் படைக்க மறுக்கிறேன்? அழகை வளர்க்கவும்கூட ஆசைப்படுவதில்லையே. இறைவா, என் வாழ்க்கையில் ஒழுங்குகள் இல்லையாயின் நான் எப்படித் திருத்தமுறச் செய்ய முடியும்? திருத்தமுறச் செய்ய இயலாத நிலையில் ஏது பூரணத்துவம்? பூரணத்துவம் இல்லாத நிலையில் அழகு ஏது? நான் பூரணத்துவம் அடையாத நிலையில் பரிபூரணனாகிய உன்னை அடைதல் எங்ஙனம்?

இறைவா, இந்தப் பரந்த உலகில் இயற்கையில் எங்கு நோக்கினும் ஒழுங்குகள். முறை பிறழாத நிகழ்ச்சிகள்! நின்னை உபாசிப்பது என்றால் அழகை உபாசிக்க வேண்டும். ஒழுங்குகளைக் கடைப்பிடிக்க வேண்டும்! நோன்பாக ஏற்றுக்கொள்ளவேண்டும். அப்பொழுதுதானே நின்னருள் கிடைக்கும். எதையும் திருத்தமுறச் செய்ய, அழகுறச் செய்ய இறைவா, அருள் செய்!

## ஜனவரி 15

### உழைப்பில் இன்பம் காணும் இனிய பேற்றினை அருள்க!

*இறைவா! ஏறூர்ந்த செல்வா, நல்ல இளைய ஏற்றினை அடக்கி ஊர்தியாக்கி எழுந்தருளி வருகின்றவனை. நானும் தான் மஞ்சு விரட்டில் மாடு பிடிக்கிறேன். எப்படி? நாலுபேர் பறை கொட்டி மாட்டினை மிரளச்செய்கிறார்கள், இன்னும் நாலுபேர் கம்பு கொண்டு விரட்டுகிறார்கள். ஓர் ஏற்றினை அடக்கிப் பிடிக்க இத்தனை உதவிகள்! அப்படியும் அந்த ஏறு அகப்படுவதில்லை. இறைவா, இஃதொரு விளையாட்டு! எதற்காக?*

*ஏறு, உழைப்பின் சின்னம்! உழைப்பினில் ஊர்ந்து வாழ்க்கை இயங்கின் வெற்றி பெறலாம். உலா வரலாம். இது தத்துவம். நானும்தான் உழைக்கிறேன். இல்லை உழைப்பது போல உழைக்கிறேன்! இதற்கே எத்தனை பேர் உதவி. குறைந்தது அரை டஜன் பேர். ஒட்டு மொத்தமான கணக்குப் பார்த்தால் பலன் பூஜ்யம்! மஞ்சுவிரட்டில் மாடு தப்பித்து ஓடிவிடுவதைப்போல், உழைப்பு தப்பிவிடுகிறது. உறுபயனும் கைக்குக் கிட்ட வில்லை!*

*இறைவா, இந்த இரங்கத்தக்க நிலையிலிருந்து என்னைக் காப்பாற்று! நான் முழுமையாக உழைப்பின் வசத்தில் நின்று உழைத்திட அருள் செய்க. கூட்டாளிகளின் பலத்தை நம்பி நடைப் பிணமாகாமல் வெற்றிகள் பொருந்திய உழைப்பினை ஏற்றுக் கொள்ள அருள் செய்க! என் வாழ்க்கையின் குறிக் கோள் உழைப்பு. என் வாழ்க்கை இயங்குதல் உழைப்பையே ஊர்தியாகக் கொண்டதாய் விளங்க அருள் செய்க! உழைப்பில் இன்பம் காணும் இனிய பேற்றினை அருள் செய்க!*

## ஜனவரி 16

### கண்களுக்கு அறிவுக் காட்சியினைக் கற்றுத் தருக!

இறைவா, கண்ணுதற் பெருமானே! உனக்கு மூன்று கண்கள். கண்ணின் அருமையும் பயனும் அறிந்து மூன்றாகக் கொண்டனையோ? எனக்கு மட்டும் இரண்டே கண்கள். ஏன் இந்தப் பாரபட்சம்! இறைவா, எனது இரண்டு கண்களே கூட என்னோடு ஒத்துழைப்பதில்லை. கண்ணினால் எனக்கு ஆக்கம் இல்லை! இறைவா, ஏன் இந்த அவலம். காணாதன வெல்லாம் காணும் ஆர்வம் என் கண்ணுக்கு இல்லை. பொறி களுக்குத் துணையாக அமைந்து ஏவல் செய்யும் என் கண்களைத் திறந்திடுக!

என் கண்களுக்கு அறிவுக்காட்சியினைக் கற்றுத்தருக. நின் திருக்கோலத்தைக்காணும் பேற்றினை அருள்செய்க! கண்களே நல்வாழ்க்கையின் வாயில்கள். இறைவா, அருள் செய்க!

கூர்த்த மதியோடு கூடிய காட்சியைக் காணப்பயிற்சி தருக. என் ஆன்மாவின் அருள் நிலையை மற்றவர்க்கு உணர்த்தும் கண்களாக விளங்க அருள் செய்க!

எனக்கு ஆகாதனவற்றைக் கண்ணினாலே பார்த்து ஒதுக்கும் ஆற்றலினைத் தந்தருள் செய்க! இறைவா, என் கண்கள் பொருள் நலம் பெற்றுப் பொலிவுறுதல் வேண்டும். ஒளிமிக்க கண்களாக விளக்கமுற வேண்டும். இறைவா, அருள் செய்க!

## ஜனவரி 17

### வாய் வழாதிருப்பின் வாழ்வு சிறந்திடும்

*இறைவா, மறைகளை ஓதிய உத்தமனே! சொல்லாமல் சொல்லி உணர்த்திய தலைவா! என் வாய், பேசியே அலுத்துப் போயிற்று! இனியனவே கூறுக என்றது வள்ளுவம்!*

*என் வாய், இனிப்பு—கற்கண்டு சுவைக்கத் தவிக்கிறதே ஒழிய, இனிய சொற்களை வழங்க மறுக்கின்றது. சளசள என்ற ஒரே "அரட்டைக் கச்சேரியே" என் வாழ்க்கை மயமாகி விட்டது! வாய்ச் சவடால்களுக்குக் குறைச்சல் இல்லை. ஒரே ஆரவாரம்! பேசும் வாய்க்கு நீ அமைத்த தடைகள் பயன் இல்லை. இறைவா, இந்த வாயினால் விளைந்த கலவரம், படுகொலைகள், துன்ப நிகழ்வுகள் ஏராளம். இறைவா, என் வாய் மாறியாக வேண்டும்! பொருள் நிறைந்த சொற்களையே வழங்குதல் வேண்டும்!*

*வையகத்தை ஒன்று சேர்க்கும் சொற்களையே சொல்லுதல் வேண்டும். அறந்தழீஇய சொற்களையே மொழிதல் வேண்டும்! நின் பொருள்சேர் புகழையே கூறுதல் வேண்டும். இறைவா, அருள் செய்க! வாய் வழாது துணை செய்யின் என் வாழ்வு சிறக்கும்; வையகம் மேம்பாடுறும்! இறைவா, அருள் செய்க!!.*

## ஜனவரி 18

### வாய்மை நலம் தழுவிய வாழ்வினை அருள்க!

இறைவா! வாயில் பிறப்பது வாய்மை. வாய், சொல்லுவதற்காக உரியது அல்ல. வாய், உடலின் மற்ற உறுப்புகளுக்கும் கூட உணர்வினை வழங்கும் வாயிலாகும்.

எல்லா உறுப்புகளுக்கும் ஆசிரியன் போல விளங்கி நல்வாழ்க்கை நல்க வேண்டிய கடமை வாய்க்கு உண்டு!

உடலின் மேலாண்மைக்கும் வாயே பொறுப்பு. நாவடங்கினால் நோய் இல்லை; நாவடங்கினால் சமூகத்தில் கலவரம் இல்லை. வாய் இயற்றும் உண்பதற்குரிய பணி, ஒரு பகுதிப் பணியே யாம். வாய், பேசும் பணியும் செய்கிறது. சிரிப்பது ஒரோ வழி! முற்றிலும் தற்சார்பான நிலையில் பேசலாம். ஆனால், பெரும்பாலும் செவிக்குணவை வழங்கும் வினாக்களைத் தொடுப்பதே வாயின் முதற்பணி!

வாய், ஏன்? எதனால்? எப்படி? என்ற வினாக்களைத் தொடுத்து ஆய்வுணர்வை வளர்க்க வேண்டும். அறிவு வினாக் களைத் தொடுத்து விளக்கம் பெறுவதே வாயின் தலையாய பணி. இறைவா, ஏன்? எதனால்? எப்படி? என்ற வினாக் களைத் தொடுக்கக் கற்றுக் தந்து அருள் செய்க. இறைவா, என் வினாக்களுக்குரிய விடைகளைக் கூறி அறிவைப் புலப் படுத்தும் பணியையும் செய்ய நீயே அருள் செய்க. வாய்மை நலம் தழுவிய வாழ்க்கையை அருள்க!

## ஜனவரி 19

### நின்னைப் போற்றும் வாழ்க்கையை அருள்க!

*இறைவா, என் வாழ்க்கையைப் பொருளுடையதாகச் செய்ய வேண்டும் புண்ணியனே. என் வாழ்க்கை மற்றவர் வாழ்க்கைக்குப் பொருளாகி, முதலாகி நிற்கும்பேற்றினை அருள் செய்க!*

*பொருள் என்றால் குறுகிய நிலையில் கொச்சைப் படுத்திப் பணமே பொருள் என்று ஆக்கிய கொடுமையிலிருந்து இறைவா, என்னைக் காப்பாற்று! வாழ்க்கையை முழுமைப்படுத்தும் தகுதியுடைய அனைத்தும் பொருளே. செவி நுகர் கனிகளும் பொருளே! இறைவா, நீயே வாழ்க்கைக்குப் பொருள் அல்லவா? அதுவும் செம்பொருள் அல்லவா? நின்னைப் பெற்று வைத்த பொருள் நமக்கு ஆம் என்று வாழ்ந்தால் வாழ்க்கை சிறக்கும்! இறைவா, அருள் செய்க! என் ஆன்மாவிற்கு அறிவினால் ஒளியூட்டும் கல்வியைப் பொருள் எனத் தந்தருள் செய்க.*

*இறைவா, என் வாழ்க்கையின் உடைமைப் பொருளாக, உன்னை எனக்குத் தந்தருள் செய்க. நீயே என் உடல், ஆவி, பொருள் அனைத்தும். நின்னைப் போற்றி என் வாழ்க்கை யையும் பொருளுடைதாகச் செய்து கொள்ளும் பேற்றினைத் தந்தருள் செய்க!*

## ஜனவரி 20

### புதுமை வேட்டல் தவமாகட்டும்

*இறைவா! முன்னைப் பழமைக்கும் பழைமையாய், பின்னைப் புதுமைக்குப் பேர்த்தும் அப்பெற்றியதாய் விளங்கும் இறைவா, எனது வாழ்க்கை தேங்கிக் கிடக்கிறது. என் வாழ்க்கையில் மாற்றங்கள் இல்லை. இல்லை, மாற-மறுக்கிறேன். பழக்கம் தவிரப் பழகும் முனைப்பு இல்லை. இறைவா, என் கதி என்னாவது? நின் கருணை என்பால் படக்கூடாதா? விரைந்து அருள் செய்க! நீ, அடிபட்டுக் கொண்டு மாணிக்கவாசகரை ஆட்கொண்டாய். தெருவில் நடந்தும் எய்த்து அலைந்தும் ஆரூரரை ஆட்கொண்ட அருளாளா, என் பொருட்டு நீ அல்லற்பட வேண்டாம். எனக்குத் தண்டனை கொடு. காலனைக் காலால் உதைத்ததைப் போல என்னை உதைத்திடு, என் பிழையைத் திருத்து! பிழையெலாம் தவிரப் பணித்தருள் செய்க!*

*என் உள்ளம், மாற்றங்களை விரும்பத்தக்கதாக வளர அருள் செய்க! மாற்றங்கள் இல்லாதது அழிந்து போகும். நான் அழியத் திருவுள்ளமா? இறைவா, காப்பாற்று. நாள் தோறும் புதுமையை விரும்பி முயன்று நடத்தும் வாழ்க்கையை அருள் செய்க! புதுமை வேட்டலே எனது தவமாகட்டும். வளரும் செடிகளில் புதிய தளிர்கள்-அரும்புகள்! அதுபோல என் வாழ்க்கையில் புதிய எண்ணங்கள், புதிய புதிய முயற்சிகள் தோன்ற வேண்டும். இறைவா, அருள் செய்க!*

## ஜனவரி 21

### வாழ்க்கை சிறக்க மகிழ்வு தேவை!

*இறைவா, குமிண் சிரிப்பினையுடைய ஆடல் வல்லானே! வாழ்க்கை சிறக்க மகிழ்வு தேவை! மகிழ்ச்சி, கடைச் சரக்கன்று! மகிழ்ச்சி, புறத்தே உள்ள பொருள்களிலும் இல்லை! ஆம்! இறைவா! என் உள்ளம் மகிழ்தல் வேண்டும்! "என் மனம்தான் நரகத்தையும் படைக்கிறது! சொர்க்கத்தை யும் படைக்கிறது"! இது கவிஞன் மில்டனின் வாக்கு. இறைவா! மகிழ்தல் என்பது உள்ளத்து நிறைவைப் பொறுத்தது! இன்றைய வாழ்வு நிகழ்வுகளின் தோல்விகள், வெற்றிகள், இழப்புகள்—ஈட்டங்கள் இவற்றைக் கணக்குப் பார்க்க வேண்டும். மறுநாள், தோல்விகளை வெற்றிகளாக்கும் முயற்சி தேவை! இழப்புகளை ஈட்டங்களாக்கும் முயற்சி தேவை!*

*ஆனால், எந்தச் சூழ்நிலையிலும் மனவருத்தம், கவலை கொள்ளுதல் கூடாது. மனத்துன்பம் நிறைந்த வாழ்க்கை மோசமானது; அருவருக்கத்தக்கது. இறைவா, என்னை மன வருத்தத்திலிருந்து காப்பாற்று! என் மனக்கவலையை மாற்று. நான் மகிழ்ச்சியாக இருக்கும் வரத்தினைத் தா!*

*இன்றைய அறிவார்ந்த மகிழ்ச்சியே நாளைய முயற் சிக்கு வித்து! இறைவா, சிரித்து மகிழ்ந்து வாழும் வாழ்க் கையை அருள் செய்க! செடிகளில் மலர்கள் சிரித்து வாழ் கின்றன! எதிர் காலத்தை நினைந்து நினைந்து ஏங்குவ தில்லை! என் வாழ்வும் மகிழ்ச்சியாக அமைய வேண்டும்! நான் மகிழ வேண்டும்! இறைவா, அருள் செய்க!*

## ஜனவரி 22

### அதிர்ஷ்டம் ஒரு குருட்டுப் போக்கு!

*இறைவா, இன்று காலை நாட்காட்டியைப் பார்த்தேன்! "அதிர்ஷ்ட நாள்" — என்றிருந்தது! இறைவா, நான் அதிர்ஷ்டத்தை நம்பத் தயாராக இல்லை! இறைவா! எனக்கு உன் கருணைதான் தேவை! நின்னருள் எனக்கு நரகத்தையே கொடுத்தாலும் நான் மறுக்க மாட்டேன்! உவப்போடு ஏற்பேன்! நின் அருள் பெருக்கு! அதுவே என் அதிர்ஷ்டம்! இறைவா, அதிர்ஷ்டம் ஒரு குருட்டுப் போக்கு! அதிர்ஷ்டம் பலருக்கும் பலவற்றைத் தருகிறது! ஆனால், யாருக்கும் மனநிறைவளிக்கத் தக்க வகையில் தருவதில்லை! அதனால் பயன் இல்லை.*

*இறைவா, நீயே எனக்கு அருள் செய்க! நான் வேண்டுவனவெல்லாம் ஒருங்கு ஈந்தருள் செய்க! பொன்வேண்டும் பொருள் வேண்டும் இன்பம் வேண்டும்! நின்னருள் வேண்டும்! உன்னை என்றும் மறவாமை வேண்டும்! நான் மறந்தாலும் நீ என்னை மறவாமை, வேண்டும்!*

*இறைவா, அருள் செய்க! பொன்னாய், மணியாய், பெண்ணாய் இருந்தருளி, போகத்தைத் துய்ப்பித்து அருள் செய்க! பின் துணையாயிருந்தும் என் நெஞ்சத்தைத் துறப்பித்தும் ஆட்கொண்டருள் செய்க!*

## ஜனவரி 23

### உழைப்பால் வாழும் வாழ்க்கையை அருளுக!

*இறைவா, நினைப்பவர் மனம் கோயிலாகக் கொள்ளும் இறைவா! நீ, எனக்குச் சாட்சி! இறைவா, நீ என் மனத்துக்குச் சாட்சியாக இருக்கிறாய்! இறைவா! நான் பலவீனமடைந்து கொண்டே வருகிறேன்! அதனால் பயப்படுகிறேன்!*

*இறைவா, நான், என் பயத்தின் காரணமாக உன்னை அண்டிப் பிச்சை கேட்கிறேன்! விதி விலக்குக் கேட்கிறேன்! சலுகை கேட்கிறேன்! என்பால் இரக்கம் காட்டு என்று இறைஞ்சுகிறேன்! இறைவா, என்பால் இரக்கம் காட்டாதே! எனக்குச் சலுகைகள் வேண்டாம்! வாழ்வு உரிமைகளைத் தந்து அருள் செய்க! எனக்கு விதிவிலக்கு அளிக்காதே! நான் விதி-நெறிவழியே வாழ முயற்சி செய்வேன்!*

*சிறுதூறல்களால் பயிர் வளர்ந்து விடாது! அது போல நான் சலுகையால் வளர்ந்து வாழ்ந்து விட முடியாது. எனக்கு உரிமைகளே வேண்டும். பயமற்ற வாழ்க்கையே வேண்டும்! நான் உழைத்தே உண்ண வேண்டும்!*

*நான் மனச்சாட்சி உணர்த்தும் வழியில் நடக்க வேண்டும்! அருள் செய்க! உரிமை நிறைந்த வாழ்க்கையை அருள் செய்க! உழைப்பால் வாழும் வாழ்க்கையை அருள் செய்க! மனச்சாட்சியின் படி வாழும் நன்னெறியில் நிறுத்திடுக.*

## ஜனவரி 24

### பணி செய்து கிடக்கும் பாங்கினை அருள்க!

*இறைவா! உயிராவணம் இருந்து உற்று நோக்கி, உள்ளக் கிழியில் உரு எழுதியோர்க்கு அருளும் உத்தமனே! என் வாழ்க்கையில் உயிர் ஆவணம் இல்லை. நான் உயிருக்கு ஊதியம் தேடும் நிலையில் இல்லை. எனது உடம்பு என்னை ஆட்டிப் படைக்கிறது. உடம்புக்கு உணவும் மருந்தும் தேடுவதி லேயே பொழுது கழிகிறது. போதும் போதாதற்குக் காமம் வேறு இறைவா! ஏன் இந்த அவலநிலை! நான் எழுச்சி வசப்படுகிறேன்!*

*அப்பப்ப, ஒரே உணர்ச்சி மயம்! ஆனால் எனக்கு; என்னைப்பற்றி நான் எப்படி ஆளாக வேண்டும் என்ற கற்பனைகூட இல்லை! இறைவா, அதனால் எனக்கு இப்படி யொரு கற்பனை செய்யக் கற்றுத் தா!*

*இறைவா, நான் இந்த கற்பனையில் திளைத்து என்னை உருவாக்கிக் கொள்ளும்படி அருள் செய்க! ஆம் இறைவா! எனக்கு நீ நாள்தோறும் படிக்காசு தருதல் வேண்டும். இது எனது கற்பனை! ஆம் இறைவா, நான் அப்பரடிகளைப் போல், கைத்திருத்தொண்டு செய்ய வேண்டும்! உழைப்பால் உருவாகும் பணிகள் செய்யவேண்டும்! திருக்கோயில் திருத் தொண்டு செய்ய வேண்டும்! தெருவெல்லாம் கூட்டித் துப்புரவு செய்ய வேண்டும்! இறைவா, நான் தொண்டனாக வாழ அருள் செய்க! பணி செய்து கிடக்கும் பாங்கினைத் தந்தருள் செய்க! படிக்காசும் அருளுக!*

## ஜனவரி 25

### இறைவா, நீ என்னைக் கைவிடாதே

*இறைவா, முப்புரம் எரித்த முதல்வா! என்னே உனது முரண்பட்ட திருவிளையாடல்! கருணைக் கடலாகவும் விளங்குகின்றனை! அதே போழ்து முப்புரத்தையும் எரித்துள்ளனை! ஆம், இறைவா, கருணையும் தேவை! அதே போழ்து உறுதியும் தேவை! கருணை மறவர்களாக வாழ்தல் வேண்டும்!*

*இறைவா, எனது அன்பு உனது அருளைக் கடலாக்குகிறது! எனது அடாதநிலை உன்னைச் சினப்படுத்தி விடுகிறது! ஆணவத்தின் உருவமாக நின்று நின்னை மதிக்காத நிலை, பொய் மாய மயக்கம், செயல் வீரம் ஆகியன என்னைத் தலையால் நடக்கச் செய்திடும் போது நீ என்னை ஒறுத்தாளுகின்றனை! இறைவா, நீ எனக்குத் தரும் தண்டனைகள் என்னை வாழ்விப்பனவேயாம்! என்னைப் புளியம் வளாரினால் அடித்தாலும் நான் ஏற்பேன்! உடன் பட்டே நின்று நினக்கு ஆட்செய்வேன்!*

*ஆனால், இறைவா! ஒரு வேண்டுகோள்! நீ பாரா முகமாக மட்டும் இருந்து விடாதே! அன்னியனைப் போல நோக்காதே! நீ என்னை உடைமையாகக் கொண்டவன்; நான் உனக்குப் பணி செய்பவன்! உன்னையே நினைந்து நினைந்து ஆவி கழிக்கும் விருப்பமுடையவன்! நீ என்னைக் கை விடாதே! நீ, என்னைத் துடைத்தாலும் போகேன்! உனக்குத் தொழும்பாய் ஆட்பட்டிருப்பதே என் விருப்பம்! ஏற்றுக் கொள்க! அருள் செய்க!*

## ஜனவரி 26

### சிறியேன் செய்த பிழைகளைப் பொறுத்து ஆட்கொள்!

*இறைவா, நினைந்து உருகும் அடியாரை ஆட்கொள்ளும் இறைவா! நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டருளும் என் தலைவா! நான் உன்னை நினைக்கிறேன், என்று கூறவும் வேண்டுமோ? இல்லை, இறைவா! நான் உன்னை நினைக்கவில்லை! நான் உன்னை மறந்திருந்தால்தானே நினைக்க வேண்டும்! தாயை மகவு மறந்ததுண்டா? உடம்பை உயிர் மறந்ததுண்டா?*

*இறைவா, அதுபோல் நான் உன்னை மறந்ததே இல்லை! ஆதலால் நினைக்கவில்லை! நீ, என்னை நீங்காமல் இருந்து அருள் செய்கின்றனை! ஆனால் நினைப்பு பயன் தரவில்லை! இடையில் என் உழைப்பெல்லாம் வீணடிக்கப் பெறுகிறது. நில்லாதனவற்றையெல்லாம் நிலையாயின என்று கருதித் தேடி அலைந்து கொண்டிருக்கிறேன்! ஆனால், புறத்தே உன்னைத் தேடியதில் ஒன்றும் குறைவில்லை! நீ நிறைந்திருக்கும் என் உள்ளத்தே தேட மறந்தேன். என் இதயத்தை நான் உன்னிடம் பூரணமாக ஒப்படைக்கவில்லை! இறைவா, என்னைக் காப்பாற்று!*

*நின்னையே நினைந்து நினைந்து என் ஆவிகழியும் அருட்பெரும் வாழ்வினை அருள் செய்க! புறத்தே போகாமல் தடுத்தாட் கொள்! சிறியேன் செய்த பிழைகளைப் பொறுத்தாட் கொள்க!*

## ஜனவரி 27

### அன்பில் கசிந்துருகும் நிலையை அருள் செய்க!

*இறைவா! வாழ்வாங்கு வாழ்வதும் ஒரு கலையே! இறைவா! வாழ்வாங்கு வாழும் கலையைக் கற்றுத்தா! இனிய சொற்களைப் பேசுதல் எளிமையான காரியமா? மற்றவர் களை மதித்தல் எளிதில் வரக்கூடிய பழக்கமா? மற்றவர் களுடைய அவமதிப்பைத் தாங்கிக்கொண்டு அன்பு செய்யும் ஆற்றல் எளிதில் வரக்கூடியதா? இறைவா, இந்த அரிய வாழ்க்கைக் கலைகள், வாழ்க்கையில் வந்து பொருந்த அருள் செய்யக்கூடாதா? இறைவா, இவை கற்றுத் தருவனவும் இறக்குமதி செய்வனவும் அல்ல என்கிறாயோ? இறைவா, இவற்றை வாழ்க்கையில் முயற்சி செய்து அடைய வேண்டும்! மனம் குழைந்தால் இனிய சொற்கள் தோன்றும். இரும்பு மனத்தை நாள்தோறும் அன்பின் நனைத்துக் குழைத்துப் பக்குவப்படுத்திக் கொள்ளும் ஆற்றலை அருள் செய்க!*

*இனிய மனத்தில்-குழைந்த உள்ளத்தில் இனிய சொல் தோன்றும்! அன்புக்குப் பகையான தற்செருக்கு, தன்னல நயப்பு வேண்டவே வேண்டாம்! எளியமனம், தாழ்வெனும் தன்மை, பணிவு எனும் பண்பு-இவையே என் வாழ்க்கையின் அணிகலன்களாக அமைந்து விளங்க அருள் செய்க!*

*எப்போதும் என்மனம் அன்பில் கசிந்துருகும் நிலையை அருள் செய்க. எனது அன்பே! அருள் செய்க.*

## ஜனவரி 28

### நின் பணியே செய்ய அருள் செய்க!

*இறைவா! ஞாலமே! விசும்பே! இவை வந்து போம் காலமே! "காலம் மாறிவிட்டது. காலம் கெட்டுவிட்டது! காலம் கலி காலம்!" என்றெல்லாம் பேசுவது வாழத்தெரியா தவர்களின் புலம்பல்! ஆசைகள் நேராகின் அனைத்தும் நேராகும்! இன்ப நேர்வு ஒருநிலையுடையதாக அமைதல் வேண்டும்! இன்பமேகூட பலமுனையினதாக இருப்பின் இன்னல்களே விளையும். எனக்கு இன்பமளிப்பவர்கள் என் நோக்கத்திற்கு இசைந்தவர்களாக இருத்தல் வேண்டும். அப்போதுதான் இன்பம் முறைபிறழாது. என்னை வாழ் விக்கும் தலைவனுக்கே ஆட்செய்ய வேண்டும். கொச்சைத் தனமான ஆசைகளுக்கு ஆட்பட்டு அடிமையாதல் கூடாது! இறைவா, என் இன்ப விழைவுகள் எனக்கு வேண்டியவரைச் சுற்றியே சுழலட்டும்!*

*இறைவா, என் கைகள் உன் பணியே செய்வதாக! என் கண்கள் நின் பணியே செய்க! இறைவா இந்த வரங்களை எனக்குத் தா! அதன்பிறகு காலமும் சூழ்நிலையும் எனக்கு ஏவல் செய்யும்! ஞாயிறே கூடத் திசைமாறித் தோன்றினாலும் எனக்குக் கவலை இல்லை! எனக்கு இன்பம் விளைவிப்பவர் உனக்கும் ஆட்பட்டவராக இருத்தல் வேண்டும்! இறைவா, அருள் செய்க! என் கைகள் உனது பணிகளையே செய் திடுதல் வேண்டும்! என் கண்கள் உனது திருவிழாக் கோலத் தையே காணுதல் வேண்டும்! இறைவா, அருள் செய்க!*

## ஜனவரி 29

### உயிரின் தரத்தை உயர்த்தி அருள்க!

*இறைவா, அடித்து அடித்து அக்காரம் தீற்றும் என் துணைவா! நாடகத்தால் உன்னடியார் போல் நடிக்கிறேன்! நடிப்பிலாவது உண்மை உள்ளதா? இல்லையே! "நான், எனது" என்ற நச்சுப் பாம்புகள் என்னைக் கடித்துவிட்டன! என் உடல் முழுதும் நஞ்சுபரவி, அதே நஞ்சை என்னைச் சுற்றியுள்ள பொருள்களின் மீதும் பரவ விடுகிறேன்! எங்குப் பார்த்தாலும் "நான்" என்ற வெறியாட்டம்! என் நிலம், என் வீடு, என் கோயில் என்ற வெறியாட்டம்!*

*இறைவா, இந்த நஞ்சனைய வாழ்க்கையை எப்போது மாற்றுவது! இன்றா? நேற்றா? பிறப்புத் தொடங்கிய காலந் தொட்டுச் செய்தவினைகள் என்னை ஆட்கொண்டுள்ளன! ஆடுகிறேன்! பாடுகிறேன்! இறைவா, இந்தப் படுமோசமான நிலை போதும்! இனி படமுடியாது துயரம்! கருணை காட்டுக! நான் நடிப்பிலிருந்து விடுதலை பெற வேண்டும்! "நான்", "எனது' என்ற நச்சுப் பாம்புகளிடமிருந்து விடுதலை பெற வேண்டும்! முன்னை வினையின் முடிச்சுகளை அவிழ்த்திடுதல் வேண்டும்! இறைவா, இந்த வரங்களை அருள் செய்க! என்னை எத்தனை முறை வேண்டுமானாலும் அடி! என் உயிரின் தரத்தை உயர்த்தி அருள் செய்க!*

## ஜனவரி 30

### அருள் நெறி வாழ்க்கையினை அருளுக!

இறைவா, அண்ணல் காந்தியடிகள் பிறந்தார்! இறந்தார் என்று கூறலாமா? காந்தியடிகள் இறந்து விட்டார் என்பது வரலாற்றுப் போக்கில் சரி! ஆனால் அவர் இறக்கவில்லை! அவர் வாழ்ந்து கொண்டே இருக்கிறார்! ஆம்! மானுட சாதிக்குச் சுதந்தர உணர்வு இருக்கும்வரையில் காந்தியடிகள் வாழ்வார். அகிம்சை அதாவது யாரையும் துன்புறுத்தாது வாழ்தல் என்ற உயரிய கொள்கை, உலகம் தழுவிய கொள்கையாக விளங்கும் வரையிலும் வாழ்வார். சத்தியம்- உண்மை நிலவும் காலம் வரையிலும் வாழ்வார். இறைவா, எனக்கும் ஆசை! நான் மனிதசமுதாய வரலாற்றில் இழுத்தெறியப்படக் கூடாது! நான் அடுத்த தலைமுறையின ருக்குக் "குருபூசை", "திதிப்" பொருளாக மட்டும் போய் விடக்கூடாது!

நான், மற்றவர் மறவா வண்ணம் என்றும் நிலைத்து வாழ வேண்டும். அதற்குரிய விலையாகிய நன்மையை எண்ணுதல் வேண்டும்; நன்மையைச் செய்தல் வேண்டும். ஓயாது உழைத்த மனிதகுலத்துக்குரிய நன்மையைச் செய்தல் வேண்டும். அதற்கு நானே நன்மையின் மொத்த வடிவமாக மாறி ஒழுகுதல் வேண்டும். நன்மைக்கு வரும் இடையூறுகளை நான் தாங்கிக் கொண்டு நன்மையைக் காப்பாற்ற வேண்டும்! இறைவா, இந்த நன்மை பெருக அருள்நெறி சார்ந்த வாழ்க் கையை அருள் செய்க!

## ஜனவரி 31

### அன்பே, அன்பே என்று அரற்றி அழ ஆசைப்படுகிறேன்!

*இறைவா! கண்ணப்பர் அன்பினை ஆரத்துய்த்த அண்ணலே! கண்ணப்பர் கண்களை ஏற்று உகந்த தலைவனே! ஆசாரம் பிழைத்ததற்காகக் கண்களை ஏற்று உகந்தாயோ? அல்லது உன் தேவைக்கு உகந்தாயா? அல்லது கண்ணப்பரின் அன்பை மகிழ்ந்து அனுபவிப்பதற்காக உகந்தாயா? இறைவா, உனக்கு ஏது ஆசாரம்? உனக்கு உரிய ஒரே ஆசாரம் அன்பேதான்!*

*இன்று எங்குப் பார்த்தாலும் வேதம், ஆகமம், சாத்திரங்களின் பெயரால் பொய்யான ஆசாரங்கள் அரங் கேறுகின்றன! ஆசாரத்தின் மறைவில் சாதிமுறைகள் ஆட்சி செய்கின்றன! இறைவா! நான் உனக்கு ஆசாரபூசை பண்ணேன்! யாதொரு சடங்கும் செய்யேன்! இறைவா, என்னைச் சிங்காரித்து என் அழகைக் காணாமல் உன்னைச் சிங்காரித்து உன் அழகைக் காண ஆசைப்படுகிறேன்!*

*எனக்கு நீ இந்த வரத்தினைத் தந்தருள்செய்க! "என்னுடைய அன்பே! அன்பே!" என்று அரற்றி அழ ஆசைப்படுகிறேன்! ஊனெலாம் நின்றுருக அழவேண்டும்! அன்பினில் விளைந்த ஆரமுதே, மாணிக்க வாசகரிடம் பெற்ற அன்புக் கடலில் ஒரு திவலையைத் தந்தருள் செய்க. கண்ணப்பரின் அன்பில் ஒரு பகுதியை எனக்கும் அளித்தருள் செய்யும்படி கண்ணப்பருக்குப் பரிந்துரை செய்து திருமுகம் கொடுத்தருள் செய்க! அன்பிலே நின்னைக் காண ஆசைப் பட்டேன்! அருள் செய்க!*

## பிப்ரவரி 1

### இறைவா, இப்பிறப்பை முழுதாக வாழ்ந்திட எனக்கருள்க!

*இறைவா! உன்னைப் பற்றிப்பலர் புகழ்ந்து கூறியுள்ளனர். கூர்ந்து கவனித்தால் அந்தப் புகழ்ச்சியனைத்தும் உண்மைதானா என்ற ஐயம் தோன்றுகிறது! சில மனிதர்களே போதும் உன்னுடைய தகுதியின்மையை விளக்க! சிலரை நீ உண்ணவும் உறங்கவும் என்றே படைத்தாயா? அவர்களிடம் உன் அறிவுரைகள்—உபதேசங்களை விட பரம்பரையாக வந்த குணத்தின் ஆற்றலே கூடுதலாக இருக்கிறது! அவ்வளவு தான்! பழைய பழக்கப் பைத்தியம் திடீர் என்று தெளியாதே! மெள்ள மெள்ளத்தான் தெளியும்! ஆனால், அதுவரையில் உலகம் காத்திருக்குமா? காத்திருக்காது! இப்பிறப்பை நான் முழுதாக வாழவே ஆசைப்படுகிறேன். அதுவரையில் அந்தக் காலனை ஒதுங்கி இருக்கச் சொல்! நான் விரைந்து முன்னேற முயற்சி செய்கின்றேன்! இறைவா! என் ஆசைகள் கூட உன்வழியில் தான். பேச ஆசைப்படுவதில்லை; கேட்கவே ஆசைப்படுகிறேன்! விளம்பரம் விரும்பவில்லை; வேலைகளையே விரும்புகின்றேன்! ஓய்ந்திருக்க விரும்பவில்லை! ஓயாது உழைக்கவே விரும்புகிறேன்! சண்டை சச்சரவுகளில் விருப்பம் இல்லை; சமாதானத்தை விரும்புகின்றேன்! ஆதலால் இறைவா! என்னை நம்பு! உன் புகழ் என்னால் குறையாது! வளரும்! ஏன்? உன் வேலைகளில் பங்கு பெறுவேன். இது உறுதி.*

## பிப்ரவரி 2

### மனம் திருந்தினால் மண்ணில் சொர்க்கம்!

இறைவா, என்னுடைய மனம் கூட்டாட்சிக்கு ஒத்து வர மறுக்கிறது. நான் என் மனத்தினைக் கெஞ்சிக் கேட்டு விட்டேன். மனமே, புத்தியுடன் கலந்து ஆலோசனை செய். சித்தத்துடன் சேர்ந்துபேசி முடிவு செய் என்றால் மனம் மறுக்கிறது. புத்தியோ மனத்தை மேவ முடிவதில்லை. மனம் முன்பே ஐம்பொறிகளைத் தன் வயப்படுத்திக் கொண்டு விட்டது. ஆதலால் புத்தியில்லாமல் மனம் போன போக்கில் ஊரைச் சுற்றி ஏய்த்துக் களைத்துப் போனேன். இறைவா, என்னை மன்னித்துக் கொள். மனத்தினை அடக்கியே தீர்வது என்று முடிவு செய்துவிட்டேன். முதலில் மனத்துக்குத் துணையாக இருக்கும் பொறிகளுக்கு இரை கொடுப்பதில்லை என்று உறுதி எடுத்துள்ளேன். உடலை வருத்தினால், மனம் அடங்கத்தானே செய்யும். இந்த மனம், வேலையில்லாத நேரத்தில்தான் வீண் வேலை செய்கிறது. ஆதலால் ஓயாது ஒழியாது மனத்துக்கு வேலை. பொறிகளுக்குக் குறிப்பாக வாய்க்கு ருசியாகத் தீனி கொடுப்பதில்லை என்பது எனது முடிபு. எல்லாம் நினைப்பு, முடிபு. ஆனால், உன் துணை இல்லாமல் என்ன சாதித்துவிட முடியும். இறைவா, துணை செய். என்னுடனேயே இருந்தருள்செய். மனம் திருந்தி விட்டால் மண்ணில் சொர்க்கம்.

## பிப்ரவரி 3

### எல்லாருக்கும் நன்மை செய்தலே என் மதம்!

*இறைவா! தவறுகளும், குற்றங்களும் பாவங்களாகி விடுமா? இவைகளை எல்லாம் நீ பாவங்கள் என்று கணக் கெடுத்துத் தண்டனை கொடுப்பாயா?*

*நான்தோறும் எண்ணற்ற தவறுகளைச் செய்கிறேன். இறைவா, என்னிடம் உள்ள குற்றங்களைப் பட்டியல் போட்டால் கணக்கில் அடங்கா. என்நிலை என்ன? நான் தவறு செய்கிறேன். ஆனால், நானாகச் செய்ய வில்லையே. என்னைச் சுற்றிவரும் சமுதாய அமைப்புமுறை என்னைத் தவறுகள் செய்ய நிர்ப்பந்தப்படுத்துகிறதே. இறைவா, நான் என்ன செய்வது? நான் நானாக வாழ இன்றைய சமுதாயம் அனுமதிக்கவில்லையே. இன்று முறையாக வாழ வேண்டு மானால்—ஏதாவது சில நல்ல காரியங்கள் செய்ய வேண்டு மானால் கூட, தவறு செய்யாமல் செய்ய முடியாது போலிருக்கிறதே. இதுதான் இன்றைய சமுதாயநிலை. இன்று உண்மை ஏற்கப்பெறமாட்டாது போலும். பொய்ம்மைக்கே வரவேற்பா? இந்தச் சூழ்நிலையில் குற்றங்களும் தவறுகளும் இல்லாமல் வாழவே முடியாதா? ஆம் இறைவா! இதுதான், இன்றைய சமுதாய அமைப்பு. நானும் உலகத்தோடு ஓட்டிச் செல்கிறேன். ஆனால் ஒன்று இறைவா! நான் யாருக்கும் தீமை செய்ததில்லை. செய்ய நினைத்ததும் இல்லை. இறைவா! எல்லாருக்கும் நன்மை செய்வதே என் மதம்!*

## பிப்ரவரி 4

### இயற்கையோடிசைந்த வாழ்வே அறவாழ்வு!

*இறைவா, உண்மையைச் சொல். உனக்கும் எனக்கும் என்ன உறவு? நீ எனக்குத் தந்ததெல்லாம் தண்டனை தானே! இறைவா, பசிக்கிற வயிறு ஏன்? பருவத்தில் தோன்றும் காதற்பசி ஏன்? இவையிரண்டும் இல்லாது போனால் நான் சுதந்தரமான பிறவி. இறைவா, என்ன சொல்கிறாய்? உண்மை தானே? இயங்காதவையெல்லாம் அழியும்! நீ ஓர் இயக்கம் மட்டுமல்ல; இயக்குபவனுமாவாய். இயக்கத்தின் அடையாளமே பசிதானே! நன்றாகப் பசியுள்ள உடல், நல்லுடல். பசித்து உண்பவனே யோகி. மானிடா, உன் இயக்கம் வெறும் வறட்சித் தன்மையுடைய இயக்கமாகிவிடக் கூடாது. அதில் அன்பு, காதல், கலை, அழகுணர்வு அனைத்தும் இருக்க வேண்டுமல்லவா?*

*அதனாலேதான் காதற்பசி! இது மட்டுமா? மானிடம் வளர வேண்டும். மேலும் மேலும் தொடர் ஓட்டமாகச் சிறந்து வளர வேண்டும். மானிடத்தின் வழிமுறையைப் பராமரிக்க வேண்டும். அதனாலும் காதற்பசி தேவை! இறைவா, உன் செயலில் தவறில்லை. எனது இயலாமையை மறைத்துக் கொள்ள முயலுகிறேன். வறட்சியான சித்தாந்தங் களைப் படைத்து உலாவ விடுகிறேன். இவையெல்லாம் நின் சித்தத்திற்கு முரண். இனி இயற்கையோடிசைந்த வாழ்வே அற வாழ்வெனக் கொண்டு வாழ்வேன்.*

## பிப்ரவரி 5

### கோபம் அற்ற குணம் நிறைந்த வாழ்க்கையை அருள்க!

இறைவா! முப்புரம் எரித்த முதல்வா! இன்று என்னைக் கடுமையான சினம் ஆட்கொண்டுவிட்டது. இறைவா, கோபம் சண்டாள குணம் என்கின்றனர். ஆனால் கோபத்தைத் தவிர்க்கவே முடியவில்லை. ஏன் இறைவா, நீ, மூண்ட சினத்தால் முப்புரம் எரிக்க வில்லையா? காமனை எரித்துச் சுடவில்லையா? காலனைக் காலால் உதைக்க வில்லையா? இறைவா, உனக்கு ஒரு நியாயம், எனக்கு ஒரு நியாயமா? அப்படியா இறைவா! முப்புரத்தை நீ எரிக்க வில்லையா? அது அறிஞர்களின் கற்பனையா? ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மூன்று தீமைகளைத்தான் சுட்டெரித் தனையா? இந்த மூன்றும் சுட்டெரிக்கத் தக்கனவே! அவற் றுள்ளும் ஆணவம் மிகவும் ஆபத்தானது. தன் முனைப் பிலேயே—எப்போதும் குடிகாரனைப் போல மயக்க நிலையிலேயே ஆழ்த்துவது. யார் மாட்டும் அன்பு, பணிவு காட்ட அனுமதிக்காது. எல்லாம் தனக்கே எனக்கருதும்; அறியாமையின் மொத்த வடிவம், அறிந்தது போலக் காட்டும். இந்தப் பொல்லாத ஆணவம் கெட்டாலே அனைத்தும் நன்றாக நடக்கும். இறைவா, உன் கோபம் ஆணவத்தைச் சுட்டெரித்த கோபம். அதுவும் என் ஆணவத்தைச் சுட்டெ ரித்த கோபம்! நின் கோபம் வளர்க! வாழ்க!

ஆனால், என் கோபமும் முற்றாகக் கெட்டவர்கள் மீது அல்ல. நல்லவர்கள், உழைப்பாளிகள், முயற்சி செய்யாத சாதாரண மக்கள் மீது! இது நல்லதல்ல. மன்னித்துக் கொள். கோபம் அற்ற குணம் நிறைந்த வாழ்க்கையை அருள் செய்க!

## பிப்ரவரி 6

## ஆண்டவனே என் பொறிகளின் மீது ஆணை செலுத்தும் ஆற்றலைத் தா!

*இறைவா, பழநியில் ஆண்டிக் கோலத்தில் நிற்கிறாய்! இறைவா, இஃதென்ன திருக்கோலம். நின் திருக்கோலம் துறவை நினைவூட்டுகிறதா? அல்லது ஆள்பவன்-ஆண்டவன் -ஆண்டி என்ற நினைவைத் தருகிறதா? ஆம். இறைவா! எனக்கும் ஆளத் தெரியும். நிலத்தை ஆள்வேன். ஆனால் இறைவா என்னை மட்டும் நான் ஆண்டு கொள்ள மாட்டேன். மிகமிகச் சாதாரணமான என் பொறிகள் என்னை ஆட்டிப்படைக்கின்றன. ஏன்? சோம்பலையும் தூக்கத்தையும் கூட நான் வென்று ஆண்டதில்லை, சுக போதையினால் அவற்றை வெல்ல நினைத்ததும் இல்லை!*

*இறைவா, தன்னை ஆய்பவன் ஆண்டி. நீ ஆள்பவனாக, ஆண்டவனாக, ஆண்டியாக நிற்கிறாய். நின்திருக்கோலம் மானுடத்திற்கு மருந்து. ஆம், ஆணவப்பேய் பிடித்து அலையும் மானுடத்திற்கு நீயே மருந்து. பொருள்கள் வாழ்க் கைக்காகப் பொறிகள் துய்த்து மகிழ்ந்து இன்புற்று வாழ்வ தற்காக. ஆனால் இவை வரம்பு கடக்கும் பொழுது வாழ்க்கை, வாழ்க்கையாக அமைவதில்லை. அதனை நின் திருக்கோலத்தில் காண்கிறேன். இறைவா, என் பொறிகளின் மீது ஆணை செலுத்தும் ஆற்றலைத்தா! அருள் செய்!*

## பிப்ரவரி 7

### என் அறிவைப் புலமாக்கி ஞான ஏர் உழுதிடுக!

*இறைவா! வேண்டத்தக்கது அறிவோய் நீ. வேண்ட முழுவதும் தருவோய் நீ. இறைவா, நான் வேண்டுவன வெல்லாம் அருள் பாலிக்கவில்லையே. ஏன் இறைவா? என்ன சொல்கிறாய்? நான் வேண்டுவனவெல்லாம் அப்படியே கொடுத்தால் நான் பைத்தியக்கார மருத்துவ மனைக்குப் போய்விடுவேனோ? இந்த உலகத்தில் ஏன்? என்னைப் பற்றி இப்படி ஒரு மதிப்பீடு வைத்திருக்கிறாய். இறைவா, ஆம் இன்னும் நான் சிறு பிள்ளைதான். நான் என்னைப்பற்றி அறியேன். இருகை யானையைப்போல் தான் உள்ளேன்.*

*இறைவா, நான் விரும்புவனவற்றை அருள் செய்க என்பது என் பிரார்த்தனையல்ல. நான் பெறுவதற்குத் தகுதி யுடையவற்றைப் பெற அருள் செய்க! ஆனால் இறைவா, ஒரு நிபந்தனை. என் தகுதி குறைவாக இருந்தால் முதலில் தகுதியை எனக்கு அருள் செய்க! என்னை ஆளாக்கிடுக. கேளாதனவெல்லாம் கேட்க கருணை பாலித்திடுக. காட்டா தனவெல்லாம் காட்டிடுக. என் குணம் மூன்றையும் திருத்தி, சாத்துவிகமே யாக்கிடுக. நான் பெற விரும்புவதெல்லாம் தகுதியே. உய்யும் நெறியே! ஞானமே! இறைவா அருள் செய்க! நீ காலந்தாழ்த்தினாலும் பரவாயில்லை. என்னைத் தகுதியுடையவனாக்கிடுக. என் அறிவைப் புலமாக்கி ஞான ஏர் உழுதிடுக. இன்னே அருள் செய்க!*

# பிப்ரவரி 8

## இறைவா, மதமெனும் சுழலில் சிக்கித் தவிக்காதிருக்க அருள் செய்!

*இறைவா, உண்மையைச் சொல். உன் பெயர் என்ன? உருவம் என்ன? இறைவா, நீ உண்மையை உணர்த்தி விட்டால் இந்த உலகில் வாழும் மதத்தலைவர்கள், புரோகிதர்கள் என்னை அலைக்கழிக்க முடியாது. இறைவா, என்மீது கருணை காட்டு! உன்னை அறியும் அறிவைத் தா. இறைவா, என்ன சொல்கிறாய்? எல்லாம் நீ தானா?*

*இந்த ஏழை உயிர்கள் விரும்பி அழைக்கும் பெயரே, உன் பெயர். இறைவா, இந்த ஏழைமக்கள் அன்பினால் அரற்றி அழைக்கும் பெயர்களே உன் பெயர்கள் அப்படியா? அப்படியானால் எந்த மதம் உன் மதம்? இறைவா...! இறைவா...! என்ன சொல்கிறாய்! மதங்களே உனக்குப் பிடிக்காதா? ஆம், இறைவா! உண்மைதான். மதமென்னும் பேய் மக்களைப் பிடித்தாட்டும் பொழுதுதான் அன்பை இழக்கின்றனர்; உறவுகளைப் பகையாக்கிக் கொள்கின்றனர். ஒருமைப்பாட்டை இழக்கின்றனர். உன்னை மறக்கின்றனர். இறைவா, என்னைக் காப்பாற்று. ஆம் இறைவா! மதமெனும் சுழலில் சிக்கித் தவிக்காமல் நின்னையே நினைத்து நினைத்து வாழ்ந்திடும் அருளினைச் செய்!*

## பிப்ரவரி 9

### ஏழையேன் முகம் பார்த்து இரங்கி அருள்க!

*இறைவா! இது என்ன நின் திருவிளையாட்டா? அல்லது உலகியலின் போக்கில் ஒரு காலத்தில் சராசரி மனிதர் செய்வதற்கு நாணிய—ஒளிவு மறைவாகச் செய்த தவறுகள் இன்று ஒழுக்கங்களாக மாறி விட்டனவே. காசின்றிக் காரியம் எதுவுமே நடக்காது என்ற நிலை நியதி யாகிவிட்டதே. பொய்ம்மை அரங்கேறுகிறதே. சிறுமையே எங்கும் சீராகப் போற்றப்படுகிறதே. இது என்ன இறைவா! நான் என்ன செய்ய? இறைவா, என்னைக் காப்பாற்று. பேராசையியின்றும் காப்பாற்று. அதிகாரத் திமிரினின்றும் காப்பாற்று. எல்லா உயிர்களிடத்தும் அன்பாகப் பழகும் வரம் கொடு!*

*அன்பெனும் பிடியுள் அகப்படும் ஆண்டவனே! என் முகம் பார். நான் ஓர் ஏழை. நாளும் ஐம்பொறிகளுக்கும் ஐம்புலன்களுக்கும் ஏவல் செய்து பிழைப்பு நடத்தும் ஏழை. என்னைக் காப்பாற்று. நான் புண்ணிய வாழ்க்கை நடத்த வேண்டும். ஞானம் பெறுதல் வேண்டும். எப்போதும் நின் சந்நிதியிலேயே தவம் கிடக்க வேண்டும். இறைவா, இந்த வரத்தைக் கொடு! இறைவா, என்னைக் காப்பாற்று.*

## பிப்ரவரி 10

### ஆசையை விட்டேன்; அன்பால் ஆட்பட்டேன்.

*இறைவா, இறைவா! ஏன் நினது அருள் மன்னுயிர்த் தொகுதியின் மேல் பூரணமாகப் பாலிக்கப்படவில்லை? நாங்கள் உனக்குக் கட்டிய ஆலயங்களுக்குக் குறை வில்லையே! ஏன்? கொட்டு முழக்குடன் கும்பாபிஷேகங்கள், திருவிழாக்கள் ஏராளமாக நடத்துகின்றோமே. உன்னைப் பற்றியே சித்திரித்துக் கொண்டிருப்பவரின் எண்ணிக்கை அற்பமல்லவே. இறைவா.*

*இறைவா, நின்கோலங்களும் அடையாளங்களும் ஆயிரம் ஆயிரமாக வளர்ந்துள்ளனவே! இறைவா, இவற்றால் என்ன பயன் என்றா கேட்கிறாய்? இறைவா, உனக்கு மனக் கோயில் வேண்டும். பின் ஆற்றல் மிக்க அன்பால் உன்னை அழைக்க வேண்டும். இறைவா, இஃதென்ன சோதனை. என்மனம் என்வசம்கூட இல்லையே. என் மனம் பொறி களின் வழியே சுற்றித் திரிகின்றதே. அன்பு, எதன்எதன் மீதோ செல்கிறது. இறைவா, என்னிடம் அன்பே இல்லையா? ஆசைதான் இருக்கிறதா? ஆம் இறைவா, ஆசைப்படுவது தவறா? தவறல்ல. ஆனால் ஆசை அன்பாக மாற வேண்டும். ஆசை தற்சார்புடையது. அன்பு பிறர்நலச்சார்புடையது; தியாகத் தன்மையுடையது. இறைவா, இன்றுமுதல் உனக்கு என் மனக்கோயிலில் இடமுண்டு. இல்லை, நீ மட்டுமேதான் என் மனக்கோயிலில் இருப்பாய். ஆசையை விட்டேன், அன்பால் ஆட்பட்டேன் இறைவா, காத்தருள்க!*

## பிப்ரவரி 11

### பெருவாழ்வு வாழ்ந்திட அருள் செய்க!

இறைவா! நீ கருணையால் அளித்த வாய்ப்புகளை நான் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. முயன்றும் முடியவில்லை. ஆனால் ஆசை மட்டும் குறையவில்லை. திரும்பத் திரும்ப உன்னுடைய கருணையை வேண்ட நின் சந்நிதியில் வந்து நிற்கிறேன். மன்னித்துக்கொள். அருள் பாலித்திடுக! வாய்ப்புகள் எளிதில் வருவன அல்ல.

ஆனால் என் வாழ்க்கையில் நின் கருணையால் நான் பெற்றவை அளப்பில! "என்னால் அறியாப்பதம் தந்தாய், உன்னால் ஒன்றும் குறை இல்லை!" ஆனால் ஆண்டுக் கணக்கில் மூப்பு உடையேன். தன்மையால் பேதமை உடையேன். தங்கக் கிண்ணத்தைக் கொடுத்து, விளையாடு தற்கு மரப்பாச்சி வாங்கிய குழந்தையிலும் பேதமையுடையவன் யான்! இறைவா, அருள் செய்க! பேதமை நீக்கி ஆட்கொண்டருள்க! நின் அருமை அறிந்து போற்றும் பெற்றிமையை அருள் செய்க! நான் இப்பிறப்பிலேயே பெருவாழ்வு வாழ்ந்திட அருள் செய்க! நின் அருள் போற்றியே வாழ்ந்திடுவேன். அருள் செய்க!

## பிப்ரவரி 12

### இறைவா! கதவைத் திற, வெளியே வா.

*இறைவா! நீ எவ்வளவு கருணை கொண்டு என்னை வாழ்விக்க, கற்சிலையிலும் எழுந்தருளியிருக்கிறாய். உன்னைக் காணும் பொழுதெல்லாம் உன் திருவுருவத்தை ஆரத்தழுவி உச்சிமோந்து அழவேண்டும் என்ற ஆர்வம் பிறக்கிறது.*

*ஆனால், நீ கருவறையிலன்றோ சிறைப்பட்டு விட்டாய். என்ன செய்ய? கண்ணப்பர் காலத்தில் இல்லாத தடைகள் தோன்றிவிட்டனவே. கடவுளே! ஏன் இந்த நிலை? கதவைத் திற, வெளியே வா. என்னைத் தழுவி முத்தமிடு. வாழ்த்து. இறைவா! என்னை வளர்க்க இயலாத "திருக்கோயில் கொண்டருளும் நிலையை" விரும்புகின்றாயே. சத்தியமாக நீ விரும்பமாட்டாய். குறிக்கோள் இல்லாத என் வாழ்க்கையைக் குறிக்கோள் உடையதாக மாற்றுக. என் வாழ்க்கையே நினக்கு வழிபாடு. இறைவா, அருள் செய்க!*

## பிப்ரவரி 13

### வேலியைத் தாண்டி வெளியில் வந்தருள்க!

*இறைவா! உன்னுடைய எளிமை, பொதுமை, கருணை அளப்பரியன. ஆயினும் என்ன பயன்? வேலியே போட்டுப் பழகும் மானிட சாதிக்குள் சிக்கிவிட்டாய். அவர்கள் உனக்குச் சாதி, குலம், இனம், மொழி, சமயம் ஆகிய வேலிகளை வைத்து நான் எளிதில் காணமுடியாமல் தடுத்து விட்டார்களே!*

*இறைவா, ஏன் இந்த நிலை? என்னால் வேலிகளைக் கடந்து வரமுடியவில்லை. வந்தாலும் அவர்கள் விட மாட்டார்கள்! நீயே வேலியைத் தாண்டி வெளியே வா. உன்னைப் பார்த்து ஒரு அழுகை அழுவதற்குச் சந்தர்ப்பம் கொடு. அன்று ஆரூரருக்காக நீ தெருவில் நடக்கவில்லையா? மாணிக்கவாசகரின் பண்சுமந்த பாடலுக்காக நீ மண் சுமக்க வில்லையா? இன்று ஏன் என்னை அந்நியனைப்போல நடத்துகிறாய்? நான் வெளியே என்றால் நீ திருக்கோயிலின் உள்ளே இருக்க என்ன நியாயம்?*

*இறைவா, என் மனம் நீ இருக்கத்தக்க திருக்கோயில். என் மனத்தைக் கோயிலாக்கியுள்ளேன். இறைவா விரைந்து எழுந்தருள்க! பொய்யான ஆசாரங்களைக் கடந்து என்னை ஆட்கொள்க!*

## பிப்ரவரி 14

### நின் சித்தப்படி நடக்கச் சித்தமாயுள்ளேன்! அருள்க!

இறைவா! உன்னோடும் நான் "கண்ணாமூச்சி" விளையாட்டு விளையாடுகிறேனே. உனக்குத் தெரியாதது என்ன? இறைவா! நின் அன்பு நெறியை நாங்கள் துறந்தோம். அன்றே, நீ எங்களுக்கு அந்நியனாகிவிட்டாய். அன்பும்—ஒப்புரவும் என்னிடத்தில் நீ காண விரும்பிய வாழ்க்கைப் பண்புகள். இவைகளை நான் கனவிலும் கண்டதில்லை. மாறாக – பகை. 'நான்', 'எனது' என்ற உணர்வின் பாற்பட்ட வெறிச் செயல்கள். நின் திருவுள்ளம் நொந்தது. நீ என்னையும்—என் பொய்மையையும் புறத்தே நிறுத்திவிட்டுப் போய் விட்டனை.

நீ என்றோ எங்களைவிட்டு நீங்கிவிட்டாய். கற்சிலைகள் மட்டுமே கோயில்களில் உள்ளன. மீண்டும் வா. கற்சிலையில் எழுந்தருளி ஆட்கொள்வாயாக! நின்சித்தப்படி நடக்கச் சித்தமாயுள்ளேன். இனி உன் சந்நிதியில் பாவம் செய்ய மாட்டேன். இனி அன்பே என் தவம். தொண்டே என் வாழ்க்கை. இது சத்தியம்.

## பிப்ரவரி 15

### தன்னலமற்ற வாழ்வினைத் தருக!

*இறைவா! உறுப்புகளை மறைத்து ஆடைகள் உடுத்தி நாகரிகமானவன் என்று நாடகம் நடத்தி வருகிறேன். ஆனால் உணர்வுகளோ நாகரிகமானவையல்ல. இறைவா! எனது சமூக நிலைக்கு இசையாத உணர்வுகளை நான் மறக்கக்கற்றுக் கொண்டேனில்லை. "ஜாரவா" பழங்குடி மக்களோ உறுப்பு களை மறைத்தார்களில்லை. ஆடையின்றி அம்மணமாக இருக்கிறார்கள். ஆனால், அவர்கள் பால் தன்னலம் இல்லை. கூட்டு வாழ்க்கை இருக்கிறது. நானோ நிர்வாணமான தன்னலத்துடன் வாழ்கிறேன்.*

*"நான்" என்ற உணர்வு அற்ற நிலையில்தானே அன்பு அரும்பும்; ஒப்புரவு நிலையில்தானே ஒழுக்கம் கால் கொள்ளும்; நின் அருள் கிடைக்கும். இறைவா அருள் செய்க. 'நான்', 'என்து' 'அற்ற நிலையில் நின் திருவடிக் காட்சியில் திளைத்து வாழ்ந்திட அருள் செய்க!*

## பிப்ரவரி 16

### வசையெல்லாம் வாழ்த்தெனக் கொண்டுவாழ அருள் செய்க!

*இறைவா! ஏன் இந்த நிலை? என்னை இப்படி எல்லோரையும் கொண்டு ஏசவைக்கிறாய். இறைவா! புரிகிறது உன் தந்திரம். ஏச்சுகள் மூலம்தான் புகழ் வேட்டையை நாடும் என்னைத் தடுத்து நிறுத்த முடியும் என்று நம்புகிறாய். மற்றவர் ஏச்சின் மூலம்தான் மான அவமான உணர்ச்சி மாறும் என்பது நின் திருவுள்ளம். எல்லோரும் ஏசட்டும். ஆனால், இறைவா, நீ ஏசமாட்டாயே? வாழ்த்தியருளுக.*

*என் மனம் நன்மையில் மகிழ்கிறது. புகழில் களிக்கிறது. இது ஒருதலை நிலை. நன்மை, தீமையில் நிலைதடுமாறக் கூடாது. "சகம் பேய் என்று" கூறினாலும் பொறுத்தாற்றும் பண்பு தேவை. இறைவா! நீ அமைத்த வாழ்க்கை என்ற எனது பள்ளியின் ஆசிரியர்கள் என்னை ஏசுபவர்களே; எதிரிகளே! வசையெலாம் வாழ்த்தெனக் கொண்டு உயர்ந்திட அருள் செய்க!*

## பிப்ரவரி 17

### உனக்கும் – உன் உலகத்திற்கும் ஆட்செய்ய அருள் செய்க!

இறைவா, பற்று கூடாது என்று சொல்கின்றனர். உன்னிடத்திலும் பற்று கூடாதா? உன்னிடம் பற்று இல்லாமல் நான் எப்படி வாழமுடியும்? இல்லை, இல்லை, இறைவா! உன்மீது பற்று கொள்ளலாம். தவறில்லை. ஏன், உன் மீதுள்ள பற்றினால் உயிர்க் குலத்திற்குத் தீமை இல்லை. எனக்கும் தீமை இல்லை, நன்மையேயாம். ஆனால் இறைவா, உனக்குத் தொல்லைதான். பற்று என்பது முற்றிலும் தற்சார் பானது; தனக்கு நலம் நாடி அதற்காகப் பிறிதொன்றின் மீது பற்று வைப்பது. உன் மீதும் எனக்குப் பற்று வேண்டாம். ஆனால் உன்னை விரும்புகிறேன். எனக்காக அல்ல உனக் காகவே. உனக்கே ஆட்செய்ய விரும்புகிறேன். இறைவா அருள் செய்க! உனக்கே தொழும்பாய்க் கிடந்து–உனக்கும் உன் உலகத்திற்கும் ஆட்செய்ய அருள் செய்க!

## பிப்ரவரி 18

### அறிஞரோடு கூட்டுவித்து அருள்செய்க!

இறைவா! மூடர்களையும் படைத்து, புத்திசாலிகளையும் படைத்து ஏன் வேடிக்கை பார்க்கிறாய்? மூடர்களுடன் பேசவே முடியவில்லையே. பேசுபவர்களை முட்டாள்களாக்கி விடுகிறார்களே. மூடர்களுடன் தர்க்கம் செய்வதைத் தவிர்த்துவிட எனக்கு அருள் செய்! வேண்டவே வேண்டாம், விவேகம் இல்லாதவர்களுடன் தர்க்கம்.

முத்தி நெறி அறியாத மூர்க்கர்களுடன் கூடாமலே இருக்க அருள் செய்க. அறியாமையின் பிடிவாதம், மூர்க்கத் தனமானது, ஆபத்தானது. சிலர் தோளாச்சுரை போல இருப்பர், தோட்கப்படாத செவியுடையராய் இருப்பர். இறைவா! இவர்தம் உறவு வேண்டாம்.

அறிஞரோடு கூட்டுவித்து அருள் செய்க! அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரிந்து என்னை வளர்த்திடு. வாழ்வித்திடு!

கு.X.5.

## பிப்ரவரி 19

### என்னை வளர்க்கும் துன்பங்களை ஏற்கும் வலிமையைத் தா!

*இறைவா! நீ அருளிச் செய்த நன்னெறிகளைப் பின் பற்றினாலும் துன்பம் வருகிறதே, ஏன் இறைவா? இறைவா, என்னை முழுமையான பக்குவமான ஆத்மாவாக வளர்க்கத் துன்பங்கள்தான் துணை செய்யுமா? நின் திருவுள்ளம் என்ன?*

*என்னை வளர்ப்பதற்கே துன்பங்கள் என்றால் நான் எப்படி மறுப்பேன்? நுகத்தடியில் கழுத்தினைத் தரும் மாட்டினைப்போல் நானும் துன்பங்களிடம் என்னை ஒப்ப டைக்கச் சித்தமாக உள்ளேன்! ஆனால், ஒரே ஒரு பிரார்த் தனை, நீ என் நெஞ்சத்தைவிட்டு அகலக்கூடாது.*

*துன்பத்தின் வாயில்தோறும் படிப்பினை கற்பேன், முழுநிறை மனிதனாவேன். என் வாழ்வின் எல்லையில் "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்று முழங்குவேன். இறைவா, அருள் செய்க!*

## பிப்ரவரி 20

### என் சிந்தையுள் நீ தெளிவாக இருந்தருள் செய்க!

*இறைவா! உனக்கே ஏன் இவ்வளவு பெரிய தோல்விகள்? நீ, என்னைப் படைத்த நோக்கத்தில் நான் வாழ்கிறேன் இல்லையே! இன்று பஸ்மாசுரர்கள் எண்ணிக்கையில் மிகுதி. நீ வரத்தைக் கொடுக்கிறாய். பின் மாட்டிக்கொண்டு விழிக்கிறாய். ஏன் இந்த நிலை?*

*இறைவா, புரிகிறது நின் திருவிளையாட்டு. எது ஆனாலும் சொல்லிக் கொடுத்த சொல் வாழ்க்கைக்கு உதவாது. அவரவர் உணர்ந்தாக வேண்டும். பட்டறிவு பெற்றாக வேண்டும் என்ற எண்ணத்தில் என்னை அறிவாளியாக்க நீ முட்டாளாக நடிக்கிறாய். என்னே உன் கருணை.*

*இறைவா, என் சிந்தையுள் நீ தெளிவாக இருந்தருள் செய்க! தெளிவான நோக்கம், தெளிவான அறிவு, இவையே என் வாழ்க்கையின் அரண்களாக விளங்க அருள் செய்க.*

## பிப்ரவரி 21

### பொருளற்ற பொக்கையானேன்! எடுத்தாள்க இறைவா!

*இறைவா! இந்தத் தடவை மட்டும் மன்னித்துவிடு என்று எத்தனை தடவை உன்னிடம் மன்றாடிக் கேட்டிருப் பேன்; எத்தனை தடவை நீயும் மன்னித்தாய்! ஆனால், நான் எழுந்து நடப்பதாகத் தெரியவில்லையே. மன்னிப்பு, பொரு ளற்றுப் போயிற்றே. இறைவா, பொருளற்ற பொக்கை யானேன். எடுத்தாள்க!*

*நான் என்ன செய்ய? நீ என்னைத் தனியாய் படைத் திருந்தால் எப்படியோ? ஐவரோடு கூட்டுவைத்து அனுப்பினாய். அவர்கள் வலியராகி என்னோடு போராடு கிறார்கள். அவர்களுடன் போராடும் ஆற்றல் இல்லாமல் அவர்களுடன் சமரசம் செய்துகொண்டு வாழ்கிறேன். எல்லாம் உன்னால் வந்ததுதான். நன்றே செய்வாய் பிழை செய்வாய்! அடித்து அடித்து அக்காரம் தீற்று. நினைக் கண்டறியும் அறிவினைத் தந்தருள் செய்க!*

## பிப்ரவரி 22

### எனக்கும் வாசியிலாக் காசு தருக!

*இறைவா! உன்னை அருச்சிக்கவே ஆசைப்படுகிறேன். ஆனால், என்னுடைய பொறி புலன்கள் உன்னுடைய அருச்சனையில் ஈடுபட ஒத்துழைப்பதில்லை. பொறி புலன்கள் மட்டுமா? என்னைச் சுற்றியிருப்பவர்களும்கூட அப்படியேதான். ஆனால், அவமே பொழுது போகவில்லை. ஏதாவதொரு வேலை, வேலைக்குப்பின் வேலை.*

*இறைவா, கடமைகளின் காரணமாக உன்னை அருச்சிக்கத் தவறினால் என்னை மன்னித்துவிடு. இறைவா, மன்றாடுகிறேன். மன்னித்துவிடு. நீயே என் மனத்துக்குள் வந்து குடிபுகுந்துவிடு. அப்பொழுது உன்னை நினைப்பற நினைக்கிறேன். முன்பு கைத்திருத்தொண்டு செய்தவர் களுக்கு, உவப்படைந்து வாசியிலாக் காசு அருளியுள்ளாய்! எனக்கும் வாசியிலாக் காசு தந்தருள்க.*

## பிப்ரவரி 23

### மனிதகுலம் முழுவதையும் சுற்றமென மதித்தொழுக வாழ்த்து!

*இறைவா! எத்தனையோ இயற்கை வளப்புமிக்க சூழ்நிலைகளை அமைத்துத் தந்தாய், நான் மகிழ்வோடு வாழ. ஆனால், மோசமான சில மனிதர்களையும் கூடவே படைத்தாயே ஏன்? இந்த மனிதக் கூட்டத்தில் வாழ்வது எளிதாக இல்லையே. ஆம்! வழுக்கலில்தானே காலூன்றும் பயற்சி கிடைக்கும். பொய்ம்மையில் தானே மெய்ம்மையின் தெளிவு தெரியும். வெயில் தானே நிழலின் அருமையைக் காட்டுகிறது.*

*இறைவா, இந்த மனிதர்களோடு சேர்ந்து அழிந்து போகாமல் காப்பாற்று. நான் உன் ஆணையை மீறவில்லை; அவர்களுடன் வாழ்கிறேன்! அவர்களுக்காகவும் வாழ்கிறேன். நான் எந்த மனிதரையும் அலட்சியப்படுத்த மாட்டேன்; என்னுடைய பகைவனையும் நான் மதிப்பேன்; அன்பு காட்டுவேன். மனிதகுலம் முழுவதும் என் சுற்றம் எனக் கொண்டு ஒழுகுவேன். இறைவா இங்ஙனம் வாழும் திறனை அருள்செய்க!*

## பிப்ரவரி 24

### "வா என்று வான் கருணை காட்டு"

இறைவா! இன்று உன்கருணை எல்லையற்றதாக இருந்தது. ஆம்! இன்று காலை தனித்திருந்தேன். அமைதி யான உள்ளத்துடன் நின்னிடம் உறவு கொண்டேன். அம்மம்ம! எவ்வளவு இன்பமாக இருந்தது. இன்றே போல் என்றும் நீ, என்னிடம் பேசக்கூடாதா? என்னுடன் கலந் திருக்கக் கூடாதா? உன்னைக் கேட்பானேன்! நீ எப்போதும் தான் காத்திருக்கிறாய், நான் தானே கவனிப்பதில்லை. நான் கவனிக்காது போனால் என்னவாம். ஈர்த்து என்னை ஆட்கொண்டால் உனக்கென்ன குறை வந்துவிடும்.

என்னை ஆட்கொள்ளுதல் நின் கடமையல்லவா? இறைவா! எங்கெங்கோ புறத்தே போகிறேன். இறைவா மன்னித்துக்கொள்! "வா" என்று வான் கருணை கலந்த அழைப்பினைக்கொடு. ஈர்த்து ஆட்கொள்க. என் புத்தியினுள் புகுந்து என் புத்தியையே திருத்தி ஆட்கொள்க. நின்னொடு கலந்து இன்புறும் இனிய வாழ்க்கையினை அருள்செய்க!

## பிப்ரவரி 25

### பிறர்க்கென முயலும் பெற்றியைத் தா!

*இறைவா! நீ ஒரு நல்ல வியாபாரி. நான் உன்னை நினைந்து அருச்சிக்கும் அளவுக்கு நின்றருள் புரிகிறாய். அதற்குமேல் நெஞ்சில் நின்றருள் புரிவதில்லையே; ஏன்? இல்லை, இறைவா! பொய் சொல்லி விட்டேன்; மன்னித்து விடு, நீ என் நெஞ்சில் நீங்காமல் நிற்கிறாய், நான் தான் அஃது அறியாமல் கெட்டேன், மன்னித்துவிடு. என்மீது குற்ற மில்லை; உலகம் என்னை அவ்வளவு பலமாக இழுக்கிறது. வினையே வாழ்க்கையாக மாறுகிறது. விதைக்கும் வினை களை அறுவடை செய்ய வேண்டாமா?*

*இறைவா! என் செய்ய? என் மனம் ஓயாது வினை யாற்றுகிறது; இந்த வினை இயக்கம் ஓய்ந்தால் அல்லவா நின் பக்கம் வரலாம். இறைவா! என்ன அருளிச் செய்தனை, வினைகளைத் தொடர்ந்து செய்யச் சொல்கின்றாய்? வினைகளை இயற்றுவதுதான் உய்திக்கு வழியா? இறைவா! எனக்கும் புரிகிறது. "வினைகளைச் செய்! பிறர்க்கெனச் செய், வினைகளைப் பிறர்க்கெனச் செய்யின் அது நோன்பு" என்கிறாய். இறைவா! இனி எனக்கென்று முயற்சி செய்யேன்! பிறர்க்கென முயன்று வினைகளைச் செய்வேன். என்னை மறவாது நினைந்து வாழ்த்தியருளுக!*

## பிப்ரவரி 26

### பலருடன் கூடி வாழும் பாங்கினை அருள்க!

*இறைவா! நான் ஒரு பாபமும் செய்யவில்லையே, எனக்கு ஏன் இந்தத் தண்டனை? பலருடன் கூடிவாழ, மனிதனாய்ப் படைத்தாய். ஆனால், கூடிவாழ முடியவில்லையே. என்னைப்பற்றி யாரும் கவலைப்பட மறுக்கிறார்களே! மாறாக என்னிடம் நல்லெண்ணம் இல்லையென்று தத்தம் மனதிலே நினைப்பதை எல்லாம் கூறுகிறார்களே. என்ன செய்யச் சொல்கிறாய்?*

*இறைவா, இதுவா உன் பதில். உன் திருவுள்ளம் அதுவானால் சரி. பலருடன் கூடி வாழ்வதே அறம்! இன்பம்—துன்பம், புகழ்—பழி எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டால்தான் வாழ்க்கை பண்பாடுறுமா? அப்படியானால் சரி. உன் ஆணையை என் நெஞ்சிற்கு எடுத்துக் கூறி சமாதானப்படுத்துகிறேன். வாழி, நின் கருணை!*

## பிப்ரவரி 27

### புத்தி வழி நடக்க அருள் புரிக!

*இறைவா! என்னே உன் அற்புத விளையாட்டு. ஆனால், உன் விளையாட்டு எனக்கு வினையாகவல்லவா இருக்கிறது. ஏன், இறைவா! என்னோடு இந்த மனத்தையும் படைத்தாய்? ஒருநாளும் ஒருபொழுதும் இந்த மனம் சொன்னதைக் கேட்பதில்லை. ஓர் இடத்தில் இருப்பதில்லை. என்னையும் ஊர்நாய் போலச் சுற்றி இழுத்தடிக்கிறது? எனக்கு மனத்தோடு கூட்டுவைத்த நின் திருவுள்ளத்தைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை.*

*இறைவா, என்ன சொல்கிறாய்? மனத்தைப் புத்தியி னிடத்தில் ஒப்படைக்கச் சொல்கிறாய். புத்தி சொன்ன படி செய்யச் சொல்கிறாய். மனத்தின் வசத்தில் வாழ்ந்திடல் வேண்டாம்; புத்தி சொல்லுவதுபோல நட என்கிறாய். சரி, இறைவா! அப்படியே நடக்கிறேன்.*

## பிப்ரவரி 28

### வழி நடத்தி வாழ்வித் தருள்க!

*ஆண்டவனே! உன் பெயரே "ஆட்கொண்டவன்" என்று இறந்த காலத்தில் இருக்கிறது. அப்படியிருக்க, நீ ஆட்கொண்ட எனக்கு ஏன் பிறப்பு, இறப்பு—இந்த வேலையெல்லாம். ஆண்டவா என்ன சொல்கிறாய்? என் பிறப்புக்கும், இறப்புக்கும் நீதானே காரணம்? என் அறியாமை, செயலின்மை, தன்னலம் துறவாமை, ஆகியனதான் பிறப்பிற்குக் காரணங்களா?*

*ஆம், ஆண்டவா! யோசித்தால் தெரிகிறது, என் முட்டாள்தனம். ஆனால் படித்தவனாக வெளிச்சம் போடுவதில் எனக்கு ஈடு யாரும் இல்லை. எனக்குச் சோம்பலே—சுகம். அம்மம்ம! ஆண்டவா என் உடம்பு என்னை எவ்வளவு கெடுத்திருக்கிறது தெரியுமா? இந்த உடம்புதான் தன்னலத்தையே வளர்க்கிறது. உடம்பு பெருத்து உயிராகிய நான் சிறுத்துவிட்டேன். ஆண்டவா, என்பிழையை உணர்ந்தேன்; தெளிவு பெற்றேன்! இனி நீ ஆட்கொள்ளத்தக்க நிலையில் வாழ்வேன், உறுதி. நீயும் வழிநடத்து. வாழ்வித்தருள் செய்!*

## பிப்ரவரி 29

### நீ எழுந்தருளும் திருக்கோயில்களைத் தூய்மையாக வைத்துக் கொள்வேன்!

*இறைவா! உன்னுடைய அளவற்ற கருணையை அறிந்து போற்றக் கற்றுக் கொண்டேன் இல்லையே. நீ என் பொருட்டு எழுந்தருளியுள்ள திருக்கோயிலை நான் தூய்மை யாக வைத்துக் கொள்வதில்லையே? ஏன், நீ என் பொருட்டு எழுந்தருளியுள்ள என் உடம்பையும் நான் தூய்மையாக வைத்துக்கொள்ளவில்லையே? என்ன பாபம் செய்தேன்?*

*இறைவா, மன்னித்துவிடு. இனிமேல் நீ எழுந்தருளும் திருக்கோயில்களைத் தூய்மையாக வைத்துக் கொள்ள முயற்சி செய்கிறேன்.*

## மார்ச் 1

### என் பொறிகளை நன்னெறியில் நிற்கும்படி செய்தருள்க!

*இறைவா! நீ உன்னை எனக்குக் காட்டியருளும் துறைகள் எத்தனை! எத்தனை!! ஆனால், அந்த அற்புதத்தை உற்றறியும் ஆற்றல் பெற்றேனில்லை. எனக்கு வாய்த்துள்ள பொறிகளின் கொட்டம் தாங்க முடியவில்லை. அவை நெய்க்குடத்தில் எறும்பென என்னை மொய்த்துக்கொண்டு சீரழிப்பதின் மூலம் உன்னை ஆழ்ந்தனுபவிக்க முடியாமல் தடை செய்கின்றன. நானும் அவைகளோடு போராடிப் பார்த்தேன், பயனில்லை. நீ கொஞ்சம் கருணைகாட்டி, பொறிகளை நன்னெறியில் நிற்கும்படி செய்தருள்க.*

*இறைவா! என் பொறிகள் புறத்தே போகாமல்—அறிவு வாயில்களாக அமைந்து, என் ஆன்மாவை வளர்க்கும்படி அருள்செய்க! என் கண் நின் காட்சியில் களித்தால், எவ்வளவு இன்பம்! நின் படைப்பாகிய இயற்கையைக் கண்டு களித்தால் எல்லையற்ற மகிழ்ச்சி எனக்குக் கிடைக்கும். என் இதயம் பொங்கும். என் கண் யாண்டும் யார் மாட்டும்—குளிர்ந்த, கனிந்த பார்வையைச் செலுத்தினால்-நான் செழிப்பேன். என் உலகம் செழிக்கும். அழுக்காறு என்ற பாவியே இல்லாத உலகம் தோன்றும். இறைவா! என் கண் அற்புதமான ஆற்றலுடையது. ஆயிரம் ஆயிரம் கற்பனைகள் காட்டும் திறத்தினது, என் கண் பேசினால் போதுமே, இறைவா! என் கண் எனக்குத் துணையாய் அமைந்து பணி செய்ய அருள் செய்தருள்க! ஞாலம் முழுதும் கொண்டு வந்து காணிக்கையாக்குகின்றேன். இறைவா, அருள் செய்க!*

## மார்ச் 2

### வாழ்வு முழுமையும் ஆற்றலாக்கி அருள்க!

*இறைவா! நீ ஆற்றலாக இருந்து இயக்குகிறாய். உன்னை அருச்சிக்கும் நான், உன் ஆற்றலைப் பெற்றேனில்லை. நின் திருவுள்ளப்படி ஆற்றல் மிக்குடையோனாக வாழ நினைத்தே னில்லை. உன்னிடம் ஆற்றலை இரந்து பெற்றேனில்லை. உன்னிடம் நான் சோறு, துணி என்று யாசிக்கிறேன். இறைவா, என்னுடைய அறியாமையை மன்னித்துவிடு. எனக்கு ஆற்றலை அருள் செய்க! வாழ்வாங்கு வாழ்ந்திட அருள் செய்க! இந்த வையகம் பயனுற வாழும்படி அருள் செய்க!*

*இறைவா, இந்த உலகமே ஓர் ஆற்றல். உலக இயக்கம் ஆற்றல் வழிப்பட்டது. இறைவா! ஆற்றலே உலக இயக்கம். "ஆற்றலுடன் வாழ்வதே வாழ்வு" என்ற உன் போதனை என் மனத்தில் தைத்துள்ளது.*

*இனி நான்ஆற்றலை வளர்க்கும் வழிபாடாகிய உழைப் பில் ஈடுபடுவேன். யாராயினும்-எவராயினும் ஆற்றலுடை யோராக இருப்பின் அவர்தம் துணையை நாடிப் பெறுவேன். இறைவா என்னை வாழ்த்தியருள்க! உன்னுடைய அளப்பரிய ஆற்றலை நினைந்து நினைந்து வழிபாடியற்றி அவ்வாற்றலை எல்லாம் என் வாழ்க்கையில் என்னுடைய பொறிபுலன்கள் வாயிலாக வெளிப்படுத்தி வாழ்ந்திட அருள்செய்க! நான் வெற்றுப்பாவைக் கடந்து ஆடி ஓய்ந்திடாமல் அளப்பரிய ஆற்றலைப் பெற்று அனைவரும் இன்பமுறச் செய்து வாழ்ந்திட அருள்செய்க! நன்றின் தொடர்பிலாத் தீமையை வெறுத்து ஒதுக்கிடும் திண்மையை அருள்செய்க! என் வாழ்வு முழுவதும் ஆற்றலேயாகிடுக. இறைவா அருள் செய்க!*

# மார்ச் 3

## திருத்தொண்டின் நெறி நிற்க அருள்க!

*இறைவா! என்னை என் மனம் பிடித்தாட்டுகிறது. என் மனம் நான் சொன்னபடி கேட்க மறுக்கிறது. நான் என்ன செய்ய? உன்னுடைய திருவருள் எனக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை. கல்லைப் பிசைந்து கனியாக்கக்கூடிய வல்லாளன் நீ. நீ, ஏன் என் மனத்தைத் திருத்தி எனக்கு ஒத்துழைக்கும்படி செய்யக்கூடாது? இறைவா, அருள் செய்க!*

*பெரும் புலர் காலை மூழ்கி, உனக்கு ஆர்வத்தை என் நெஞ்சிலே வைத்து, நின் திருக்கோயில் வலம் வருவதற்கு அருள் செய்க! நின் திருக்கோயில் திருவலகுப்பணி செய்திட அருள் செய்க! இறைவா உன்னை நாள்தோறும் விரும்பி அரும்பொடு மலர்கொண்டு-விதியினால் தூபம், தீபம் இட்டு வழிபாடு செய்யும் புண்ணியத்தின் புண்ணியத்தினை அருள் செய்க! நீ என் வழிபாட்டில் எழுந்தருளி-வழிபாட்டினை ஏற்று அருள்பாலித்திட வேண்டும். பழுத்த மனத்தினாக நான் வாழ்ந்திட அருள் செய்க. திருத்தொண்டின் நெறி நின்றிட அருள் செய்க!*

## மார்ச் 4

### எனக்கு உடனடித் தேவை ஒரு தோழன்! அருள் செய்க!

*இறைவா! திருவாரூரில், தேரோடும் வீதியில் நடந்த இறைவா, உன் தோழர் ஆரூராரின் நினைவுகளை நிறைவேற்ற நடந்த இறைவா! உன் தோழமைப் பண்புகளை எண்ணி—எண்ணி என் நெஞ்சம் உருகுகிறது. நான் உருகி என்ன பயன்? மகிழ்ந்துதான் என்ன பயன்? நானும்தான் பலரிடம் தோழமை கொண்டேன். என் தோழமை உற்றமாக இல்லையே. இறைவா! நான் தோழமைப் பண்புகள் சிறிதும் பெற்றேனில்லை. எனக்கு ஊர் மெச்ச, உலகு மெச்சப் பல தோழர்கள் உள்ளனர். ஆனால், நின் தோழமைப் பண்பை நான் பெற்றேனில்லை. இறைவா! நின் தோழமைப் பண்பு களைப் பெற எனக்கும் ஆசை. இறைவா அருள் செய்க.*

*"தோழன் தோளுக்கு நிகர்" என்பர். என் தோள் எனக்குத் தப்பாது என் உழைப்பிற்குத் துணை நிற்பது போல—பங்கேற்பதுபோல—என் தோழன் விளங்க அருள் செய்க! இறைவா, நானும் என் தோழனுக்குத் துணையாக இருக்க அருள் செய்க! இறைவா, என்னுடைய உள்ளுணர்வு களைக் கலந்து பேசிப்பகிர்ந்து கொள்ளக் கூட ஒரு தோழன் கிடைக்கவில்லையே. இறைவா—என்னிடம் சிலர் இருக் கின்றனர். ஆனால், அவர்கள் நெருக்கமாக வரவே கூசுகின்ற னர்—எனக்கு உடனடியான அவசரத்தேவை ஒரு தோழன். இறைவா அருள் செய்க! அப்படி உன்னால் ஒரு தோழனை எனக்கு அனுப்ப இயலாது போனால் ஒரு விண்ணப்பம். இறைவா கோபிக்காது திருவுளம் பற்றவேண்டும். நீயே எனக்கும் தோழனாக வந்து உதவி செய்தால் என்ன? இறைவா அருள் செய்க!*

## மார்ச் 5

### சினந்தவிரப் பணித்துச் செயலில் ஊக்குக!

*இறைவா, காமனைக் கனன்று எரித்தாய். காலனைக் காலால் உதைத்தாய். ஆனால் நின்பால் தொழும்பு பூண்டவர்களிடத்தில் நீ சினந்ததே இல்லை. அவர்கள் மிகை செய்த போதும் ஏற்றுக்கொண்டு பொறுத்திருந்தனை. உனக்குச் சினம், பகைவர்மாட்டே; தொழும்பர் மாட்டு இல்லை. ஆனால்; இறைவா, என் சினம் இனம் பார்க்காமல் கிளர்ந் தெழுகிறது. தொழும்பாய்த் தொண்டு செய்வார் மாட்டும் சினம் வருகிறது. பாழாய்ப்போன சினத்தை அடக்க முடிய வில்லை.*

*ஆனால், இறைவா! ஒரு பொழுது கூட காரணமின்றிச் சினம் இல்லை! காலத்தில் செய்யாமை, முறையாகச் செய் யாமை, திறம்படச் செய்யாமை, முழுமையாகச் செய்யாமை, பயனுறச் செய்யாமை ஆகியனவற்றைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. இறைவா! நானும், மற்றவர்களும் மண்ணில் கையைப் பயன்படுத்தி-உழைப்புப் போர் செய்தால்தானே உண்ணலாம், வாழலாம்.*

*இறைவா! எனக்கு யார் மீதும் கோபம் இல்லை. முறையாக வேலை செய்யாதவர் மீதுதான் கோபம். இது தவறா? இறைவா! நல்ல ஆலோசனை, சொன்னால் நடவாது என்கிறாய். உடனிருந்து செய், ஊரே செய்யும் என்கிறாய். இறைவா இன்று முதல் செய்கிறேன். பணிக்காலத்தில் அனைவருடனும் நின்று ஒத்துழைத்துப்பணிகளை முடிக்க அருள் பாலித்திடுக! சொல் செயலினைப் பயவாது. செயலே, செயலினைப் பயக்கும், நல்ல புத்திமதி. இறைவா அருள் செய்க!*

கு.ஏ.6.

## மார்ச் 6

### இரவலர்க்கு ஈயும் வள்ளலாகவாவது வந்தருள்க!

இறைவா! ஆரூரர் எவ்வளவு புண்ணியம் செய்தவர். அதனால், நீ ஆரூரர்க்குத் தோழனாக வந்தாய். அதனால், ஆரூரர், தம் மனத்தில் நினைத்ததெல்லாம் உன்னிடம் கேட்டார்; பேசினார்; ஏசினார்; நீயும் அவர் பேச்சையும், ஏச்சையும் பொறுத்துக்கொண்டு அருள் செய்தாய். எனக்கு ஒரு தோழன் அப்படி வாய்க்க வில்லையே! நான் என்ன செய்ய! என் மனத்தில் இருப்பதைச் சொல்லி அழுவதற்குக் கூட தோழன் கிடைக்கவில்லையே!

இறைவா! எனக்கும் எண்ணற்ற ஆசைகள். யாரிடம் கேட்பது? கேட்பாரும், கொடுப்பாரும் இல்லாமல் என் ஆசைகள் முளையிலேயே கருகிப்போய் விட்டன. எனக்கு நீ தோழனாய் வரக்கூடாதா? என்னால் நீ விரும்பும் சுந்தரத் தமிழில் பாடத் தெரியாதே! இறைவா! நீ தமிழோடு இசை கேட்கும் இச்சை மீதூர்ந்தவன் என்று தெரிந்திருந்தால் நானும் கவிஞனாக வளர்ந்திருப்பேன்! பண் சுமந்த பாடல் களைப் பாடுந்திறனைப் பெற்றிருப்பேன். இது எனக்கு அன்றே தெரியாமல் போய், எனக்குப் புரியாத மொழியில் "அஷ்டோத்திரம்" செய்து ஏமாந்துபோனேன். இறைவா மன்னித்துக்கொள். இனி நான் கவிஞனாதல் அரிது. ஏழிசையில் உனது புகழ் பரவுதலும் அரிது. எனக்குத் தெரிந்த தமிழில் இப்படி எழுதிப் பிரார்த்தனை செய்கிறேன். இறைவா அருள்கூர்ந்து ஏற்றுக்கொள். சுந்தரர் தமிழுக்குத் தோழனாக வந்தருளிய நீ என் தமிழுக்கு வரமாட்டாய். அது எனக்கே தெரிந்த உண்மை—ஆயினும் ஆசை வெட்கமறியாது. இரந்து கேட்கின்றேன். இரவலர்க்கு ஈயும் வள்ளலாகவாவது அருள் செய்க!

## மார்ச் 7

### என் இதயம் என் வசமாகிட அருள் செய்க!

*இறைவா, ஏன் சிரிக்கிறாய்? இறைவா! உன்னை இவ்வளவு கெட்டிக்காரத்தனமாக மந்திரங்கள், சடங்குகளினால் ஏமாற்றுகிறோமே என்றா? இல்லை, இறைவா! ஏமாற்றும் நோக்கமில்லை. ஏதோ ஒரு நம்பிக்கை அவ்வளவு தான். உனக்கு மலர்களால் ஆய அருச்சனையா வேண்டும்? வேண்டவே வேண்டாம். இதய மலர்களால் உன்னை அருச்சித்தால் போதும். ஆனால், என் இதயம் என்னிடத்தில் இல்லையே. அதை நான் சைத்தானிடத்தில் ஒத்தி வைத்து விட்டேன். அதனால்தான் மலர்களால் அருச்சிக்கிறேன். இறைவா! என் இதயத்தை மீட்டுக்கொடு.*

*என் இதயம் ஆணவத்திற்கு அடிமையாகித் துரும் பாய்க் கிடக்கிறது; செயலிழந்து கிடக்கிறது. என் இதயம் என் வசம் இல்லை. நூறாயிரம் தடவை எடுத்துச் சொன்னாலும் அது கேட்பதில்லை, இறைவா!*

*நீ என்பால் முழுக்கருணை செலுத்தினால்தான் நான் பிழைப்பேன். இறைவா! என் இதயமும் எனக்குத் தேவை, நான் அதை இழந்து விடக்கூடாது. இறைவா நின் கருணையால்-பையத் தாழுருவிட ஆட்கொண்டருள் செய்க! இதயம் உடல் முழுவதும் பாய்ச்சும் குருதியோடு, அன்பையும் சேர்த்துப் பாய்ச்சும்படி செய்! நான் உய்தி பெற்று விடுவேன். இறைவா, அருள் செய்க!*

## மார்ச் 8

## இறைவா, என்னைத் திருத்தி ஆட்கொள்க!

*இறைவா! நான் ஒரு புரியாத புதிர். ஆம், வெளியில் குப்பை கூளங்களைக் கண்டால் முகம் சுளிக்கிறேன். துர்நாற்றத்தைக் கண்டால் மூக்கைப் பிடிக்கிறேன். ஆனால், என் மனத்தில் உள்ள குப்பை கூளங்கள், அம்மம்ம! அந்தக் குப்பை கூளங்களைக்கண்டு ஒரு நாள் கூட முகம் சுளித்தே னில்லை. நாணினேன் இல்லை. என் புலன்களில் வீசும் சுயநலவாடை அம்மம்ம. கொடியது. இதற்கும் நாணினே னில்லை.*

*இறைவா, என்னைத் திருத்தி ஆட்கொள்! எப்படி யிருந்தாலும் நான் உன் உடைமைதானே! குப்பை கூளங்களும் கூட சூழ்நிலையால்தானே நாறுகின்றன! அவற்றை மண்ணிற்குள் முறையாக இட்டு மூடினால், படைக்கும் ஆற்றல்மிக்க உரமாகிவிடும். அங்ஙனமே யான்! என்னை நீ திருத்தி ஆட்கொள்ளலாம்; கொள்ள முடியும். உனது அருள் நோக்கு என் பால் வீழின் நான் படைப்பாளியாகி விடுவேன், வாழ்வேன். இறைவா, எடுத்தருள்க!*

## மார்ச் 9

### இறைவா, நீ என் தனித் துணையாகி அருள்க!

*இறைவா! என் மனம் தெளிவாக இல்லை. குழம்பு கிறது. ஏன், வேடிக்கை பார்க்கிறாய்? இன்றே, இப்போதே அருள்செய்! நீ என் புலன்களுக்கும், பொறிகளுக்கும் விருந் தாக வந்தருள் செய்தால்தான் நான் தேறுவேன்? இல்லை யானால் என் நிலை படுமோசம் ஆகிவிடும்.*

*வாழ்க்கையோ வழுக்கல். வழுக்கலில் ஊன்றி நிற்கக் கோலினைக் காணேன். வழுக்கல் திசையில் இழுத்துச் செல்லவே துணைகள் அதிகம் வந்தமைகின்றன. பொறி களின் கொட்டத்திற்குத் தூபம் போடும் அமைப்பு ஏராளம். இந்நிலையிலும் நின்னை நினைக்க, பூசனை செய்ய ஆர்வம் இருக்கிறது. ஆனால், இந்நெறியில் நிறுத்தத் துணை இல்லையே. நான் என் செய்வேன்? நின் துலாக்கோலும் ஏன் தடுமாறுகிறது? மாணிக்கவாசகருக்கும், சுந்தரருக்கும் ஒரு நியாயம்; எனக்கு ஒரு நியாயமா? நீயே வந்து என்னை வலிய ஆட்கொள்ளக்கூடாதா? ஆட்கொள்! எழுபிறப்பும் உனக் காட் செய்வேன். நீ என் தனித் துணையாக வந்தமைவுறின் என் வாழ்நாள் எல்லாம் பயனுடைய நாளே!*

## மார்ச் 10

### நின் அடிமை கெட்டுப் போதல் நினக்கு அழகன்று!

*இறைவா, என்ன விந்தை. உன்னிடத்தில் கூட குற்றங்களை ஒத்துக் கொண்டு அழ, மன்னிப்புக் கேட்க மனம் வரமாட்டேன் என்று அடம்பிடிக்கிறது. பெருமை பேசுகிறது. இறைவா, உன் சந்நிதியில் அழுதாலே போதுமே, மலை போலச் செய்துள்ள தீவினைகள் பறந்தோடிப் போகுமே.*

*இறைவா, மன்னித்துவிடு! அழக்கூடாது என்று நான் நினைக்கவில்லை. வெட்கம் அதனால்தான் அழவில்லை. உன் சந்நிதியில் அழ வெட்கப்படுவது பிழையென உணர்ந்துள்ளேன் இனி நாள்தோறும் நின் சந்நிதியில் நின்னை நினைந்து நினைந்து அழுவேன். உன்னைப் பெற அழுவேன். நீ ஆண்டான், நான் அடிமை. நின் அடிமை கெட்டுப்போதல் நினக்கு அழகன்று. காப்பது நின் கடமை. நீ என்னைக் காப்பாற்ற வேண்டும் இறைவா! உன் கருணைக்குப் பாத்திர மான ஏழை அழுகிறேன். இரங்கியருள் செய்! இனியும் காலம் தாழ்த்த வேண்டாம்..*

## மார்ச் 11

### பெண்மையைப் போற்றும் மனப்பாங்கினை அருள்க!

*இறைவா! உமையாள் கேள்வனே! "கற்பு, கற்பு" என்று கதறுகிறார்களே அது என்ன கற்பு? நின் மனைவி உன்னைப் பற்றி என்ன நினைக்கிறாளோ? இறைவா! உயர்ந்த அன்பு நலம்தானே கற்பு! நாட்டில் எங்கேயும் அன்பைக் காணேன் கடவுளே. நின்னை நினைவூட்டுபவளே பெண்தான்.*

*பெண்ணே வாழ்க்கையில் பெரும் பங்கு கொள்கிறாள் —அவள் தாயாகச் செய்பவை ஏட்டில் எழுதிப் பார்க்கக் கூடிய அளவினதா? ஆனால் பெண்மை சமூக வாழ்க்கையில் பெருமைப்படுத்தப்பட வில்லை.*

*இறைவா, நீ உமைக்கு எவ்வளவு மதிப்புக் கொடுக்கிறாய்! சக்தியாய்ச் சிவமாகி என்று சான்றோர் போற்றுவர். உன்னை வணங்கும் மக்களுக்கு ஏன் இந்தப் புத்தி வரவில்லை? பெண், காமப் பொருள் அல்ல; பெண், தாய்; அருளின் சின்னம். பெண்மையைப் போற்றும் மனப்பாங்கினை அருள்க!*

## மார்ச் 12

### செந்நெறி நின்று வாழ்ந்திட அருள்க!

*இறைவா, வாழ்க்கை ஒரு நேர்கோடு. பல புள்ளிகள் இணைந்த ஒரு கோடு. ஒரு புள்ளி இடம் மாறினாலும் கோடு கோணலாகி விடும். ஆம். இறைவா, நானும் முயற்சி செய்கிறேன். என் வாழ்க்கை நேர்கோடாக. ஆனால், முடிய வில்லையே? என் வாழ்க்கை நேர்கோடாக வேண்டும். அதுவே என் ஆசை. இறைவா, அருள் செய்க!*

*செம்மை— உழைப்பில் விளைவது. உழைத்து வாழ்தல்; பகுத்துண்டு வாழ்தல்; மனத்துக்கண் மாசிலனாக வாழ்தல்; பொறிகளில் அழுக்கு இன்றி வாழ்தல்; ஒன்று படுதல் ஆகியன, செம்மை நல்கும் பண்புகள். பண்பாளா! இறைவா! செந்நெறியில் நின்று வாழ்ந்திட அருள் செய்க.*

## மார்ச் 13

### உதைத்துத் திருத்து! ஓடிவந்து அருள் செய்!

*இறைவா! நீ அளித்த அருட் கொடைகள் எவ்வளவு ஆற்றலுடையன, பயன் உடையன. பற்றி நிற்கும் மனம்; ஆய்வு செய்யும் புத்தி; நிச்சயிக்கும் சித்தம்; அறிவு சுரக்கும் மூளை. அம்மம்ம! இவ்வளவு இருந்தும் ஏன் நாங்கள் மகிழ்ச்சியோடு வாழவில்லை? இன்பமாக வாழவில்லை? ஏன்? என்ன குறை? உன்மேல் ஒன்றும் குறை இல்லை.*

*நான்தான் தலைகீழாக நடக்க நினைத்தேன், நடந்தேன், அதன் விளைவு இது. இறைவா, உன் திருவடிகள் இப்போது என்ன செய்து கொண்டிருக்கின்றன? ஏன், என்னை உதைத்துத் திருத்தக்கூடாதா? இந்த முட்டாளுக்குத் திருவடித் தீட்சையா என்று நினைக்கிறாயா? காலனிலும் கொடியவனா நான் அப்படி ஒன்றும் இல்லை. உதைத்துத் திருத்து, ஓடிவந்தருள் செய்!*

## மார்ச் 14

### நின் கருணை நினைந்து அழுகிறேன்!

*இறைவா, பாவம். உன்னைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. நீ என்னை வளர்க்க எவ்வளவு அல்லற்படுகிறாய்? ஆனால், நான் முற்றாக உன்னுடன் ஒத்துழைப்பதில்லை. ஏன், இறைவா உனக்கு இந்த வேலை? ஒன்றுக்கும் உதவாத என்னைப்பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்? உனக்கு என்ன ஆள் பஞ்சமா? இருக்காதே. ஆம், இறைவா, அதுதான் நின் கருணை! நீ அற்பம் என்று எம்போன்றாரை இகழ்வதில்லை. அதுதான் உனது பெருமை. இறைவா, நீ இங்ஙனம் வலியவந்து ஆட் கொண்டாய், அடிமையாக்கிக் கொண்டாய். உன் கருணையை நினைந்து நினைந்து அழுகிறேன். அருள் செய்க! என் வாழ்க்கையைப் புனிதமாக்கி அருள் செய்க!*

## மார்ச் 15

### அறிவறிந்த ஆள்வினை தேவை! இறைவா அருள்க!

இறைவா, இந்த மனிதர்கள் விளையாடும் சாமர்த்தியத்தைப் பார்த்தாயா? என்ன சிரிக்கிறாய்? ஆம் இறைவா, முளைக் கொம்புக்கு வைக்கோல்புரி சுற்றுவது போல உடையைச் சுற்றிக் கொள்கின்றனர். ஆனால், அவர்களின் செயலின்மையைக் கண்டு இயற்கை சிரிக்கிறது; ஊர் அழுகிறது. வாழ்தலுக்கு வேண்டிய விழிப்புணர்வே இல்லை. ஐயோ! பிழைப்பு நடத்துகின்றனர். சீச்சீ! இந்தப் பிழைப்பு நாயும் நடத்துமே. ஏன் இந்தக் கேவலம்? இறைவா, ஏன் இந்த அவமானங்களையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறாய்? தாங்கிக் கொண்டிருக்கிறாய்?

இதுதான் நின் திருவிளையாட்டு. எலும்பைக் கடித்துக் குருதிகொட்ட வேதனையை அனுபவிக்கும் பொழுதுதானே நாய்க்கு எலும்புகடித்தலில் விருப்பம் குறைகிறது? அதுபோல நாங்களும் துன்பத்தில் சுழன்று எய்த்துக் களைத்தால்தானே தெரியும், நின் திருவருள் பெருமை!

துன்பம் இன்ப அன்பிற்கு ஆற்றுப்படுத்தும். துன்பத்தில் அழுதால் அதோ கதிதான். மாற்றும் கருத்தே தேவை, அறிவறிந்த ஆள்வினையே தேவை. எய்ப்பினில் வைப்பே. எங்கள் தவமே, போற்றி போற்றி! நின் அருட்கொற்றம்!

## மார்ச் 16

## நாவடங்கி ஒழுகிட நின் திருநாமத்தைப் படைக்கலமாகத் தந்தருள்க!

*இறைவா, நான் என்ன செய்ய? நா, சுவையான தீனி கேட்கிறது. அது பேச்சுக் கச்சேரியைத் தொடங்கி விட்டால், கேட்கத்தான் ஆளில்லை. நேரமில்லை. நேரம் மட்டுமா இல்லை? வரம்பே இன்றிப் பேசுகிறது! நானும் அடக்கத்தான் பார்க்கிறேன். மௌன விரதம் இருந்து பார்த்தேன். அது மௌன விரதமா? நா, மற்றப் பொறிகளையும், எழுது கோலையும் எழுதும் தாளையும் தன் படைக்கருவிகளாகக் கொண்டு ஆட்டுவித்த ஆட்டம் தாங்கமுடியவில்லை. இறைவா, என்ன செய்யச் சொல்கிறாய்? ஆம், இறைவா! நாவை அடக்குதற்குப் பதில் அதை நல்ல வழியில் பழக்க முயற்சி செய்கிறேன். நீயும் துணை செய். நாவடங்கினால் போதும், அனைத்தும் நடக்குமே.*

*திருவள்ளுவர் "யாகாவாராயினும் நாகாக்க" என்றார். ஒரோ வழி உடம்பிற்குள் - வாய் வழியாக அசுத்தமான உணவு சென்றாலும் உடல் கெடுவதில்லை. ஆம், சிறுகுடல் அசுத்தத்தைப் பிரித்து மலக்குடலுக்கு அனுப்பிக் கழித்து விடும். ஆனால், வாயிலிருந்து வெளிவரும் சொற்கள் அசுத்த மாக இருந்தால்-தப்பாமல் அதன் எதிர்விளைவுகளை உரு வாக்கியே தருகிறது. ஆதலால், நாவடக்கமே வேண்டும், உள்ளே செலுத்தும்-உணவிலும் அடக்கம் வேண்டும்.*

*சுவைக்காக நாக்கை நீட்டி உண்டால் நோய்க்கு விருந்தாவதைத் தவிர வேறு வழியில்லை! அது போலவே நாவிலிருந்து வெளியே வரும் சொற்களிலும் கட்டுப்பாடு தேவை இல்லையெனில் சமூகத்தால் வெறுக்கப் பெறும் நோயாவதைத் தவிர வேறு வழியில்லை. இறைவா, நாவடங்கி ஒழுகிட உன் திருநாமத்தைப் படைக்கலமாகத் தந்தருள் செய்க!*

## மார்ச் 17

### எங்களுக்கு, எங்களையும் உன்னையும் காட்டி அருளுக!

*இறைவா, கோடி இன்பங்களை அள்ளித் தந்துள்ளாய். நாங்கள் இவைகளை அறியாமல் அவலத்தில் ஆழ்ந்து கிடக்கிறோம்? ஏன் இந்த நிலை? இறைவா, என்ன சொல்ல? வயிறாரச் சோறு கிடைத்தாலே தலை கனத்து விடுகிறது. உன்னையே யார் என்று கேட்கும் அளவுக்கு மூர்க்கத்தனம் வளர்ந்துவிடுகிறது.*

*இறைவா, என்ன செய்வது? ஊனை வளர்த்த அளவுக்கு உணர்வை வளர்த்துக் கொள்ளவில்லை. "ஊனினைப் பெருக்கி உயிரை இழந்தேன்" என்ற அனுபவவாக்கு எங்கள் வாழ்விலிருந்து பிறந்ததுதானே? இறைவா! ஊனினை உருக்கும் ஒப்பறிய பணியைச் செய்து வரும் நீ, என் ஊனினை உருக்கு; என் உள்ளொளியைப் பெருக்கு! எங்களுக்கு எங்களைக் காட்டியருள்க; எங்களுக்கு உன்னையும் காட்டியருள்க! இன்பத் தொட்டிலில் எங்களை இட்டு ஆட்டு. ஏழேழ் பிறப்புக்கும் ஆட்டியருள்க!*

## மார்ச் 18

### தீயோரிடம் மன்னிக்கும் நெறியில் கொள்ளும் உறவு என்னைக் கெடுத்து விடாமல் காப்பாற்றி அருள்க!

*ஆண்டவனே! எல்லாம் நின் செயல் என்று கூறுகிறார்களே, இது உண்மையா? இறைவா, சில மனிதர்கள் தங்களுக்கு வாய்த்திருக்கும் எந்த நல்லதையும் பயன்படுத்துவ தில்லை; முறையாக வாழ்வதில்லை; முறையாக வாழ ஆசைப் படுவதும் இல்லை. எதையாவது செய்து மாட்டிக் கொள்கி றார்கள், உன் அடியானாகிய என்னிடம் வருகிறார்கள். காப்பாற்ற வேண்டுகிறார்கள். எனக்கோ ஒரே குழப்பம். நல்லதின் வாசனையே இல்லாத இந்த மனிதனைக் காப்பாற் றக்கூடாது என்று மனம் போராடுகிறது. சமுதாயத்தின் மனசாட்சி காப்பாற்றக் கூறுகிறது.*

*ஆம்! இறைவா, நீ யாரையும் கெடுத்ததில்லை, அழித்த தில்லை. நானும் அந்த வழியில் தானே வரவேண்டும். ஆனால், இறைவா, உன்னால் வாழ்வு பெற்றோரெல்லாம் உன்னையே எதிர்த்துப் போராடினார்கள். என்னோடும் அவர்கள் போராடினால் என்னால் தாங்க இயலுமா? என்ன இறைவா, தாங்கிக் கொள்ளத்தான் வேண்டுமா? திருவருள் ஆணை! இறைவா! உன் வழியில் பாவிகளையும் மன்னிக் கிறேன். ஆனால் இறைவா, ஒன்றை மறந்துவிடாதே. தீயவர் களின் உறவு முட்புதர் அனையது. முட்புதர் அதனை அழிப் பவன் காலையும் குத்திக் காயப்படுத்தும். அதுபோல, தீயோ ரிடம் மன்னிக்கும் நெறியில் கொள்ளும் உறவு என்னையும் கெடுத்து விடாமல் காப்பாற்றி அருளுவது உன் கடமை.*

## மார்ச் 19

## கால உணர்வைப் புரிந்துகொண்டு செயற்படும் புத்தியை அருள்க!

இறைவா, உன்னைக் காலங்கடந்தவன் என்று எல்லாரும் கூறுகின்றனர். நீ, காலங்கடந்தவனாக இருந்தும் உனது படைப்பில்—இயக்கத்தில் காலத்தை முதன்மைப் படுத்துகிறாய். நானும் காலங்கடந்தவனாக இருந்தால் என்ன? ஏன் இந்த வேற்றுமை? நானும் காலங்கடந்தவனாக இருந்தால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும். விருப்பம் போல் வாழலாம். அதுவும் இந்தக் காலதேவதை இருக்கிறதே, அது ஒரு நொடி கூடக் காத்திருப்பதில்லை. அது ஓடிக் கொண்டே இருக்கிறது. அதைத் தொடர்ந்து என்னால் கூட முடியவில்லை. நான் காலத்தை ஒட்டி ஓடும் அளவுக்கு வாழ்கிறேன்.

காலத்தை நான் தவறவிட்டு, விழாமல் உயிர்ப்போடு வாழ்ந்தால் காலம் எனக்குச் சேவை செய்கிறது. ஆனால், அயர்வினால் அரைநொடியேனும் விட்டுவிட்டால் வந்தது மோசம்! இறைவா, காலம் என்முதுகில் முத்திரை குத்தி விட்டு ஓடிவிடுகிறது. அதனால், காரியங்கைள் பரிகொடுத்து, பெருமையை இழந்து, கிழவனாகி எய்த்து அலைகிறேன். இறைவா, என்னையும் காலங் கடந்தவனாக்கினால் என்ன?

ஆம், இறைவா! நீ, காலம் என்னும் கடிவாளம் போட்டு இழுக்காவிட்டால் நான் மதர்த்த சோம்பலாய் கெட்டே போவேன். இறைவா, காலனைக் காலால் கடிந்த கண்ணிய! என்னைக் காப்பாற்று. கால உணர்வுகளைப் புரிந்துகொண்டு செயற்படும் புத்தியைத் தருக! புண்ணியா. இனிக்கால தாமதம் செய்யேன்.

## மார்ச் 20

### இப்போதே நான் உயிர்ப்புடன் வாழ என்னை வாழ்த்துக!

இறைவா, தேவதேவா! என் உடல் சுறுசுறுப்பாய் இருக்கிறது. ஆம், இறைவா! உடலின் தேவைகளைக் கேட்டுப் பெறுவதில் உடல் என்றும் பின்தங்கியதில்லை. ஒழுங்காகச் சோறு கேட்கிறது; கூடி மகிழத் துணை கேட்கிறது. இவை களை எந்தச் சூழ்நிலையிலும் அடைய முயற்சி செய்கிறது. அடைந்தே விடுகிறது. ஆனால் ஆன்மாவின் தேவைகள் என்னாயிற்று? ஆன்மாவுக்கு அழத்தெரியவில்லை. ஆன்மா விற்குத் தன் தேவைகளைக் கேட்டுப்பெறத் தெரியவில்லை. ஆன்மாவில் ஒரே வெறுமை, வறட்சி. இறைவா, ஏன் இந்த அவலநிலை?

உடலை எவ்வளவு திருப்திப்படுத்தி வைத்தாலும் ஒரு காலத்தில் அது அழியக்கூடியது. ஆன்மா—உடலைத் துறந்து விட்டால் பட்ட மரத்திற்குரிய விலைமதிப்புக் கூட உடலுக்குக் கிடைப்பதில்லை. ஆம், இறைவா! பட்ட மரமா யினும் விறகுக்கு ஆகும். நான் எதற்கும் ஆகிலன்?

இறைவா; என்னைப்பார், என் ஆன்மாவில் பசியை உண்டாக்கு. உடலால் வாழ விரும்பவில்லை, உயிர்வாழ ஆசைப்படுகிறேன். என்னை வாழ்த்து! உயிரின் தேவை வழங்கு.

ஆம், இறைவா! இப்போதே உடல் பயனுள்ள வாழ்க் கையை நடத்த அன்பை—அருளை வழங்குக! நான் அதனைப் போற்றிக் கொள்கிறேன். இப்பிறப்பிலேயே இல்லை, இறைவா இப்போதே நான் உயிர்ப்புடன் வாழ என்னை வாழ்த்துக!

## மார்ச் 21

### என்னைச் சுற்றியிருக்கும் அனைத்தையும் நேசிக்கும் இனிய வரத்தினை நல்குக!

*இறைவா! ஏன் சொர்க்கத்தையும் படைத்து-நரகத்தையும் படைத்தாய்? என்னுடைய சுதந்தரத்தைப் பாது காக்கவா? நான் அனுபவிப்பது சுதந்தரமா? ஆம், இறைவா! நான் அனுபவிப்பது சுதந்தரம்தான். ஆனால், நானோ மற்றவர்களுடைய சுதந்தரத்தையும் தட்டிப்பறித்து அனுபவிக்கிறேன். ஆம், இறைவா! இதில் என்ன ஒளிவுமறைவு. எனக்கு எடுக்கத் தேரியுமே தவிர வைக்கத் தெரியாது. வாங்கத் தெரியுமே தவிர, கொடுக்கத் தெரியாது.*

*முடை நாற்றம் எடுத்த அம்மணமான சுரண்டல்—சுயநல வாழ்க்கை என் வாழ்க்கை! நாளும் என்னை ஊட்டி உண்பித்து வளர்க்கும் நிலத்துக்குக்கூட உரமிட மாட்டேன். காய்களால்—கனிகளால் வாழ்விக்கும் மரங்களுக்கு உரமிட மாட்டேன். ஏன்? பால் தந்து வாழ்வு தரும் பசுமாடுகளுக்கும் என்னிடமிருந்து எதுவும் கைம்மாறு இல்லை.*

*இறைவா! இதற்குப் பெயர்தான் சுதந்தர வாழ்க்கையா? ஆண்டவனே! என் மனத்தில் அன்பினைப் பெருக்கும் ஊற்றினைத் தந்தருள் செய்! என்னைச் சுற்றியிருக்கும் அனைத்தையும் நேசிக்கும் வரத்தினைத் தந்தருள் செய்! நான் என்னைப் பூரணத்துவமுடன் காப்பாற்றிக் கொள்ளும் வாழ்க்கையை முறையாக நடத்தினாலே மற்றவைகளுக்கு வாழ்வளிக்கும் பேறு கிடைத்துவிடுகிறது.*

*இறைவா! என்னை வளர்ப்பதும் இயற்கையை வளர்ப்பதுமான கடமையைச் செய்யும் மனத்தினைக் கொடு. இயற்கையை நேசித்து இயற்கையோடு இசைந்து வாழ்வேன், இது உறுதி!*

கு. X. 7.

## மார்ச் 22

### என்னை மனிதனாக்கு, இறைவா!

*இறைவா, நான் பிறப்பால் மானிடனே. ஆனால், இயல்பில் விலங்காயினேன். என்ன இறைவா! நான் விலங் கல்லவா? மனிதனேதானா? இல்லை. மனிதனும் இல்லை. விலங்கும் இல்லை. விலங்குகளில் கூட யானை, கிளி, நாய், பசு போன்றவை பயனுடையன. சிறப்புடைய பண்பாடு டையன. ஒழுங்குடையன, நன்றி பாராட்டும் இயல்பின. ஆம் இறைவா, என்னிடத்தில் ஏது ஒழுங்கு? மனம் போன போக்குத்தான். இந்த உடல் எனக்குக் கருவியாக இல்லை. நான்தான் உடலுக்குக் கருவியாகி விட்டேன். இந்த உடலுக்கே உழைக்கின்றேன்.*

*என்னிடம் ஏது நன்றி. உனது அருட்கொடைகளை நினைத்துப் பார்ப்பதில்லை. பொருளுடைய நின் புகழை நான் பாடுவதில்லை. யாருக்கும் பயன்பட்ட வாழ்வும் வாழ்ந் தேனில்லை. இறைவா! மன்னித்து விடு.*

*எனது உடம்பை இளைக்கச் செய்து வருகின்றேன். அது இளைத்துவிடும். நீ உள்ளொளி பெருக்கிவிடு! என்னைக் காப்பாற்று. என்னை முதலில் நல்ல விலங்காக்கு, பின் மனித னாக்குக! பின் நின் திருவருளிலேயே தங்கியிருக்க அருள் புரிக!*

## மார்ச் 23

### இறைவா, ஐவர்களிடமிருந்து காப்பாற்று, அறிவை விருத்தி செய்!

*இறைவா! என்னை எவ்வளவு பெரிய உப்பரிகையில் உட்கார வைத்தாய். ஆனால் நான் அங்கே இருக்க முடிகிறதா? என்னுடைய பொறிகள் இருக்க விடுகின்றனவா? ஒத்தநோக்கம் இல்லாத ஐம்பொறிகளோடு எனக்குக் கூட்டு வைத்தாயே. இறைவா! அந்த ஐவர்கள் என்னோடு தொடர்ந்து போராடுகிறார்கள். பல சமயங்களில் அவர்களே வலிமையுடையோராகி விடுகின்றனர்.*

*இறைவா! ஏன் இந்த நிலை? உனக்கு ஏன் இந்த நாச வேலை. இறைவா! ஆம் இறைவா, ஐவரையும் அடக்க அறிவைக் கொடுத்திருக்கிறாய். ஆம் இறைவா அறிவைக் கொடுத்திருக்கிறாய். எனது அறிவும் நயப்புகளுக்கு இரையாகி விடுகிறது. பல சமயங்களில் அறிவு சுயேச்சையாகவே வேலை செய்வதில்லை. இறைவா! அது மட்டுமா? குறைகளை நிறைக ளாகவும், அநியாயங்களை-நியாயங்களாகவும் அது காட்டும் திறமையை வியப்பதற்கு ஏதுமனம்?*

*அம்மம்ம! இறைவா! கீழே விழுந்து கிடப்பதற்கும் இந்த மனம் கற்பிக்கும் சமாதானங்கள் அளப்பில. இறைவா! என்னைக் காப்பாற்று. ஐவர்களிடமிருந்து காப்பாற்று, அறிவை விருத்தி செய்!*

## மார்ச் 24

### நன்மையே நன்மையைத் தரும்

இறைவா, உனது திருவுள்ளம் என்ன என்றே புரிந்து கொள்ள முடியவில்லை. புழு—இழிந்த ஒரு புழு, கக்கும் எச்சில் நேர்த்தியான பட்டு நூலாகிறது. என்னால் பட்டுப்புழு போன்று நேர்த்தியான செயல் எதுவும் செய்ய முடியவில்லையே! நானோ மனிதன். பகுத்தறிவு உடையவன். எனது செயலில் நேர்த்தியில்லை. ஏன், இறைவா? ஆம், நீ சொல்வது உண்மை. நான் ஒரு நேர்த்தியான படைப்பே. ஆனால், சுதந்திரத்தின் பெயரால் கெட்டுப்போனேன்.

பட்டுப்பூச்சிப்போல நான் ஒழுங்காக வாழ்வதில்லை. ஆனால், இறைவா, பட்டுப்பூச்சியிலும் நான் உயர்ந்தவனே. எப்படி? பட்டுப்பூச்சியின் படைப்பாகிய பட்டினை நானே அனுபவிக்கிறேன். எனது அனுபவங்களுக்குத்தானே உலகம் இயங்குகிறது. ஆம்! இறைவா, நீ சொல்வது உண்மை. இந்த அனுபவங்கள் இடையீடின்றிக் கிடைக்க நான் என்னுடைய வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்!

இறைவா, நான் நல்லவனாக உழைப்பாளியாக இருப்பது எனக்கு நல்லது. ஆம்! நன்மையே நன்மையைத் தரும்! இறைவா, என் பிழைகளைப் பொறுத்துக் கொள். இன்று முதல் நான் நல்லனவே எண்ணுவேன். நல்லனவே செய்வேன் இது உறுதி!

## மார்ச் 25

## பெண்கள், ஆற்றலின் நிலைக்களன்களாக வாழ அருள் செய்க!

இறைவா, நீ எப்போதும் உமையாளோடு இருக்கிறாய். உமையவளை ஒருங்கணைத்த வண்ணமே இருக்கிறாய். ஏன் இறைவா, நீ என்ன காமத்தில் மன்னனா? உமையவள் திருவடியில் பிறைநிலாத் தெரிகிறது, கொன்றை மலர் மணம் வீசுகிறது. ஆம், இறைா! நீ உமையவளிடம் சரணடைந் திருக்கிறாய். ஏன் இறைவா, அதில் என்ன தவறு? ஆற்றலைச் சரண் புகுகிறாய். உலகத்தின் இயக்கமே ஆற்றலில்தானே இருக்கிறது.

மானிட சாதி ஆற்றலில் குறைவின்றி இருப்பின் உலகத்தை இயக்கலாம், மாற்றி வளர்க்கலாம், எல்லாம் ஆற்றலின் மயம். இறைவா! உமை ஆற்றலின் ஊற்று. அவள் தரும் ஆற்றலே உன்னை ஐந்தொழிலில் ஈடுபடுத்துகிறது.

ஆம், இறைவா! எனக்கு ஓர் ஐயம். பெண்மை, ஆற்றலின் களம், ஊற்று, உரு என்றால் நாட்டில் பெண்கள் அப்படியில்லையே. இவர்கள் ஆற்றலே அற்று "ஜீவித்து" கொண்டிருக்கிறார்கள். அவ்வளவுதான்! இவர்கள் ஆற்றலாக, ஆற்றலின் ஊற்றுக்கண்ணாக விளங்கின் இம்மண்ணுலகு செழிக்கும்! இந்தப் பெண்களுக்கு இத்தகைய வரத்தை நீ அருளல் கூடாதா? நீ, இந்தப் பெண்களுக்கு இந்த வகையில் அருளிச் செய்ய இயலாது. ஆனால், உமையவளிடமாவது எடுத்துக்கூறு!

இந்த நாட்டுப்பெண்கள் பிழைப்பு நடத்துவதை விட வேண்டும். ஆற்றலின் நிலைக்களனாக வாழ வேண்டும். நல்ல படைப்பாளிகளாக விளங்க வேண்டும்! இறைவா, அருள் செய்!

## மார்ச் 26

### வேற்றுமையற்ற–அகண்ட வெளிக்கு என்னை அழைத்துக் கொள்!

*இறைவா, ஆண்டவனே! எங்கணும் நீக்கமற நிறைந் திருக்கும் நின்மலனே, உன் உண்மையான பெயர் என்ன? இன்னும் ஏன் அதை எங்களுக்குச் சொல்லித்தர வில்லை. அதனால்தானே நாங்கள் ஆளுக்கு ஒரு பெயர் சொல்லி உன்னை அழைக்கின்றோம், வாழ்த்துகின்றோம்.*

*கடைசியில் கடவுள் ஒருவர்தானா? அல்லது பலரா? என்ற அளவுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. சந்தேகம் மட்டுமா? நாங்கள் பல்வேறு மதத்தவராகிச் சண்டை போட்டுக் கொள்கிறோம்! ஏன் இந்தச் சோதனை? இறைவா, என்ன சொல்கிறாய்? உண்மையாகவா? உனக்குப் பெயர் இல்லையா? உருவம் இல்லையா? ஒன்றுமே இல்லையா? அப்படியா இறைவா? உன் பெயர் உண்மை. நீ சுத்த அறிவு. நீ தூய அன்பின் திருவுரு. நீ உலகத்தை இயக்கும் பேராற்றல். புத்தி வந்தது. நீ உலகத்துக்கு ஓர் உண்மை, ஆற்றல், அன்பு. உனக்கு நாடு இல்லை. மதங்களின் எல்லை இல்லை.*

*நீ, எல்லை கடந்த பரம்பொருள். உன்னை நான் அடைய வழி, நானும் எல்லை கடப்பதே. ஆம் இறைவா, சிற்றெல்லைகள் வேற்றுமையை வளர்க்கின்றன; பகையை வளர்க்கின்றன. இறைவா, என்னைச் சிற்றெல்லைகளிலிருந்து விடுதலை செய்துகொள்ள அருள் செய்! உனது உயர்ந்த எல்லைக்கு—அகண்ட வெளிக்கு வர அருள்செய்க!*

## மார்ச் 27

### இறைவா, என்னை இந்த வையகம் பயனுற வாழச் செய்திடுக!

*இறைவா, நான் கடன்காரனாகிவிட்டேன். நாள் தோறும் கடன் வளர்ந்து வருகிறது. ஆம், இறைவா! என்னைச் சுற்றியிருக்கும் ஐம்பூத உலகங்கள் என்னை வளர்க்கின்றன. தாவரங்கள் நாளும் எனக்கு உயிர்ப்புக் காற்றைத் தந்து வாழ்விக்கின்றன. அதுமட்டுமா? அம்மம்ம! உடலுக்கு உரம் தரும் காய்கனிகளைத் தருகின்றன.*

*நாளும் பசு, இன்சுவைப் பால் தந்து வாழ்விக்கிறது. அறிவியல் அறிஞர்கள் நுண்ணறிவினை வழங்கி வையத் தினைப் பயன்படுத்தி மண்மேல் பயனுற வாழும் வாழ்க் கையைக் கற்பித்துத் தருகினறனர். இவ்வளவு பேருக்கும் என்னால் என்ன கைம்மாறு செய்ய இயலும்? நாளும் செய்யக்கூடிய சிறுசிறு செயல்களைக் கூட நான் செய்வ தில்லை.*

*ஏன், இறைவா! நான் என்ன செய்ய? இயற்கையும், அறிஞர்களும் யாதொரு கைம்மாறும் விரும்பமாட்டார்கள். கைம்மாறு செய்யவேண்டிய அவசியமும் இல்லை. அதனால் இந்த முறையில் கடனாளியாதல் இல்லை.*

*ஆயினும் இறைவா, என்னை உயிர்ப்புக் காற்றினாலும், சுவைமிக்க கனிகளாலும் வாழ்விக்கும் செடிகளை-மரங்களை அழிக்காமல் பாதுகாக்கவும் மறுக்கின்றேன். இது நியாயமா? இறைவா, அவை மண்ணில் தலை காட்டியதிலிருந்து மாந்த ருலகை வளர்க்கின்றன, வாழ்விக்கின்றன. ஏன், பட்டுப்போன பிறகும் எரியும் விறகாகி வாழ்வளிக்கின்றன. நானோ யாதொரு பயனும் இன்றி வாழ்கின்றேன். இறைவா, கருணை காட்டு. என்னை இந்த வையகம் பயனுற வாழச்செய்!*

## மார்ச் 28

### இறைவா, நீ எனக்குத் தோழனாக வந்துவிடு!

இறைவா, நீ எனக்கு வாழ்வுதந்து அருள் செய்தனை. நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். வாழ்க்கையென்றால் பலரும் கூடுவர், கூடுதல் என்றாலே கூடும் அனைவரும் பொதுவான குறிக்கோள்களுடனேயே கூட வேண்டும். இங்ஙனம் கூடுவதே கூட்டம். என் வாழ்க்கையிலும் பலர் கூடினர். இன்னும் கூடிக்கொண்டிருக்கின்றனர்.

'பொதுமை', 'கூட்டுறவு', 'உழைப்பு', 'திருப்தி' என்பன வற்றின் பொருள் புரியாதோர் பலர் கூடியுள்ளனர். விறகுக் கட்டில் அடங்கிய குச்சிகள் போன்ற கூட்டம். பாலொடு சேர்ந்த சர்க்கரை போன்றதன்று இக்கூட்டம்! கூட்டை உடைக்க வேண்டாம் என்கிறாயா? இறைவா? இந்தக் கூட்டில் நான் படும் அல்லல், தலையில் அடித்துக் கொண்டு அழுமளவுக்குப் போகிறது. ஆம் தோளோடு தோளாக நிற்கும் தோழமையைக் காணோம். சுந்தரருக்குத் தோழனாக இருந் தாய், எவ்வளவு செய்தாய். நீ, ஏன் எனக்குத் தோழனாக வரக் கூடாது.

நீ எனக்குத் தோழனாக வந்துவிட்டால் பிரச்னைகள் எளிதில் தீர்ந்துவிடும், இங்குள்ள அதிருப்தியாளர்களும் கிராக்கி செய்து கொள்ள மாட்டார்கள். இம்மண்ணுலகில் தோழர்களுக்காப் பஞ்சம். ஆட்கள் நிறையக் கிடைப்பார்கள். ஆனால், அவர்கள் நமக்காக இல்லை. அவர்கள் அவர்களுக் காகவேதான். நீயோ என் பொருட்டுத்தான். ஏன் என்றால் உனக்காகவென்று ஒன்றும் இல்லை! இறைவா, நீ, வா! தோழனாக வா!

## மார்ச் 29

### என்பிழை பொறுத்து ஆட்கொள், இறைவா!

*இறைவா, அம்மம்ம! என்னே உன் படைப்பின் ஆற்றல். உன் படைப்பில் பயனில்லாது போனது எது? என்னைத் தவிர. மற்றப் படைப்புகள் எல்லாம் பயன்படுகின்றனவா? நான் என்ன பயன் இல்லாதவனா, இறைவா? நச்சுப்பாம்பு பயன்படுவதுபோல் வேறு எது பயன்படுகிறது என்று கேட்கிறாயா? பாம்பின் தோல் அழகு சாதனமாக விளங்குகிறது. பாம்பின் நஞ்சு, நஞ்சுக்கு மாற்றாக— மருந்தாகப் பயன்படுகிறது.*

*ஏன் இறைவா, நான் பயனில்லாதவனா என்ன? இறந்தாலும் உனக்குப் பயன் இல்லையா? இருந்தாலும் பயனில்லையா? மன்னித்துக்கொள். நான் பயனற்றுப் போனதற்கு நான் மட்டுமா பொறுப்பு? இல்லவே இல்லை. நீ எனக்கு வழங்கிய சுதந்தரம்தான் காரணம்!*

*சுதந்தரம்தான் எனது மூச்சுக் காற்று. சுதந்தரமற்ற உயிர் நடைப்பிணம். நான் பிறக்கும்போதே சுதந்தரத்துடன்தான் பிறந்தேன். இறைவா, நீ கூட என்னைப் படைக்கவில்லை. நான் என்றும் உள்ளவன். ஆனால் நான் தலையால் நடக்கத் தலைப்பட்டேனே, அதன் விளைவு நான் பயனற்றவனானேன். இறைவா, என்னைக் கைவிடாதே. என் பிழை பொறுத்து என்னை ஏற்றுக்கொள். வழிகாட்டு. நான் உன்னால் வளர்க்கப்பெற்ற வளர்ப்பு நாய். இறைவா! உன் அடிதொழுது செய்ய வேண்டிய பணிகளைக் கேட்டறிவேன், செய்வேன் இது உறுதி! இறைவா, ஏற்றுக்கொள்.*

## மார்ச் 30

### கையுடைமை கரவறியா நெஞ்சம் தா!

*இறைவா, நீ தானே உடல் தந்தாய், வாழ்க்கையளித் தாய். உடலின் தேவைகளை நீ தர மறுக்கின்றாயே. ஏன் இறைவா? வயிறு காலந்தவறாமல் சுவையான சோறு கேட்கிறது. காதலில் கலந்தினிது, மகிழ்ந்துறையும் வாழ்க்கை யும் கேட்கிறது. இவைகளை எல்லாம் நீ வழங்காமல் வாளா இருத்தல் நியாயமா? நின் பெருமைக்கு அழகா? ஆம், இறைவா, இன்னும் கேள். நான் வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழ் கிறேன். நீ, அளித்த பொறிகளுக்குப் பயனில்லாமல் அவை அழிந்து கொண்டிருக்கின்றனவே. நின் அருளிப் பாட்டில் எல்லோரையும் ஒக்கப்பார்க்கும் பண்பாடில்லையே. அன்று நீ, சுந்தரருக்கு எவ்வளவோ கொடுத்திருக்கிறாயே. இறைவா, எனக்கு ஏன் நீ கொடுக்கக் கூடாது? என்ன இறைவா! சிரிக்கிறாய்! சிரித்து மழுப்பவிட மாட்டேன், சிக்கெனப்பிடித் திடுவேன்.*

*நீ வழங்கிய செல்வத்தைப் பெருக்கி வாழ்வாங்கு வாழாமல் நின்னை இரந்து கேட்பது குற்றம்தான், மன்னித்துக் கொள்! நின்னால் ஒரு குறையும் இல்லை! என்னால் அறியாப் பதங்கள் அனைத்தும் தந்திருக்கிறாய்! இறைவா! உழைக்கும் மனம் தந்தருள் செய்! கையுடைமை நெஞ்சம் தா! ஊருடன் கூடியுண்ணும் பெருந்தவத்தினை அருள் செய்! இறைவா வேறென்ன வேண்டும்.*

## மார்ச் 31

### என் ஆணவத்திற்கு ஒரு குட்டுப்போடு!

*இறைவா! ஏன் பாராமுகம்? இறைவா, மௌனம் வேண்டாம்! காலனைக் காலால், காய்ந்தகால், இன்று எங்கு போயிற்று! ஒறுத்தல்மட்டும் போதுமா? என்னைத் திருத்து! பணி கொள்! இறைவா, என்ன சொல்கிறாய்! எத்தனையோ தடவை திருத்தியாயிற்று என்று வருத்தப் படுகிறாயா, இறைவா! நான் என்ன செய்யட்டும்? உனக்கும், எனக்கும் உறவு ஏற்படும் முன்பே–ஆதியிலேயே எனக்கு ஆணவத்துடன் இரண்டறக் கலந்த நிலை! அதன் பின்தான் நீ, என்னுடன் உறவு கொண்டாய்! அதுவும் நீயே வலிய உறவு கொண்டாய். இன்றும் நான் உன்னோடு ஒன்றவில்லை! ஆணவத்தின் பிடியிலிருந்து நான் இன்னும் முற்றாக விடுதலை பெற வில்லையே! அதனால் நீ கூறும் புத்திமதிகள் செரிமான மாவதில்லை! ஆணவம் என்னையும் விஞ்சி முந்திரிக் கொட்டை மாதிரி மூர்க்கத்தனமாக ஆட்டம் போடுகிறது. என்னுடைய ஆணவச்செயல்களைக் கண்டு கோபிப்பாய் என்று உன்னையே கருவறைக் காவலில் வைத்திருக்கிறோம்! அன்று நான்முகன் தலையில் ஒரு குட்டுப் போட்டாயே! அதே போல் இன்று என்னை ஆட்டிப் படைக்கும் ஆணவத்தின் தலையில்குட்டுப் போடு! அதுவே வழி! இறைவா, சீக்கிரம் போடு.*

## ஏப்ரல் 1

### இறைவா, ஆகாயம்போல் என் வாழ்வினை உயர்த்துக!

*இறைவா, ஆகாயம் எவ்வளவு அற்புதமான பொருள்; ஒலி–ஒளி இரண்டையும் பிரதிபலித்துத் தரும் ஆற்றலுடையது ஆகாயம். இறைவா, என்னிடம் ஆகாயத்தின் ஆற்றல் இம்மியும் இல்லையே. யாதொன்றையும் பிரதிபலிக்கத் தெரிய வில்லையே. வெறும் பிண்டமாகக் காலம் கழிகிறது. இறைவா, ஐம்பூதங்களில் ஆகாயம் உயர்ந்து விளங்குவது போல் நான் விளங்க அருள் செய்க!*

*தூய்மை, பொதுமை, வாங்கும் சக்தி, உரிமைப்படுத்திக் கொள்ளத்துறவு, மண்ணகத்துயிர்களை ஓசையால், ஒலியால், உறவுகள் உண்டாக்கி இயக்கும்நிலை – இன்னோரன்ன இயல்புகள் வாழ்வியலுக்கு இன்றியமையாதன.*

*இறைவா, இந்த இயல்புகளை எனக்குத்தா! நான் மன்னுயிர்த் தொகுதிக்கெல்லாம் ஆதாரமாக வாழும் அருளைப் புரியாய்! நின் திருவருள் என்னை உயர்த்தாவிடில் வேறு எப்படி உயர்வது இறைவா? நின் கருணையைப் பொழி, ஆகாயம் அளவுக்கு உயர்த்து இறைவா!*

## ஏப்ரல் 2

### ஓய்வில் சுகங்காணாது உழைப்பில் சுகங்காண ஆசை, இறைவா அருள் செய்க!

*இறைவா, காற்று, உயிரின் காற்று. இறைவா, "வளி வழங்கு ஞாலம்" என்று புகழப் பெறும் காற்று. என்னே காற்றின் ஆற்றல்; ஓயாதொழியாது இயங்கும் காற்று. எனக்கோ நாள் ஒன்றுக்கு மூன்றில் ஒரு பங்கு கட்டாய ஓய்வு மாதிரி உறக்கம் கொடுந்திருந்தாலும் ஓய்வு போதவில்லை. வாரத்தில் ஒரு நாள் ஓய்வு வேண்டியிருக்கிறது! கட்புலனாகாத காற்றின் இயக்கத்தைப் போல் ஓயாது நான் உழைத்திட அருள் செய்க! காற்று, தன் திசையில் செல்லும்; தடைகள் ஏற்படின், தடைகள் நொறுங்கும். இறைவா, நான் எங்கே, குறிக்கோளை நோக்கிப் பயணம் செய்கிறேன்? இறைவா, இன்னொரு வேடிக்கை. எனக்குத் தேவைகளும் ஆசைகளும் குறிக்கோளாகிவிட்டன! தேவைகளும் ஆசை களும் குறிக்கோள்களா என்று எனக்கு என் புத்தியில் பட வை.*

*வரலாற்றின் திசையை மாற்றுவது, சூழ்நிலையை மாற்றுவது, மனித குலமே பயனடையக்கூடிய ஒப்பற்ற காரியங்களைச் செய்வது போன்றவைதான் குறிக்கோளாக இருக்க முடியும். எனக்கு என்று குறிக்கோள் தேவை. இறைவா, எனக்கு என்று தனி நடை தேவை! இறைவா, நான் பல்லவி, அனுபல்லவி பாட ஆசைப்படவில்லை. புதிய சுருதியில் புதிய பண்பாடவே ஆசை. அதுவும் ஓய்வில் சுகம் காணாது உழைப்பில் சுகம் காண ஆசை. உழைக்கவே ஆசை, இறைவா, அருள் செய்க!*

## ஏப்ரல் 3

### அக்கினிக் குஞ்சாக வாழ்ந்திட அருள் செய்!

*இறைவா, நெருப்பு-எரிசக்தி......! ஆகா! என்னே நின் அற்புதம்! நெருப்பு ஒளியாகி வாழ்விக்கிறது. எரிசக்தியாகப் பயன்பட்டு எண்ணற்ற பொருள்களைப் படைத்துத் தருகிறது. தூய்மைக் கேடான பொருள்களுடனும் கலந்து தூய்மைக் கேடுகளைக் களைந்து பயன்பாட்டுக்குக் கொண்டு வருகிறது.*

*இறைவா என் உடலிலும் நெருப்பின் ஒருகூறு இருக்கத் தான் செய்கிறது. ஆனால் என்ன பயன்? இறைவா! உண்ட உணவைச் செரிக்கவே, ஆயிரம் பாடு. மருந்து மாத்திரைகள்.*

*இறைவா! இந்த உலகிலே தூய்மைக் கேடுகளை நாளும் உருவாக்குபவனே நான் தான். இறைவா, என்னை மன்னித்து விடு! அக்கினியைப் போல ஒளி படைத்த உடலினைத்தா. படைப்பாற்றல் மிகுதியும் உடைய மனிதனாக நான் வாழ அருள் செய்! தூய்மைக்கும் அழகுக்கும் தொண்டு செய்ய என்னை ஆளாக்கு. இறைவா, நான் ஒரு அக்கினிக்குஞ்சாக வாழ்ந்திடத் திருவுளம் பற்றுக!*

# ஏப்ரல் 4

## தண்ணீர்போல் மன்னுயிர்க்குப் பயன்பட்டு வாழ அருள் செய்!

*இறைவா! தண்ணீர் எவ்வளவு அருமையான பெயர். தண்ணென்ற தண்மை அளிப்பது தண்ணீர். உயிர்க்குலம் அனைத்தும் உயிர்ப்புடன் தழைத்து வளரத்துணையாயிருப் பது தண்ணீர். இறைவா, தூய்மைக் கேடுகளை நீக்கித் தூய்மை செய்யவும் தண்ணீர் பயன்படுகிறது. இறைவா, "நீரின்றமையாது உலகு" என்ற திருவள்ளுவர் வாக்கு அப்படியே உண்மை இறைவா.*

*இறைவா, தண்ணீரை நோக்க நோகக நான் மிக மிக அற்பமாகத் தோன்றுகின்றேனே. இறைவா, நான் தண்ணீரை விட உயர்ந்தவன்தான். ஆனால், செயலில் என்னிடம் தண்ணளியில்லையே, பசுமையான எண்ணங்கள் இல்லையே. ஏன் இறைவா? நான் முதலில் தண்ணீரைப் போல் ஈரநெஞ்சுடன் வாழ அருள் செய்க; எங்கும் எதிலும் பசுமையைக் காணும் ஆர்வத்தினைத் தந்தருள் செய்க!*

*தூய்மை! அகத்திலும் தூய்மை, புறத்திலும் தூய்மை காத்திட வரம் தா! தூய்மையே அருள் நிலை. இறைவா, நான் தண்ணீரைப்போல் மன்னுயிர்த் தொகுதிக்குப் பயன்பட வாழும் வரத்தினைத்தா!*

## ஏப்ரல் 5

## மன்னுயிர் அனைத்தையும் தழுவி நிற்கும் வாழ்வினை அருள்க!

இறைவா, எனக்குப் பகுத்தறிவு தந்தருளினை ஆதலால், நான் அஃறிணைப் பொருள்களை விட உயர்ந்தவன் என்று தம்பட்டமடித்துக் கொள்கிறேன். ஆம்! உண்மை.

உயிர்த் தொகுதியனைத்தும் தாங்கி வளர்த்து வாழ் விக்கும் நிலத்திற்கு நான் ஈடு ஆவேனா? நிலம் மக்கள் வாழ்வுக்குப் பயன்படுமாறு போல வேறு எது பயன்படுகிறது? கழிவுப் பொருள்களைத் தன்மடியில் வாங்கிக் கொண்டு, பின் படைப்பாற்றல் மிக்க உரமாகத் தருகிறதே! என்ன அற்புதம்! நிலம், அதனைக் கொத்தினாலும் வெட்டினாலும், உழுதாலும் சினங் கொள்ளாது. மாறாக, நன்மையையே தருகிறது. இறைவா, நானோ கழிவுப் பொருள்களைக் கழிக்கவே முயலுகிறேன். உடன்பாடிலாத மனிதனை ஒதுக்கவே முயலுகிறேன்.

அம்மம்ம! இறைவா, நான் என்னையே சுற்றுகிறேன். நிலம், வானவெளியில் சுற்றுகிறது. எனக்கும் பகுத்தறிவு இருந்து என்ன பயன்? இறைவா. என் வாழ்க்கை பயன் பாடுடையதாக வளர அருள் செய். மன்னுயிர்த் தொகுதி அனைத்தையும் தளுமுவி நிற்கும் வாழ்க்கையை அருள் செய்க!

## ஏப்ரல் 6

### ஞாயிற்றைப் போற்றி அதன்வழி இயங்கி மானுடமாகும் மாட்சிமை யருள்க!

*இறைவா! கதிரவன்....! ஆற்றல் மிக்க ஒளிக்கற்றைகளை உடைய கதிரவன்! குகைகளிலும் ஊடுருவும் கதிரொளி. இறைவா! இந்த ஞாயிற்றொளியில்தானே உயிர்க்குலம் தோன்றி வளர்ந்து, தழைத்து வாழ்கிறது! இறைவா, நானும்தான் ஞாயிற்றைத் தொழுகிறேன். தொழுது என்ன பலன்? ஞாயிற்றின் காலக் கடைப்பிடியும்-சுற்றித் திரிதலும் என்னால் இயலவில்லையே!*

*ஞாயிற்றொளி கண்டால் ஞாலமே சிரித்து மகிழ்கிறது. மலர்கள் விரிந்து மணம் பரப்புகின்றன; புள்ளினங்கள் பாடு கின்றன. இறைவா! நான் கிடந்தாலும் எழுந்தாலும் எனக்கு மகிழ்ச்சியைக் காணோம். என்னைச் சுற்றியிருப்போருக்கும் மகிழ்ச்சியைக் காணோம்!*

*இறைவா, என்னை ஞாயிற்றின் மாணாக்கனாக்கு! படைப்பாற்றல் உடைய மானுடனாக்கு. ஞாயிற்றுக்கு, என்னை வளர்க்குமாறு ஆணையிடு. ஞாயிற்றைப் போற்றி அவ்வழி வளர்ந்து நின் அடிபோற்றப் பணித்திடு, இறைவா!*

கு. X. 8.

## ஏப்ரல் 7

## இறைவா! நீயாக அருளிச் செய்தால் எதுவும் நன்றாக அமைந்திடும்!

*இறைவா! தண்ணிலவு பொழிகிறது. எவ்வளவு தண்மை. தண்ணிலவு, உயிர்களிடத்தில் எழுப்பும் உணர்வுக் கிளர்ச்சிகளை ஏட்டில் எழுத இயலுமா? இறைவா! தண்ணிலவுக்கு இந்த ஆற்றல் எப்படிக் கிடைத்தது? நின் முடியைச் சார்ந்ததனால்தானே? அது மட்டுமல்ல, இறைவா! ஒளிக்கதிர் அனைத்தும் கதிரவன் தந்தது. இறைவா, சேர்வாரோடு சேர்ந்தால் அனைத்தும் நன்றாக நிகழும்.*

*இறைவா, எனக்கும் உன்முடியில் இடம் கொடுக்கக் கூடாதா? கேட்டவர்களுக்குத்தான் உன் முடியா? இறைவா, நீயாக இடம் அருளிச் செய்தால் எதுவும் நன்றாக அமையும். நானாகக் கேட்டால் அது நன்மையாக அமையாது. நான்முகன் முடி தேடினான். முடிந்ததா, என்ன? முடிவு, குடியிருக்கக் கோயில் இல்லாது போனான். அதனால் இறைவா, நான் கேட்கவில்லை, நீயாக அருள் செய்!*

*இறைவா, நின் முடியினும் நின் தாள்கள் ஆற்றலுடையன. நின் தாள்களிலேயே மூவுலகும் முகிழ்த்தன. நின் தாள்களிலேயே இசையும் கூத்தும் அடங்கியுள்ளன. நின் தாள்களே மரணமிலாப் பெருவாழ்வு தருவன.*

*ஆதலால் இறைவா, நின் திருவடிகளை நினைந்து நினைந்து வாழ்ந்திட அருள் செய்! நின் திருவடிகளை என் இதயத்தில் பதித்து வை. இறைவா, நான் ஏழேழ் பிறப்புகளிலும் நின் திருவடி பதிந்த நெஞ்சுடன் வாழ அருள் செய்க!*

## ஏப்ரல் 8

### பொறுத்தாற்றும் பண்பினை, புண்ணியனே நீ அருள்க!

*இறைவா, அடியார்கள் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்தருளிய புண்ணியனே! எனக்கும் பொறுத்தாற்றும் ஆக்கப் பண்பினை அருள் செய்க! யார் என்ன செய்தால் என்ன? குடி முழுகி விடவா போகிறது?*

*இறைவா, பரபரக்காத நிலையினை அருள் செய்க! மனிதர்களைப் பற்றி விரைந்து முடிவு செய்யா உயர் நிலையினை அருள் செய்க! வரவரக் கண்டு ஆராய்கின்ற உள்ளத்தினைத் தா.*

*பிறர் செய்யும் குறைகளைப் பொருட் படுத்தாது வாழும் நிலையினை அருள் செய்க! பிறர் குற்றம் காணாது அவர்தம் நிறையினையே கண்டு பாராட்டும் பெருந்தன்மை யினைத் தந்தருள் செய்க! அறியாமல் ஆயிரம் பேசுவார்கள். இழப்புகளும் வரும், துன்பங்களும் வரும். எல்லாவற்றையும் பொறுக்கும் ஆற்றலினை நல்கி அருள் செய்க!*

*எல்லாவற்றையும் பொறுத்து ஏற்றுக் கொண்டு திடமனத்துடன் வாழ்வில் நடைபோட அருள் பாலித்திடுக! பொறுத்தாற்றும் பண்பே எனது உயிர்ப் பண்பாக ஏற்று ஒழுகும் ஆற்றலை அருள் செய்க!*

## ஏப்ரல் 9

### அன்னையின் அருள் பெற, ஐயனே அருள் செய்க!

*இறைவா, உமையொரு கேள்வனே, அன்னை மீனாட்சி ஆட்சி செலுத்த அருகிருந்த ஐயனே, பெண்மையைப் பெருமைப்படுத்தியவனே. உன்னை நாள்தோறும் வணங்கும் இந்த உலகம் பெண்களைக் கொத்தடிமைகளாக, போகப் பொருள்களாக நடத்துகிறதே. இச்செய்கை அறமா? புண்ணியம் தரத்தக்கதா? எடுத்ததற்கெல்லாம் ஒருவனைப் பழிக்க "மதுரை" என்று பரிகாசம் செய்கிறார்கள். தோப்புக் கரணம் போடுவதாகக் கூறுகிறார்கள்.*

*இறைவா, அன்னையின் திருவடிகளில் பிறைச் சந்திரன் ஒளிவிழுகிறதாம். கொன்றை மணம் கமழ்கிறதாம். இதற்கு என்ன பொருள்? நீயே என் அன்னையை நிலத்தில் வீழ்ந்து வணங்கியிருக்கிறாய். ஆம், இறைவா, நீ சொல்வது முற்றிலும் சரி. சக்தியைச் சரணடைதல் வாழ்வதற்கு வழி.*

*இந்த உலக இயக்கமே சக்தியினால் இயங்கும் இயக்கம். பெண்-சக்தி! அவள் படைக்கும் உணவினால் உடல் ஆற்றலையும், வழங்கும் உணர்வினால் ஊக்கத்தையும், அணைப்பினால் உயிர்க்கு மகிழ்ச்சியையும், அரவணைப்பி னால் ஆறுதலையும் வழங்கி வாழ்விக்கிறாள்.*

*அன்னையைப் போற்றுவோம், ஆற்றலைப் பெறு வோம். அயரா அன்பினைப் பெறுதலே உயிரின் நோக்க மாகும். ஊக்கத்தினைப் பெறுவோம். இறைவா அன்னையின் கடைக்கண் அருளுக்குப் பரிந்துரை செய்தருளுக!*

## ஏப்ரல் 10

### கொண்டும் கொடுத்தும் வாழ்ந்திடும் பண்பினை அருள்க!

*இறைவா, ஆலமே அமுதமாக உண்டருளும் உத்தமனே. நான் வயிறு நிறைய உண்கிறேன். உண்டு முடித்தபிறகு சற்று நிமிர்ந்து "போதுமா" என்று ஒரு தடவை வயிற்றைக் குலுக்கிச் சரிபார்த்துக் கொள்கிறேன். ஆனால், இறைவா! உடலார நிறைவு பெற்ற உழைப்பினை நான் செய்வதில்லை.*

*இறைவா, முழுமையான பயன் தரத்தக்க உழைப்பினை மேற்கொள்ள அருள் செய்க! மற்றவர் உழைப்பின் பயனை அனுபவிக்கிறேன். இதனால் அவர்களுடைய உழைப்பு நடிப்பல்ல என்று தெரிகிறது. ஆனால், என் உழைப்பின் பயனை யாராவது அனுபவிக்கிறார்களா?*

*இறைவா! கொண்டும் கொடுத்தும் இயங்குவது வாழ்க்கை. நான் கொள்ளவே ஆசைப்படுகிறேன். கொடுப்ப தற்கு ஆசைப்படுவதில்லை. இறைவா, கொள்வதில் மன நிறைவு ஏது? மகிழ்ச்சி ஏது? கொடுப்பதில்தான் மனநிறைவு, மகிழ்ச்சி இருக்கிறது.*

*என் உழைப்பு, மற்றவர்கள் வாழ்க்கைக்கு உதவியாக அமைதல் வேண்டும். மற்றவர்களின் மகிழ்ச்சி நிறைந்த வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளிக்க வேண்டும். இத்தகைய சீர்பெற்ற, உழைத்து வாழும் பண்பினை, அருள் செய்க! குறிக் கோளைக் குறிவைத்து அடையும் குறைவிலா உழைப்பே எனக்குத் தேவை. உழைத்தே உயிர் வாழ ஆசை. இறைவா, அருள் செய்க! ஐந்தொழில் நிகழ்த்திடும் முதல் உழைப் பாளியே! அருள் செய்க!*

## ஏப்ரல் 11

### காலமறிந்து தொழிற்பட அருள் செய்!

இறைவா! காலதத்துவத்தைக் கடந்த தேவதேவனே! இறைவா, உனக்குக் காலமில்லை. ஆனால் இறைவா, எனக்கு எல்லாமே காலமாக வல்லவா இருக்கிறது. நான் கால தத்துவத்திற்கு உட்பட்டவன். கால தேவதை வினாடி, வினாடியாக என் வாழ்க்கையைக் கொள்ளையடித்துக் கொண்டே இருக்கிறது. ஆனால், நானோ "இன்று நன்று; நாளை நன்று" என்று பொழுதைக் கழித்துக் கொண்டிருக் கிறேன். இறைவா, என் காலத்தைக் களவாடும் கள்வர்கள் மிகுதி. அவர்களிடமிருந்து என் காலத்தைக் காப்பாற்றிக் கொள்ள அருள் செய்க!

காலம் அற்புதமானது. ஓயாது சுழல்வது, இயங்குவது. ஆனால், அதன் சுழற்சியில் நான் கலந்து கொள்ளாது போனால் தங்கிவிடுவேன். இளமையைத்தரும் காலத்தை நான் போற்றிட அருள் செய்க! காலமறிந்து தொழிற்பட அருள்செய்க! காலம் காலமாக வாழ்ந்திடும் பயன் தரும் உழைப்பைக் காலமறிந்து செய்யக் கற்றுத் தருக.

காலம் ஓடுகிறது! நான் வார்த்தைகளைத் தடவித் தேடி உன்னை நோக்கிப் பிரார்த்தனை செய்து கொண்டிருக் கிறேன். இறைவா என் பிரார்த்தனையை உழைப்பாகவும் செலுத்தலாம். இறைவா, நீ உலகாக நிற்கிறாய். நின் உலகத்தைப் பாதுகாப்பதே வழிபாடு, வாழ்க்கை. கால காலனே, காலமறிந்து வாழ்ந்திட அருள் செய்க!

## ஏப்ரல் 12

### உன்னையே நம்பும் உயர் வாழ்க்கையினை அருள்க!

*இறைவா, நம்பிக்கைக்குரிய எம் தலைவா! ஆனால் நான்தான் உன்னை நம்புவதில்லை! இறைவா, "நம்பினோர் கெடுவதில்லை; நான்கு மறை தீர்ப்பு" என்பது என் வாழ்க்கையின் நியதியாக இடம்பெற அருள் செய்க!*

*என்னிடத்தில் எனக்கு நம்பிக்கை முதலில் வேண்டும். நான் மானிடன். வெற்றிபெறக்கூடிய மானிடன். நான் வாழ் கிறேன், வாழ்ந்து கொண்டிருக்கிறேன், வாழப் போகிறேன் என்ற நம்பிக்கையை அருள் செய்க! திடமாக உன்னையே நம்பும் வாழ்க்கையினை அருள் செய்க!*

*ஒரு பொழுது உன்னை நம்புகின்றேன், எண்ணு கின்றேன். மறுபொழுது ஜோசியரிடம் ஓடி அலைகின்றேன். கழுவாய் செய்கின்றேன். இறைவா, இவையெல்லாம் வேடிக்கையாக இல்லையா? இந்த வேடிக்கை போதும். நான் உளேன். நான் ஒரு மானிடன். உன்னுடைய அடிமை. எனக்கு இங்கென்ன குறை? நின் திருவடிகள் தாங்குந் தகையன.*

*நான் தளராது உழைக்கும் கடமை பூண்டவன். இந்த நிலைமைக்கு அருள் செய்வாயாயின் இன்பமே எந்நாளும் துன்பமில்லை. இறைவா, அருள் செய்க! நின்னையே நம்பிச் சரணடைதலைக் கற்றுத் தா. நம்பிக்கையே வெற்றியின் அடிப்படை; நம்பிக்கையே உறவுகள் சங்கமிக்கும் இடம். அருள் செய்க!*

## ஏப்ரல் 13

## அதிகாரம் வேண்டாம், நின் அடியவர்க்குத் தொண்டு செய்யும் வாழ்க்கையினை அருள்க!

*இறைவா, தனக்குவமையில்லாத தலைவா! நீயே தலைவன். அரசர்கள் கூட முழுத் தலைவர்களல்லர். ஏன்? அரசுகள் அதிகாரத்தையே மையமாகக் கொண்டு தோன்று கின்றன. அதிகார அடிப்படையில் தலைமை உருவாவ தில்லை என்ற பாடத்தினைக் கற்றுத் தா.*

*இறைவா, மக்களின் முதற் சேவகனாக வாழ்பவனே தலைவன். இறைவா, நீயே இல்லங்கள் தோறும் சேவகனாக எழுந்தருளி அருள் பாலித்திடும் அற்புதத்தை என்னென்பேன்?*

*இறைவா, மது போதையிலும் கொடிய போதையான அதிகாரம் எனக்கு வேண்டாம். வேண்டவே வேண்டாம். இறைவா அருள் செய்க! தனி முடி கவித்து ஆளும் அரசே யாயினும் வேண்டாம். உயிர்க்குலத்திற்கு ஆட்பட்டுத் தொழும்பாய்க் கிடந்து தொண்டு செய்யும் இனிய வாய்ப் பினை அருள் செய்க!*

*நின் அடியார்களுக்கு அடிமையாகத் தொண்டு செய்யும் வாழ்க்கையினை அருள் செய்க! உனக்குப் பணி செய்ய–எந்நாளும் பணி செய்ய வரம் தா. மனக் கவலை நீக்கு கின்ற தென்மதுரை அரசே! மனக் கவலையை வளர்க்கும் அதிகாரத்திலிருந்து என்னை விடுதலை செய்.*

*மனக்கவலையை மாற்றும் தூய தொண்டு நெறி சார்ந்த வாழ்க்கையினை அருள் செய்க! அதிகாரம் எனக்கேது? ஏன் வேண்டவே வேண்டாம். நின் திருவடிக்கு அன்பலாது வேண்டேன்? அருள் செய்க!*

## ஏப்ரல் 14

### இறைவா, நின் அருளைப் பெறுவதற்கு அழக் கற்றுக்கொடு!

*இறைவா, நின் அருள் கனியத் தாமதம் ஏன்? காலம் தாழ்த்துவது ஏன்? நின்னருளுக்குப் பாத்திரமாகும் பேறு எனக்கு இல்லையா? கல்லைப் பிசைந்து கனியாக்கும் வல்லாளன் நீ. நினக்கு அரிது எது? என்னைத் தகுதி யுடையனாக்குதல் உனக்கு எளிது.*

*நரியைப் பரியாக்கிய நாயக! வித்தின்றியே விளைவு செய்யும் வித்தக! என்னை நின் தாளுக்குரிய பாத்திர மாக்குவது எளிது. ஆனால் நீ, அந்நியன் போல நடக்கிறாய். பழைய ஆவணத்தை மறந்து விட்டாய். "நீ ஆண்டான், நான் அடிமை" என்ற உடன்பாட்டா வணத்தை மறந்துவிட்டு அருள் செய்யக் காலம் கடத்துகிறாய். இறைவா, நின்அருள் பெறாதொழியின் என் ஆவி தரியேன். இறைவா, அருள் செய்க!*

*இறைவா, நின்னருள் பெறுதற்குத் தடையாக இருக்கும் அறியாமையை அகற்றுக. ஞானதீபத்தினை என் அகத்தினில் ஏற்றுக. 'யான்', 'எனது' அற்ற நிலையை அருள் செய்க. நின் சிவம்பெருக்குந் திருவடி என் தலைமேலாக இருக்க அருள் செய்க! என்னை நான் நாள்தோறும் மெய்யுணர்வு நிலையில் வளர்த்துக் கொள்ளும் வாயில்களை அருள் செய்க! நான் சூழ்நிலையின் அடிமையாகி விடாமல் சூழ்நிலையை எதிர்த்துப் போராடும் உரத்தினை அருள் செய்க!*

*நான் அழுதால் உன்னைப் பெறலாம். நான் அழ முடியவில்லையே. நான் பொய்ம்மையாக நடிக்கிறேன். என் நெஞ்சே, பொய்ம்மையின் இருப்பிடமாகிவிட்டது. நான் காட்டும் அன்பு பொய்யானது. ஆயினும் என்ன? நான் அழுதால் உன்னைப் பெறலாம். இறைவா, எனக்கு அழக் கற்றுக் கொடு.*

## ஏப்ரல் 15

### விட்டுக் கொடுத்து வாழும் பண்பினை அருள் செய்க!

இறைவா, ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே, ஒருவரை ஐயமற நம்புதல் வேண்டும். வழக்காடும் வம்புள்ளத்தினைத் துறத்தல் வேண்டும். இறைவா, என்னைச் சுற்றியிருப்பவர்களை நம்பும் நட்புப் பாங்கினை அருள் செய்க! சந்தேகம் என்ற தவறான மனக் குற்றத்திலிருந்து நான் முற்றாக விடுதலை பெற வேண்டும். இறைவா, அருள் செய்க!

நான் ஒரு செய்தியை, விவகாரத்தைப் பேசிமுடிக்க உட்காரும் பொழுதே சந்தேகத்துடன் உட்கார்ந்தால் எப்படி உளமார்ந்த விவாதம் இருக்க முடியும்? இந்தச் சூழ்நிலையில் மனங்கலந்த பேச்சுக்கூட வராதே! பாதிச் சிந்தனைகள் அடிமனத்தில் புதைந்து போகுமே. இறைவா, இந்தக் கொடுமையிலிருந்து என்னை மீட்பாயாக.

உள்ளத்தில் உள்ளதைப் பேசும் பாங்கினைத் தா. மற்றவர் கூறுவதை உள்நோக்கம் இல்லாது திறந்த மனத்துடன் கேட்கும் பாங்கினை அருள் செய்க! இறைவா, என்னை நானே காப்பாற்றிக் கொள்ளும் மனப்பான்மை-தீமையானது. என்னை, என்னைச் சார்ந்தவர்கள்தான் காப்பாற்ற வேண்டும். இவ்வண்ணமே அருள் செய்க!

வழக்காடும் போக்கு எனக்கு வேண்டாம். சமாதானமே என் வாழ்வின் இலட்சியமாக ஏற்க அருள் செய்க. விட்டுக் கொடுத்து வாழும் பேற்றினை அருள் செய்க! கொண்டும் கொடுத்தும் கூடிக் கலந்து வாழும் நிறை வாழ்வை அருள்செய்க!

## ஏப்ரல் 16

### என் கருத்தை மற்றவர் கருத்தாகப் பதியம் போட்டுக் காட்டும் போக்கு மாறிட அருள்க!

*இறைவா, உய்யும் நெறியில் உய்த்துச் செலுத்திடும் தலைவா! உய்த்துணரும் திறன் எனக்கு வேண்டும். உய்த்துணரும் திறன்–ஊகித்தல்–மற்றவர் மனம் பற்றிய கற்பனை இவை தம்முள் மாறுபட்டன. மற்றவர் மனக்கருத்து பற்றிக் கற்பனை செய்வது தவறு. இது உறவைக் கெடுக்கும். இறைவா, இந்தக் கற்பனை எனக்கு வேண்டாம். அதுபோலவே மற்றவர்களைப் பற்றி மற்றவர்களின் கருத்தினைப் பற்றி ஊகித்தலும் குற்றமே. இந்த ஊகம் மற்றவர்களைப் பற்றிய உண்மையான மதிப்பீடாக இருக்காது. என் கருத்தையே மற்றவர் கருத்தாகப் பதியம் போட்டுக் காட்டும் முயற்சியே இது. இந்த மாபெரும் தவறை நான் செய்யாமல் என்னைக் காப்பாற்று.*

*இறைவா, எப்படியும் உறவே முக்கியம். அப்புறம்தான் கொள்கை கோட்பாடுகளெல்லாம். இத்தகைய சால்பு நிறைந்த உறவினை நான் எல்லாரிடத்திலும் பாதுகாத்துப் பராமரிக்க வேண்டும் என்ற உணர்வினைத் தந்தருள் செய்க!*

*மற்றவர்களுடைய விருப்பார்வங்களை உய்த்தறிந்து நிறைவேற்றும் கடமைப் பாங்கு நிறைந்த வாழ்வை அருள் செய்க! எனக்கு எண்ணற்ற ஆர்வங்கள், ஆசைகள். இவ்வளவும் மற்றவர்களுக்கும் இருக்கும் என்ற சராசரி மனிதனுக்குரிய நம்பிக்கையை அருள் செய்க!*

*மற்றவர் நலனுக்குரியவற்றை நான் உய்த்தறிந்து செய்யும் கடப்பாட்டில் நிற்க அருள் செய்க! மற்றவர் மகிழ்வை, என் மகிழ்வெனக் கொள்ளும் பெருவாழ்வினை அருள் செய்க!*

## ஏப்ரல் 17

### மானுடத்தை வாழ்விக்கும் முயற்சியில் அயர்விலாது ஈடுபட வாழ்த்து!

இறைவா, எனக்குத் தெளிவு ஏற்படும்படியாகச் சொல்ல வேண்டும். இறைவா, "நான்" அருமையான பொருளா? பொன்னும் மணியும் தானியங்களும் அருமையான பொருள்களா? இறைவா, உண்மையைச் சொல். உனக்கு எது விருப்பம்?

இறைவா உனக்கு உயிர்கள் மீதுதான் விருப்பம். இறைவா அப்படியா? நான் தப்பிப் பிழைத்தேன். ஆனால் இறைவா, உனது பக்தர்கள் உனக்குப் பொன்னாலும் மணியாலும்தானே ஆராதிக்கிறார்கள்! தங்கத் தேர்தானே செய்கிறார்கள்!

நாட்டில் வறுமைக் கோட்டிற்குக் கீழ், கோடானு கோடி மக்கள். செல்வ ஆசையால் காதல் வாழ்க்கை கொலைக்களமாகிறது. செல்வப் போட்டியில் உயிர்கள் பணயங்களாகின்றன. இன்று மானுடத்தின் மதிப்பு உலகச் சந்தையில் இறங்குமுகம். ஒரோவழி மதிப்பு இருப்பதுபோல் இருந்தால் அது விளம்பரம். அந்த விளம்பரமும் இந்த நூற்றாண்டின் மனிதனுக்கல்ல. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்த நாகரிகத்தின் பாதுகாப்பாளனுக்கு.

இறைவா, என்னைக் காப்பாற்று, நான் உன்னைத் தேடி வரவில்லையே என்று எண்ணாதே. மானுடத்தைத் தேடிப் போகிறேன். மானுடத்தை மதிப்புடையதாகச் செய்யும் முயற்சியில் எனக்கு ஆவேசம் கொடு. மானுடத்தை வாழ்விக்கும் முயற்சியில் அயர்விலாது ஈடுபட வாழ்த்து. சோர்ந்து நிற்கும்பொழுது திறனைத் தந்து அருள் செய் இறைவா!

## ஏப்ரல் 18

### வையகம் பயனுறத் தக்கவாறு வாழ அருள் செய்க!

*இறைவா, உன் திருவிளையாட்டில் எத்தனை ஒழுங்குகள். முறைபிறழாத நிகழ்ச்சிகள். இறைவா, என் வாழ்விலும் ஒழுங்குகள் அமைந்து விளங்கும்படி கருணை பாலித்திடுக!*

*இறைவா, இயற்கையில் விளங்கும் வாழை மரத்தைப் பார்க்கிறேன். எவ்வளவு ஒழுங்காக கோணல் - வளைவு இன்றி வளர்ந்திருக்கிறது. இறைவா. என்னுடைய வளர்ச்சியில் எவ்வளவு கோணல். சாயும் நாற்காலியின் தயவால் கூன் விழவில்லை. அந்த ஒழுங்குபட்ட அழகு என்னிடம் இல்லையே.*

*இறைவா, வாழை மட்டைகள் ஒழுங்குபட, ஒழுங்குற அடுக்கி வைத்தாற்போன்ற அமைவு. நாங்கள் பல பேர் அப்படி அமைவுறத் தழுவிய நிலையில் ஒழுங்கமைவுடன் வாழக் கற்றோமில்லையே.*

*இறைவா, வாழையின் பயனாகிய காய்கள் ஒழுங்குற அடுக்கடுக்காக அடுக்கி வைக்கப் பெற்ற நிலையில் உள்ளன. என் பணிகளை இப்படி அடுக்கிப் பார்க்க முடிய வில்லையே. இறைவா, வாழைமரம் முழுதும் பயன்படுகிறது. பயன்படாப் பகுதி வாழை மரத்தில் இல்லை. நான் எங்கே முழுமையாகப் பயன்படுகிறேன்? இறைவா, ஏன் இந்த நிலை?*

*இறைவா, நான் என் உடலை, உணர்வை ஒழுங்கமைவுடன் வைத்துக் கொள்ள அருள் செய்ய வேண்டும்! இறைவா, என் வாழ்க்கை முழுதும் வையகம் பயனுறத் தக்கவாறு வாழ அருள் செய்ய வேண்டும்! இது என் பிரார்த்தனை. இறைவா, அருள் செய்க!*

## ஏப்ரல் 19

### உயிர்க்குலத்தின் பிணி போக்க என்னைப் பணி கொள்க!

*இறைவா, பச்சிலைகள் பசுமையாக விளங்குகின்றன. கிடைத்த இடத்தில் கிடைத்த வசதிகளைக் கொண்டே வளர்கின்றன. உயிர்க் குலத்தின் பிணி தீர்க்கும் மருந்து களாகவும் விளங்குகின்றன. இறைவா, என்னிடத்தில் பசுமை எங்கே இருக்கிறது? கண் பார்வையில் வெறுப்புக்கனல். வாய்ச் சொற்களோ இனிமைப் பண்பிற்கு மாறுபட்டன. இதயத்திலோ பகைப்புகை. மூளையிலோ செருக்கு. உடலோ பிணிகளின் கொள்கலன். ஏன், இறைவா இந்த அவல நிலை?*

*ஓரறிவுயிராகிய செடிகளின் பயன்பாடுகள்கூட ஆறறிவு உள்ள என்னிடம் இல்லையே. இறைவா, என்ன சொன்னாய். ஆறாவது அறிவு எனக்கில்லை என்கிறாயா? அப்படியானால் இறைவா, நான் மானிடன் இல்லையா? இறைவா, நான் பிறப்பில் மானிடன். வாழ்நிலையால் இழிபிறப்பு என்கிறாயா?*

*இறைவா, என்னை எடுத்தாள். மானிடனாக வாழவை. அறிவு நலன்களைத் தா. இறைவா, நின்னை யறியும் அறிவைத் தா. என் கண்களுக்குக் குளிர்ந்த பார்வையைக் கொடு. இனிய சொற்களையே என் வாய் பேசட்டும், என் இதயத்தில் அன்பு சுரக்கட்டும்.*

*இறைவா, உயிர்க் குலத்தின் பசிப்பிணியை, உடற் பிணியைப் போக்கும் பணியில் ஈடுபடுத்து! பணி கொள்! இறைவா, என்னைப் பணி கொள்! வாழ்வாங்கு வாழ வாழ்த்து.*

## ஏப்ரல் 20

### நெஞ்சமெனும் சிற்றம்பலத்தில் நீ நின்று ஆடவேண்டும்!

*இறைவா, இடுகாட்டெரியாடல் அமர்ந்தருள் இறைவா, நீ மகிழ்ந்தாடும் இடம் சுடுகாடு. எந்தச் சுடுகாடு? ஊழிப் பெருங்காலத்தில் இந்த உலகம் முழுவதும் பற்றி எரியும் சுடுகாடு. 'யான்', 'எனது', என்று மயங்கிப் போராடிய தேவர்களும் மனிதர்களும் அழியும் சுடுகாடு. தனி ஒருவனாக நீ நின்றாடும் நிலை இது.*

*இறைவா, நீ ஏன் என் மனத்தில்-நெஞ்சகத்தில் நின்றாடக் கூடாது? இறைவா, என் நெஞ்சில் நின்றாட விருப்பந்தானா? ஆனால் என் நெஞ்சு சுடுகாடு ஆகவேண்டுமே. இறைவா, என் நெஞ்சத்தை, நீ உவந்தாடும் சிற்றம்பலமாக்க அருள்செய்க!*

*விருப்பு, வெறுப்புகளைச் சுட்டுப் பொசுக்கும் தூய துறவுள்ளத்தினை அருள் செய்க! வேண்டுதல், வேண்டாமை என்ற நிலைகளைச் சுட்டெரிக்கத் திருவுள்ளம் பற்றுக. ஆணவம், வறுத்த வித்தென அடங்கிக் கிடக்க அருள்செய்க! என் நெஞ்சம் எனும் காட்டை வெட்டித் திருத்தி நிலமாக்கி வைத்துப் பின் நீ நின்றாடுவாய்.*

*என் நெஞ்சத்தைச் சிற்றம்பலமாக்குவதே என் வாழ்க்கையின் குறிக்கோள். என் நெஞ்சத்தில் நீ நின்றாடுதல் வேண்டும். நானும் மகிழ்ந்து ஆடவேண்டும். என்புருகிப் பாட வேண்டும். என் தலையினை நின் திருவடிகளுக்கு அணியாக் கிடுதல் வேண்டும். நின் திருவடிகளை என் புன்தலைக்கு அணியாகச் சூடிக்கொள்ளுதல் வேண்டும். இறைவா, அருள் செய்க! இந்த வண்ணம் அருள் செய்க!*

## ஏப்ரல் 21

### தென்னையைப் போல் வாழ்வேன், என்னை நீ ஏற்றுக்கொள்.

*இறைவா, இயற்கையின் அற்புதங்களைப் பார்த்துப் பார்த்துப் படித்துக் கொண்டால் போதுமே, அழகுற வாழலாமே. இறைவா, தென்னை மரத்தின் வேரில் தண்ணீர் ஊற்றினால் தலையால் தருகிறது இளநீராக. ஆம், இறைவா, மனிதனின் கால்கள் நடக்கின்றன. மனித சமூகத்தின் நடப்பே வரலாறு. இந்த வரலாற்று நிகழ்வுகளை மூளையின் செயற் பாட்டால் பயனுடையதாக்கிக் கொள்வதுதானே வாழ்க்கை.*

*இறைவா, தென்னை எவ்வளவு விழிப்புணர்வுடன் தூய்மையைப் பயன்படு பொருளைப் பாதுகாத்துக் கொள்கிறது. மட்டை, நார், கொட்டாங்கச்சி என்றெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அமைந்து தேங்காயின் கருப் பொருளைக் காத்து நிற்கின்றன. இறைவா, அதுபோல நான் என் உயிரை, இல்லை உயிருக்கு உயிராக விளங்கும் உன்னைப் பத்திரமாகப் பாதுகாக்கவேண்டாமா? இறைவா, முக்குணங்கள் வசப்பட்டு நின்னை இழக்க மாட்டேன்.*

*இறைவா நின்னுடன் எனக்குஉள்ள உறவு தூய்மை யானது. உண்மையானது. ஊக்கம் அளிப்பது. அதை எப்போதும் பாதுகாப்பேன். என் உயிரை மடமையிலிருந்து – உறவு, பாசங்களிலிருந்து ஆணவத் திண்மையிலிருந்து மீட்டு உனக்கு அர்ப்பணிக்கின்றேன். இறைவா, என்னை ஏற்றுக் கொள்.*

## ஏப்ரல் 22

### தொண்டு எனும் தூய உழைப்பில் நின்று வாழ அருளுக!

*இறைவா, எருது உனக்குப் பிடித்தமானது எப்படி! எருது, கடுமையாக உழைக்கும் பிராணி. உழைப்பின் பயனை உயிர்க்குலம் வாழ அளிக்கும் பிராணி. இறைவா, நீ என் இதயத்தில் எழுந்தருள வேண்டும். நானும் எருது ஆக வேண்டும். ஆம்! இறைவா, உழைப்பில் சுகம் காணும் மனப் போக்கினைத் தந்தருள் செய்க! உழைத்தால் மட்டும் போதாது. அந்த உழைப்பின் பயனைப் பிறர்க்குரியதென அர்ப்பணிக்கும் மனம் வேண்டும். இந்த மனப்போக்குடன் உழைத்தலே தவம். இத் தவத்தினைச் செய்யும் நன் மனத்தினை அருள் செய்க!*

*கடுமையான உழைப்பு தவம். ஊருக்குழைத்தல் யோகம். மற்றவர் வாழவாழ்தல், அர்ப்பணிப்புடன் கூடிய வாழ்க்கை. இத்தகு புனித வாழ்க்கையை எனக்கு அருள் செய்க! கைத்திருத்தொண்டு செய்யப் பணித்திடுக. உயிர் நலமுற அருள் செய்க! ஒன்றி நிற்கும் கற்றறிவினைத்தருக. எனது புலன்களும் பொறிகளும் பணி செய்யும் பான்மையில் வளர வாழ்த்துக.*

*அன்பினில் பொறிகளைத் தோயச் செய்து புலன்களை நினதருளில் நனையச் செய்து தொண்டு எனும் தூய நெறியில் நிற்க அருள் செய்க! இதுவே என் பிரார்த்தனை. மன்றாடல். இறைஞ்சுதல்! இறைவா, அருள் செய்க! தொண்டெனும் தூய உழைப்பில் நின்று வாழ்ந்திட அருள் செய்க!*

கு-X-9.

## ஏப்ரல் 23

### சம நிலை உணர்வைத் தந்தருள் செய்க!

*இறைவா, உன் சந்நிதியில் தேங்காய் உடைக்கிறேன். நிவேதனம் செய்கிறேன். இறைவா, இவையெல்லாம் உன் விருப்பமா? அல்ல; உனக்குத் தேங்காய் தேவையா? இறைவா, இரண்டும் இல்லையென்பது எனக்குத் தெரிந்ததே... ஆயினும் இறைவா, ஏன் தேங்காய் உடைக்கிறோம்? இறைவா, அப்படியா, வாழ்க்கையில் இன்பம் எளிதாக வந்தமையாது.*

*எனது வாழ்க்கையை இன்ப வாழ்க்கையாக அமைத்துக்கொள்ள நான் கடுமையாகப் போராட வேண்டும். தேங்காய் எங்கும் காய்க்கிறது; எட்டடி உயரத்திற்கு மேல் உச்சாணிக் கொம்பில் காய்க்கிறது. அதுபோல இறைவா, எனது மன நிலைகளும் உயர்ந்தால்தானே உயர்வு கிட்டும்.*

*இறைவா, தேங்காய்க்குள் நார், மட்டை, கொட்டாங் கச்சி முதலியவைகளைத் தாண்டித்தான் அந்தச் சுவையான- சத்தான உணவுப் பொருள் இருக்கிறது. இறைவா, நான் விரும்பும், துன்பங்களையும் சோதனைகளையும் கடந்துதான் வரும்.*

*நான் ஏன் துன்பத்திற்கு அழ வேண்டும். உலையில் கொதிக்கும் அரிசி அழலாமா? உலையில் கிடக்கும் இரும்பு அழலாமா? இறைவா. அதுபோலத்தானே எனது வாழ்க்கை? இறைவா, நான் இனி துன்பத்திற்கு அஞ்சமாட்டேன், அழமாட்டேன். இறைவா, அருள் பாலித்திடுக! சமநிலை உணர்வைத் தந்தருள் செய்க!*

## ஏப்ரல் 24

### நின் அறக்கொடையை நினைந்து வாழ அருள் செய்க!

*இறைவா, நாய் கீழான பிராணியா? மேலான பிராணியா? நன்றியுள்ள பிராணி நாய். ஆனால், இறைவா, நாய்க்குரிய நன்றிக் குணம் பொதுமையான குணமல்ல. தன் இனத்தினிடத்தில் நன்றியாக இருப்பதில்லையே?*

*இறைவா, ஒரு நாய் தன்னை ஈன்று வளர்த்த தாய் நாயினிடத்தில் கூட, பற்றுடன் இருப்பதில்லை. அது மட்டு மல்ல; சண்டைபோட்டுக் கொள்கிறது. ஆயினும் என்னை விட நாய் உயர்ந்தது என்பதை உணர்கிறேன். நாய் தன்னை வளர்த்தவர்களிடத்தில் நிறைவான நன்றி காட்டுகிறது.*

*இறைவா, நீ எனக்குச் செய்த உதவி இவ்வளவா, அவ்வளவா? ஆயினும் என்ன? இருட்டில் ஒரு மூலையில் கிடந்த என்னை முற்றத்திற்குக் கொண்டு வந்தாய். நுகர்ந்து இன்புற்று மகிழப் பொறிகளையும் புலன்களையும் தந்தாய். எனது பொறிகளும் புலன்களும் நுகர்ந்து மகிழ்ந்து வாழ்ந்திட எத்தனை கோடி இன்பங்கள் வைத்துள்ளாய் இறைவா.*

*நீ எனக்குச் செய்துள்ள நன்மையை அறிந்தேன் இல்லை. நன்றியுடன் நினைந்து போற்றினேன் இல்லை. இறைவா, என்னை மன்னித்துவிடு. என் மனத்தில் நின் அறக் கொடையை நினைந்து நினைந்து போற்றி வாழ்ந்திட அருள் செய்க.*

## ஏப்ரல் 25

### மகிழ்ச்சியும் களிப்பும் நிறைந்த வாழ்க்கையைப் படைத்திட அருள் செய்க!

*இறைவா, நீ மோன அமைதியில் அமர்ந்து முழுநிறை அறிவை, ஆற்றலை இடையீடின்றி உலகிற்கு வழங்கி வளர்த்து வாழ்வித்தருள் செய்கின்றாய். ஆனால் உன் பெயரால் நான் செய்யும் விளையாட்டுக்கள், திருவிழாக்கள், கொட்டு முழக்குகள் கொஞ்சமல்ல. இறைவா, இவையெல்லாம் உனக்காகவா? இல்லை, இல்லை. நான் ஓய்வு பெற, மகிழ்ந்து வாழ இவையெல்லாம் தேவை. ஆதலால், உன் பெயரால் செய்து கொள்கிறேன், இறைவா, பொறுத்துக்கொள்.*

*என் மனம் பரபரப்பாகவே இருக்கிறது. ஒன்றுவிட்டு ஒன்று பற்றி அலைகிறது; எய்த்துக் களைத்துப் போகிறது. இந்தச் சூழ்நிலையை மாற்றிக் கொள்ளவே நான் திரு விழாவை நாடுகிறேன். இறைவா, மன்னித்துக் கொள்.*

*என் வாழ்க்கையில் இடையீடில்லாமல் புத்துணர்ச் சியைத் தந்தருள் செய்க! எப்போதும் செயல் வழிப்பட்ட கிளர்ச்சியுடன் இருக்கும் வாழ்க்கையைத் தந்தருள் செய்! இறைவா. களிப்பும் மகிழ்ச்சியும் நிறைந்த வாழ்க்கையை-புத்துலகைப் படைக்க அருள் செய்க! இறைவா, அருள் செய்க!*

## ஏப்ரல் 26

### நான் வாழ நடுவுநிலை அறிவு தேவை, ஆதலால் நீ இருப்பது உண்மை.

*இறைவா, நீ இருக்கிறாயா? உண்மையாகவே நீ இருக்கிறாயா! நீ இல்லை என்பவர் முன் நீ ஏன் உன்னை நிரூபணம் செய்து கொள்ளவில்லை? இறைவா, ஆம் உண்மை தான், என் முன்னே நீ இருப்பதாக நிரூபணம் செய்து கொள்வதில் என்ன பயன்?*

*இறைவா, நீ இருப்பதும், தொழில்களை இயற்றுவதும் உன் பொருட்டல்ல. உயிர்க்குலம் அனைத்தும் தழைத்திட நீ இருந்தருள் செய்கின்றாய். உயிர்க்குலம் ஆணவத்தின் இரும்புப் பிடியிலிருந்து விடுதலை பெறத் துணை செய் கின்றாய். இறைவா, பொன்னால் பொன் பெற்றோருக்குப் பயனுண்டு. பொன் பெற்றோரால் பொன்னுக்கு யாது பயன்?*

*இறைவா, நீ எனக்குத் தேவை, இன்றியமையாத் தேவை. என் வாழ்க்கை இயங்குகிறது. என்னைச் சுற்றி ஓர் உலகம் இயங்குகிறது. அந்த உலகத்தில் எனக்குத் துய்ப்பனவும் உய்ப்பனவும் உண்டு. நீ எனக்குத் தேவை. அப்படி நீ இல்லாது போனாலும் உன்னை நான் கண்டுபிடித்தாக வேண்டும். இல்லை, இறைவா! கண்டுபிடிப்பதில் காலதாமதமானால் இறைமைத் தன்மையுடைய உன்னை நான் கண்டு பிடித்தாக வேண்டும். அப்பொழுது நீ காணப்படாது போயின் நான் உன்னையே படைத்துக் கொண்டாதல் வேண்டும்.*

*ஆம் இறைவா! நான் வாழ நடுவுநிலை, அறிவு பெற நீ தேவை. இவற்றை, நான் பெற்று வளர்கிறேன். ஆதலால் நீ இருப்பது உண்மை. இறைவா, நின் காட்சியினை அருள் செய்க!*

## ஏப்ரல் 27

### இறைவா, மயக்கம் தவிர்த்து ஆட்கொள்!

*இறைவா, நான் யார்? இறைவா, நீ என்னைப் படைத்தாயா? இறைவா, நிச்சயம் நீ என்னைப் படைத்திருக்க மாட்டாய். ஆம், இறைவா, நீ குறைவிலா நிறைவு. கோதிலா அமுது. ஞானத்தின் திருவுரு. நீ என்னைப் படைத்திருந்தால் இவ்வளவு குற்றங்கள், குறைகளுடன் படைத்திருப்பாயா? அதனால் நீ என்னைப் படைத்திருக்கமுடியாது.*

*இறைவா, என் பெற்றோரே என்னைப் படைத்தார்களா? அதுவும் இல்லை இறைவா. என் பெற்றோரும் தன் குழந்தை உடல்-உள்ளம் ஊனமுடையதாகப் படைக்க விரும்பியிரார். ஆதலால் நான் என் பெற்றோர்களின் படைப்பும் அல்ல. என் பெற்றோர் என் பயணத்திற்குத் துணை நிற்பவர்களே தவிர, படைப்பாளர்கள் அல்லர்.*

*இறைவா, குழாயில் தண்ணீர் வருகிறது. குழாய், தண்ணீரைப் படைக்கவில்லை. அஞ்சற்காரர் அஞ்சலைக் கொண்டு வந்து தருகிறார். ஆனால் அந்த அஞ்சலை எழுதியவர் அஞ்சற்காரர் அல்லர் என்பதை நினைத்துப் பார்க்கிறேன். இறைவா, என் இயல்பும் குற்றங்குறையுடையதாக இருப்பதால் நான் படைக்கப்படவும் இல்லை. என்னுடன் உள்ள ஆணவக்கூட்டு இருக்கிறதே, அதுதான் என்னைச் சிறுமைப்படுத்துகிற குற்றம், குறைகளைத் தருகின்றன. ஆணவத்திற்கு நான் அடிமைப்பட்டுள்ளேன்.*

*இறைவா, என் ஆணவச் சேட்டையை அடக்க எனக்கு ஞானத்தைக் கொடு! மயக்கங்களைத் தவிர்த்து ஆட்கொள் இறைவா! இறைவா, ஆணவத்திலிருந்து நீ, என்னை மீட்டு விட்டால் நான் உனக்கு ஏழேழ் பிறப்பும் தொழும்பாய்க் கிடந்து அடிமை செய்வேன். இறைவா, அருள் பாலித்திடுக!*

## ஏப்ரல் 28

### "எனக்குத்தான் பொருள் தேவை, பொருளுக்கு நான் அல்ல," என நீ உணர்த்திய நெறி நிற்பேன்.

*இறைவா, எனக்குப் பொருள் தேவையா? பொருளின் பயன் தேவையா? அல்லது பொருளுக்கு நான் தேவையா? இறைவா, என்னால் பொருளுக்கு மதிப்பா? அல்லது பொருளால் எனக்கு மதிப்பா? இறைவா, இந்த வினாக் களுக்குச் சரியான விடையைச் சொல்.*

*இறைவா, எனக்கும் பொருளுக்கும் உள்ள உறவில் உள்ள அடிப்படை சரியாக இல்லையே. இறைவா, வழி காட்டு. பயன்பாட்டுக்குத்தான் பொருள். பயன்பாட்டுக்கு உரியதல்லாத பொருள் – பொருளே இல்லையல்லவா? இறைவா, நன்றாகச்சொன்னாய். என் புத்தியிலும் சற்றே உறைத்திருக்கிறது.*

*இறைவா, எனக்குத்தான் பொருள் தேவை; பொருளுக் காக நான் அல்ல. பொருளுக்கு மதிப்பு என்னால்தான். இன்றைய நடைமுறை அப்படி இல்லையே. சாமியார்களில் கூட, பணக்காரச் சாமியாருக்கு இருக்கிற மரியாதை, ஏழைச் சாமியார் ஞானியே யானாலும் இல்லையே.*

*என் வாழ்க்கைக்குத் துணைதான் பொருள். பொருளைப் பயன்படுத்தி நான் வளர வேண்டுமே தவிர, பொருள் ஆசை கூடாது என்று அருள் செய்.*

*இறைவா, என் வாழ்க்கையின் பண்பாட்டுத் தரத்தை உயர்த்த பொருள் துணை என்பதை அறிந்தேன். அப் பொருளை ஈட்டுவதற்குரிய செயற்பாடுகளும் என்னை வளர்க்கவேண்டும் என்பதை அறிந்தேன். இறைவா, இந்த அறிவை எனக்கு நிலையாகத் தா. என்னுடைய வாழ்நிலை தான் யாவற்றினும் உயர்ந்தது என்பதை உணர்த்திய இறைவா! நன்றி! நீ உணர்த்திய நெறியில் வாழும் உறுதியைத் தந்தருள் செய்க!*

## ஏப்ரல் 29

## இறைவா, அறிவைப் போற்றி அதனைப் பெறும் திறனை அருளிச் செய்க!

*இறைவா, நான் என் வாழ்க்கையில் முன்னேற அறிவு தேவையா? அல்லது நீ தேவையா? உண்மையைச் சொல் இறைவா! என்ன சிரிக்கிறாய்! உன்னையே கேள்விப் பொருள் ஆக்கிவிட்டேனா? ஆம் இறைவா, என்மீது கோபித் துக்கொள்ளாமல் விடை சொல். இறைவா, அறிவு தான் தேவை.*

*அறிவுதான் முதன்மையானது. அறிவுதான் அனைத்து இன்பத்திற்கும் வாயில். இறைவா, நன்றருளிச்செய்தாய். இறைவா, அப்படியானால் என் வாழ்க்கையில் உன் இடம் என்ன? இறைவா, என்ன சொல்கிறாய்? நீயே அறிவுதானா? நீ அறிவின் திருவுருவமா? இறைவா, மீண்டும் ஒரு தடவை அருள் செய்க! அறிவு தொடக்கம்! முடிவு நீயா?*

*இறைவா, நான் அறிவைத் தேடாமல் உன்னைத் தேடியலைந்தால் நீ அகப்படமாட்டாய்! அப்படித்தானே இறைவா! இறைவா, நீயே அறிவு என்றாயே, நின்னையறியும் அறிவு எனக்குத் தந்தருள் செய்க! இறைவா, அறிவும் அருளும் முரண்பட்டதல்ல; முடிவில் இரண்டும் ஒன்று என்பதனைத் தெரிந்தேன். இறைவா, இனி அறிவைப் போற்றிப் பெறும் திறனை அருளிச்செய்க.*

## ஏப்ரல் 30

**இறைவா, என் மனத்தைத் தூய்மையாக்கி அன்பினால் மெழுகி நினைக்கு அர்ப்பணிக்கிறேன்! இறைவா எழுந்தருள்க!**

*இறைவா, உண்மையைச் சொல்! உனக்கு விருப்பம் கற் கோயிலா? அல்லது மனக்கோயிலா? இறைவா......! அப்படியா இறைவா? என் மனக்கோயில்தான் உனக்கு வேண்டுமா? ஏன் இறைவா? என் மனம் தூய்மையாக இல்லையே. என் மனத்தில் ஏற்கெனவேயே ஆசை, ஆணவம் இன்ன பிற குணக்கேடுகள் இடையீடின்றி ஆக்கிரமித்துக் கொண்டுள்ளன. நான் அவற்றை அப்புறப்படுத்திடவும் எளிதில் இயல்வதில்லை.*

*இறைவா, இந்த இட நெருக்கடியில் உனக்கு எங்கே இடம் கிடைக்கப்போகிறது? இறைவா, என்ன சொல்கிறாய்? ஒண்டுக் குடித்தனமாகப் புகுந்து கொள்வதாகச் சொல்கிறாய். இறைவா, என்ன தவறு செய்கிறேன்? பேரருட் செல்வனாகிய உன்னை ஒண்டுக் குடித்தனமாக வைப்பதா? இறைவா, கூடாது. மன்னித்துக்கொள்.*

*இன்றே என் மனத்தில் ஆக்கிரமிப்புச் செய்துள்ள வற்றை அகற்றித் தூய்மையாக்கி அன்பினால் மெழுகி நினக்கு அர்ப்பணிக்கிறேன். இறைவா, இது உறுதி. என் மனம் இனி உனக்கே இடம். இனி என் மனம் உனக்கே ஆட்செய்யும். என் மனத்தில் எழுந்தருள்க. இறைவா, கருணை பாலித்திடுக!*

## மே 1

## மனிதர் வியக்கும் சித்துக்கள் வேண்டாம், மனிதர் மதிக்கும் மாண்பினை அருள்க!

*இறைவா, நரியைப் பரியாகச் செய்வாய்! வித்தின்றியே விளைவு செய்வாய்! நன்றே செய்வாய்! பிழை செய்வாய்! நானோ இதற்கு நாயகம்! இறைவா, நான் ஒரு சித்தன் ஆக விரும்புகின்றேன். சித்தன் என்றால் மனிதன் படைக்கும் சில பொருள்களை வரவழைத்துக் கொடுப்பதல்ல. அதை நான் விரும்பவில்லை. அவற்றின் மதிப்பு, மிகமிகக் குறைவு.*

*இறைவா, எனக்கு என் சித்தம் அடங்கவேண்டும். என் சித்தத்தை எனக்கு நன்மை செய்யத் தக்கதாக வளர்த்துப் பழக்கிக் கொள்ளவேண்டும். என் சித்தத்தை அதன் உயர் எல்லை வரையில் நான் வளர்த்து அந்தப் பயனைத் துய்க்க வேண்டும்.*

*என் சித்தம், சிந்தனை என்ற ஊற்று வற்றாததாக அமைய வேண்டும். என் சித்தம் அறிவார்ந்த சிந்தனையில் ஓயாது ஈடுபடவேண்டும். என் சித்தத்தில் இரக்கம் வேண்டும். என் சித்தம் ஈதல் பண்பில் திளைக்க வேண்டும். என் சித்தத்தை அழகாக அமைத்துக் கொள்ளல் வேண்டும். இறைவா, அருள் செய்க!*

*என் சிந்தனை நின் திருவடிப் போதுகளுக்கே. என் சிந்தனை அன்பிலே நனைந்து அருளிலே திளைத்து மகிழ்தல் வேண்டும். என் சிந்தனை என் வசமாகிய நிலையில் இன்பமே. மனிதர் வியக்கும் சித்துக்கள் வேண்டாம்! மனிதர் மதிக்கும் மாண்பினை அருள் செய்க!*

## மே 2

## எடுத்த முடிவுகளைத் துணிவுடன் செயற்படுத்தும் இயல்பினைத் தா!

*இறைவா, இராவணனின் தலைகள் பத்தும் நசுங்கக் கால்விரல் ஊன்றிய வலியோனே! எனக்கும் வலிமை தேவை. உடல் வலிமையல்ல. அதுவும் தேவைதான். உள்ளத்தில் வலிமையில்லாது பெறும் உடல் வலிமை பயனற்றது. எனது உள்ளத்தில் வலிமை தேவை.*

*இறைவா, நான் ஒரு கிழட்டுக் குதிரை போலானேன். கிழட்டுக் குதிரை இலாயத்தில் படுத்தே கிடக்கும். தீனி தின்னும்! எப்பொழுதோ ஒரு தடவைதான் சவாரிக்குப் பயன்படும். இறைவா, நான் எத்தனையோ நல்ல தீர்மானங் களை எடுக்கிறேன்! அழகாக எழுதி வைக்கிறேன். என்ன பயன். தீர்மானங்கள் என் வாழ்க்கையில் செயற்பாட்டுக்கு வரவில்லையே! நூற்றில் ஒரு தீர்மானம் கூட செயற் பாட்டுக்கு வருவதில்லை.*

*இறைவா, என் தீர்மானத்தைச் செயலுக்குக் கொண்டு வரக் கூடியவாறு என் வாழ்க்கையைப் பழக்குதல் வேண்டும். பழக்கம், வழக்கம் என்பதில் வழுக்கி வழுக்கி வீழ்ந்து கிடக்கிறேன். எழுந்து நடமாட இயலவில்லை! நான் எடுத்த தீர்மானங்கள் என் காலத்தில் கூட செயற்பாட்டுக்கு வராது போனால் வாழ்ந்து என்ன பயன்?*

*நல்ல தீர்மானங்களாக இருந்தால் மட்டும் போதாது. எடுத்த முடிவுகளைத் துணிவுடன் செயற்படுத்தும் இயல்பினைத் தா! நான் ஒரு இளமை நலமிக்கவனாகவே எப்போதும் பயன் படக்கூடியவனாகவே வாழ ஆசைப்படு கிறேன். இறைவா அருள் செய்க!*

## மே 3

## என் இதயம் உன்னோடு பேச ஆணை தந்து அருள் செய்க!

*இறைவா, நானும் உன்னை அருச்சிக்க ஆசைப்படுகிறேன். இறைவா, எழுந்தருள்க! என் அருச்சனையை ஏற்றுக் கொள்க. ஆம் இறைவா, உனக்கு நான் இலட்சார்ச்சனை செய்கிறேன்! கோடி அருச்சனை செய்கிறேன்! ஆனால், நீ அருளிச் செய்யவில்லை!*

*ஏன் இறைவா, நீ விரும்பும் மலர் எது? தாமரையும் அல்ல; மல்லிகையும் அல்ல; முல்லையும் அல்ல! இறைவா, நீ விரும்புவது இந்த மலர்களையா? இதய மலரையே நீ விரும்புகிறாய்! என் இதயம் மலராக இல்லை. கல்லைப் பிசைந்து கனியாக்கும் வல்லாளன் நீ! நின் அருட் பார்வையால் என் இதயம் மலர்க!*

*கதிரவன் கண்ட தாமரைபோல என் இதயம் நின் அருள் நோக்கால் மலர்க! இறைவா, என் இதயம் அன்பில் தோய்ந்து அருள் நலத்தினைப் பெற்றுவிளங்குக! இதயம் விரிவடைந்திடுக! உலகந்தழுவியதாக வளர்க! பேரிதயமாக மலர்க!*

*நீ எழுந்தருளும் திருக்கோயிலாக என்னிதயம் விளங்குக! இமைப்பொழுதும் என் இதயத்தினின்றும் நீங்காதிருந்து அருள் செய்க! என் இதயம் பாய்ச்சும் செங்குருதி திருவருள் நலம் செறிந்ததாக விளங்க அருள் செய்க! என் இதயம் உன்னோடு பேச ஆணை தந்து அருள் செய்க!*

## மே 4

## நீதியே என் ஆவியென விளங்கிட அருள் செய்க!

*இறைவா, நீதியே! இன்று நான் வாழும் உலகில் எதுவுமே இல்லை; நீதியில்லை; நியாயம் இல்லை; அன்பு இல்லை; பரிவு இல்லை; பாசம் இல்லை. எல்லாம் பணத்தின் மயம்!*

*அன்பு, அறம், ஒப்புரவு, கண்ணோட்டம் எல்லாமே கடைச்சரக்காகிவிட்டன. இறைவா, ஆனாலும் நீதியின் பாவனைக்கும் பஞ்சம் இல்லை. நீதி பற்றிய கற்பனை அருமையாக இருக்கிறது. இறைவா, உலகம் முழுவதும் நடிப்பில் நடக்கிறது! பணத்தில் இயங்குகிறது! இறைவா, என்னாக் காப்பாற்று!*

*"நீதி" கற்பனையல்ல. நீதி என்பது ஒரு வாய்மை என்பதனை அறிந்து ஒழுக அருள் செய்க! நீதி பாவனை போதாது. நானே நீதியின் பாலகனாக மாற வேண்டும். இறைவா, அருள் செய்க!*

*நீதியே என் வாழ்க்கையின் உயிர்ப்பாக விளங்க அருள் செய்க! "நீதி" வழி வரும் நிதியே எனக்குக் கிடைக்க அருள் செய்க! நீதி என் உயிரின் உயிராக இருக்க அருள் செய்க! நீதி நிலை நிற்கத் துணை செய்யும் நியதிகள் வழி வாழ்ந்திட அருள் செய்க! நீதியே உலகத்தின் உயிர்ப்பு! இறைவா, நீதியே என் ஆவியென விளங்கிட அருள் செய்க!*

## மே 5

### நல்லுறவாகி நலமெலாம் அருள்க!

*இறைவா, ஒரு குலமும் ஒருரும் சுற்றமுமாக எழுந்தருளி உய்வித்திடும் தலைவனே! உறவு முறைகள் பலமான சொற்களால் அமைந்துள்ளன. ஆனால், நடைமுறை என்ன? இறைவா, எனக்குச் சுற்றமே இல்லை! என்னைச் சுற்றி ஒரே பொய்ம்மையான உலகம்! உறவுகளையெல்லாம் சொத்துடைமை என்ற நஞ்சு பாழடித்து விட்டது!*

*தொடர்ந்து வாராச் சொத்தின் பேரால் மனித உறவுகள் பாழ்பட்டுப் போகின்றன! இறைவா, எனக்குச் சோறும் கூறையும் போதும். ஆனால், அன்பினாலாய உறவினர் எண்ணிக்கை உயர அருள் செய்க! பலரோடு கூடிக் கலந்து காகம்போல் உறவு கலந்து உண்டு பழகிட நயந்தருள் செய்க! சுற்றமாய் எதற்கும் என்னைச் சூழ்ந்து நிற்க அருள் செய்க!*

*நீயே ஒரு குலமும் சுற்றமுமாக வந்தருள் செய்க! தாயாகி என்னை வளர்த்திடுக! தந்தையாகி நின்று என்னைச் சான்றோனாக்கிடுக! ஐயனாகி நின்று அருள் செய்க! அன்புடைய மாமனாக வந்து தாழாது வழங்கியருள்க! நல்ல மாமியுமாகி, மகிழ்ச்சி பொங்கிடும் வாழ்வினை அளித்திடுக! உடைமைகள் காரணமாகப் பகைமை வாராது காத்திடுக! பொது அறத்தோடு நிற்க அருள் செய்க! மன்றுளார் அடியார் எம் தோழராக நின்று உற்றுழி உதவிட அருள் செய்க! நல்லுறவுகளே என்னை வளர்ப்பன! இறைவா, அருள் செய்க!*

## மே 6

**இறைவா, எல்லாருக்கும் நல்லவனாக நடக்க அருள்க! ஆனால், எல்லாரையும் திருப்திப் படுத்தும் வாழ்வு வேண்டாம்.**

*இறைவா, புகழ்ச்சியைக் கடந்த போகமே! என் வாழ்க்கை பொருளுடையதாக அமைந்திட அருள் செய்க! என் வாழ்வு, பாழுக்கிறைத்ததாகப் போய்விட்டது! இன்று நான் செய்வதெல்லாம் பாழுக்கிறைத்தனவே! இறைவா, நான் ஒரு பொய்ம்மைப் பொருளானேன்! உள்ளீடில்லாச் சுரைக்காயானேன்!*

*இறைவா, சுரைக்கூடு கூடப் பொருள் இட்டு வைக்க உதவும்! நான் என்னானேன்! எதற்கானேன்! வினாக்களுக்கு விடை காணேன். இறைவா, என்னை நான் பாழ்படுத்திக் கொண்டேன். புகழ் ஆசைக்கு ஆட்பட்டேன்! வந்தது அவலம்!*

*நான் பலரையும் திருப்திப்படுத்த முயற்சி செய்கிறேன்! ஆம், இறைவா! இதுசத்தியம். உண்மை. ஒன்றுக்கும் ஆகாத பைத்தியக்காரனைக் கண்டால்கூட அவனுக்கும் நல்ல வனாக நடக்க ஆசைப்படுகிறேன். நீ சொல்வது நூற்றுக்கு நூறு சரி. ஆனால் பைத்தியக்காரனிடம் நான் பரிவு காட்ட வில்லை! நானும் புகழ்ப் பைத்தியக்காரனாகி பைத்தியக் காரனுடன் பேசுவதும் செய்தியாகாதா? பாடமாகாதா? என்று எண்ணுகிறேன்!*

*இறைவா, எல்லாருக்கும் நல்லவனாக நடக்க அருள் செய்க! ஆனால் எல்லாரையும் திருப்திப்படுத்தும் பரிதாபகர மான வாழ்வு வேண்டாம்! பலரையும் திருப்திப்படுத்தும் வாழ்க்கையில் உண்மை குறைபோகக் கூடாது. இறைவா, வாய்மை வழாதநிலை அருள்செய்க! ஐயத்தின் நீங்கிய தெளிவினைத் தருக! ஒரு நெறியில் நின்று நிலைபெற அருள் செய்க! இறைவா, அருள்செய்க!*

## மே 7

## திருநெறிய தமிழ்ப்புனல் பாய்ந்து சென்று என் இதயத்தில் தங்கும்படி அருள் செய்க!

*இறைவா, கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்தகுடி, தமிழ்க்குடி! நீயும் அப்பொழுதே என் பொருட்டு, கல்லில் எழுந்தருளினை! இறைவா! நானோ உன்னைத் தொழாமல் கல்லைத் தொழுதேன். உன்னைப் பாவிக்காமல் கல்லைப் பாவித்தேன்! அதனால் என் நெஞ்சு கல்லாகிவிட்டது!*

*இறைவா, கல்லைப் பிசைந்து மென்கனியாக்கும் வல்லாளனே! என்நெஞ்சை நெகிழச் செய்திடுக! என் நெஞ்சினை உருக்கி நெகிழச்செய்யும் தமிழ், வழிபாட்டில் இல்லையே! அஷ்டோத்திரம் அல்லவா ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது! நான் என்ன செய்ய?*

*என் செவிவழித் திருநெறிய தமிழ்ப்புனல் பாய்ந்து சென்று இதயத்தில் தங்கும்படி அருள் செய்க! என் இதயத்தில் அன்பு எனும் உரம் இடுக! தகைமை எனும் வேலி அமைத்திடுக! தற்சார்பெனும் களைபறித்திடுக! அகந்தை எனும் நோய் வராமல் பாதுகாத்திடுக! சிவம் எனும் வித்தினை இடுக! இன்ப அன்பு என்ற பயிர் தானே விளையும்! இறைவா, அருள் செய்க! இன்னே அருள் செய்க! என் இதயம் சிவம் தாங்கி வளர்க! என் பொறிகள் சிவத் தன்மையுடையனவாய் விளங்க அருள் செய்க!*

## மே 8

### இறைவா, நீ ஒருவனே என்பதை உணர்ந்தேன்

இறைவா, உனக்கு என்று ஒன்றும் இல்லை! ஐயோ பாவம் ஒரூரும் இல்லை, ஒரு நாமமும் இல்லை. ஆயினும் உனக்கு என்ன குறை? இந்தப் பூமண்டலமே உனது வீடு. உனக்கு ஆயிரம் ஆயிரம் திருவுருவங்கள்; ஆயிரம் ஆயிரம் திருநாமங்கள். இறைவா, எனக்கு ஒரே குழப்பம். உன்னை நான் எந்தப் பெயரில் அழைப்பது. உன்னை எந்த உருவில் வழிபடுவது?

இறைவா, உனக்கு ஏது பெயர்? ஏது உருவம்? நீ, நான் விரும்பும் உருவத்தை ஏற்றுக் கொள்கிறாய். திருநாமத்தை ஏற்றுக் கொள்கிறாய் அவ்வளவுதான்! நான் எங்குச் சென்றால் என்ன? எந்தத் திருக்கோயிலுக்குச் சென்றால் என்ன? நீ என்னை ஆட்கொண்ட திருக்கோலம் – நீ என்னை ஆட்கொண்டருளிய திருநாமம் – அவையே எனக்குப் பற்றுக் கோடு.

இறைவா, நின்னையன்றிப் பிறரை நினையேன். நீ ஒருவனே! ஆனால், ஒன்றென்றும் ஒருவனென்றும் ஒருத்தி யென்றும் உலகு உன்னைப் பிரித்து அழைக்கிறது; போற்று கிறது. எல்லாமே நீ தான். 'ஒன்றென்றிரு, உண்டென்றிரு' என்ற ஆப்தமொழி என் வாழ்க்கையின் பற்றுக் கோடாகி விட்டது. ஆதலால், எங்கும் உன்னையே பரசிவத்தையே காண்கிறேன்.

ஊனில் நின்றுலாவி உணர்த்துவதும் நீயே. உயிருக்கு உயிராய் நின்றியக்குவதும் நீயே. உண்ணும் உணவாக, பருகும் நீராக விளங்குவதும் நீயே. எண்ணுளே உயிர்ப்பாய் இயங்கும் வளியும் நீயே. நீ யின்றி நான் இல்லை. எங்கெங்கு நோக்கினும் உன் காட்சியே! ஆட்பட்டேன்! ஆட்கொண்டருள்க! இறைவா.

கு.X.10.

## மே 9

### வலிமையினை நான் பெற்று வாழ்ந்திட அருள்க!

*இறைவா, வல்லார்க்கும் மாட்டார்க்கும் வாய்ப்பளிக்கும் வாய்ப்பே! நின் நெறியில் நிற்கும்பேறு பெற்றிலேனே! நான் வலியார் பக்கம் சார்கிறேன். மெலியார் என்றால் அங்கீகரிப்பது கூட இல்லை. ஏன் இந்த நிலை இறைவா? நான் வலியாரோடிருந்தாலே வாழ முடியும்.*

*என்னுடைய அருங்குணங்கள் - தொண்டுகள் என்னை வாழச்செய்து விடாது. நிலையில்லா உலகத்தில் நிலைபெறச்செய்து விடாது. தகுதியுடையது வாழும் இது இந்த உலகத்தின் நியதி.*

*இறைவா, நான் இந்த உலகத்தில் நிலையாக வாழும் தகுதியைப் பெற அருள் செய்க! நெஞ்சிலே உறுதி, அறிவிலே தெளிவு, உழைப்பின் மேல் நிற்கும் உடல், சலியாத உழைப்பு, வலிமை இவையெல்லாம் எனக்குத் தேவை. பொருளால் வலிமை பெற வேண்டும்.*

*இன்றைய சமூக வாழ்க்கையின் தேவை பணமே! நிறைந்த பொருளைச்செய்து குவித்துக் கொள்ளவேண்டும். நண்பர்களை, அலுவலர்களை, பின் பற்றாளர்களை இனம் கண்டு கொண்டு அவர்கள்தம் உறவைப் பராமரித்து எனக்கு வலிமையாக்கிக் கொள்ள அருள் செய்க!*

*அறிவில் வலிமை, நெஞ்சில் வலிமை, பொருள் வலிமை, படை வலிமை இவைகளை நான் பெற அருள் செய்க! வாய்மையே என் வாழ்வின் அச்சு. உயிர்ப்பு! இறைவா, வலிவலத்துறை நாயகனே, அருள் செய்க!*

## மே 10

### சரியான ஒன்றைத் தேடிப் பெறும் அறிவினை அருள்க!

*இறைவா, அடியார்களைத் தேடிச் சென்று ஆட்கொள்ளும் அருளாளனே, நானும் தேட அருள் செய். நான் எதைத் தேட? இன்பத்தைத் தேடி அலைந்திடவா? இறைவா, இல்லை, இல்லை. நான் மகிழ்ச்சியைத் தேடி அலைந்தால் கிடைத்து விடுமா? ஒரு பொழுதும் கிடைக்காது.*

*இறைவா, எது சரியானதோ அதை நான் தேட வேண்டும். ஆம் இறைவா, உண்மையான மகிழ்ச்சி தரும் பொருள் இதுவென, ஆசை காட்டாது; தூய அறிவே காட்டும். என் வாழ்க்கைக்கு எது நன்மை பயக்குமோ அதுவே சரியானது. என்னைச் சார்ந்தவர்கள் வாழ்க்கைக்கு, எது நன்மை செய்யுமோ, அது சரியானது. என் நாட்டு மக்களுக்கு எது நன்மையானதோ அதுவே சரியானது.*

*மன்னுயிர்க்கெல்லாம் எது ஆக்கம் தருமோ அதுவே சரியானது. அதுவே எனக்கு வாழ்கக்கையில் மகிழ்ச்சியைத் தர இயலும். அந்தச் சரியான ஒன்றை நான் தேடி அடைந்து விட்டால் என் வாழ்க்கை இன்பமே. எந்நாளும் துன்ப மில்லை.*

*இறைவா, அந்தச் சரியான ஒன்றை – என் வாழ்வுக்கு மகிழ்வளிக்கக்கூடிய ஒன்றைத் தேடும் அறிவினைத் தா! அந்தச் சரியானதைத் தேடும் உழைப்பினில் ஈடுபடுத்துக. இன்பநிலை தானே வந்தெய்தும் இறைவா, அருள் செய்க!*

## மே 11

## இமைப் பொழுதும் போற்றற்குரியதென அறிவித்த இறைவா போற்றி!

*இறைவா, தினைப் போதில் தேச மெல்லாம் உய்த் தறியும் தலைவா, இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காத இறைவா, போற்றி! போற்றி!! 'இமைப் பொழுதும்!' என்பதே கால அளவையின் குறைந்த குறியீட்டு அளவு. என் வாழ்நாள் ஒவ்வொரு இமைப் பொழுதாகத்தான் நகர்கிறது.*

*பல நூறாயிரம் இமைப் பொழுதுகளையும் நான் வறிதே பயன் படுத்தாமல் பொழுதைப் புறக்கணித்துவிட்டு எய்த்து அலைகின்றேன். என் வாழ்க்கையில் ஒவ்வொரு இமைப்பொழுதும் பொருளுடையதாக உருமாற்றம் பெற்றால் என் வாழ்வு ஆக்கத்தில் சிறக்கும்.*

*நான் செய்யும் ஒவ்வொரு செயலிலும் "இமைப் பொழுதுகள்" உரிய இடத்தை வகிக்கின்றன. எந்தத் தவறும் சரி. நன்மையும் சரி, ஏதோ ஒரு இமைப் பொழுதில்தான் கருவுற்று வளர்கிறது. இறைவா, என் இமைப்பொழுதுதான் என் வாழ் நாள்! இமைப்பொழுதுகள் தாம் பணிகளின் தொடக்கத்திற்குரியன. செயற்பாட்டுக்குரியன.*

*இமைப்பொழுது, ஆம்! அது என் வாழ்நாளின் ஒரு பகுதி என்று போற்றிப் பயன் கொள்ளும் திறனை அருள் செய்க! என் வாழ்வில் இமைப் பொழுதும் போற்றுதலுக் குரியதே என்று அறிவித்தருள்க! கருணையே போற்றி! போற்றி!!*

## மே 12

## வாழ்ந்து கொண்டிருக்கும் இந்தப் பொழுதில் நன்றாக வாழ்ந்திட அருள் செய்!

இறைவா, காலத்தின் காலமாகி நிற்கும் தலைவா! நான் "கால"மாகி நின்றிட முயன்றேனில்லை. இறைவா, நான் சென்ற காலத்தை நினைந்தே வருந்துகிறேன்; அழுகிறேன். ஆண்டாண்டுதோறும் அழுதாலும் சென்ற காலம் சென்றது தான். இறைவா, அதைவிடப் பெரிய கொடுமை நான் இப்பொழுது இந்தப் பொழுதில் வாழ்வதில்லை.

நிகழ்காலம் உண்மை. இதனை நான் முழுமையாகப் பயன்படுத்தினாலே சென்ற காலத்தவறுகள் திருந்தும்; எதிர் காலம் பயன்பெறும்.

நான் என் கண்முன்னே என்னைவிட்டு நெகிழ்ந்து ஓடத் துடித்துக் கொண்டிருக்கும் நிகழ் காலத்தைப் பொருட் படுத்துவதில்லை. பயன்படுத்துவதில்லை.

நிகழ் காலத்திற்கு உழைப்பு உரு, கொடுப்பதில்லை. ஆனால், எதிர்காலத்தைப் பற்றிய கற்பனைகளில் மூழ்கிக் கனவுகளைக் காண்கிறேன். இந்தப் பைத்தியக்காரத்தனத்தி லிருந்து என்னைக் காப்பாற்று. நிகழ்காலம் தாய்! நிகழ் காலம் கழிக்கப்பெற்ற பாங்கின் அடிப்படையிலேயே எதிர்காலம் அமையும்.

நான் எதிர்காலத்தைப் பற்றிக் கனவு காண்பதைக் கைவிடச் செய்க! இன்று இப்பொழுது வாழ்ந்திட அருள் செய்க! எனக்கு எதிர் காலக் கவலை வேண்டாம். நன்மை, தானே வரும். அது வரும்பொழுது வரட்டும். வாழ்ந்து கொண்டிருக்கும் இந்தப் பொழுதில் நன்றாக வாழ்ந்திட அருள் செய்க!

## மே 13

## உயிர்க்குலம் அனைத்தும் ஒரே தொகுதியென உணர்ந்து தொழுதிட அருள்க!

*இறைவா, நீ அகண்டமான பொருள். எல்லையற்ற பொருள். இறைவா! நான் உன்னை வழிபடும் வழி, நானும் எல்லை அற்ற நிலையில் அன்பு காட்டுவதேயாம்.*

*இறைவா, எல்லைகள், வேலிகள், குறுக்குச் சுவர்கள், பிரிவுகள் இவையெல்லாம் சைத்தானின் கருவிகள். இந்தச் சைத்தானின் பேயாட்டமே இன்றைய உலகின் ஆட்டம். இறைவா, எங்களைக் காப்பாற்றக்கூடாதா?*

*இறைவா, இந்த மனிதகுலம் பேய்க் கோட்பாட்டுப் பிரிவினைகளில் கிடந்து உழல்கின்றதே. இறைவா, களவும் காவலும் ஒழுக்கங்களாக மாறி விட்டனவே. கெட்ட கலகம் செய்து கொள்கிறார்களே. நீயே உயர்வற உயர்ந்தவன்; உலகம் ஆனவன்; எல்லைகளை நீத்து ஓங்கி உயர்ந்து நிற்பவன்.*

*இறைவா, நான் உன்னைப் போற்றுகின்றேன். வணங்குகின்றேன், வாழ்த்துகின்றேன். இறைவா, நான் நீயாக வேண்டாமா? நின் பண்புகளை உபாசித்து உரிமைப் படுத்திக் கொள்ள வேண்டாமா? இறைவா, அருள் செய்க!*

*உயிர்க்குலம் அனைத்தும் ஒரே தொகுதி என உணர்ந்து ஒழுகிட அருள்க! இறைவா, உயிர்க் குலத்தினிடம் காட்டும் அன்பே தவம். தொண்டே, வாழும் நெறி. இறைவா. அருள் செய்க!*

## மே 14

## மீனைப்போல் நான் நின் அருள் வெள்ளத்தில் வாழ அருளுக!

*இறைவா, தண்ணீரில் மீன் வாழ்கிறது. தண்ணீரினின்று மீன் பிரிந்தால் செத்துப்போகும். இறைவா, நானும் மீனைப் போல் நின் அருள் வெள்ளத்திலேயே கிடக்க வேண்டும்.*

*இறைவா, என்றோ, ஒருபொழுது நின்னை வணங்கி என்ன பயன்? இறைவா, எப்போதும் நின் சிந்தனையிலேயே இருக்கும் அருளைப் புரியாய்? இறைவா, நினது அருள் வெள்ளத்திலேயே நனைந்து கிடக்கும் அருளைச் செய்!*

*இறைவா, அருள் நனைதலுக்கு இடையூறாக வந்திடும் வாசனைகள் பொல்லாதவைகளாக உள்ளன; சுண்டி இழுக்கின்றன. இறைவா, நிலை தடுமாறுகிறது. என்னை எடுத் தாளக் கூடாதா? மூல மலத்தினையே பிடித்து நெருக்கும் ஆற்றலை வழங்கியருள் செய்க!*

*இறைவா, எனது புலன்கள் நின் வசப்பட்டால் தூய்மையுறும்! ஆற்றல் பெருகும். இறைவா, நான் என்னை உன்னிடம் ஒப்படைக்க ஆசைப்படுகிறேன். ஆனால், இது எளிதில் நடவாது.*

*ஆதலால், இறைவா, நீ, என்னை வந்து எடுத்தாள்க! நீ என்னைப் பிரியாமல் இருந்தருள் செய்க! இறைவா, நின் திருவடி என் நெஞ்சத்தில் நிரந்தரமாக இருக்க அருள் செய்க!*

## மே 15

### மண்ணில் நிலவும் வேதனைகளை மாற்றிட அருள்க!

*இறைவா, நீ, தாய். இல்லை, தாயினும் சிறந்தவன். ஆனால், நின் கருணையை நான் அனுபவிக்க முடிய வில்லையே. நான் மட்டுமா? கோடானுகோடி உயிர்களும் அப்படித்தான் இறைவா, அலமருகின்றன.*

*இந்த உலகில் என்னை வருத்தும் பசிகள் தீர்ந்தால் அல்லவா, நான் உன்னைத்தேட முடியும், காணமுடியும்.*

*என்னுடைய அன்றாட வாழ்க்கையே, ஒரே பிரச் சனை. ஏன் இந்த அவலம்? முத்தொழிலுக்கும் உரிய முதல்வா, நீயே என் பிரச்சனைகளைத் தீர்த்து விடக் கூடாதா? இறைவா, இந்தக் கவலை மட்டும் இல்லையானால் நின் புகழைப் பாடிக் கொண்டேயிருப்பேன்.*

*இறைவா, கருணை பாலித்திடு! சோறும் கூறையும் தா. அன்று ஆரூரருக்குப் பொன்னும் பொருளும் அளித்தனையே. இன்று ஏன் எனக்குத் தரக்கூடாது?*

*இறைவா, அருள் செய்க!*

*எனக்கு இந்த வாழ்க்கை அலுத்துவிட்டது. மண்ணில் நிலவும் வேதனைகளை மாற்ற அருள் செய்க! நின் சந்நிதியில் பணி செய்து கிடக்கும் பேற்றினை அருள் செய்க! இறைவா, அருள் செய்க!*

## மே 16

## இறைவா என்னை ஆசை வயப்படுத்தி ஆட்கொள்க!

இறைவா, ஒரு காலத்தில் நீ வலைவீசினாய் என்ற வரலாறு கேட்டிருக்கிறேன். ஆனால் இறைவா, நீ வலை வீசியபோது வலையில் என்ன அகப்பட்டதோ அது எனக்குத் தெரியாது. ஆனால், என்னைப் பொறுத்த வரையில் நான், நீ விரித்து வீசும் வலையில் இதுவரை சிக்கவில்லை.

இறைவா, நான் மட்டுமா? என்னைப் போல் கோடானுகோடி. பஸ்மாசுரன், சூரபதுமன் இவர்கள் எல்லாம் நின் வலையில் விழாதவர்கள். ஒரு போராட்டத் திற்குப்பின் நின் வலிமையினாலும் யுக்தியினாலும்தான் அடக்கினாய்.

இறைவா, நானோ நின் வலையில் சிக்காத சின்ன மீன், தப்பி ஓடிவிடும் தன்மையுடையவன்.

இறைவா, நான் என்ன செய்ய! என்னோடு பிறந்த ஆணவம் என்னை ஆட்டிப் படைக்கிறது. அதற்குச் சேவகம் செய்யவே பொழுது இல்லை.

இறைவா, ஆணவத்தினைப் போக்க நான் பிடித்த மாயை-கன்மம் ஆகியவை துணையாக இல்லாமல் எசமானர் களாகி என்னுடைய கூட்டாளிகளாகிய ஐம்பொறிகளை அவை அடகு பிடித்து விட்டன! நான் இப்போது எட்டுப் பேருக்கு அடிமை! இறைவா, என்னைக் காப்பாற்று!

என்னை வலை வீசிப் பிடிக்க முடியாது! தூண்டில் போடு! தூண்டில் நுனியில் உள்ள இரையின் மீது ஆசைப் பட்டு வருவேன்! ஆட்படுத்திக் கொள்! ஆண்டு கொள்!

பொன்னையும் பொருளையும் வழங்கு; போகத்தைத் தா. அதுவே என்னை ஆட் கொள்ளக்கூடிய ஒரே வழி. அதன் பின் மெய்ப் பொருள் தேடுவேன். திருவெலாம் பெறுவேன். இறைவா, அருள் செய்க!

## மே 17

## மற்றவர் ஆசைதீர, நான் ஆர்வத்தோடு உழைக்க அருள் செய்க!

இறைவா, அலைவீசும் கடல் என்பார்கள். ஆனால், அக் கடலிலும் கூட அலைகள் கரையோரத்தில்தான். ஆழ் கடலில் அலைகள் வீசுவதில்லை!

இறைவா, என் மனத்தில் வீசும் ஆசை அலைகள் அளப்பில. அவை, ஓய்வதே இல்லை! "அவா வெள்ளம்!" என்ற மணிமொழி என் வாழ்க்கையில் நூற்றுக்கு நூறு பொருத்தம்!

இறைவா, ஆசை அனுபவித்தால் தீரும் என்பார்கள். இறைவா, இதுவும் என்னைப் பொறுத்தவரையில் பொய். அனுபவம் ஆசைகளை வளர்க்கவே செய்கின்றன. இறைவா, "போதும்" என்ற முடிவுக்கு மனம் வர மறுக்கிறது.

இந்த ஆசையை அடக்க ஒருவழி கூறு! ஆசைப்படுவதில் தவறில்லை. இறைவா, அப்படியா? ஆசைப்படு என்கிறாய்! நல்லது, இறைவா, அப்படியே செய்கிறேன்.

ஆனால், அதிலும் தொல்லைப்பட்ட அனுபவமே எனக்கு. அதாவது மற்றவர்கள் ஆசையை நம்மால் தீர்த்து வைக்க இயலாமல் தொல்லைப்படுகிறேன்! இஃது இயற்கை என்று கூறுகிறாயா? மற்றவர் ஆசை என்னை வளர்க்குமா, இறைவா?

என்னால் நேசிக்கப் படுபவர்களுக்கு ஆசைதீர அள்ளிக் கொடுக்க ஈட்ட வேண்டும் என்ற ஆர்வம் வளருமல்லவா? ஆம், இறைவா! ஆசைப்படுவேன். அவர்கள் தேவையை ஈடுசெய்ய ஆர்வம் காட்டி உழைப்பேன்' இறைவா, இந்த மனப்பாங்கில் நிலைத்து நிற்க அருள் செய்க!

## மே 18

## பயன்படுவோனாக வாழ ஆசைப்படுகிறேன்! இறைவா அருள்க!

*இறைவா, இது உன்னுடைய உலகமா? நீ அருள் பாலித்து வாழவைக்கும் உலகமா? உண்மையைச்சொல். இதுவல்ல உன் உலகம். இறைவா, எங்குப் பார்த்தாலும் சண்டைகள், கலகங்கள், கொலைகள், களவுகள், காவல் நிலையங்கள். அம்மம்ம, பயங்கரமாக இருக்கிறது! ஏன் இந்த நிலை?*

*இறைவா, ஏன் மௌனம் சாதிக்கிறாய்? இறைவா, அப்படியா? நான்- மனிதன். நின் வழி வராமல் சைத்தான் கையில் சிக்கிவிட்டேனா? அப்படியா. இறைவா! சைத்தான் பாவியாயிற்றே. நன்மை செய்வது போலக்காட்டி அழித்து விடுவானே!*

*இறைவா, என்னைச் சைத்தானிடமிருந்து காப்பாற்று. ஆணவத்தாலாகிய மிடுக்கு எனக்கு வேண்டவே வேண்டாம். அடக்கமாக இருத்தல், எளிமையாக வாழ்தல், ஆருயிர் களுக்கு எல்லாம் அன்பு காட்டுதல் ஆகிய பண்புகளை அருட் கொடையாக வழங்கி அருள் செய்க!*

*நான் வாழ ஆசைப்படவில்லை! நல்லவனாக மட்டும் வாழ ஆசைப்படவில்லை. பயன்படுவோனாக வாழ ஆசைப் படுகிறேன். இறைவா, அருள் செய்க!*

## மே 19

### நன்மைக்காகப் போராடும் மனப்பாங்கினை அருள் செய்க!

*இறைவா, நான் நல்லவனாகவே வாழ ஆசைப்படு கிறேன். ஆனால், இறைவா, நல்லவர்களாக வாழ்ந்தவர்களை இந்த உலகம் வாழவைக்கவில்லையே. எல்லாரையுமே தோற்கடித்தது மட்டுமின்றி அழித்தும் விட்டதே!*

*இறைவா, இந்த உலகத்தில் நல்லவனாக வாழ இயலுமா? நல்லவனாக வாழ்ந்து இறக்கத்தான் வேண்டுமா? இறைவா, ஏன் இந்தத் தற்கொலை வாழ்வு? இறைவா, மீண்டும் ஒரு தடவை அருளிச் செய்க! நன்மை ஒரு பொழுதும் தோற்காது.*

*நல்லவன் ஒருபொழுதும் தோற்கமாட்டான் என்றா கூறுகிறாய்? அப்படியா இறைவா! நன்மை என்பது முழு நிறைச் சொல்! நன்மையினுள் ஆற்றலும் அடங்கும்! நன்மை யினுள் நன்மைக்காகப் போராடும் முனைப்பும் அடங்கும்!*

*நல்லவர்கள் நன்மைக்காகப் போராடும் குணம் உடையவர்களாக இருப்பார்கள். அப்போதுதான் நன்மை பூரணத்துவம் அடைகிறது. தீமையில்லாமையே நன்மை ஆகிறது. தீமையை எதிர்ப்பதே நன்மை ஆகிறது.*

*இறைவா, நன்றாக அருளிச் செய்தனை! நான் நன்மையை - பூரணத்துவம் வாய்ந்த நன்மையைக் கடைப் பிடிக்க - நன்மைக்காகப் போராடும் மனப்பாங்கை - ஆற்றலை எனக்கு அருள் செய்க!*

*இறைவா, அருள் செய்க!*

## மே 20

## மனமும் பொறிகளும் ஒத்திசைந்து இயங்கிடும் வாழ்க்கையினை அருள் செய்க!

*இறைவா! நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்ட தூயவனே! என் மனம் நின் கோயிலாவது எப்போது? இப்போதைக்கில்லை. நான் இன்னும் நினைக்கவே பழக வில்லையே! மனத்தில் ஆசைகளால் தோற்றுவிக்கப்பெறும் அலைகளில் கிடந்து தவிக்கிறேன். இறைவா, என்னைக் காப்பாற்று!*

*நான் நினைக்கும் நிலையில் என் மனத்தைப் பழக்கி யருள்க. சுயாதீன நிலையில் நினைத்திடும்படி செய்க. தொடர்ச்சியாக நினைந்து வாழும் நெறியில் ஈடுபடுத்துக! நான் நினைப்பவைகளுக்கும் என் இயல்பான வாழ் நிலைக்கும் இணைப்புண்டாக்கி அருள் செய்க!*

*மனத்தே நினைத்தது என் அகநிலை வாழ்வாகவும் புறநிலை வாழ்வாகவும் அமைய அருள் செய்க! நினைப் பொடு இயைந்த வாய்மை தழீஇய வாழ்நிலையை அருள் செய்க! என் நினைப்புக்களை நான் செய்யும் காரியங்களுடன் நெருங்கிய சம்பந்தம் கொள்ளும்படி அருள் பாலித்திடுக!*

*மனமும் பொறிகளும் ஒத்திசைந்து இயங்கிடும் உத்தம வாழ்க்கையினை அருள் செய்க! மனம் பொருந்திய வாழ்வினை நல்கி, வெற்றிகளை அருளிச் செய்க!*

*நினைக்கும் மனம்; நினைப்பொடு பொருந்திய செயல்; செயலுக்கிசைந்த வாழ் நிலையே தவம்! அருள் செய்க! என் மனத்தைப்புறம் போகவிடாமல் நிறுத்தி உன்னை நினைந்து வாழும் பேற்றினை அருள் செய்க!*

## மே 21

## இந்தச் சமுதாயத்திற்கு என் வாழ்வு அடிக்கல்போல் மறைந்திருந்து தாங்கி நிற்க அருள்க!

இறைவா, புகழ்ச்சியைக் கடந்த போகமே! என்னை ஆட்கொண்டருள் செய்க! புகழ். ஆம்! மனித நாகரிகத்திற்கு நஞ்செனு அமைந்துள்ள புகழ் என்னும் இச்சை வருத்துகிறது. புகழ், நீரில் குமிழி போன்றது!

புகழ், பொல்லாங்கைத் தோற்றுவிப்பது. புகழ், எதிரிகளைத் தோற்றுவிப்பது; புகழ், கள்ளினும் கொடிய போதை தருவது. இறைவா, என்னைப் புகழ் இச்சையினின்றும் மீட்டு ஆள்க! நான் நல்லதை-நன்மை கருதியே செய்ய வேண்டும். நன்மை, நன்மைக்காகவே என்ற அறநெறியில் நின்றிடும் பேற்றினை அருள் செய்க!

புகழ் விரும்பாப்புண்ணிய மனத்தினை அருள் செய்க! நாடறியாத அடக்கமான அறவாழ்க்கையினை அருள் செய்க! எல்லாருக்கும் எளியோனாக, தாழ்வெனும் தன்மையுள் நடந்திடும் நல்வாழ்க்கையினை அருள் செய்க!

மண்ணிற்குள் மறைந்து கிடந்தே மரங்களை வாழ்விக்கும் வேர்களைப்போல இந்தச் சமூக வாழ்க்கைக்கு நான் வேரென வாழ்ந்திடும் நெறியில் நிறுத்தி அருள் செய்க! எடுப்பான மாளிகைகள் மண்ணில் மறைந்து கிடக்கும் அடிக்கற்களின் வலிமையிலேயே நிற்கின்றன! என் வாழ்வும் இந்தச் சமுதாயத்திற்கு அடிக்கல்போல அமைய அருள் பாலித்திடுக!

பொருளின் ஆற்றல் பொருளுக்குள் ஒளிந்து கிடந்தே இயங்குகிறது. இந்தச் சமுதாயப் பெருவாழ்க்கையில் ஆற்றலாக நான் ஒதுங்கியிருந்து உழைத்து உயர்த்தும் பெரு வாழ்வினை அருள் செய்க! நான் பணி செய்து கிடக்கும் புண்ணியப் பாங்கினை அருள் செய்க!

## மே 22

## பிறர் நலம் பேணும் பெருநோன்பு நோற்று வாழும் வாழ்க்கையினை அருளுக!

“இறைவா இருளே உலகத்தியற்கை. இருளகற்ற கை விளக்கே கற்ற அறிவுடைமை” என்பது சான்றோர் வாக்கு! இந்த உலகில் இருட்டில் பொருள்களைப் புலப்படுத்துவது கைவிளக்கு! கைவிளக்கு ஒளியுடன் கண்ணொளியும் பொருந்திப் பொருள்களைக் காண்கிறது.

இறைவா, நான் என் மனக் கண்ணைப் புறத்தே செலுத்தாமல் என் அகத்தே திருப்பினேன். என்ன பயங்கரம்! இந்த நிலையில் வேறு, உன்னை மனத்தில் குடியிருக்க அழைத்துவிட்டேன்.

இறைவா, என் மனம் அழுக்காறு, அவா ஆகிய நச்சுப் பூச்சிகளுக்குக் கொத்தடிமையாகச் சேவகம் செய்து வாழ்கிறது. வெட்கம், புறத்தே கம்பீரமான தோற்றம். ஆனால் அகத்தே பேய்களுக்குத் தொழும்பு பூண்ட கேவல நிலை. இறைவா, என்னைத் தடுத்தாள்க. என்னைத் தன்னல நயப்பின் கொடுமையிலிருந்து விடுதலை செய்தருள்க! வீண் களியாட்டங்களில் பொழுதினைக் கழித்து வாழ்ந்திடும் இழிநிலையிலிருந்து மீட்டு அருள் செய்க! பொறிகளின் நுகர்வு வழிப்பட்ட கிளர்ச்சிகளுக்கு இரையாகாத வண்ணம் மீட்டருள்க! எல்லை கடந்த பேராசைப் பிசாசிடமிருந்து தப்பித்து நிறைமனம் பெற்று வாழ்ந்திட அருள் செய்க!

இறைவா, என்னை நானே அறியும் அறிவினைத் தந்தருள் செய்க! என் மன நிலையைத் தூய்மையாகப் பேணும் பேற்றினை அருள் செய்க!

தன்னலம் கடந்த பிறர் நலம் பேணும் பெருநோன்பு நோற்று வாழும் வகையில் வாழ்ந்திட அருள் செய்க. என் மனம் என் வசம் இருத்தல் வேண்டும்! இறைவா! இந்த ஒரு வரத்தினைத் தந்தருள் செய்க!

## மே 23

### வருங்காலம் கருதித் திட்டமிட்டு வாழ அருள் செய்க!

இறைவா, என் உயிர் வாழ்க்கைக்கு என்னென்ன தேவையென்று முன்னமேயே அறிந்து திட்டமிட்டு வழங்கியருளிய வள்ளலே! நான் இதற்கு என்ன கைம்மாறு செய்ய இயலும்? நின் கருணையைப் போற்றி வாழ்ந்தாலே போதும்.

நின் கருணை பிழைபடாது என்று உணர்த்தும் நிலையில் நான் வாழ்தலே கடமை! இறைவா, நான் ஓர் இயந்திரம்போல் ஓடிக்கொண்டே இருக்கிறேன். எங்கு? மருத்துவமனைக்கு ஓடுகிறேன். அதிர்ஷ்டச்சீட்டு வாங்க ஓடுகிறேன்!

ஆனால், இறைவா, நேற்று ஒரு வார்த்தையில் புத்தி உரைத்தாயே. இறைவா, அந்த அறிவுரை எனக்கு உறைத்தால் போதும். வாழ்க்கையில் அந்தப்புத்தி அமைந்தால் போதும். அது என்ன புத்தி? ஆம் இறைவா, ஒன்று நிகழ்ந்த பிறகு திருந்துவதைவிட, திருத்தமுறச் செய்வதே நல்லது.

நோய்க்கு மருந்து தேடி அலைவதைவிட, நோயே வராமல் வாழத் திட்டமிடுதலே சிறப்பு. வறுமைக்கு ஆளாகி, சிறுமைப் பட்டழிந்து, இரந்து வாழ்வதிலும் உழைத்துப் பொருளீட்டி வாழ்தலே முறை. வம்பை வளர்த்துக்கொண்டு வழக்கறிஞரிடம் செல்வதை விட, வம்பே வராத நல்வாழ்க்கை நூறுமடங்கு நல்லது.

இறைவா, முன்நோக்கியே முகம் அமைந்துள்ளது. எதிர்த்திசை நோக்கியே அனைத்து அறிவுப்புலன்களும் அமைந்துள்ளன. நான், வருங்காலம் கருதித் திட்டமிட அருள் செய்க! வரும் முன் நோக்கும் நுண்ணறிவைத் தந்தருள் செய்க!

## மே 24

## இன்றே செய்வேன்; இப்பொழுதே செய்வேன்–இறைவா!

இறைவா, உண்மையுமாய் இன்மையுமாய் நிற்கும் அண்ணலே! என் வாழ்க்கையின் பங்குதாரர்கள் என் கண் முன்னாலேயே மறைகின்றனர். அவர்கள் என்னுடன் வாழத் தொடங்கிப் பல ஆண்டுகள் ஆகவில்லை.

நான் வாழத் தொடங்கியதே நேற்று போலத்தான் தெரிகிறது. அதற்குள் எங்கள் வாழ்க்கையைத் தட்டிப் பறிக்கிறாயே இது நியாயமா? எண்ணியன செய்து முடிக்காமல் சாவது எந்த வகையில் பயனுடையது?

கூர்ந்து நோக்கினால் வாழ்நாள் மிகமிகச் சுருக்கமாகவே இருக்கிறது. இதற்குள் என்ன செய்ய! இறைவா, என்ன சிரிக்கிறாய்! எனக்கு நூறாயிரம் ஆண்டுகள் கொடுத்தாலும் நான் செய்யமாட்டேனா? இறைவா, ஆம் உண்மைதான். இந்த நிமிடத்து வேலையைச் செய்யாத நான் எப்படி அடுத்த நிமிடத்தில் செய்வேன்?

இந்த நிமிடம் தாய். அடுத்து வரும் நிமிடம் சேய். தாயைப் பேணும் சேய் "நாளை செய்கிறேன்", "இனிமேல் செய்கிறேன்" என்றெல்லாம் சொல்லிப் பழக்கமாகிவிட்டது. இறைவா, என்னைக் காப்பாற்று!

நொடிப் பொழுதுகளே நிமிடமாகின்றன! நிமிடங்களே மணியாகின்றன. மணிகளே நாட்களாகி, வாரமாகி, திங்களாகி, ஆண்டாகி, வாழ்க்கையை முடிக்கின்றன. உணர்ந்து கொண்டேன். இனி என் வாழ்க்கையில் நாளை என்று சொல்வதில்லை.

இன்றே செய்வேன்; இப்பொழுதே செய்வேன். அருள் செய்க! நீ கொடுத்தாலும் எனக்கு நீண்ட ஆயுள் வேண்டாம். சில நாளே வாழ்ந்திட ஆசை. அதுவும் புகழ்பட வாழ்ந்திட ஆசை. அருள் செய்க!

தி. X. 11

# மே 25

## ஐயப்படாத பெருமைமிகு வாழ்க்கையினை அருள்செய்க!

இறைவா, சிந்தையுள் தெளிவாய், தெளிவினுள் சிவமாய் நிற்கும் அண்ணலே! ஐயத்தின் நீங்கித் துணிய வேண்டிய துணிவே. அச்சத்தினை அகற்றும் ஐயனே. என் வாழ்க்கையை ஐயமும் அச்சமும் ஆட்டிப் படைக்கின்றன.

வாழ்க்கையைக் கெடுப்பதில் ஐயமும் ஒன்று. எண்ணித் துணிதல் வேண்டும். துணிந்தபின் செயற்படுத்தலே உயரிய வாழ்க்கை. ஐயம்-இது பாவத்திற்குத் தலைவன். நட்பில் ஐயம், காதல் வாழ்க்கையில் ஐயம், ஆள்வினையாற்றுதலில் ஐயம், என்று போனால் வாழ்க்கையே இயங்காது.

ஆதலால் ஐயத்தின் நீங்கிய தெளிவினைத் தந்தருள்க. ஐயத்திற்கு ஆட்படாத நட்பினை வளர்த்துக் கொடுத்து அருள் செய்க! ஐயமற்ற காதல் வாழ்க்கை வளர அருள் செய்க! செய்யும் தொழில் சிறப்புடையது எனும் துணிவினைத் தந்தருள் செய்க!

நட்பு, இயற்கை. காதல் இயற்கை. தொழில், இயற்கை. வினை, உயிர்களது இயற்கை. இந்த நிலையில் ஐயப்படாத பெருமைமிகு வாழ்க்கையினை அருள் செய்க! ஐயம் நீங்கிய நிலையில் திறந்த புத்தகம் போல் வாழ்ந்திட அருள் செய்க! ஐயத்தின் இணையாகிய இரகசியம், என் வாழ்க்கையில் வேண்டாம்.

ஐயம் நீங்கிய உறவே உறவு. ஏன், இறைவா? நின்னையே நான் ஐயப்படாமல் துணிதல் வேண்டும். நின்னையே தொழ உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும். இறைவா, அருள் செய்க! ஐயம் அறவே நீங்கிய நம்பிக்கையின் பாற்பட்ட நல்வாழ்க்கையை அருள் செய்க!

## மே 26

## இறைவா, என் மனத்துள் "கருத்து" உருவாகும் வண்ணம் அருள் செய்க!

*இறைவா, மனத்தில் இருக்கும் கருத்தறிந்து முடிக்கும் முதல்வா! என்னுடைய காரியங்கள் பல நிறைவேறவே இல்லையே. இறைவா, ஒன்றல்ல. பலப்பல கருத்துக்கள் காரியங்களாக வில்லையே. நிறைவேற வில்லையே.*

*என் கருத்து முடியவில்லை. இறைவா! என்ன சொல்கிறாய்? "என் கருத்து" என்பதே பொய் என்று கூறுகிறாயா? இது என்ன இறைவா, எழுச்சி வசப்பட்ட உணர்ச்சியால் அகநிலையில் உருவானது எல்லாம் கருத்தாகாதா? அப்பட்டமான ஆசைகள் கருத்தாகாதா? ஆம். இறைவா, கருதி முடிவு செய்தல் கருத்து.*

*கருத்துக்கு நோக்கம் இருக்கும். நோக்கம் இல்லாத ஒன்று கருத்தாக இயலாது. நோக்கமே வாழ்க்கையின் முதல், முடிவு, எல்லாம். நோக்கமே வாழ்க்கையின் இன்ப வாயிலைத் திறக்கும் சாவி. நோக்கமே வாழ்க்கையை இயக்கும் சக்தி.*

*இறைவா, என் மனத்துள் கருத்து உருவாகும் வண்ணம் அருள் செய்க. அக்கருத்தும் உயரிய நோக்கம் கொண்டதாக அமைய அருள் செய்க. உயரிய நோக்கத்தினைக் கொண்டு உழைப்பில் உழந்து உயரிய இடத்தினைப் பிடிக்க அருள் செய்க. இடர்களைத் தாண்டியும் அச்சப்படாமலும் ஆள்வினை இயற்றும் அருள்திறனை வழங்கு.*

*நோக்கம் எனக்குத் தேவை! நின் அருள் நோக்கு என்பால் என்றும் இருக்க வேண்டும். நின் அருள் நோக்கு என்னை ஆளாக்குதல் வேண்டும். இறைவா, அருள் செய்க!*

## மே 27

## பொறி புலன்கள் அனைத்தும் மௌனத்தில் ஈடுபடும் அருள் நயந்த வாழ்வினை வழங்கு!

*இறைவா, பேச்சிறந்த பூரணமே! என் வாழ்நாள், "பேச்சு, பேச்சு" என்று கழிகிறது. எப்போதும் பேசுகிறேன். எங்கேயும் பேசுகிறேன். ஒரு நாள், ஒரு பொழுது பேசாநிலை மௌனம் கொண்டேனில்லை!*

*இறைவா, பெட்டியில் பணம் போல, ஆற்றல், பேசா நிலையிலேயே பாதுகாக்கப் பெறுகிறது. "பேச்சு" நன்மையும் செய்கிறது! அதே அளவுக்குத் தீமையும் செய்கிறது. மௌனத்தில் நன்மையே மிகுதி.*

*இறைவா, நான் பேசுகிறேன்! பேசிக் கொண்டேயிருக்கிறேன். ஊரார் வேறு அழைத்துப் பேசச் சொல்கிறார்கள்! என் பேச்சு நண்பர்களையும் தந்திருக்கிறது. பகைவர்களையும் தந்திருக்கிறது!*

*இறைவா, இனி பேசுவது வேண்டாம்! பேச்சுக் கச்சேரி போதும்! அரட்டை அடித்தல் வேண்டாம். பெரிய பெரிய பேச்சாளர்கள்கூட, பெரிய காரியங்களைச் செய்ததாக வரலாறு இல்லை. வாய்ப்பந்தல், வாழ்வளிக்காது அல்லவா?*

*இறைவா, இனி நான் பேசாதிருக்கும்படி அருள்செய்! நாளும் மௌன நிலையிலேயே காரியங்களை இயற்றிடும் இனிய பழக்கத்தினை அருள் செய்க! பேசா வரம் அருள்க!*

*மௌனத்தில் பழகும் பெருவாழ்வினை அருள்செய்க. பொறிகள்-புலன்கள் அனைத்தும் மௌனத்தில் ஈடுபடும் அருள் நயந்த வாழ்வினை அருள் செய்க!*

## மே 28

### தொண்டால் வரும் துன்பம் தழுவிய வாழ்க்கை அருள்க!

*இறைவா! பண்சுமந்த பாடல் பரிசுக்காகக் கொற்றாளாகி மண் சுமந்த மாதேவா! கோலால் மொத்துண்ட கோவே! புண் சுமந்த புண்ணியனே!*

*இறைவா, எல்லாம் வல்ல உனக்கே பண் சுமந்த பாடல் கேட்க இத்தனை இடர்ப்பாடுகள் என்றால், நான் என் வாழ்க்கைக்கு மலர்கள் தூவிய பாதையை நினைந்து நினைந்து ஏங்குகின்றேனே. தடைகளே வராத-இடர்களே குறுக்கிடாத வாழ்க்கையின்மீது எனக்கு ஆசை!*

*துன்பமே தலைகாட்டாத-இன்பக் களிப்பு நிறைந்த வாழ்க்கையே எனக்குத் தேவை என்று தேடுகின்றேன். தேடித் தேடி அலைகின்றேன். இறைவா, யாதொரு பயனும் இல்லை. இப்படி ஒரு வாழ்க்கை இருக்கிறதா? கிடைக்குமா?*

*இறைவா, எனக்கு உண்மையை உணர்த்துக! இறைவா, நான் நினைப்பது பொய்ம்மையா? பொய்ம்மையில் உருவாகும் கற்பனையா? இறைவா, என்னை மன்னித்துவிடு. இறைவா, நீ அருளிச் செய்தது முற்றிலும் உண்மை. நான் இப்போது உணர்கிறேன். தடையே இல்லாத வாழ்க்கை - இடர்களே இல்லாத வாழ்க்கை வெற்றியாகாது. தடைகளே இல்லாத வாழ்க்கை பயனற்றது. எங்கேயும் அழைத்துச் செல்லாது! ஆம் இறைவா, உணர்ந்து கொண்டேன். என்னை இடர்கள் வளர்க்கும்; துன்பம் தூய்மைப்படுத்தும்!*

*இறைவா! தொண்டால் துன்பம் தழீஇய வாழ்க்கையையே அருள் செய்க. இறைவா, என்ன இருந்தாலும் நான் ஏழை. துன்பத்தில் கிடந்துழலும்போது துணையாய் இருந்து வழிகாட்டு. நெறிப்படுத்து. இவைவா, அருள் செய்க!*

## மே 29

### இறைவா, ஓர் உத்தமத் தோழனை அருள் செய்க!

இறைவா! தம்பிரான் தோழரே! எனக்கும் ஒரு தோழன் தேவைப்படுகிறான். நண்பனைத் தேடித்தேடி அலைகிறேன். இது வரையில் கிடைக்கவில்லை. நண்பர்கள் கிடைக்காமல் இல்லை. கூட்டம் நிறைய இருக்கிறது!

உறவு கொண்டாடுகிறார்கள்! உரிமை கொண்டாடுகிறார்கள். ஆனால் அவர்களால் எனக்கு என்ன பயன்?

சுந்தரருக்குத் தோழனாகிப் பொன் கொடுத்தாய். பொருள் கொடுத்தாய். பெண் கொடுத்தாய். அவர் பகைவர்களை நண்பர்களாக்கினாய். மன்னர்களோடு இணைத்து நட்பு உண்டாக்கினாய். எனக்கு இப்படி எல்லாம் செய்யக் கூடிய நண்பர்கள் யாரையுமே காணோம்!

எனக்குக் கிடைப்பவர்கள், என்னிடம், வாங்கியவர்கள். வாங்கினால் கூட பரவாயில்லை. இறைவா, நானும் கொடுத்தால்தானே நட்பு வளரும். கூட்டு உழைப்பிலே பொருளை உற்பத்தி செய்து எடுத்துக்கொண்டால் பரவாயில்லை. உழைப்பே தர மறுக்கிறார்கள்!

உற்றுழி உதவும் நண்பரை - எனக்குத் தோளொடு தோள் கொடுத்து நிற்கும் ஓர் உத்தமத் தோழரை அருள் செய்க. எனக்குச் செல்வமாக - ஆக்கமாக அமையும் ஓர் அருமையான தோழரை அருள் செய்க. காலந்தாழ்த்தலாகாது?

இறைவா, எனக்கேற்ற வேறு தோழர் கிடைக்காது போனால் ஒரு பணிவான வேண்டுகோள்! நீயே எனக்குத் தோழனாக வந்துவிடு. உன்னைச் சுந்தரர் திட்டியது போலத் திட்டமாட்டேன். இறைவா, அருள் செய்க!

## மே 30

### இறைவா, என் வாழ்வு உழைப்பாகவே ஆகுக!

*இறைவா! ஓயாது இயக்கியருளும் தலைவனே! நான் உன்னைப் போல உழைக்கவும் இல்லை. தொழில் செய்யவும் இல்லை. ஆனால் ஓய்வு தேவைப்படுகிறது.*

*இறைவா, நீயே என்பால் அருள்கொண்டு மூன்றில் ஒரு பங்கை உறக்கத்திற்கு ஒதுக்கிப் பூரண ஓய்வளித்துள்ளனை. இது போதவில்லை எனக்கு!*

*நான் வேலை பார்ப்பதே சராசரி 5 மணி நேரம் அல்லது கூடுதலாகப் போனால் 8 மணி நேரம்! அதாவது மூன்றில் ஒரு பங்குநேரம் உழைப்பு - வேலை. பிறிதொரு பங்கு எனக்காக!*

*ஒரு நாளில் 16 மணி நேரம் நான் என்னைக் கவனித்துக் கொள்ள; தூங்கி ஓய்வு பெற! 8 மணி நேரம் உழைப்பு - வேலை. இதற்கே நான் அலுத்துக் கொள்கிறேன்.*

*இறைவா! என்னைக் காப்பாற்றுக! நான் ஓய்வு விரும்பலாமா? எனக்கு ஓய்வு பழக்கமாகிவிட்டது. வழக்க மாகி விட்டது.*

*ஓய்வு எனக்காக என்ற நிலை மாறி, ஓய்வுக்காக நான் என்றாகி விடுகிறேன். இறைவா, என்னைக் காப்பாற்றுக!*

*ஓய்விலாது உழைக்கும் ஆற்றலினை அருள் செய்க. என் வாழ்வு உழைப்பாகவே அமைக! இறைவா, அருள் செய்க!*

## மே 31

## என் உழைப்பே எனக்கு உத்தரவாதம் என்றருளிய உத்தமனே! போற்றி!

இறைவா, படைத்தளித்திடும் பரம்பொருளே! உன் நிகழ்வுகள், ஒழுங்கமைவுகளுடன் நிகழ்கின்றன. முன் கூட்டியே சீராகத் திட்டமிட்ட செயற்பாடு. ஆதலால், மாறு பாடுகள் இல்லை. எதிர் விளைவுகள் இல்லை.

இறைவா, நின் தொழிலின் மாட்சிமை என்னே! நானும்தான் வேலை செய்கிறேன். நான் வேலை செய்கி றேனா? வேலை என்னை வேலை வாங்குகிறதா? இறைவா, என் நிலை இரங்கத்தக்கது!

இறைவா, நீயும் கருணை இல்லாமல் கைகளை மட்டுமே கொடுத்தாய். உணவைக் கொடுத்தாய் இல்லை. இறைவா, நான் வேலையைத் தேடிச் செய்வதில்லை. ஒரோ வழி செய்தாலும் நெருக்கடிகளுக்கு ஆற்றமாட்டாது செய்கிறேனேதவிர, வேறு இல்லை!

இறைவா! என்னை வறுமை விரட்டுகிறது! என்னைக் கருணையுடன் காப்பாற்று! நான் என் வேலையைத் திட்டமிட்டுச் செய்ய அருள் பாலித்திடுக!

நான் வேலையைத் தேடிச் செல்லும்படி செய். நான் வேலையைத் துரத்திப் பிடித்துச் செய்து, பயன் கொண்டு பெருமையுடன், வளமுடன், வகையுடன் வாழ அருள் செய்க!

இறைவா, என் உழைப்பே எனக்கு உத்தரவாதம் என்றருளிய உத்தமனே! உனக்கு நூறாயிரம் போற்றி! நான் வேலையைத் திட்டமிடுகிறேன். பயன் தரத்தக்க முறையில் செய்கிறேன். இறைவா, வழி காட்டுக! வழி நடத்தி அருள் செய்க!

## ஜூன் 1

### ஆற்றல் மிக்கவனாகி வியத்தகு சாதனைகள் இயற்ற அருள் பாலித்திடுக!

*இறைவா என் தலைவா நின் ஆற்றலால் இந்த உலகம் இயங்குகிறது. தொழிற்படுகிறது. இறைவா, நீயே ஆற்றல்! நீயே ஆற்றலின் ஊற்றுக்கண்!*

*இறைவா, நோக்கும் திசையெங்கும் ஆற்றல். ஆற்றலே வாழ்கிறது. ஆற்றலே வாழ்விக்கிறது. இறைவா, எனக்கு ஆற்றலை அருளிச் செய்க! நான் என்னைச் சுற்றியுள்ள எனக்குப் பொருந்தாச் சூழ்நிலையைத் தாக்கிப் போராடி மாற்றும் ஆற்றலினை வழங்கு.*

*என் உடம்பின் ஒவ்வோர் உறுப்பும் ஆற்றல் மிக்குடையதாக விளங்க அருள் செய்க. நான் ஆற்றல் நிலை யிலேயே வாழ்ந்திருத்தல் வேண்டும்.*

*நான் காரியங்கள் செய்த வண்ணமாகவே வாழ்ந்திடு தல் வேண்டும். ஆற்றலே உயிர்ப்பு என்று உணர்த்திடுக. ஆற்றலே வாழ்நிலை என்று எண்ண வரம் தந்திடுக!*

*குறைவிலா ஆற்றலுடன் வாழ்தலே வேண்டற்பாலது. ஆற்றலை அருள் செய்க! என் வாழ்வையே ஆற்றலாக ஆக்கிடுக.*

*ஆற்றல் மிக்கவனாகி வியத்தகு சாதனைகள் இயற்ற அருள் பாலித்திடுக! இறைவா, ஆற்றல் மிக்குடைய வாழ்வை அருள் பாலித்திடுக!!*

## ஜூன் 2

## தீமையை எதிர்த்திடும் திட சித்தமுள்ளவனாக வாழ்ந்திட அருள் செய்க!

*இறைவா! உன்னை அண்டியவர்களுக்கு நீ நல்லன்! உன்னை அணுகாதவர்களுக்கு நீ நலமிலன்! இதுதான் நியதி.*

*இறைவா, நான் நன்மையை நேசிக்க வேண்டும். நன்மையையே நான் நாடுதல் வேண்டும். நன்மையைச் செய்ய வேண்டும். நன்மைக்குத் துணை செய்ய வேண்டும். இறைவா, அருள் செய்க.*

*நன்மையே என் வாழ்க்கையின் குறிக்கோளாக அமைய அருள் செய்க! இறைவா, தீமையை வெறுத்தால்தானே நன்மையை நாடமுடியும். ஆம், இறைவா! தீமையை நான் வெறுக்க வேண்டும். தீமைக்கு நான் அந்நியனாக வேண்டும்!*

*தீமைக்கு நான் அந்நியனாகாமல் நன்மை என்னிடம் கால் கொள்ளாதே. இறைவா! என்னைத் தீமையிலிருந்து விலக்கு! தீமையை என்னிடமிருந்து அகற்றுக. நான் தீமைக்கு – தீமை உடையோருக்கு அந்நியமாய் விளங்கும் நிலையை அருள் செய்க!*

*மெய்ப்பொருளாருக்குப் பக்தனாகவும், அதே போழ்து முத்தநாதனுக்கு நண்பனாகவும் ஆதல் அரிது. நான் இரண்டு எசமானர்களுக்குத் தொண்டூழியம் செய்ய இயலாது.*

*நன்மைக்கும் தீமைக்கும் ஒருசேர நல்லவனாக இருத்தல் ஒருபொழுதும் இயலாது. இறைவா, அருள் செய்க. தீமையை எதிர்த்திடும் திட சித்தமுள்ளவனாக நான் வாழ்ந்திட அருள் செய்க!*

## ஜூன் 3

### என்னுள் இருப்பது சிறத்தல் வேண்டுமென எடுத்துக் காட்டிய இறைவா, போற்றி.

*இறைவா! என்னால் அறியாப்பதம் தந்தருளிய என் தந்தையே! தலைவனே! நீ எனக்கு நிறைய அருளிச் செய்துள்ளனை. ஆனாலும் நான் இன்னமும் தேடுகின்றேன். என்னுடைய பற்றாக்குறை ஒரு தொடர்கதை. அதனால் தேடிக் கொண்டிருக்கிறேன்!*

*இறைவா, என்ன அருளிச் செய்கின்றாய்! "உள்ளது சிறத்தல்"- ஆம் இறைவா! என்னை மன்னித்துக் கொள். என்னிடம் உள்ளதை நான் சிறப்படையச் செய்து, பயன் கொள்ளாத நிலையை இழிநிலையை எடுத்துக் காட்டிய கருணைக் கடலே. நின் கருணைக்கு ஆயிரம் ஆயிரம் போற்றிகள்!*

*இறைவா! என்னிடம் உள்ள அறிவு, இன்னமும் பட்டை தீற்றப்படவில்லை. என்னிடம் உள்ள ஆற்றல் முழுமையாகப் பயன்படுத்தப் பெறவில்லை. இறைவா, எனக்கு வாய்த்த செல்வக்களங்கள் கூட முழுமையாகப் பயன்படுத்தப் பெறவில்லை!*

*இறைவா, மன்னித்துக்கொள். "உடையது பெருக்காத வனிடம் உள்ளதும் நிலைக்காது" என்ற ஆப்த மொழியை நான் உணர்ந்து கொள்ளத் துணை செய்த என் தலைவா!*

*நான் என்னை நம்புகிறேன். என் அறிவை நான் பெருக்கி வளர்த்துக் கொள்ளும் பாங்கினை அருள் செய்க. என் ஆற்றல் அளப்பரியது. படைக்கும் தன்மை உடையது. என் ஆற்றலை எஞ்சுதலின்றி முழுமையாகப் பயன்படுத்த வேண்டும்!*

*என் உடைமையுலகம் பெரியது. அதன் வளம் முழுதும் கண்டு, கொண்டு வந்து குவித்தாலே போதும் போதும் என்றாகிவிடும். இறைவா, நான் தற்சார்பினனாக வாழ அருள் செய்க!*

## ஜூன் 4

### என் எண்ணங்கள் சிறப்புற அமைய அருள் செய்க!

இறைவா, இந்த உலகின் நியதியாக நின்றருளும் தலைவனே! நான் எண்ணுகிறேன். கருதுகிறேன். என் எண்ணங்களே என் இயக்கத்திற்கு முதல். என் கருத்துக்களே என் வாழ்க்கைக்கு முதல்!

நான் என் எண்ணத்தின் வழியதாக வாழ்கிறேன். நான் என் கருத்துக்கு இசைந்தவாறு ஒழுகுகிறேன். அதனால் என் படைப்பு, படைப்பின் தன்மை, என்னுடைய எண்ணத்தின் வழியதாகவே அமையும்!

என்னுடைய புறவாழ்க்கை, என் கருத்து எப்படியோ, அப்படியே இருக்கும். ஒவ்வொரு பறவையும் அதனதன் முட்டையைத்தான் இடுகிறது. அதுபோல, நான் என் எண்ணங்களையே சொல் ஆக்குகிறேன். என் கருத்துக் களையே காரியங்களாக்குகிறேன்!

இறைவா, என் உடனாய் நின்றருளும் தலைவனே. என் எண்ணத்தையே திருத்தியருள்க! என் கருத்தினையே திருத்தி ஆட்கொண்டருள் செய்க! நான் நல்லனவே எண்ணுதல் வேண்டும்.

என் கருத்து நின் கருத்தாதல் வேண்டும். தலைவா! இங்ஙனம் அருளிச் செய்த தலைவா நான் எண்ணுதற்குரிய என் புலன்களை உயர் நந்தனவனமாக்கி-உயர் எண்ணங்கள் ·நக்கொள்ளத் துணை செய்க.

என் எண்ணங்களே நான்! என் எண்ணங்களே என் வாழ் நிலை. என் கருத்துக்களே என்னை ஊக்குவிக்கும் சக்திகள். அவை சிறப்புற அமைய அருள் செய்க!

## ஜூன் 5

### என் உலகியல் வாழ்க்கையையும் ஆன்மீக வாழ்க்கையையும் இசைவித்து ஒரே வாழ்நிலையாகும்படி அருள் செய்க!

இறைவா, மனத்தகத்தானாக எழுந்தருளி ஆட்கொண்டருளும் தலைவனே! நான் இருபாலும் ஒத்து வளர்ந்திட அருள் செய்க! என் ஒருவன் வாழ்க்கையிலேயே எத்துணை வேறுபாடுகள். வீட்டு வாழ்க்கை வேறு. சமுதாய வாழ்க்கை வேறு. திருக்கோவில் வாழ்க்கை நிலை வேறு.

அகத்து வாழ்க்கை வேறு. புறத்து வாழ்க்கை வேறு. ஒரு பாத்திரத்தின் உட்புறமும் வெளிப்புறமும் மாறுபாடாகவா காட்சியளிக்கும். இறைவா, நான்தான் என் அக வாழ்க்கை வேறு, புற வாழ்க்கை வேறு என்று வாழ்ந்து வருகிறேன்.

இறைவா, உலகம் ஒன்றே என்று உணர்த்திய உத்தமனே! அதுபோலவே என் வாழ்க்கையும் என்று உணர்த்தி வழி நடத்திய வள்ளலே! என் உலகியல் வாழ்க்கையும் ஆன்மீக வாழ்க்கையும் ஒன்றேயாக அமைதல் வேண்டும்! இறைவா, இங்ஙனமே அருள் செய்க!

அகத்தேயும் புறத்தேயும் வேறு வேறு வாழ்நிலைகளில் வாழ்தலைத் தவிர்த்திட அருள் செய்க. அமைதி அந்த அமைதி தழுவிய வாழ்க்கையே நிறை நலம் சார்ந்த வாழ்க்கை. இறைவா, அருள் செய்க!

சிந்தையொடு செயலிசைந்து நடந்திடும் வாழ்க்கையை, அகமும் புறமும் ஒத்திசைந்து நடந்திடும் ஞான வாழ்க்கையை அருள் செய்திடுக! இறைவா, இரட்டை நிலையிலிருந்து மீட்பாயாக! எங்கும் ஒரே நிலை! ஒரே வாழ்க்கை!

என் உலகியல் வாழ்க்கையையும் ஆன்மீக வாழ்க்கையையும் இசைவித்து ஒரே வாழ்நிலையாகும்படி அருள் செய்க. உள்ளும் புறமும் ஒத்த உயர்ந்த வாழ்நிலையை வழங்கி அருள்க!

## ஜூன் 6

### பிழையிலாப் பெருவாழ்வு வாழ்ந்திட அருள் செய்க!

*"இறைவா, பிழையெலாம் தவிரப் பணித்து" ஆட்கொண்டருளும் அண்ணலே! பிழை நிறைந்த வாழ்க்கையை நானும் எப்படியோ தூக்கிச் சுமந்து நடக்கிறேன். நாள் தோறும் நூற்றுக்கணக்கான பிழைகள்!*

*பிழைகளே மலிந்த வாழ்க்கையில் இழப்புக்களே நிகழும். ஈட்டம் எப்படிக் கிடைக்கும்? இறைவா, நான் இழப்புக்களேயே கூட கண்டு பதறுவதில்லை. பிழைகள் செய்தலும், இழத்தலும் பின் இவற்றை இயற்கை நியதி என்று சமாதானம் செய்து கொள்ளுதலும் என் வாழ்க்கையின் சகச நிலையாகிவிட்டது!*

*இறைவா! சின்னச் சின்னப் பிழைகளாக நான் செய்யும் பிழைகளைத் தவிர்த்திடுக. பல நூறு சிறு பிழைகளே ஒரு பெரிய இழப்பைத் தருகின்றன. அல்லது ஆக்கத்தைத் தருகின்றன! பிழையிலா வாழ்க்கையை அருள் செய்க!*

*பிழையில் சிறுபிழை, பெரியபிழை என்ற வேற்றுமை இல்லை! ஆதலால், ஒரு சிறுபிழையும் நிகழாவண்ணம் என் கடமைகளைச் செய்யும் திறனை அருள்செய்க. பிழைகள் தவிர்ந்த வாழ்க்கையே வாழ்க்கை!*

*பிழைகள் செய்யா வாழ்க்கையை நடத்த அருள் செய்க! நின்னருள் காட்டும் நெறியில் நெறி பிறழாது வாழ்ந்திடுவேன். இது உறுதி!*

*இறைவா, இதுவரை நிகழ்ந்த பிழைகளைப் பொறுத்து அருள்க! இனிமேல் வரும் பிழையெல்லாம் தவிர்த்தாட் கொள்க. நான் பிழையிலாப் புகழ்மை படைத்த பெருவாழ்வு வாழ்ந்திட அருள் செய்க!*

## ஜூன் 7

### திட்டமிட்டுப் பணி செய்ய அருள் செய்க!

*இறைவா! மூன்றாய் உலகம் படைத்து உகக்கும் எம் தலைவனே! இந்த உலகை நீ ஆண், பெண், அஃறிணை என்ற முத்திறத்தால் படைத்திருப்பது ஒரு சிறந்த திட்டம்! நீ திட்டமிட்டுச் செய்ததால் உலக இயக்கத்தில் ஒழுங்கமைவும் மாறா முறையும் இருந்து வருகின்றன.*

*இறைவா, என் வாழ்க்கை மாறா முறைகளை அவாவி நிற்கிறது! ஒழுங்கமைவு தேவை! இறைவா. நானும் திட்ட மிட்டு வாழக் கற்றுக் கொண்டால் என் வாழ்விலும் சிறப் புடைய மரபுகள் கால் கொள்ளும்; முறைகள் தோன்றும்.*

*இறைவா, வரைபடம் இல்லாது கட்டடம் கட்ட இயலுமா! பல சின்னஞ்சிறு செயல்கள் கூட மனத்துள் திட்டமாகி, உருப்பெற்றுச் செயற்பாட்டுக்கு வருதலே இயற்கை!*

*ஆனால் நானோ என் பணிகளுக்குத் திட்டமிடாமல் கண்டதை - கைக்கு எட்டியதை - பிறர் என் வாழ்க்கையில் திணிப்பதைச் செய்து கொண்டிருக்கிறேன். என் வாழ்நாள் நெருக்கடியிலேயே கழிகிறது. பணிகளின் மிகுதியால் ஏற்பட்ட நெருக்கடியன்று!*

*காலத்தால் கருதாத பிழை! திட்டமிடாது கடைசி நேரத்தில் செய்வது! ஒரே பரபரப்பு! இது என் வாழ்க்கையில் திட்டமிடாததனால் ஏற்பட்ட விளைவு! சென்ற நொடிப் பொழுது எப்படிப் போயிற்றோ அதை அடியொற்றித்தான் அவ்வழியில்தான் அடுத்த நொடியும் செல்லும்.*

*இறைவா! நான் என் பணிகளுக்குத் திட்டமிட ஆணை தந்தருள்க. நான் எனக்குக் கிடைத்துள்ள பொழுதை முற்றாகப் பயன்படுத்தத் திட்டமிடுதலே வழி. என் ஆற்றல் முழுதையும் திட்டமிட்டுப் பயன்படுத்திப் பணிசெய்ய அருள் செய்க!*

## ஜூன் 8

### தேவ, தேவே! தீமையெல்லாம் மடிக! நன்மை வந்தெய்துக!

*இறைவா, முப்புரம் எரித்த முதல்வா! நான் உனக்கு வழிபாடு செய்யும் வழிகள் பலப்பல! உன் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடக்கவும் ஏராளமான வாயில்கள் உண்டு!*

*இறைவா, நீ, நீதி! நீ, அன்பு! நீ, அருள்! நீ, கருணை! நீ, இன்பம்! இறைவா, இந்த உயரிய பண்புகள் குடி கொண்டுள்ள ஆன்மாவின் இதயத்தில் குடியிருந்தருள்வாய்! இறைவா, இப்பண்புகள் உடையவர்கள் நல்லவர்கள்! வலிமையுடையவர்களே நல்லவர்களாக வாழ முடியும்!*

*அற்பச்செய்திகளில் சலுகை காட்டுவது, மன்னிப்பது நன்மையும் அல்ல; வலிமையும் அல்ல. வாழ்க்கையில் நிகழும் பிழைகளைப் பொறுத்துக் கொள்ளலாம்; ஆனால், தாங்கிக் கொள்ளக் கூடாது!*

*களைகள் மண்டிய கழனியில் பயிர் வளருமா? அது போல அநீதி நிலவும் இடத்தில் நீதி இருத்தல் இயலாது! பொய்யமை நிந்திக்காது போனால் உண்மையைச் சாதிக்க இயலாது. சோம்பலை விட்டொழிக்காத இடத்தில் நல்வாழ்க் கையைப் படைக்க இயலாது.*

*இறைவா, நான் தீமையை எதிர்ப்பதும் உனக்குச் செய்யும் வழிபாடே என்று உணர்த்தியருளிய மாட்சிமையை என்னென்பேன்! தீமையுடன் சமரசம் கூடாது. கூடாவே கூடாது. தீமையை எதிர்ப்பதுவே வாழ்க்கையின் குறிக்கோள். இதுவே நன்மைப் படைப்பின் தொடக்கம்.*

*தீமையை எதிர்ப்பது, தீமையுடையோரை அங்கீகரிக் காமல் இருப்பது ஆகிய நெறிமுறைகளில் நின் ஆணை வழி நடப்பேன். இது உறுதி. தீமையை எதிர்ப்பது உன் ஆணைக் குக் கட்டுப்பட்ட வாழ்க்கை என்பதை உணர்த்திய தேவ தேவே! தீமையெலாம் மடிவுறுக! நாளும் நன்மை வந்தெய்துக!*

## ஜூன் 9

### மூலநோய் முதல் கொள்முதல் நோய்வரை நீக்கியருளுக!

இறைவா, ஆரூரர் போன்ற அருட் செல்வர்கள் "நீ யல்லாது துணை பிறிதிலனே." என்று போற்றிய கடவுளே! நீயலால் எனக்குத் துணை யார்?

இறைவா, ஒப்புக்குப் பலர் "நான்", "நீ" என்று வரலாம். ஆனால் உன்னைப் போல் என்னை ஆட்கொண்டருளிச் செய்யும் தலைவன் எனக்கு யாருளார்?

பிழையெலாம் பொறுத்து ஆட்கொள்வாய். இறைவா, நீயே எனக்குத் துணை. இது நான் தெரிந்து எடுத்த முடிவு. உனக்கே நான் அடைக்கலம்.

இறைவா, நீ என்னை ஆட்கொண்டருளுதல் வேண்டும். நின் பணி பிழைக்கின் புளியம் வளாரினால் மோது. அடித்து அடித்துத் திருத்து. நான் உன் உடைமை. நீ என்னை ஆட்கொண்டருளாது போனால் சவலையாய் என் வாழ்நாள் கழிந்து போகும். இறைவா, அருள்பாலித்திடுக.

இறைவா, கருணை காட்டுக! என் வாழ்வில் நீங்காத் தனித்துணை மருந்தாக வந்தருளி மூலநோய் முதல் கொள்முதல் நோய்வரை நீக்கி அருள் செய்க! இன்பக் கிளுகிளுப்பை வழங்கி அருள்க! எம் துணைவா! அருள் செய்க!

கு. X. 12.

## ஜூன் 10

### எப்போதும் விழிப்புநிலையில் இருக்க அருள் செய்க!

*இறைவா, நீ புவனியில் சேவடி தோய வந்து அருளிய போதே நின்னைச் சிக்கெனப்பிடித்திலன். பேதையாயினேன். வாய்ப்புகள் தாமே வருவன. வரவழைக்க இயலாது.*

*கதிரவன் ஒளி, இயற்கை நியதியின்படி சுழற்சி முறையில் வருவது. கதிரவன் காயும் பொழுதுதான் பண்டங்களைக் காயப்போடுதல் வேண்டும் என்பது சராசரி அறிவு.*

*இறைவா, அதுபோல வாய்ப்புகள் வரும்போது, வாய்ப்புகளைப் பயன் படுத்திக் கொள்வதுதான் வாழ்க்கை முறை. வாழ்வாங்கு வாழும் நியதி. இறைவா, நான் எப்போதும் விழிப்பு நிலையில் இருக்க அருள் செய்க!*

*அண்ணலே, நான் எப்போதும் பணிகளை ஏற்கும் ஆயத்த நிலையில் இருக்க அருள் செய்க. இறைவா, ஊனில் உயிர் உலாவர வைத்த என் தலைவா, இந்த உடம்பைக் கொண்டே நான் முத்திநிலையை அடைய வேண்டாமா?*

*இறைவா, அருள்செய்க! இமைப்போதும் சோராது நின்திருவடிகள் போற்றி வாழ்ந்திட அருள் செய்க! நீ என்னைப் பணி கொள்ளும் துறைதோறும் பணிகள் செய்து வாழ்ந்திட அருள்செய்க!*

*நான் இனியும் ஏய்த்து ஏக்கற்றுப்போகேன். இறைவா, அருள்செய்க! வழங்குகின்ற நின் அருட் கொடை முழுதும் காண்போனாகச் செய்க.*

## ஜூன் 11

### உழைப்பாளியாக உழைத்து வாழ்ந்திட அருள்செய்க!

*இறைவா, திட்டமிட்டு உலக இயக்கத்தை இயற்றும் இறைவா, என் வாழ்க்கையில் இன்னமும் திட்ட அமைவு கால் கொள்ள மறுக்கிறது. அதனால் ஒழுங்கமைவு இல்லை.*

*ஒழுங்கமைவு இன்மையால் ஆக்கம் இல்லை. ஆக்கம் இல்லாததால் இன்பமும், மகிழ்வும் இல்லை. இவை யனைத்தும் காரணகாரியத்தொடர். ஆனால் நானோ எதற்கும் சமாதானம் கற்பித்து வருகிறேன். இதனால் என்ன பயன்? தற்காலிகமான மனச்சாந்தி. அவ்வளவு தானே?*

*இழந்த ஆக்கம் திரும்ப வரப்போகிறதா? இறைவா, என்னுடைய திட்டமிட்ட வாழ்க்கையை இன்றே தொடங்க அருள் செய்க! ஆம் இறைவா, ஒவ்வொரு நொடிப்பொழுதும், பணி செய்ய வேண்டும்.*

*பயனுடைய பணி செய்ய வேண்டும். இறைவா, நான் உண்ணும் உணவு உழைப்பின் விளைவு. இயற்கையின் ஓய்விலாத உழைப்பும், உழவரின் உழைப்பும் சேர்ந்தளித்த கொடையே, நான் உண்ணும் உணவு.*

*நான் உண்ணும் ஒவ்வொரு கவளமும் என்னைப் பார்த்துச் சிரிக்கிறது. ஆம், "உழைப்பை உண்கிறாய், திரும்ப உழைப்பை, உழைப்பால் ஈடு செய்ய மறுக்கிறாயே" என்று!*

*இறைவா, என் உடலாற்றலின் ஒரு சிறு பகுதியும் வீணாகாமல் பயன்படத்தக்க வகையில் திட்டமிட்டு உழைக்கும் உறுதியைத் தா. உழைப்பே உலகு! தெய்வம்! எல்லாம் உழைப்பின் பயனே! உழைப்பாளியாகவே.உழைத்து வாழ்ந்திட அருள் செய்க!*

## ஜூன் 12

### இறைவா, வாய்ப்புகளை நழுவ விடாத பாக்கியசாலியாகிட அருள் செய்க!

இறைவா, காலத்தின் காலமாகி நிற்கும் கடவுளே! "காலம்" ஓயாது. நில்லாது இயங்கிடும் இயக்கம். ஒரு காலத்தைப் போல் பிறிதொரு காலம் இருக்காது. ஆதலால், ஒவ்வொரு நொடியையும் முழுமையாகப் பயன்படுத்தி ஆக்கம் தேடுதலே வாழ்வு சிறக்க வழி.

இந்தப் பரந்த உலகத்தில் எனக்கு உதவி செய்யக் கூடியவர்கள் சில சந்தர்ப்பங்களில்தான் கிடைக்கிறார்கள். நான் அவர்களுடைய உதவியை முழுமையாகப் பயன் படுத்திக் கொள்வதில்லை. என்னே! என் செயலின்மை.

இறைவா, எனக்கு ஒவ்வொரு நொடிப் பொழுதும் வாழும் திறனை அருள் செய்க. என்னுடைய உதவியாளர்கள் நான் சுண்டுவிரலைக் காண்பித்தால் அதனைப் பற்றிக் கொண்டு மேலே ஏறும் திறனை அருள்செய்க!

கிடைத்த வாய்ப்புகளைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டு உறுதியுடன், அழுத்தமாக முயன்றால் எண்ணற்ற காரியங்களைச் சாதிக்கலாம். இறைவா, எனக்கு உதவிக்கு வருபவர்கள் எனக்கு வாய்த்த செல்வமாவர். அவர்தம் உதவிகளே என்னை வளர்ப்பவை. இத்தகு வாய்ப்பு ஒரோ வழிதான் வந்தமையும்.

இறைவா, நான் நழுவ விடாத நற்பாக்கிய சாலியாக வாழ்ந்திட அருள்செய்க. எனக்கு உதவி செய்வோர் மனம் மகிழ நான் என் வாழ்க்கையில் உயர அருள் செய்க!

கிடைக்கும் சிறு உதவியையும் பெரிய காரியமாக வளர்த்துப் பயன்கொள்ளும் ஆற்றலினை வழங்கியருள்க. உதவி செய்தார்மாட்டு நன்றியும், கடப்பாடும் உடையவனாக வாழ்ந்திட அருள்செய்க!

## ஜூன் 13

### உழைக்கும் தொழிலாளியாக வாழ்ந்திட அருள் செய்க!

இறைவா, நீ ஒரு தொழிலாளி. உயிர்க்குலத்தைப் படைத்து, காத்து, அழித்து, மறைத்து, அருளும் தொழிலாளி. இது ஒரு மாபெரும் வேலை. இடையீடு இல்லாது, ஓய்வில்லாது, தற்செயல் விடுப்புக்கூட இல்லாது செய்யப்பெறும் வேலை.

இறைவா, நீ விருப்பத்துடன் ஏற்றுக்கொள்கிற சமூகப் பணிகள் வேறு உள்ளன. வந்திக்காகக் கொற்றாளாகப் போய் மண் சுமந்தனை. ஆரூரருக்குப் பெண் தேடி, நண்பன் தேடித் தந்தாய். தாயாகி மகப்பேறு மருத்துவம் பார்த்தாய். மாமனாகி வழக்குரைத்தாய்.

இறைவா, ஓயாது உழைக்கும் தொழிலாளி நீ. எனக்கோ மணிக்கணக்கில் வேலை. என் வாழ்நாளில் மூன்றில் ஒரு பங்குதான் வேலை. ஏதோ செய்வேன். "என்ன செய்தாய்? என்ன பயன்?" என்று மட்டும் கேட்டுவிடாதே. நான் தொழில் செய்யவில்லை என்பதைச் சுற்றியுள்ள உலகமே பறை சாற்றுகிறதே.

ஒன்றை, பதின்மடங்கு பயனுடையதாக்கி மதிப்பு உயர்த்தி வாழ்தலே தொழில் வாழ்க்கை. நான் தொழிலா செய்கிறேன்? இதிலும் பாவனைதான். பாவனையே பெருகிப் பாவத்தைப் பெருக்குகிறது.

இறைவா, என்னைப் பாவத்திலிருந்து மீட்பாயாக! தொழில் செய்யும் மனப்பான்மையை அருள்செய்க. நான் உண்மையில் ஓர் உழைக்கும் தொழிலாளியாக வாழ்ந்திட அருள் செய்க!

என் தொழில் திறத்தால் இந்த வையகம் முழுதும் பாலித்திட அருள்செய்க! இறைவா, நான் தொழிலாளி என்பதை உணர்த்திய கருணைக்குப் போற்றி! போற்றி!!

# ஜூன் 14

## சமநிலை மனம் தந்தருள் இறைவா!

இறைவா, வேண்டுவார் வேண்டுவதே ஈந்து புகழ் சுமக்கும் புண்ணியனே. இறைவா, எனக்குத் தேவை நிறைய இருக்கிறது. எனக்குத் தேவை அறிவு. அறிவை நீ தரமுடியாது. கற்பதன்மூலம் பெறுவது அறிவு. எனக்குத் தேவை செல்வம். நீ செல்வத்தைத் தரமுடியாது. செல்வம் உழைப்பினால் படைக்கப்படுவது. எனக்குத் தேவை அமைதி. அமைதி சமநிலை உணர்வால் தோன்றுவது. இதுவும் ஒருவர் தந்து ஒருவர் பெறுவது அல்ல. இறைவா, இவையெல்லாம் என் தேவை.

இவற்றையெல்லாம் நான் பெற ஆசைப்படுகிறேன். ஆனால், பெறுதலுக்குரிய முயற்சி சிறிதும் இல்லை. இறைவா, அது மட்டுமா! இவையெல்லாம் எளிதில் பெற இயலாது. அதற்குக் கொடுத்து வைத்திருக்கவேண்டும் என்ற சமாதானத்தையும் செய்துகொண்டு ஊன் பொதி சுமந்து உயிர் வாழ்கின்றேன். என் செய்ய? நின் கருணை என்பால் விழவில்லை.

நான் கற்கும் முயற்சியில் ஈடுபடும் முனைப்பை நீ எனக்கு அருள்செய்! செல்வத்தைத் தப்பாது தரும் உழைப்பு எண்ணத்தைத் தந்தருள்செய்க. விருப்பு, வெறுப்பற்ற சமநிலையில்தான் அமைதி என்றுணரும் ஞானத்தினைத் தந்தருள் செய்.

இறைவா, "இயலாதது, முடியாதது, இவ்வளவுதான் முடிகிறது, கொடுத்து வைத்தது இவ்வளவுதான்" என்ற சைத்தான் தத்துவங்களை மூளையிலிருந்து அகற்றி அருள் செய்க!

கற்றனைத்து அறிவு ஊறும். உழைப்பளவு செல்வம் தப்பாமல் விளையும். சமநிலை மனம் அமைதி தரும். இவற்றை என் வாழ்க்கையில் கடமைகளாக, நோன்புகளாக ஏற்று வாழ அருள்செய்க! இறைவா, இயலாமை இல்லாமல் போக அருள்செய்க!

## ஜூன் 15

### இறைவா, என் வாழ்க்கைக்குரிய வரைபடத்தை நானே வரைந்து கொண்டு வாழும் உரிமை வழங்கியருள்க!

இறைவா, உன்னை நான் நம்புகின்றேன். தொழு கின்றேன். உனக்கு நான் பயப்படுகிறேன். இது உண்மை. இறைவா, ஒரு வேண்டுகோள். நான் உன்னை நம்பித் தொழு கின்றேன். உனக்குப் பயந்தே என் வாழ்க்கையை நடத்து கின்றேன்.

ஆனால் நான் என் வாழ்க்கையை நான் விரும்பும் வகையிலேயே சுதந்தரமாக நடத்திக்கொள்ள ஆசைப்படு கிறேன். நான் உன்னுடைய ரப்பர் முத்திரையாக, மையொற் றித்தாளாக இருக்க ஆசைப்படவில்லை.

நான் என் சொந்தமாக வாழ ஆசைப்படுகிறேன். நான் என் வாழ்க்கைக்குரிய வரைபடத்தை வரைந்து கொண்டு நடத்த உரிமை வேண்டும்! இயற்கை நியதிகள் கூட என்னைத் தீண்டாத வண்ணம் அருள் செய்க! நானே திட்டமிடுவேன். என் வாழ்க்கையை நானே உருவாக்கிக் கொள்வேன்.

நான் எனக்காகவும் இந்த உலகத்திற்காகவுமே உழைத்து வாழ்வேன். இரந்து வாழும் வாழ்வு எனக்கு வேண்டாம். நான் என் பொறுப்பை உணர்கிறேன்.

நானாக வாழும் வாழ்க்கையை அருள்செய்க! நான் என் சொந்தப் பொறுப்பில் இந்த வையகத்தை உண்பித்து வாழ்ந்திடும் திறனைப் பெற்றுள்ளேன். என்னைச் சுதந்தர மாக வாழ்ந்திட அருள்செய்க! ஆனாலும் நான் உன் அடிமையே.

நான் உன் உழைப்பால் கருணையினால் வாழாமையை அருள்செய்க! நான் என் கடமைகளைச் செய்கின்றேன். தொடர்ந்து செய்கிறேன். இறைவா, அருள் செய்க!

## ஜூன் 16

### எப்பணியையும் திறம்படச் செய்ய இறைவா அருள்க!

இறைவா, வித்தின்றியே விளைவு செய்யும் வித்தகனே! நின் ஆற்றல் அளப்பிலாதது. ஒன்றுக்கும் ஆகாத கழிவு களையே எருவாக்கி, படைக்கும் ஆற்றல் உடையதாக்கி விடுகிறாய்.

இறைவா, நான் ஒரு பொல்லாத மனிதன். எனக்கு நீ வழங்கிய அறிவுக் கருவிகளின் அற்புதம் என்னே! ஆனாலும் நான் என்ன செய்கிறேன். வீணில் உண்டு உடுத்து செத்து கொண்டிருக்கிறேன். இறைவா, என்னைத் திருத்து, என் புத்தியைத் திருத்து.

எனக்கு வாய்த்த வேலைகள், பணிகள் எவ்வளவு சிறியதாக இருப்பினும் நான் அதை ஏற்று உவப்புடன் செய்ய வேண்டும். அதுமட்டுமல்ல இறைவா, நான் செய்தால் போதாது - நான் திறம்படச் செய்யவும் வேண்டும்.

சிறிய வேலைகளே பெரிய வேலைகளுக்குரிய வாயில்கள். இறைவா, பணிகளில் அற்பமான பணி எது? யாதொன்றும் இல்லை.

தெருக்களைக் கூட்டித் துப்புரவு செய்யும் தொழிலும் கூட அதன் தன்மையில் மிக மிக உயர்ந்த தொழில். கோடான கோடி மக்களை நோயினின்று பாதுகாக்கும் தொழில். அதனாலன்றோ அப்பரடிகள் பார் வாழத் திருவீதிப் பணி செய்தார்.

இறைவா, எந்தப் பணியும் நல்ல பணியே! எப்பணியும் செய்யும் திறத்தில்தான் சிறக்கிறது. இறைவா எந்த ஒரு பணியையும் திறம்படச் செய்ய அருள் செய்க!

## ஜூன் 17

## கைத்திருத்தொண்டு செய்யும் கடப்பாட்டில் நிற்பேன்

*இறைவா, நான் உன்னை நூறாயிரம் நாமங்கள் சொல்லிப் போற்றிப் புகழ்கின்றேன். எண்ணற்ற வேண்டுதல் களையும் உடன் இரந்து கேட்கிறேன். ஆனால் நீயோ என் வாய் கூறுவதை எளிதில் கேட்பதில்லை. நீ என்னிடம் கேட்பது என் கைகள். அதாவது நான் கைகளால் செய்யும் கைத் திருத்தொண்டையே நீ விரும்பிக் கேட்கிறாய்.*

*இறைவா, நான் வாயினால் பேசி என்ன பயன்? என் கைகள் அல்லவா, உழைப்பின் சின்னம். படைப்பின் கருவிகள். இறைவா, நீ நிகழ்த்தும் ஐந்தொழில்களை என் கைகளும் நிகழ்த்தும் இயல்புடையன. ஆனால், இன்று என் கைகள் உண்ணப் பயன்படுகின்றன; அடிக்கப் பயன் படுகின்றன. இறைவா, மன்னித்துக்கொள்.*

*என் கைகள் உழைப்பில் ஈடுபட்டுக் காய்ப்பேறுக. என் கைகள் அன்பினால் அனைவரையும் அரவணைத்திடுக. என் கைகள் அள்ளி வழங்கிடுக. என் கைகள் ஒரோவழி தீமையை அழித்திடுக.*

*இறைவா, இப்பரிசே எனக்கருளி என் கைகள் தொழிற் பட்டால் உலகம் புதுமை பெறும்! பொதுமை நலம் பெற்று விளங்கும். இறைவா, அருள் செய்க! இந்த உலகு நாள்தோறும் புதுமை பெறத்தக்க வகையில் என் கைகள், தீமை செய்யாமல் பாதுகாத்துக் கொள்ளட்டும்.*

*இறைவா, என் கரங்கள் கொடுப்பதைவிட என் உறவினர்கள் கை, எடுத்துக் கொள்ளும் உரிமை பெற்ற கரங் களாக மாறினால் ஒப்புரவுக் கொள்கை சிறக்கும். இறைவா, அருள் செய்க!*

*இறைவா, உன் குறிப்புணர்ந்தேன். இனி வாயினால் பேசிக் கொண்டு உன் சந்நிதிக்கு வர மாட்டேன். கைத் திருத் தொண்டு செய்யும் கடப்பாட்டில் நிற்பேன். அருள் செய்க.*

## ஜூன் 18

### இறைவா, பாவச் செயல்களை நான் இனி செய்ய மாட்டேன்

*இறைவா, பாவநாசா, புண்ணிய மூர்த்தியே! இறைவா, இந்த உலகத்தில் ஒருவன்கூட பாவத்தைச் செய்யாதவன் - பாவத்தை எதிர்க்காதவன் இல்லை! ஏன்? ஒருவன் ஓர் அநியாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலும் அவன் ஒரு பாவியே.*

*இறைவா, இன்று இந்த உலகத்தில் அநியாயத்தைத் தவிர வேறு என்ன நிகழ்கிறது! இந்த அநியாயத்தைப் பாராட்டிக் கூறும் இழிநிலையும் வளர்ந்து விட்டது. அநியாயமே நியாயமாகி விட்ட காலம் இது. இறைவா, என்னைக் காப்பாற்று!*

*என் வாழ்க்கை நிலையானது அல்ல. ஆனால் நான் வாழும் வாழ்க்கையை நிலையானதாக்கலாம். அநியாயங் களை நான் எதிர்க்க வேண்டும்.*

*நான் நியாயங்கருதிப் போராட வேண்டும். உழைக் காமல் வாழ்தல், ஊரைக் கொள்ளையடித்து உலையில் போடுதல், பிரிவினைப் படுத்துதல், சாதி, இன, மதப் பிரிவினைகளை வளர்த்தல். கொலை, கொள்ளைகள் நிகழ்த் துதல் ஆகிய பொல்லாங்குகள்-பாவங்கள் நிறைய நடக் கின்றன! இவைகளை நான் பார்த்தும் பாராமல் இருக்கின்றேன்! இல்லை இறைவா, பல சமயங்களில் உடன்பட்டும் இருக்கின்றேன். இறைவா, என்னை மன்னித்து அருள் செய்க!*

*நான் இனி பாவச் செயல்களைக் கண்டிப்பேன். இனிச் செய்யமாட்டேன், துணையும் போக மாட்டேன். இறைவா, அருள் செய்க!*

## ஜூன் 19

### இறைவா, என்னை நான் உள்ளவாறு காண அருள் செய்க!

*இறைவா, ஈசா, நின்னடி போற்றி! போற்றி! வினாக்கள், வளர்க்கும் பான்மை உடையன. அறிவைத் தரும் தன்மை உடையன.*

*ஆனால், என்னுடைய வினாக்கள் என்னை விளக்க முறச் செய்யவில்லை; என் அறிவை வளர்க்கவில்லை. என்னையே வளர்க்கவில்லை. ஆனால், மாறாக மற்றவர் களைத் திக்குமுக்காட வைத்திருக்கின்றன. இறைவா, இதில் என்ன பயன்?*

*சாமர்த்தியங்கள் சாதனைகளாகிவிடா. இறைவா, நானே அறிந்து கொள்ள வேண்டிய செய்திகள் பலப்பல உள. இறைவா, நான் மற்றவர்களை வினாக்கள் கேட்பதைவிட நான் எனக்கே வினாக்களைக் கேட்டுக் கொள்வது பயன் தரும்.*

*"நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார்?" என்று மாணிக்கவாசகர் தம்மைத் தாமே வினாக்கள் கேட்டுக் கொண்டார். இதனால், "நானும் பொய். என் நெஞ்சும் பொய். என் அன்பும் பொய்" என்று உண்மை நிலை கண்டார், தெளிந்தார், அழுதார். நின்னருள் பெற்றார். இறைவா, அங்ஙனமே நான் என்னைக் காணுதல் வேண்டும். உள்ளவாறு காணுதல் வேண்டும்.*

*என் உள்ளத்தின் பொய்மைகளைக் களைதல் வேண்டும். ஞானத்தினை அடைதல் வேண்டும். இறைவா, அருள் செய்க! புறத்தே ஓடித் திரியும் என் அறிவு வேட்கையை அகத்தே திருப்பியருள்க! நானே எனக்கு நல்லவனாக வாழ்ந்தால் நல்லது. இறைவா, அருள் செய்க.*

## ஜூன் 20

### நடுவுரை கூறி வாழ்ந்திட அருள் செய்க!

இறைவா, நாவில் நடுவுரையாய் நின்றருளும் தலைவா! நின் நீதி தழைத்திடுக. போற்றி! போற்றி! இறைவா, மனித உலகம் அன்பு, அறம், நீதி, ஒப்புரவு என்ற நான்கு தடங்கள் அமைந்த அகலவழிப்பாதையில் சென்று கொண்டிருந்தால் ஆபத்தில்லை. மண்ணிலேயே விண்ணகம் ககாணலாம். ஆனால் நடப்பதுதான் இல்லை.

தீமைகளுக்கெல்லாம், தீமை நாவிலிருந்துதான் தோன்றுகிறது. நாவடக்கம் தேவை.

இன்னாதன சொல்லக்கூடாது. புறங்கூறல் ஆகாது. தீக்குறளைச் சென்றோதக்கூடாது. பயனில சொல்லக் கூடாது. பொய்கூறக் கூடாது. நடுவுநிலை பிறழ்ந்து பேசக் கூடாது. இறைவா, நாவிற்கு-நாவினால் சொல்லப்படும் சொற்களுக்கு எவ்வளவு வரையறை! கட்டுப்பாடு.

இறைவா, நான் என் நாவை அடக்கி வாழ்ந்திட அருள் செய்க! ஆய்ந்து ஆய்ந்து சொற்களை அறிந்து கூறும் நற் பழக்கத்தில் என்னை நெறிப்படுத்தியருள்க! நான் நடுவுநிலை பிறழ்ந்து சார்புகள் வயப்பட்டு எதையும் கூறக்கூடாது, பேசக் கூடாது.

நடுவுநிலை!- ஆம், இறைவா, விருப்பு-வெறுப்பு, காய்தல்-உவத்தல் ஆகியனவற்றிற்கு இரையாகாமல் எது வாய்மையோ, எது நன்மையோ அதைச் சொல்லுதல் வேண்டும். இத்தகு நடுவுரைகள் இறைத்தன்மையுடையன. நடுவுரையாகவே இறைவன் நின்றருள் செய்கிறான். இறைவா, நின்றன் திருவுள்ளம் மகிழத்தக்க வகையில் நடுவுரை கூறி வாழ்ந்திட அருள் செய்க!

## ஜூன் 21

### நம்பிக்கையே நல்வாழ்க்கை! இறைவா அருள்க!

இறைவா, நம்பியே கைதொழும் எளியேனை ஏற்றருளும் எந்தையே! "நம்பிக்கை" – சொல் எளிதாக இருக்கிறது. ஆனால், வாழ்க்கையில் கடுமையாக இருக்கிறது.

நம்பிக்கை என்பது எளிதில் தோன்றுவது இல்லை. அப்படியே ஒரோவழி தோன்றினாலும் நிலைத்து நிற்பதில்லை. சிலபொழுது நம்பிக்கையைவிட ஐயப்பட்டு உணர்தலே வாழ்க்கைக்குச் சிறந்த வழி என்றெல்லாம் கருதக் கூடிய சூழ்நிலை தோன்றுகிறது.

நம்பிக்கை கொள்வது என்பது எளிதான காரியம் அல்ல. மிகவும் கடுமையானதாக இருக்கிறது. இங்கும் அங்குமாக நடைபெறும் நம்பிக்கைகள் ஏமாற்றங்களைத் தந்ததன் விளைவாக நம்பிக்கை தோன்றவே மறுக்கிறது.

இறைவா, நம்பிக்கையின்மையினால் வரும் இழப்புகள், துன்பங்களைவிட நம்பிக்கையினால் வரும் இழப்புகள் துன்பங்கள் குறைவு என்றருளிச் செய்கின்றனை, நன்றருளிச் செய்தனை.

இறைவா, நான் நம்பிக்கையை என் வாழ்க்கையின் மையமாகக் கொள்கிறேன். என்னுடைய வாழ்க்கையில் நம்பி நடத்தல்–வாழ்தல் என்ற கொள்கை பொருந்தி அமைய அருள் செய்க. என் நம்பிக்கை உள்ளத்தை வலிமைப்படுத்தித் துரோகங்களை எதிர்த்துப் போராடும் உணர்வைக் கொடு.

என் நம்பிக்கை, அறிவறிந்த ஆள்வினை, திறம்பட இயங்கினாலே, என் வாழ்க்கை எளிதாகிவிடும். நான் நம்பிக்கையோடு வாழ்வேன். பிறரும் என்னை நம்பத் தக்க வண்ணம் நடந்து கொள்வேன். நம்பிக்கையே நல் வாழ்க்கை. இறைவா, அருள் செய்க!

## ஜூன் 22

### சம நிலையில் அமைந்த சமுதாயமே சமுதாயம் – இறைவா அருள் செய்க!

*இறைவா, வல்லார்க்கும் மாட்டார்க்கும் வாய்ப் பளிக்கும் வாய்ப்பே! இன்று என் வாழ்க்கை அப்படி யில்லையே. இறைவா. வல்லாங்கு வாழ்வார் பக்கமே என் துலாக்கோல் சாய்கிறது. இது வாழ்வாருக்கு மாரடிக்கும் உலகம் இறைவா, உன் திருவுள்ளம்தான் என்ன?*

*மலை-மடு என்ற வேறுபாடு உன்படைப்பா? அல்லது உன் திருவுள்ளக்குறிப்பறிந்து நான்முகன் செய்த படைப்பா? இறைவா, நீ வேற்றுமைகளுக்கு அப்பாற்பட்டவன்.*

*நபிகள் நாயகம் அவர்கள் "ஏற்றத்தாழ்வற்ற நடு நிலையான சமுதாயத்தினராகவும் நாம் உங்களை ஆக்கி னோம்" என்று திருமறையில் அருளியுள்ளார்.*

*இறைவா, ஏற்றத்தாழ்வு இயற்கையுமன்று. நின் படைப்புமன்று. அது மட்டுமா? "ஆரம்பத்தில் மனிதர்கள் அனைவரும் ஒரே சமுதாயத்தினராக இருந்தனர்" என்றும் திருமறை கூறுகிறது. இறைவா, திருமறை மேலும் கூறுகிறது, "நீங்கள் உங்களுக்கிடையில் ஒருவர் மற்றவர்களின் பொருள் களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள்" – என்று. இறைவா, உன் திருவுள்ளம் ஏற்றத் தாழ்வற்ற சமுதாய நிலை.*

*இறைவா. நான் பிறர் உணவைப் பறிக்காது உழைத்து வாழும் நெறியில் என்னை நெறிப்படுத்தியருள்க! எந்தச் சூழ் நிலையிலும் சமநிலை பேணும் அறிவைத் தா. பொதுமை வேட்டு நிற்கும் வாழ்க்கையை அருள் செய்க!*

*சமநிலையில் அமைந்த சமுதாயமே சமுதாயம். இறைவா, அருள் செய்க! நான் உழைக்கின்றேன். உழைத்து உண்பேன். சமநிலையே சமயம். இறைவா, அருள் செய்க!*

## ஜூன் 23

### இடரினும் தளரினும் நின் அருள்மனம் அமையும் வழியில் தொடர்ந்து வருவேன், அருள்க!

*இறைவா, தடையிலா ஞானம் தந்தருள் செய்யும் ஞானமுதல்வனே, போற்றி! போற்றி! இறைவா, நான் வாழ ஆசைப்படுகிறேன். நன்றாக வாழ ஆசைப்படுகிறேன். முழுமையாக வாழ ஆசைப்படுகிறேன்!*

*ஆனால் நான் வாழ ஒரே ஒரு நிபந்தனை. இறைவா, ஏன் சிரிக்கிறாய். என்னைச் சிரித்து மயக்கிப் பயனில்லை! எனக்கு அருள் செய்ய வேண்டும்!*

*என் வாழ்க்கைப் பயணத்தில் தடைகள் வரக்கூடாது. சோதனைகள் வரக்கூடாது. துன்பங்கள், துயரங்கள் தலை காட்டவே கூடாது. இறைவா, என்ன மீண்டும் சிரிக்கிறாய், என்ன சொல்கிறாய்? வேதனை இல்லாமல் மகப்பேறு அடைய வேண்டும். உலைநீர் கொதிக்காமல் பண்டங்கள் வெந்தாக வேண்டும். நிலம் உழுபடாமல் விளைபொருள் தர வேண்டும். என்ன இறைவா, என்னைப் பார்த்து நகைக்கின்றாய்.*

*இறைவா, என்ன அருளிச் செய்கின்றன. வாழ்க்கைப் பயணத்தில் தடைகள் வரும். தடைகள் வருவதே வளர்ச்சிப் போக்குக்கு அடையாளம். சொர்க்கத்தின் வாயிலுக்கு அழைத்துச் செல்லும் பாதையில் எண்ணற்ற தடைகள் தோன்றும். துன்பங்கள் வரும். துயரங்கள் வரும்.*

*தடைகளைக் கடந்து பயணத்தை மேற்கொள்ளும் பொழுதுதான் நான் வளர்கின்றேன். இறைவா, நீ அருளிச் செய்வது முற்றிலும் உண்மை. தடையிலாத வழிநடை எங்கும் கொண்டு சேர்க்காது.*

*இறைவா, அருள் செய்க! இடரினும் தளரினும் உன் அருள் மனம் அமையும் வழியில் தொடர்ந்து வருவேன். வாழ்வேன். இறைவா, அருள் செய்க!*

## ஜூன் 24

### பணியே, வாழ்க்கைக்கு அணி. அருள் செய்க!

*இறைவா, எழுதிக் காட்ட இயலாத அருளே! பொழுது புலர்ந்தது. கதிரொளி படர்கிறது. உலகத்திற்குப் பொழுது விடிந்து விட்டது. ஆனால் எனக்கு இன்னும் விடியவில்லை. இருளே தொடர்கிறது. துன்பங்களில் கிடந்து எய்த்துப் போனேன். இறைவா, இது சமயம், எடுத்தாள்க.*

*இறைவா, நான் உன் மகவு, உன் அடிமை; இது என்றோ முடிந்த முடிவு. நானோ பிழை செய்கிறேன். என் உடல் பொருள் ஆவி மூன்றையும் உன்னிடத்தே ஒப்புவித்தேன். அன்றே நீ எடுத்துக் கொள்ளவில்லையா?*

*இறைவா, என்மேற் குறை சொல்வது நியாயமா? இனி என்மீது குறை சொல்ல வேண்டாம். இறைவா என்னை எழுப்பியருள்க! என் சித்தம் தெளிவித்தருள் செய்க! நான் செய்ய வேண்டிய பணிகளை மெல்ல எடுத்துக் கூறிப் பணி கொள்க. நின் பணி பிழைக்கில் என்னைத் தடிந்தும் பணி கொண்டு அருள்பாலித்திடுக.*

*இறைவா, ஒருமையில் உலகம் இயங்கிடச் செய்ய வேண்டும். எங்கும் சமரசமும்-சமாதான சகழ்வாழ்வுமே நிகழ்ந்திடுதல் வேண்டும். மதம் பிடித்தவர்களின் வாய் கொழுப்புகள் அடங்கவேண்டும். இறைவா, நன்றருளிச் செய்தனை. என் தூக்கந் தவிர்ந்தது. என் அறிவு விழிப்புற்றது.*

*இறைவா, என்னை ஆட்கொண்டருளிய தலைவனே! நான் செய்ய வேண்டிய பணிகளைச் சொல்லியருள் செய்க! இறைவா, உறக்கம் தவிர்த்திடுதல் வேண்டும். ஒருமைப்பாடு காண வேண்டும். சாதி சமய ஆசாரங்கள் தவிர்த்திடுதல் வேண்டும். மதமெனும் பேய் பிடிக்காமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். எல்லா உயிர்களுக்கும் அன்பு செய்ய வேண்டும்.*

*இறைவா, என்னைப் பணி கொண்டருளும் தலைவா! நின் பணி ஏற்றேன். செய்வேன். நின் பணி பிழைக்கில் அடித்தும் அருள் செய்க! பணியே வாழ்க்கைக்கு அணி. அணியே பணி.*

## ஜூன் 25

### என் வாழ்க்கையின் சாரமாக அன்பு இருக்க அருள் செய்க!

இறைவா, எனக்கு எய்ப்பினில் வைப்பாக நின்றருளும் நிதியே. நின் திறம் போற்றி! போற்றி!! இறைவா, என் வாழ்க்கை வளமாக அமைய வேண்டும். நான் வேண்டுவ தெல்லாம் கிடைக்க வேண்டும்.

மகிழ்ச்சியாக வாழ்தல் வேண்டும். இன்பமாக வாழ்தல் வேண்டும். புகழுடன் வாழ்தல் வேண்டும். இறைவா, இவ்வளவும் எனக்குத் தேவை. இத்தகு வாழ்க்கையை நான் அடைய பெரிய மூலதனம் தேவை. இறைவா, பொற்கிழி தருகிறாயா?

இறைவா, வாழ்க்கைக்குப் பொருள் நடைமுறை மூலதனமே தவிர, அது முதலீட்டு மூலதனம் அல்ல. எனக்கு முதலீட்டு மூலதனம் தேவை. நடைமுறை மூலதனம் எப்படியும் சம்பாதிக்கலாம். முதலீட்டு மூலதனம் தேவை.

இறைவா, கோடி தொகுத்தவர் கூடத் துய்க்காமல் வாழ்வதைக் காண்கிறோம். எனவே, வாழ்க்கைக்குப் பணம் மூலதனம் அல்ல. இறைவா, அப்படியா! சரியான மூலதனத் தைக் காட்டியருளியுள்ளனை. நான் அன்பாக இருத்தல் என்பதே.

அன்பிற்கு ஈடான மூலதனம் உலகத்தில் இல்லை. இறைவா, இந்த மூலதனம் எனக்குக் கிடைக்குமா? அல்லது வேறுயாராவது எடுத்துக்கொண்டு போய்விட்டார்களா? அப்படியா! இறைவா, இந்த உலகில் யாரும் இன்னும் மூல தனத்தைக் காணவில்லை, எடுக்கவில்லை, பயன்படுத்த வில்லை.

இறைவா, உனக்கு ஆயிரம் ஆயிரம் போற்றிகள் கூறி வழிபடுகின்றேன். நான் எல்லாரிடமும் அன்பாக இருப் பதுவே வாழ்க்கையின் மூலதனம். இறைவா, என் வாழ்க் கையின் சாரமாக அன்பு இருக்க அருள் செய்க!

கு.X.13.

## ஜூன் 26

### மாறா அன்பு செய்யும் பண்புள்ளத்தைக் கொடு

இறைவா, என் பிழைகள் பொறுத்தாளும் புண்ணியனே. இறைவா, நான் ஒரு பேதை. அறியாமையே என் உடைமை. நன்றும் தீதும் உணராமல் பிழை செய்கின்றேன்.

இறைவா, நான் ஒரு பேய். பேய், குறிக்கோள் இல்லாதது; குறிக்கோள் இல்லாமலே சுற்றும்; தன் கண்ணில் பட்டவர்களைப் பிடித்துக் கொள்ளும்; அவர்களை இடமாகக் கொண்டு ஆடும். நானும் அங்ஙனமே குறிக்கோள் இல்லாது வீணே வாழ்கிறேன். வாழாமல் வாழ்கிறேன். யாதொரு பயனுமின்றி வாளா உழல்கிறேன்.

இறைவா, நான் ஒரு நாய். அதுவும் ஊர் நாய். இல்லை, இல்லை. நாய் என்னிலும் சற்று உயர்ந்தது. சோறு போடுபவனுக்கு நாய் நன்றி காட்டும், வாலாட்டும். நான் அங்ஙனம் இல்லையே! எனக்கேது நன்றி. நல்லவற்றில் மறதி. பொல்லாங்கில் அபார நினைப்பு.

இறைவா, நான் ஒரு பித்தன். என் சித்தம்போக்கு என் போக்கு. நான், ஒருநெறி பற்றுவதில்லை, நிற்பதில்லை. நான் செய்த மோசமான பிழைகள் எவ்வளவு? ஒன்றா? இரண்டா? இல்லை. என் வாழ்க்கை பிழை மலிந்த வாழ்க்கை.

என் பிழைகளைக் கண்டு, திருத்தித் தீர்வு கண்டு என்னை ஆட்கொள்வது என்றால் இப்பிறப்பில் ஒன்றும் நடக்காது. இறைவா, ஆதலால் நின் திருவுள்ளம் என் பிழைகளைப் பொறுத்தாட் கொண்டது. இறைவா, நின் கருணைக்கு ஆயிரம் ஆயிரம் போற்றிகள்.

இறைவா, நான் என் வாழ்க்கையில் மற்றவர் செய்யும் பிழைகளை - இழைக்கும் துன்பங்களைப் பொறுத்தாற்றிக் கொள்ளும் பண்பினைக் கற்றுத் தா! என்னைச் சுற்றி வாழ்பவர்களிடம் நான் துன்பம் அனுபவித்தாலும் நான் மாறா அன்பு செய்யும் பண்புள்ளத்தைக் கொடு. இதுவே கருணை, அருள்! இறைவா, அருள் செய்க!

## ஜூன் 27

### நான் என் மீது அதிகாரம் செலுத்தி வாழ்ந்திட அருள் செய்க!

*இறைவா, அடியார்க்கு எளியன் என்றெழுதிய எளியோய். அப்பெற்றியனாகிய நீ என்னை எளிமையாய் வந்து ஆட்கொண்டனை. ஆயினும் என் செய்ய? நான் மீண்டும் மீண்டும் விளக்கொளியில் வீழும் வீட்டில் பூச்சியாகிக் கொண்டிருக்கிறேன். இதற்கென்ன காரணம்? என் துன்பத்துக்கு நானேதான் காரணம்.*

*இறைவா, நான் தனிமுடி கவித்து அரசாள விரும்பு கிறேன். அதிகாரப்பசி கோரப்பசியாக இருக்கிறது. ஆனால், நான் அதிகாரம் செய்ய இயலுமா? அதிகாரம் சென்ற டையுமா? இறைவா, என் அதிகாரம் சென்றடையாது. ஏன்? என் அதிகாரம் செல்லுபடியாக வேண்டுமானால் நான் ஆற்றல்மிக்குடையோனாக இருக்க வேண்டும். என்சக்தி அபரிமிதமாக இருக்க வேண்டும். எனக்கு ஏது ஆற்றல்? சக்தி?*

*இறைவா, இந்த நாக்கை அடக்கமுடியவில்லையே! சுவைபார்த்து வயிறு புடைக்கத் தின்கிறது. அதன் பயனாக எடை கூடுகிறது. எடை கூடினால் எளிதில் நடமாட முடியாது. சோம்பல் வந்தணையும். சோம்பலின் இணை களாகிய - பரிவாரங்களாகிய நோய்கள் ஒன்று பலவாக வந்தடையும். இறைவா, இதுதான் என்னுடைய யதார்த்த நிலை!*

*நான் என் நாவின் மீது அதிகாரம் செலுத்த முடிய வில்லை. வயிற்றின் மீது நாவிற்கு இருக்கும் சர்வாதிகாரத் தைத் தடுக்க முடியவில்லை. நொய்ம்மையானேன்! இறைவா, என் பொறிகள் மீது எனக்கு அதிகாரம் இல்லை. அவை என்னை ஆட்டிப் படைக்கின்றன. இறைவா, என்னைக் காப்பாற்று.*

*இறைவா, நான் ஆற்றலுடையோனாக வளர, வாழ என்மீது எனக்கு முழு அதிகாரம் இருக்க வேண்டும். என் பொறிகளின்மீது தனியரசாணை செலுத்தவேண்டும். நான் என் ஆன்மாவின் மீதே அதிகாரம் செலுத்தி வாழக் கற்றுத் தா! இறைவா, அருள் செய்க!*

## ஜூன் 28

### பிறர்க்கென வாழ்தலே பெரிய நோன்பாகும்!

*இறைவா, ஏன் எனக்குப் போட்டியாக ஆணவம் இருக்கிறது. அம்மம்ம! இந்த ஆணவம் போடுகிற ஆட்டம் தாங்க முடியவில்லை. கத்திரிக்கோலின் இரட்டைச் சிறகுகள் போன்ற "நான்", "எனது" என்ற இரட்டை உணர்வுகளைக் கொண்டு அது என்னை மயக்கித் தன் வயப்படுத்துவது விந்தை!*

*"நான்" என்ற சொல் – உணர்வு அழியத்தான் குடும்பம். சுற்றம், சமுதாயம், என்றெல்லாம் அமைந்தன. ஆனால் இந்த அமைப்புகளுக்கு ஆணவத்தைப் போன்ற கவர்ச்சி இல்லை. ஆற்றல் இல்லை.*

*இறைவா, நான் சாமர்த்திய சாலி தான். அதில் ஒன்றும் குறையில்லை. ஆனால், சாமர்த்தியமெல்லாம் நன்றாற்று வதில் இல்லை. குடும்பம், சுற்றம், சமூகம், சமுதாயம் எல்லா வற்றையுமே நான் எனக்காக ஆக்கிக் கொண்டு விட்டேன். அவற்றிற்காக நான் அல்லன். இறைவா ஏன் இந்த அவலம்? கடைசியில் என்னாகிறது? ஆணவம், ஆணவத்துடன் மோது கிறபோது அழிவு வருகிறது.*

*வேண்டாம், இறைவா, "நான்" வேண்டாம்! "எனது"ம் வேண்டாம். நான் மற்றவர்களுக்கு உதவியாக இருக்கவே படைக்கப்பட்டேன். என் வாழ்க்கையின் குறிக்கோளே அதுதான். ஏன்? என்னிலும் தாழ்ந்த விலங்குகள் தாவரங்கள் வாழ்க்கை கூட உபயோகப்படும் வகையிலேயே இயங்குகின்றன.*

*நான் பிற உயிர்களுக்கு உபயோகப்பட வேண்டும் என்ற உணர்வு வந்துவிட்டால் ஆணவம் தலைகாட்டாது. அன்புணர்வு வந்தமையும். பின் நீ, என் இதயத்தில் இடம் பிடிப்பாய்!*

*ஆம், பிறருக்கென வாழும் நோன்பே, நோன்பு! இந்த நோன்பினை நோற்றால் எளிதில் உன்னை அடையலாம். இறைவா, இனி என் வாழ்வின் குறிக்கோளே இது தான். நீயும் வாழ்த்து!*

## ஜூன் 29

### வழி நடைப் பயணம் முழுதும் என்னுடன் வருக, இறைவா!

என்றன் உயிரில் இடம் கொண்ட இறைவா. ஏன் எனக்கு இந்த மயக்கம், கவலை, சொல்? இன்று எனக்கு விடை தெரிந்தாக வேண்டும். இறைவா, என்ன சொல்லு கிறாய்? ஆம், அது உண்மைதான். எத்தனை கோடி இன்பங்கள் வைத்திருக்கிறாய்.

ஆனால், இறைவா, என்மீது சினம் கொள்ளாது கேட்கத் திருவுள்ளம் பற்றுக! பாலுக்குக் காவலாகப் பூனையை வைக்கலாமா? உன்மீதும் குறையில்லை. என்மீதும் குறையில்லை. ஆனால் பொறிகள்-புலன்கள் படுத்தும்பாடு அதிகம். தாங்க முடியவில்லை. ஆம் இறைவா, எந்த ஒன்றையும் முறையாகப் பயன்படுத்துவதில்லை.

எதையும் முறையாகப் பயன்படுத்தினால் அது நல்ல வண்ணம் பயன்படும். ஆனால் என் நிலை என்ன? பொறிகள் என்மீது மேலாண்மை கொள்ளத்தக்க வகையில் எளியனாகி விட்டேன். நொய்ம்மை அடைந்து விட்டேன்.

பொறிகளின்மீது தனியரசாணை செலுத்த முயன்றேன். இல்லை. ஏன் தனியரசு செலுத்தவில்லை? நான் ஆசை களுக்கு ஆட்பட்டு, ஆளுமையை இழந்து அல்லற்படுகிறேன்.

இறைவா, ஆசைகளினின்று விடுதலை பெற அருள் செய். இறைவா, ஆசைகளை அறுக்க வேண்டாம் என்றா சொல்கிறாய்? அப்படியா? இறைவா, ஆசைகளின் நோக்கத்தை மாற்றச் சொல்கிறாய். அவ்வளவு தானே? இன்று முதல் உறுதி எடுத்துக் கொள்கிறேன்.

இறைவா, எனது ஆசைகள் என்னை நோக்கியனவாக இருக்காது. என்னைச் சுற்றியுள்ள உலகம் பற்றியதாக இருக்கும். இது உறுதி! வாழ்த்தியருள்க! வழி நடைப்பயணம் முழுதும் என்னுடன் வருக!

## ஜூன் 30

### உழைப்பாளியாக்கி என் வாழ்நாளை ஓங்கிவளரச் செய்க!

இறைவா, கால காலனே, நீ, காலங்கடந்தவன் என்கிறார்களே. உண்மையா இறைவா? நீ, காலங்கடந்தவன் என்றால் காலம் கடத்தும் பழக்கம் உனக்கும் உண்டா? இல்லை. இல்லை! நீ ஒருபோதும் காலம் கடத்துதல் இல்லை. காலதாமதம் செய்வதில்லை.

ஆனால் இறைவா, நீ காலங்கடந்தவன். நீ சாவதில்லை. கால எல்லைகளைக் கடந்தும் வாழ்கிறாய். ஏன் இறைவா, உனக்கு மட்டும் இந்தப் பேறு! நானும் உன்னைப்போல் காலங்கடந்து வாழக்கூடாதா? இறைவா வாழலாம் என்று அருள் செய்கிறாயா? மிக்க மகிழ்ச்சி.

தகுதியுடையனவெல்லாம் வாழும் என்ற ஆப்த மொழி நினைவிற்கு வருகிறது. ஆம், இறைவா, தகுதியுடையன வெல்லாம் வாழும், இன்பத்துடன் வாழும், பெருமையுடன் வாழும், காலங்கடந்தும் வாழும்.

ஆனால், இறைவா, காலங்கடந்து வாழும் உன் தகுதி எங்கே? நான் எங்கே? இறைவா நீ உழைப்பாளி. ஓயாது உறங்காது உழைக்கும் உழைப்பாளி! ஐந்தொழிலை இடைவிடாது இயற்றுகின்றாய்! இயற்கையை ஓயாது இயக்குகின்றாய். ஒழுங்கின்மையும், முறை பிறழ்வும் இல்லாது இயக்குகிறாய். நீ உழைப்பில் மட்டுமா உயர்ந்தவன்? நீ ஒரு பெருந்தகையாளன்.

நானும் தான் உழைக்கிறேன். உழைப்பது போலப் பாவனை செய்கிறேன். ஆத்திரமும் ஆவேசமும் என்னை ஆட்கொண்டுள்ளன. நான் சுயநலவாதி! நான் எப்படி வாழத் தகுதியுடையவனாவேன்? இயற்கைக்கு முரணாக, வாய்ப்பையும் இழந்து வறுமைக்குப் பற்றுக் கோடாக நோய்களுக்குக் கொள்கலனாக வாழ்க்கையைத் தள்ளிக் கொண்டிருக்கிறேன்.

இறைவா, உன் அடிமையை மன்னித்து அருள்க! வாழ்வாங்கு வாழ அருள் செய்க! முதலில் உழைப்பாளியாக்குக.

## ஜூலை 1

## இறைவா, சிறந்த கடமைகள் செய்வதில் ஈடுபடுத்தி ஆட்கொள்க!

*இறைவா, இடர்களையும் ஏந்தலே! போற்றி! போற்றி!! இறைவா, என்னை மன்னித்துக் கொள். ஒரு சாதாரண ஆன்மாவாகிய என்னை ஆட்கொண்டால் என்ன? எண்ணியன முடித்துத் தந்தால் என்ன?*

*இறைவா, ஓரளவு நான் நல்லவனே. இறைவா உன்னை வேண்டுவது எனது நலன் மட்டும் அல்லவே! மற்றவர் நலன் நோக்கிச் செய்யும் பணிகளில்கூட தடங்கல்கள்! தன்னார்வ முடைய தோழர்களைக் காணோம். நீயோ துணை செய்ய மறுக்கிறாய். இறைவா, ஏன் இந்தச் சோதனை.*

*நான் ஒரு சாமான்யன். ஆரூரர், திருவாதவூரர், திருநாவுக்கரசர் ஆகியோரின் நெஞ்சத்தைப்போன்ற நெஞ்சம் பெறும் பாக்கியம் பெற்றேனில்லை! நீ அவர்களிடத்தில் நிகழ்த்திய சோதனைகளுக்கு அவர்கள் ஆளானது போல் நான் ஆளாக இயலாது. இறைவா, நன்றருளிச் செய்தனை.*

*என்னுடன் ஆன்மா வலிமை பெற வேண்டும். ஆற்றல் களைப் பெறவேண்டும். குறிக்கோளில் நிலை கொண்டு வாழ்ந்திடல் வேண்டும். ஆம், இவை அனைத்தும் எனக்குத் தேவைதான். இறைவா, சிறந்த காரியங்கள் செய்வதன் மூலமே ஆன்மா பூரணத்துவம் அடைகிறது.*

*சிறந்த காரியங்களை-விடா முயற்சியுடன் செய்வதன் மூலமே ஆன்மா ஆற்றல் பெறுகிறது. சிறந்த செயல் செய்யும் முயற்சியில் ஏற்படும் இடர்களைத் தாண்டுவதன் மூலமே ஆன்மா வலிமை பெறுகிறது. சிறந்த முயற்சியில் ஆன்மா ஈடுபடும்பொழுது பெறும் இன்ப துன்பங்களில் காட்டும் சமநிலையிலேயே ஆன்மா தூய்மை பெறுகிறது. இறைவா, அறிந்து கொண்டேன். இடர்களும், வாழ்த்துக்கள் என்று வரவேற்கத்தக்கன. இறைவா, சிறந்த செயல்களைச் செய்வதில் ஈடுபடுத்தி ஆட்கொள்க!*

## ஜூலை 2

### இறைவா, சாவா வாழ்வினை வழங்கி யருள்செய்க!

இறைவா, எல்லா உலகமும் ஆனாய் நீயே. நின் திருவருள் போற்றி! போற்றி!! இறைவா, நான் இறக்க அச்சப்படவில்லை. என்றோ ஒரு நாள் இறக்க வேண்டியது தானே! ஆனால் இறைவா, நான் சாவதற்குக் கூச்சப்படு கின்றேன்.

இறைவா, என்னைச் சாவிலிருந்து காப்பாற்று. இருந்தும் இல்லாமல் இருப்பது; நான் வாழ்ந்தும் பயன் படா நிலையில் வாழ்வது; நான் உண்டும் உணர்விலாப் பிண்ட மாய் வாழ்வது; உண்டு, உடுத்து, உறங்கி வாளா வாழ்வது இவை சாவு நிலைகள். இறைவா, இத்தகைய சாவிலிருந்து என்னை மீட்டுக்கொள்ள ஒய்விலாது உழைத்திடும் பேற்றினை அருள் செய்க! ஆன்மநேய ஒருமைப்பாட்டு உணர்வினை வழங்கியருள் செய்க!

வாழ்க்கை விரிவு நோக்கியது. விரிந்து கொண்டு செல்வதே உயிர்ப்புள்ள வாழ்க்கை. அதிலும் ஓயாது விரிந்து கொண்டிருப்பதே வாழ்க்கையின் உயிர்ப்பு நிலை, வாழ்நிலை!

இறைவா, எல்லைகள், வேலிகள் இவை அறியாமை யின் படைப்புகள். ஆணவத்தின் அடையாளங்கள். இறைவா, என் வாழ்க்கை எல்லைகளைக் கடந்ததாக விரிவடைய வேண்டும்.

என் அன்புக்கு எல்லை இருத்தல் கூடாது. நான் உழைத்து உறவு கொள்ளும் உலகம் விரிவுடையதாக அமைய வேண்டும். குறுகியது எதுவும் சாவு. தன்னைப் பற்றியே சிந்திப்பவன் பேய். இந்த இழிநிலை வேண்டாம்.

என் வாழ்க்கை ஓயாது விரிவடைய அருள் செய்க! எந்நாட்டவரும் என் சகோதரர். அனைத்துயிரும் என் உறவு. இப்படியே எண்ணி, வாழ்ந்து பணி செய்திடப் பணித்திடுக. சாவா வாழ்வினை வழங்கியருள் செய்க!

## ஜூலை 3

## இறைவா, விவாதங்களில் ஈடுபடாது காரியத்திலேயே கண்ணாக இருப்பேன், அருள் செய்க!

*இறைவா, பித்தனே, மோனத் தவமிருக்கும் உத்தமனே. ஏசினும் ஏத்தினும் ஏற்றருள் செய்யும் அருளாள, என் மனம் மௌனத்தை நாட அருள் செய்யக்கூடாதா?*

*என் செயலடங்கி, அறிவடங்கி, உணர்வடங்கி உன் திருவடிகளில் உற்று அமர்ந்து தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எந்நாள்? ஆலமர் செல்வா, சொல்லாமல் சொல்லும் இறைவா, நின் காட்சியே எனக்கு ஆசிரியன். நீ வாய் திறந்து சொல்லாதது ஏன்? வாய் திறந்தால் அது நில்லாது தொடரும். விவாதமாகி விடும்.*

*அறிவாளி பேசக்கூடாது என்ற நின் அருள் மொழியின் பொருள் புரிகிறது. இறைவா, நன்றருளிச் செய்தனை. என் பகைவர் எவ்வழியைத் தேர்ந்தெடுத்தும் எனக்குத் தீமை செய்யலாம். வாழ்த்தியும் தீமை செய்யலாம்.*

*வாழ்த்துப் பெற்றதன் மூலம் தகுதியடைந்து விட்டோம் என்ற முனைப்பில், முயற்சிகள் முடங்கி வாளா வாழ்தலாகிய தீமை நிகழும். நன்மை செய்தல் போலத் தீமை இழைத்தல் இது. அநியாயமாகக் கிண்டல் செய்வது, வினாக்கள் தொடுப்பது, விடைகள் கூறினால் விவாதமாக்குவது - இவைகள் மூலம் வாழ்கையைப் பாழாக்குதல்! இறைவா நல்ல அறிவுரை.*

*இனி, நான் பேசுவதில் முன்நிற்க மாட்டேன். கற்பேன், கேட்பேன். கிண்டல், கேலிகள் பற்றி அலட்டிக் கொள்ள மாட்டேன். ஆத்திரப்படவும் மாட்டேன். விதண்டாவாத மான வினாக்களுக்கு விடை சொல்ல மாட்டேன். விவாதங் களில் ஈடுபட மாட்டேன். காரியத்திலேயே கண்ணாக இருப் பேன். இறைவா, இப்படியே வாழ எனக்கு அருள் செய்க!*

## ஜூலை 4

### இறைவா, எனக்குச் சலுகை வேண்டாம். உறுதியுடன் ஒழுக அருள் செய்க!

இறைவா, நினைப்பு மாத்திரையில் உலகத்தை இயக்கும் தலைவனே. நின் ஆற்றலுக்கு ஆயிரம் ஆயிரம் போற்றிகள். இறைவா, செய்யும் பணியில் வெற்றி பெற வேண்டும். அடுத்து நின்னருள் பெற்றுய்யும் இன்ப அன்பு வேண்டும்.

அன்பும், வெற்றியும் பெறுவதே வாழ்க்கையின் குறிக்கோள். இவற்றை அடைய எனக்குப் பணம் தேவை, அள்ளித்தருக. இறைவா, என்ன சிரிக்கிறாய்? சதுப்பு நிலத்தில் மாளிகை கட்ட இயலுமா? நிற்குமா? களர் நிலத்தில் பயிர் வளருமா? இறைவா, இது என்ன கேள்வி கேட்கிறாய்?

சதுப்பு நிலத்தில் மாளிகை நில்லாது; களர் நிலத்தில் பயிர் வளராது. இறைவா, அதுபோலச் சலுகைகளால், உறுதியும் திண்மையும் இழந்துள்ள மனத்தை உடையார் எந்தக் குறிக்கோளையும் அடைய இயலாது.

என்னுடைய குறிக்கோள் நிறைவேற, பணம் முதல் தேவையில்லை. இரண்டாவது தேவைதான். முதல் தேவை உறுதியான - தீர்மானமுடைய மனம் வேண்டும். தீர்மானத்தை நிறைவேற்ற சரியான விதிமுறைகள் வகுக்கப் பெறுதல் வேண்டும்.

குறிக்கோளுடைய வாழ்க்கைக்குத் தீர்மானமும் விதி முறைகளும் எல்லாவற்றையும் விட முக்கியமானவை. இறைவா, வலிமையான மனம், தெளிவும் உறுதியும் மிக்க புத்தி, ஊசலாடாத சிந்தனை-இவற்றை அருள் செய்க! என்னிடம் தெளிவான தீர்மானங்கள் உண்டு. ஆயினும் உறுதியான கடைப்பிடி இல்லை.

இறைவா, உறுதியான கடைப்பிடியில் நிற்கும் இயல்பினை அருள் செய்க! எனக்குச் சலுகை வேண்டாம். வாழும் நெறி அருள் செய்க!

## ஜூலை 5

### ஒவ்வொரு நாளையும் ஊதியம் தேடும் நாளாக ஆக்கி அருள் செய்க!

*இறைவா, முப்புரம் எரித்த அண்ணலே, சாவு வரத்தான் செய்கிறது. ஒரு மரத்தினின்று பழுத்த மட்டை வீழ்கிறது - இது செத்த பிணம்! பழுத்துக் கொண்டுள்ள மட்டை - இது சாம்பிணம்! இளமட்டை - இது நாளைய பிணம். இது நியதி.*

*ஆனால், இந்த மரண நிலைகள் என்னை விழிப் படையச் செய்யவில்லை. சில சமயங்களில் பயமடைச் செய்திருக்கின்றன. அதாவது, நாமும் செத்துவிடுவோம் என்ற பயமே! அது கூட அந்தப் பொழுதில்தான். அடுத்த நொடி வழக்கம் போல ஊதியமிலா வெற்று வாழ்க்கை. உள்ளீடில் லாச் சுரைக்குடுக்கை போல வாழ்க்கை வறிதே கழிகிறது.*

*இறைவா, என்னைக் காப்பாற்று. எனக்கும் சாவு வரும் என்பதை உணர்த்து. மரணக் கடிவாயிலில் நிற்கும் ஓர் உயிரே நான் என்பதை உணரச் செய். நாளை எனக்குரியதில்லை. அது யாருக்கும் எதற்கும் உரிமையாகலாம். இன்றைய நாள் நான் வாழும்நாள். என்னிடத்தில் பூரண உரிமையோடிருக் கும் நாள்.*

*இன்றைய நாளை முழுமையாகப் பயன்படுத்துதல் என் முதற்கடமை. அறிவைத் தேடுதல், ஆள்வினையியற்றல், பொருள் செய்தல், அன்பு காட்டுதல், தொண்டு செய்தல் - இவைகளை நாளை என்று ஒத்திப்போடாமல் இன்றே செய்யும் பாங்கினைத் தா.*

*இன்றைய நாளை, நான் வாழும் நாளாக, ஊதியம் தேடும் நாளாக ஆக்கி அருள் செய்க! உயிருக்கு ஊதியம் தேடிவிட்டால் செத்தாலும் கவலை இல்லை. இறைவா, அருள் செய்க!*

## ஜூலை 6

## இறைவா, என் வேலையின் நோக்கம் வையகம் பயனுற வாழ்வதே. அருள் செய்க!

*இறைவா, உயிர்களை ஆட்கொண்டருளும் அண்ணலே, ஐந்தொழில் நிகழ்த்துகிறாய். உனது ஐந் தொழிலின் நோக்கம் உயிர்களை ஆட்கொள்வது.*

*நானும் தொழில் செய்கின்றேன். வேலை செய் கின்றேன். "என் வேலையை நான் ஏன் செய்கின்றேன்? எதற்காகச் செய்கின்றேன்?" இந்த வினாக்களுக்கு விடை சொல்லத் தெரியாது.*

*இன்று நான் ஏன் தொழில் செய்கின்றேன்? வேலை செய்கின்றேன்? - பிழைப்பு நடத்த, பொருள் செய்ய, என்று சொல்லத் தோன்றும். ஆனால், ஒரு வேலையின் நோக்கம் "பிழை"ப்பாக இருத்தல் இயலாது; இருக்கக் கூடாது.*

*வேலையின் நோக்கம் கூலியில்லை. 'பிழைப்பு' இல்லை அப்படியிருந்தால் இந்தப் பரந்த உலகத்தில் வளம் குறையும். சிறப்பு வராது. அப்படியானால் இறைவா, என் வேலையின் நோக்கம்?*

*உயிர்க் குலத்திற்கெல்லாம் வாழ்வு அளித்தல் வேண்டும். மானிட சாதியை வறுமையிலிருந்து மீட்டு எடுத்தல், மனித குலத்தின் பெரும்பகையாகிய அறியா மையை அகற்றுதல், மனித குலப்பிரிவினைகளான சாதி, குல, இனச் சண்டைகளை அறவே அகற்றுதல், ஒரு குலம் உருவாக்குதல், ஒப்புரவு நெறி தழைக்கச் செய்தல், எல்லாரும் இன்புற்றிருக்க நினைத்து உழைத்தல் - இவை என் வேலை யின் நோக்கமாகிட வேண்டும்.*

*இறைவா, நான் தொழில் புரியவேண்டும். வேலை செய்யவேண்டும். என் வேலையின் மூலம் நாட்டு மக்கள் பயனுற வேண்டும்! என் வாழ்க்கையின்- வேலையின் நோக்கம் - வையகம் பயனுற வாழ்தலே என்று கொண்டுள் ளேன். இறைவா அருள் செய்க!*

## ஜூலை 7

### உலகத்தோடு ஒட்ட ஒழுகி வாழ்ந்திட அருள்செய்க!

*இறைவா, கருணை நிறைந்த கடவுளே, போற்றி! போற்றி!! இறைவா, நான் இந்த உலகில் வாழ்கிறேன். நான் பலரோடு வாழ்கிறேன்.*

*ஆனால், என்னோடு யாரும் ஒத்துவர மறுக்கிறார்கள்; ஒத்து வருவதில்லை. நான் என்ன செய்ய? இறைவா, என்ன அருளிச் செய்கின்றனை? நான்தான் ஒத்துப்போக வேண்டுமா? உலக்தோடு ஒட்ட ஒழுகுதல், நல்லது! இன்றைய உலகம் என்பது வல்லாங்கு வாழ்பவர்கள் உலகமாக அன்றோ இருக்கிறது!*

*இந்த உலகத்திற்கு நியாயத்தைப் பற்றிய கவலை இல்லை. பண்பாடு பற்றியும் கவலை இல்லை. ஏன் – என்ன செய்ய வேண்டும் என்ற கவலையே கூட இல்லை. இறைவா, இவர்களுடன் எப்படி ஒத்துப்போவது? இறைவா, நன்றருளிச் செய்தனை. தற்காப்பு உணர்வுடன் ஒத்துப் போகச் சொல்கின்றாய்! அவர்களோடு பழக வேண்டும்! ஆனால், கலந்துவிடக்கூடாது. எதிர்மறையாக அணுகுதல் எதிர் விளைவுகளையே உண்டாக்கும். உடன்பாட்டு அணுகு முறை யில் தீமை மாறாது போனாலும் கட்டுக் கடங்கி நிலவும். அதுவே, ஒரு பாதுகாப்பு இல்லையா? இறைவா, மிகவும் நல்ல ஆலோசனை.*

*நல்லன எண்ண வேண்டும், நல்லன செய்ய வேண்டும். நல்லாருடன் இணங்கி இருத்தல் வேண்டும். இறைவா, இப்படியே அருள் செய்க! நின் திருவருளால் நல்லவனாகவே வாழ்வேன். போற்றி! போற்றி!!*

## ஜூலை 8

## கொம்பினைச் சார்ந்த கொடிபோல், உன்னைச் சார்ந்து வாழ்ந்திட அருள் செய்க!

*இறைவா, தமியேன் புகலிடமே, புண்ணியமே. நான் அலமருகின்றேன். என் அகநிலையிலும் தாக்குதல். புற நிலையிலும் தாக்குதல். நான் உய்யுமாறு என்ன?*

*இறைவா, என்னோடு ஒத்துவராத ஐவரைக் கூட்டு வைத்தாய். அவர்கள், வலிய நின்று போராடுகின்றனர். உவப்பன கொடுத்தனுப்ப முயன்றாலும் அவர்கள் என் ஆற்றலை விஞ்சிக் கேட்கின்றனர்.*

*புழுவை எறும்பு அரித்தொழிப்பது போல, என்னைப் புலன்கள் அரித்தொழிக்கின்றன. நாள்தோறும் வெம்பி வெம்பிச் சாகின்றேன். நான் இறப்பதற்கு அஞ்சவில்லை. ஆனால், செத்துப் போகக் கூடாது.*

*என்னைச் சுற்றிப் பணத் திமிங்கலங்களின் நடமாட்டம். நான் என்ன செய்வேன். பற்றிப் படரக் கொம்பில்லாத ஒரு கொடி காற்றில் அலமந்து சுழல்கிறது. அற்று விழும் நிலையில் சுற்றுகிறது. இறைவா, நானும் அங்ஙனே. உன்னையே நான் கொழுகொம்பாகப் பற்றி நிற்க முனைகின்றேன்.*

*இறைவா உன்னை எனக்கு அளிக்காமல் எங்கோ ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறாய். நான் உன்னைக் கண்டும் கண்டிலேன். நான் படும் துன்பம் இனி எற்க இயலாது. பட்டது போதும் என்னைக் காப்பாற்று.*

*நான் அன்பால் பூத்துச் செயல்களால் காயாகி, ஒப்புரவால் கனியாகிச் செழித்து வாழ்ந்திட அருள் செய்க! இறைவா, என்னை ஒதுக்கி வைத்திடாதே! என்னை ஆட்கொள்வதற்குரிய பத்திரம் நின்னிடம் உள்ளது. கொம்பினைச் சார்ந்த கொடிபோல என் வாழ்வு செழித்து வளர்ந்து அன்பு மணம் கமழ அருள் செய்க!*

## ஜூலை 9

### எனக்கு நின்னருள் தேவை! ஆண்டருள் செய்க!

அத்தா, அடியேனுக்கு அருள் பாலித்த அண்ணலே! நின் அருள் நோக்கில் ஆட்கொள்ளும் ஐயனே! நின் திருக் கருணை போற்றி! போற்றி!! இறைவா, நான் ஒரு நெறிப்படா தவன். பித்தனாகப் பல நெறிகளிலும் சென்று சென்று உழல்கின்றேன்.

நான் கற்றுணர்ந்தவனுமல்லன், படிப்பினைகளால் உணர்ந்தவனும் அல்லன்; யாதும் உணராதவன். இறைவா, யாதொரு பயனும் இன்றி உழன்று கொண்டிருக்கின்றேன். பேயனையேன். நாயனையேன். நான் நிறையப் பிழை செய்தேன்; செய்து கொண்டிருக்கிறேன்.

நான் செய்த குற்றங்கள் ஒன்று இரண்டல்ல; பல குற்றங்கள். இறைவா, என்னை ஒறுத்திட மாட்டாய் என்ற உறுதியான எண்ணம் இருக்கிறது. நீ சால அன்புடையவன். அதனால் ஒறுத்திட மாட்டாய். இது என் நம்பிக்கை. அதுவே நான் உன்னிடம் இரந்து கேட்பது.

இறைவா, நான் செய்த-செய்யும் குற்றங்களைத் திரு வுள்ளத்தில் கொள்ள வேண்டாம். என் குற்றங்களுக்குத் தீர்வு காண இயலாது. ஆதலால், இறைவா, எனக்கு உறுதி-உய்தி குற்றங்களுக்குத் தீர்வு காண்பதன்று. என் குற்றங்களை நீ பொறுத்தருளல் வேண்டும்.

இறைவா, என்னை என் பிழைகளைப் பொறுத்தருள் செய்க! இனி நான் ஒரு நெறியில் மனம் வைத்தொழுகுவேன். உணர வேண்டியவற்றை உணர்ந்து நடப்பேன், ஒழுகுவேன். பயனுள்ளவாறு நின் வழியில் வாழ்வேன். பகடுபோல் –ஏறு போல் உழைத்து வாழ்வேன். இறைவா, எனக்கு நின்னருள் தேவை. ஆண்டருள் செய்க!

## ஜூலை 10

### இறைவா, அவரவர் பணியை அவரவர் செய்ய அருள் செய்க!

*இறைவா, சிந்தித்து எழுவார்க்கு நெல்லிக்கனியே. நின் திருவருள் போற்றி! போற்றி!! இறைவா, இந்த மனித குலத்தில் எத்தனை பிரிவுகள். எங்கள் பிரிவுகளுக்கு உன்னையே ஆளாக்கி ஆயிரம் பேர் வைத்து விட்டோமே. ஏன் இந்த நிலை?*

*ஒருமையுடன் நினது திருவடி நினைக்க வேண்டும். நான் எப்போது ஒருமையுடன் நினது திருவடி நினைப்பது? இன்றுள்ள சூழ்நிலையில் எனக்கு இந்தநிலை எய்துமா? இறைவா, நீ ஒருவனே; உன் அடியோங்களான நாங்கள் ஒரு குடியினர் இல்லையா? ஆம், நாங்கள், அனைவரும் ஒருகுடி. நீயும் எங்கள் குடியில் ஓர் உறுப்பினன்.*

*இறைவா, எனக்குள்ள கடமைகள் உனக்கும் உண்டு. குடி வழிப்பட்ட எல்லாக் கடமைகளும் செய்ய வேண்டிய நிலையில் உள்ளாய். நானும் அங்ஙனே தலைமுறை தலை முறையாக வருகின்றேன். ஆயினும் பிரிவினை எண்ணம் போகவில்லை. என் மனத்தில் மிகவும் வேரூன்றிப் போன தீமையாக அது இருக்கிறது.*

*நான் பிறந்து விட்டவன். பயனுற வேண்டுமல்லவா. என்னை எடுத்தாள்க! நீயும்நானும் ஒரு குடியைச் சார்ந்த வர்கள். உன்னைத் தலைவனாகப் பெற்றுள்ள நாங்கள் பேறு பெற்றவர்கள்.*

*இறைவா, என்னை எடுத்தாள்க! "நான்" இனி இல்லை. இறைவா, நம் குடி வளரப் பணிகள் செய்திடவா. என்க்கும் பணி கொடுத்து ஆளாக்கிவிடுக!*

*இறைவா, நாம் அனைவரும் ஒரு குடி. போட்டி வேண்டாம். அவரவர் பணிகளை அவரவர் செய்ய அருள் செய்க!*

## ஜூலை 11

### குறிக்கோள் நிறைவேற, நீயும் துணை செய்யவேண்டும்.

இறைவா, எந்தை ஈசனே! இன்று நான் பிறந்த நாள். உண்டு, உடுத்து வாழ்ந்திருக்கிறேன். வேறு என்ன செய்தேன்! யாதொன்றும் உருப்படியாகச் செய்யவில்லை.

இறைவா, அறுபான்மும்மை நாயன்மார்கள் குறிக்கோளில் ஒன்றியிருந்தார்கள், உறுதியாக இருந்தார்கள். தங்கள் குறிக்கோளுக்காகத் தங்களையே அர்ப்பணித்துக் கொண்டார்கள்.

இறைவா, எனக்கு ஏது குறிக்கோள்? சில எண்ணங்கள் உண்டு. இவைகளைக் குறிக்கோளாக ஏற்றுக் கொண்டேனில்லை. ஆதலால், இங்கொன்றும், அங்கொன்றுமாகக் காரியங்கள் நடக்கின்றன. அவை அர்ப்பணிப்பு உணர்விலும் நிகழவில்லை. செய்ய வேண்டுமே என்பதற்காகச் செய்கின்றேன். அதனால் எனது எண்ணங்கள் குறிக்கோள்களாக மாறவில்லை.

என்னிடம் குறிக்கோள்களுக்குரிய உறுதியான செயற்பாடும் இல்லை. ஆதலால் வாழ்க்கை பயனற்றுப் போயிற்று. என்னை மன்னித்துவிடு, இனிமேல் காரியங்கள் செய்கின்றேன். இது வழக்கம்போல் தரும் உறுதியன்று. முன்பு எனக்கு என் எல்லை தெரியவில்லை.

இப்போது எனது வாழும் எல்லை தெரிகிறது! ஆதலால் செயல்களில் அழுத்தம் பிறந்திருக்கிறது. எதையும் விழிப்புணர்வுடன் அணுகுகின்றேன். செய்கின்றேன். திட்டமிடும் குறிக்கோளை நிச்சயமாக அடைவேன்.

ஆனால் ஒரே ஒரு வேண்டுகோள். நீயும் துணை செய்ய வேண்டும். கடமைகளின் முனைப்பில் நின்னை மறந்தாலும் நீ என்னை மறக்கக்கூடாது இறைவா, அருள் செய்க!

கு.X.14.

## ஜூலை 12

### இறைவா, நோயின்றி வாழ அருள் செய்க!

இறைவா, மூலநோய் தீர்க்கும் முதல்வா! நோயில்லா வையகம் அருளக் கூடாதா? இறைவா, எனக்கு நோய் என்றால் பயம். ஆம். நோய் என்னோடு மட்டும் நிற்பதன்று. என்னைச் சார்ந்தாரையும் தொற்றுகிறது. ஆதலால் நோயற்ற வாழ்க்கையை நான் விரும்புகிறேன்.

இறைவா. உன்னிடம் இரந்து கேட்கிறேன். கழுபிணி யில்லா யாக்கையை அருளிச் செய்க! நோயற்ற வாழ்க்கையை அருள் செய்க! நோய்க்கு மருந்து வேண்டாம், நோய்க்குரிய காரணங்களையே மாற்றுக.

இறைவா, பெரும்புலர் காலை எழுதல், கதிரவன் ஒளியில் தோய்தல், மெல்லென வீசும் பூங்காற்றில் குளித்தல், உழைப்பின் கொள்கலமாகிய உடலினை உழைப்பில் வருத்துதல், குளிர் புனலில் மூழ்கித் திளைத்தாடுதல் இவைகள் வாழ்க்கையின் பயன்களாகட்டும்.

உடலுக்கிசைந்தது உண்ணுதல்; மிதமாக உண்ணுதல், நறுநீர் குடித்தல், உயிர்க்காற்றினை முறையாக உயிர்த்தல், இவற்றில் கவனமாக இருத்தல், உடலியக்கத்துக்குரிய குருதி ஓட்டத்தினை இயக்கும் இதயத்தினை உறுதிப்படுத்தும்.

இதயத்தினை அன்பினில் நனைத்தல், சமநிலைப் பேணுதல் - இவை என் இயல்பாக அமைய ஒழுகுதல், நின் திருநாமம் எண்ணுதல், பொறிகளின் வசமாகாமல் நின் திருவருள் வசமாதல், நின் திருவருளை நினைந்து நினைந்து ஒழுகுதல் இவை யாவும் வேண்டும்.

நின் திருவருளையே நாடுதல், நின்னையன்றிப் பிறி தொருவர் உண்டென நம்பாமை, அவர்பின் செல்லாமை ஆகியன என் நிறை நலமிக்க ஒழுக்கங்களாக விளக்கமுற அமைய அருள் செய்க! இங்ஙனம் என் வாழ்க்கையை அமைத்து நோயின்றி வாழ அருள் செய்க!

## ஜூலை 13

### விருப்பு – வெறுப்புகளை விட்டகல முயற்சி செய்கிறேன். இறைவா, அருள் செய்க!

இறைவா, இரும்பு மனத்தோனை ஈர்த்து ஆட் கொண்ட அண்ணலே, நின் கருணைக்குப் போற்றி! போற்றி!! இறைவா, நின் திருவருள் நோக்கும் பூரணமாக என்பால் இல்லை. நான் உனக்குத் தேவையில்லை என்ற திருவுள்ளம் போலும்!

இறைவா, அன்று ஆட்கொண்டருளி உடன் போந்த உண்மையை இந்த வையகம் மறக்குமா? அல்லது நான்தான் மறக்க விடுவேனா? தெருவில் போய் நின்று கொண்டு உன் அடியான் என்று சொல்லியே உன்னைப் பழி வாங்குவேன்.

என் தலைவனே, என் வேண்டுதல் முழுவதையும் அருள் செய்க! காலங்கடத்தாது அருள் செய்க! இறைவா, உன்னால் ஒன்றும் குறையில்லையா? நான் துருப்பிடித்த இரும்பு போல் ஆகிவிட்டேனா? அதனால் உன் ஆற்றல் என்னை ஈர்த்தாள இயலவில்லையா? அதுவும் உண்மை தான். துருப்பிடித்த இரும்பைக் காந்தம் ஈர்க்காது, அதுபோல என் மனம் விருப்பு வெறுப்பு இவைகளால் பற்றப்பட்டிருக் கிறது. வெற்றி-தோல்வி, இலாபம்-நட்டம் இவைகளால் நான் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளேன். என் மனம் மத்திடை அகப்பட்ட தயிர்போல அலமருகிறது.

நீ காமனைக் கடிந்தவன் அல்லவா? என் காமங் களையும் கடிந்து ஆளக்கூடாதா? இறைவா, காமனைக் கடிந்தது, காமத்தைக் கடந்தவர்களிடம் காமன் காமத்தைத் தூண்ட முயற்சி செய்ததற்காக! முதலில் இயல்பாகக் காமத்தைக் கடக்க வேண்டாமா? ஆதலால், நீ ஒன்றும் செய்ய இயலாதா?

இறைவா, விருப்பு-வெறுப்புகளை விட்டகல முயற்சி செய்கிறேன். துணை செய்க! இலாபம்-நட்டம் ஆகியன என்னைப் பாதிக்காமல் தற்காத்துக் கொள்கிறேன். இறைவா, அருள் செய்க!

## ஜூலை 14

### இறைவா, நான் என்றும் குழந்தைபோலவே வாழ அருள் செய்க!

*இறைவா, பாலனாகித் தொட்டிலின்பத்தைத் துய்த்த தலைவா! நான் மனிதனாகி விட்டேனே. என் பொல்லாத காலம் என்னை வளர்த்துப் பொல்லாதனவெல்லாம் கற்றுக் கொடுத்து, என் வாழ்வியலைக் கரடு முரடாக்கி விட்டதே. இனி நான் என்ன செய்ய.*

*மீண்டும் அந்தக் கள்ளமற்ற, கணக்குகளைக் கடந்த குழந்தைப் பருவம் கிடைக்குமா? இயற்கையின் மறுபிறப்பு குழந்தை நிலை. இயற்கை எவ்வளவு கவர்ச்சியாக இருக்கிறது. மகிழ்ச்சியைத் தருகிறது.*

*இயற்கை இசை போன்றவர்களே சிறுவர்கள்! குழல் போல இசைப்பார்கள். யாழினைப்போல் இசைப்பார்கள். அவர்தம் மழலைச் சொல் சிந்தைக்கின்பம்; செவிக்கின்பம். இறைவா, என் குழந்தைக் காலம் ஓடிவிளையாடிச் சிறுவனாக வாழ்ந்த இளமைக்காலம் திரும்பக் கிடைக்குமா?*

*இறைவா, பருவங்கள் காரணமாகச் சிறுவர்-முதியோர் என்று கொள்ள வேண்டியதில்லை. எந்த வயதிலும் குழந்தை யைப் போல வாழலாம். இறைவா, அந்தக் குறு குறுத்த பார்வை கிடைக்குமா? இன்ப மகிழ்வை அள்ளிப் பொழியும் சிரிப்பு வருமா? அது இனி கற்பனை. கள்ளமில்லாத நெஞ்சிலேயே, குளிர்ந்த பார்வை. உள் நோக்கம் இல்லாத இதயம் உள்ள இடத்திலேயே கள்ளமற்ற சிரிப்பு மலரும்.*

*இறைவா, நான் மீண்டும் குழந்தையாகிட அருள் செய்க! அல்லது குழந்தைத்தனமாகிய கள்ளமற்ற நிலை-கணக்கு வழக்கு அணுகாத வாழ்க்கை, கள்ளமற்ற பார்வை, அன்பினைப் பொழியும் இதயம், இறைநலம் சார்ந்த சிரிப்பு இவைகளை நீ அருளிச் செய்தால் நல்லது. நான் என்றும் குழந்தை மனத்துடன் வாழ அருள் செய்க!*

## ஜூலை 15

### இறைவா, ஊழினை வெற்றிபெற்று வாழும் பெரு வாழ்வினை அருள் செய்க!

*இறைவா, ஊழி முதல்வா, நானோ ஊழின் முதல்வனாக நின்றுழல்கின்றேன். இந்த ஊழினிடமிருந்து எனக்கு விடுதலையில்லையா? இறைவா, விடுதலை எடுத்துக் கொள்வதே ஒழிய, ஒருவர் கொடுத்துப் பெறுவதன்று.*

*ஊழினின்றும் நான் எளிதில் விடுதலை பெறலாமா? முடியும். நான் நினைக்கின்ற நினைப்புக்கள், எண்ணங்கள், நினைப்போடு-நோக்கத்தோடு செய்யும் செயல்கள்-இவைகளைப் பற்றிய நினைவுகள் மிக்க அழுத்தமாய்ப் பதிந்து விடுகின்றன. இப்பதிவுகள் எளிதில் நீக்க இயலாதன.*

*நினைவுப் பதிவுகளே புற உலகத்தில் எனக்குப் பழக்கங்களாக வருகின்றன. பின் சில நாட்களில் வழக்கங்களாக அமைகின்றன. இப்பதிவுகளே ஊழ். நினைவின் பதிவுகளே பழக்கங்களாகின்றன. வழக்கங்களாகின்றன. நான் பழக்கங்களின் வழியே செல்பவன். பழக்கம் தவிரப் பழகுதலே ஊழின் ஆற்றலை அடக்கும் வழி.*

*நான் இனி நிறைய காரியங்களைச் செய்வேன். நான் செய்யும் செயல்களுக்கு உள் நோக்கத்தை எடுத்துக் கொள்ள மாட்டேன். அதாவது தன்னல நயப்புடைய - பிறருக்குத் தீங்கு செய்யக்கூடிய உள் நோக்கத்தை எடுத்துக் கொள்ள மாட்டேன். இது உறுதி.*

*இறைவா, எனக்கு, பணி செய்யும் உள்ளத்தினைத் தந்தருள் செய்க! நினைவாற்றலை நன்மைக்கே பயன்படுத்தும் திறனை அருள் செய்க! நன்றல்லது அன்றே மறந்து விடும் பேருள்ளத்தினைத் தந்தருள் செய்க! பிறர் செய்த நன்மையை என்றும் நினைந்து வாழும் பேற்றினைத் தந்தருள் செய்க!*

*நான் செய்த நன்றியை எண்ணிப் பெருமிதம் கொள்ளாதவாறு உடன் மறந்துவிடும் தகைமையை அருள் செய்க! நான் ஊழை வென்றுவிடுவேன். இறைவா, ஊழினை வெற்றி பெற்று வாழும் பெரு வாழ்வினை அருள் செய்க!*

## ஜூலை 16

## இறைவா, கதிரவனின் ஆற்றல் முழுதும் பயன்படுத்திட அருள் செய்க!

இறைவா, தீயாயிருந்து இவ்வுலகை இயக்கிடும் அண்ணலே, ஐம்பூதங்களில் தீயாகி நின்றருள்வோனே, எரியில் எழுந்தருளும் இறைவனே. எரிசக்தியே, உலக இயக்கத்திற்கு முதல்-மையமாகிய எரிசக்தி இல்லாது போனால் எதுவும் நடக்காது. இதுவே உலகியல்!

எரியாற்றல் பல்வேறு நிலையினதாக இருக்கின்றது. உலகில் உள்ள ஒவ்வொரு பொருளினும் எரியாற்றல் இருக் கிறது. அளவிற் கூடுதல்-குறைவு அவ்வளவுதான். இறைவா, உன்னைப் போலவே எரி ஆற்றல்களும் தொன்மையானவை. எரி ஆற்றல்களை நான் படைக்க முடியாது; அவை உன் படைப்பு இல்லை, அவையே நீ! ஆனால் ஒரு எரி ஆற்றலைப் பிறிதொரு வகை ஆற்றலாக மாற்றி இயக்கலாம். இறைவா, எரியாகி நின்று இந்த உலகை இயக்கிடும் தலைவனே. எனக்கு வாய்த்துள்ள எரிசக்தி போதாது இன்னும் நிறைய வேண்டும்.

இந்த உலகில் எரிபொருள் பஞ்சமே வாராதவாறு பேணிக் காத்திடுக. இறைவா, ஞாலம் திரிதரு கதிரவனின் எரி ஆற்றல் முழுவதையும் நான் பயன்படுத்தும் நெறியினைத் தந்தருள் செய்க!

கதிரவனின் ஆற்றல் முழுதும் நான் பயன்படுத்திட அருள் செய்க! கதிரொளி-என் கண்ணிற்கு அணி. கதிரொளி, எனக்கும் புற உலகுக்கும் இணைப்புண்டாக்கும் சாதனம். கதிரொளியின் ஆற்றல் எனக்கு உணவு, உணர்வு. இறைவா, அருள் செய்க!

## ஜூலை 17

### நெஞ்சே! இறைவன் நாமத்தை என்னோடு சேர்ந்து கூறுக!

இறைவா, எம்பெருமானே, கற்பகமே; போற்றி! போற்றி!! என் வாழ்நாள் ஓடிக்கொண்டே இருக்கிறது. இப்போது "வாழ்நாள் கடந்ததே–சாவு வரப்போகிறதே" என்ற கவலை எனக்கில்லை. மீண்டும் பிறப்பதற்குரிய வித்துக் களைச் சுமந்து கொண்டு சாகக்கூடாது. இதுதான் என் கவலை.

சென்ற காலத்தில் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்தருளும்படி வேண்டுகிறேன். இறைவா, நீ பொறுத் தருள்வாய். ஆனால், இனி நான் வருங் காலத்தில் பிழைகள் செய்யாமல் வாழ்தல் வேண்டுமே. என் நெஞ்சு என்னோடு உடன்பட்டு நிற்பதில்லை.

என் நெஞ்சினை நான் முயன்று புகழ்ந்து கூறி "நன்னெஞ்சே" என்று இரந்தும் கேட்டு விட்டேன். என் நெஞ்சு என்னோடு நிற்பதில்லை. இறைவா, மீண்டும் மீண்டும் உன் சந்நிதியில் வந்து உன்னைச் சாட்சியாக வைக்கிறேன். நெஞ்சே, நன்னெஞ்சே. சாநாளும் வாழ்நாளும் எல்லை கடந்தவையல்ல; எல்லைக்குட்பட்டவை. இந்தக் கால எல்லைக்குள் உய்யுமாறு அறிதல் வேண்டும்; உய்திக்கு உரியன செய்தல் வேண்டும்.

நன்றுடையானை எண்ணி எண்ணி நன்றாக வேண்டும். "பாவ நாசனே," என்று அழைத்திடுதல் வேண்டும். இறைவனைப் பலநூறு நாமங்கள் கூறிப் போற்றிட வேண்டும்.

நான் சொல்வதைக் கேள் என் நெஞ்சே. என்னோடு ஒத்துழைத்தால் நீ உய்தி பெறலாம்; என் அருமை நெஞ்சே, உன்னை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன், இறைவன் நாமத்தை என்னோடு சேர்ந்துக் கூறுக. உனக்குக் கோடி புண்ணியம்.

நான் என் மனத்தினிடம் சொல்லி விட்டேன், என்மீது குற்றமில்லை. இறைவா, என் நெஞ்சத்தைத் திருத்துக. இறைவா அருள் செய்க!

## ஜூலை 18

### இறைவா, வாழ்க்கையின் அடிநிலை அறமாகிய இரக்க உணர்வை எனக்கு அருள்க!

இறைவா, அறம் கண்ட அண்ணலே, போற்றி! போற்றி!! நான் மூலையில் கிடந்தேன்; அறியாமையின் இரும்புப் பிடியில் சிக்கி, நொய்ம்மை அடைந்து அழிந்து கொண்டிருந்தேன். இறைவா, நீ என்பால் இரக்கம் காட்டி ஆட்கொண்டருளி இந்த வாழ்க்கையை தந்தாய்.

என்றன் கருமேனி கழிக்கத் திருமேனி கொண்டருளிய தலைவா, நானும் உய்திபெற ஆசைப் படுகின்றேன். ஆனால் உய்திக்குரிய நெறிகளில் நாட்டம் இல்லை. ஏன்? பொய்ம்மையையாவது தொலைக்கின்றேனா. இல்லை, மனத்தில், வாக்கில், செயலில் பொய்ம்மை புரளுகிறது.

இறைவா, பொய்ம்மை எப்போது போகும்? எந்த ஒரு தீமையும் தானே போகாது, அகலாது. அந்தத் தீமை வகித்திருக்கும் இடத்தை, ஆக்கிரமித்துக் கொள்ள ஒரு நன்மை தேவை. நன்மையின் பிரவேசமே தீமையை அகற்றும்.

இறைவா, அறத்தில் எல்லாம் சிறந்த அறம் இரக்கம் காட்டுதல். இரக்கம் உயர்பண்பு நெறி. எல்லாச் சமயங்களாலும் ஏற்றுக்கொள்ளப் பெற்ற நெறி. இரக்கப்பட்டவர்களுக்குப் பரமண்டலத்து இன்பம் உறுதி என்பது அருள் வாக்கு.

இரக்கம் என்ற உயர்குணம் வந்தமைந்த வழி அனைத்து நலன்களும் வந்தமையும். அதனால் இரக்கம் அடிநிலை அறம். இறைவா, இந்த இரக்க உணர்வு எளிதில் எனக்குக் கைகூடுவதில்லை. இறைவா நின்னருள் பெறாதார்க்கு இரக்கமும் வராது போலும். இறைவா, என்பால் இரக்கம் காட்டி அருள்க.

எவ்வுயிர்க்கும் அன்பு செய்யும் நன் நெஞ்சாக என் நெஞ்சைப் பயிற்றுக. மற்ற உயிர்கள்படும் துன்பம் கண்டு துடித்து மாற்றிடும் இரக்க உள்ளத்தினை அருள் செய்க! இறைவனே இரங்கியருள்க!

## ஜூலை 19

### என் எல்லைக்குள் தகுதி மிகுதியுடையோனாக வாழ்ந்திட அருள் செய்க!

*எந்நாட்டவர்க்கும் இறைவா, போற்றி! இறைவா, நீ எல்லை கடந்தவன். காலத்தைக் கடந்தவன். ஆயினும் ஒழுங்கமைவை-விதிகளைக் கடந்தவன் அல்லன்.*

*நான் செய்யும் வழிபாட்டினால் நான் பக்குவம் அடைகின்றேன். அவ்வழி தகுதி பெறுகின்றேன். நீயும் ஆட்கொண்டருள்கின்றாய். வழிபாடு என்பது ஆன்மாவிற்கு வளர்ச்சியை முதிர்ச்சியைத் தரும் சாதனமாகும்.*

*ஆன்ம முதிர்ச்சியே இறைவன் திருவருளைக் கூட்டுவிக்கும். இறைவா, இந்த வளர்ச்சிப் போக்குகள் வாழ்க்கையில் அமையவில்லையே. வாழும் மனித குலத்திற்கு விருப்பம் உள்ள ஓர் உயிராக நான் வளர வேண்டுமே. நான் இங்கே பகை மூட்டத்தில் கிடந்து புழுங்குகின்றேன். போட்டியின் பெயரால் அழுக்காறு மூட்டையைத் தூக்கிச் சுமக்கின்றேன். எல்லாவற்றிலும் எல்லை கடக்கின்றேன்.*

*எனக்குள்ள அறிவின் எல்லை என்ன என்றறியாமல் சிறந்த விஞ்ஞானிகளின் எல்லையை நான் ஆக்கிரமித்து விஞ்ஞானம் மனித சமூகத்திற்கு அழிவைத் தந்தது என்று பழி சுமத்தி, பழைய மௌடீகத்தனத்தை நான் பரப்புவதா? நான் யார்?*

*உழைக்காமல் உட்கார்ந்து சாப்பிடும் இயல்புடைய நான், உழைப்பாளர் உலகாகிய பொதுமையின் மீது பழி சுமத்துவதா? என் எல்லை சமயம், சமுதாயம். இந்த எல்லைகளைக் கடந்து அரசியல் வாதியின் எல்லைக்குள் நுழைந்து அரசியல்வாதியை விமர்சனம் செய்வதா?*

*இறைவா, நான் என் எல்லையைக் கடத்தல் பிழை என்பதை உணர்கிறேன்! என்னைத் திருத்து. நான் என் எல்லையில் சிறப்புறச் செய்யும் ஆற்றலை அருள் செய்க! இறைவா, என் எல்லையினுள் தகுதி மிகுதியுடையோனாக வாழ்ந்திட அருள் செய்க!*

## ஜூலை 20

### இறைவா, நான் வேண்டுவதும் நின் தேவையாக அமைய அருள் செய்க!

*இறைவா, பாராக-பாரினது பயனாக உள்ள எம் தலைவா! உன்னை மனத்துள் கருத்தறிந்து முடிப்பாய் என்று எல்லாரும் போற்றுகின்றனர். வேண்டுவார் வேண்டுவதை எல்லாம் வழங்கியருளும் பேரருளாளன் என்று ஏத்திப் பரவுகின்றனர். இந்தச் செய்திகள் கேட்டு நானும் நின் சந்நிதி வந்து அடைந்தேன்.*

*இறைவா, என் தேவைகளை யெல்லாம் நாள்தோறும் உன்னிடத்தில் கூறி, இரந்து கேட்கின்றனன். ஆனால், ஒன்று கூடக் கைகூடவில்லை! இறைவா, என் வாழ்க்கை பொய்யாய், கனவாய், பழங்கதையாய் முடியும் நிலையில் தள்ளப் பட்டுள்ளதே.*

*இறைவா, நான் உனக்கு ஆகேன் என்று கொண்டு புறத்தே தள்ளத் திருவுள்ளமா? நீ என்னைத் துடைத்துத் தூரத் தள்ளினும் போகேன், அருள் செய்க! இறைவா, என்ன அருளிச் செய்கின்றனை! வரிசையறிந்து அருளுதல் மரபென்கிறாய்.*

*தகுதியுடையோரே தகுதிகளையும், சிறப்புகளையும் பெறுவர். உள்ளவர்களுக்கு மேலும் கொடுக்கப்பெறும் என்கிறாய்! உள்ளவர்களுக்கே மேலும் தருவது என்ன நியாயம்? என்னைக் காப்பாற்று. தகுதியுடையாருக்கே பெற்றவற்றின் அருமை தெரியும். பேணிப்பயன் காண்பர்! என்கிறாய்.*

*இறைவா, மெய்யடியார் வேண்டுவதையே வேண்டி அருள் செய்வாய். நின் அருள் பெற முழுதும் தகுதி, மெய் யடியாராதல்.*

*இறைவா, இன்றுமுதல் என் பொய்ம்மை களைந்து, மெய்ம்மை தழுவிய வாழ்க்கை நடத்த எனக்கு அருள் செய்க! நான் வேண்டுவன வெல்லாம் ஒருங்கு தந்து ஆட்கொள்க. இறைவா, நான் வேண்டுவதும் நின் தேவையாக அமைய அருள் செய்க.*

## ஜூலை 21

## பெருகு நிலையே எனது குறிக்கோளாக அமைய அருள் செய்க!

இறைவா, பெருந்தகையே, பெறற்கரிய மாணிக்கமே போற்றி! போற்றி!! என்னைச் சுற்றி உலகம் இருக்கிறது, உயர்திணை உலகம், அஃறிணை உலகம் என்று! இந்தப் பரந்த உலகின் உண்மையை உணர்ந்து, உய்திக்கு உரியன தேர்ந்து, வாழ்க்கைக்குரிய மெய்ப்பொருளைக் கண்டு நான் வாழ வேண்டும்.

அஃறிணை உலகத்தின் இயல் கண்டு தேர்ந்து தெளிதல் எளிது ஐயனே. இந்த உயர்திணை உலகம் இருக்கிறதே, அங்கு உண்மை காணல் அரிது. ஆயினும், வாழ்க்கைத் தொடக்கத்தி லேயே உண்மை முழுதும் வெளிப்படாது. கண்டன கொண்டு காணாதன காணுதல் வாழ்வுமுறை. பெற்ற அறிவு கொண்டு பெறாத அறிவினைப் பெற முயற்சி செய்தல். பெறுதல்– இதுவே வாழ்க்கையின் பரிணாம வளர்ச்சி.

வாழ்க்கை, மாற்றங்களுக்குரியது, வளர்ச்சிக்குரியது. இவை இயல்பூக்கமாகவே நிகழும். ஆயினும் விழிப்பு நிலையில் இருந்து குறிக்கோள் வழிப்படுத்துதல் வேண்டும் இறைவா, அருள் செய்க!

நான் கிணற்றுத் தவளை ஆகிவிடக்கூடாது. பீங்கான் தொட்டியில் வளரும் மீனாகிவிடக் கூடாது. நான் கண்டனவே காட்சி, பெற்றதே அறிவு, கொண்டதே கொள்கை என்று அமைந்துவிடக் கூடாது. மேலும் மேலும் தேடிப்பெற முயற்சி செய்தல் வேண்டும். வளத்தைப் பெருக்கி வாழ்க்கையை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

வையத்தின் வாழ்நிலை, என்றும் பெருக்கத்திற்குரியது. பெருகு நிலையே எனது குறிக்கோளாக அமைய அருள் செய்க! என்னுடைய ஞானம் தேடும் பெருகிய வாழ்வில் உற்றமர்ந்து துணை செய்க! இறைவா, அருள் செய்க!

## ஜூலை 22

## அன்பால் அனைத்துலகும் இணைந்து வாழ்ந்திட அருள் செய்க!

*இறைவா, சிறியோர் செய்த பிழையெல்லாம் பொறுத்தருளும் பெரியோய்! இன்று நான் யாரிடத்தும் அன்பைக் காட்டத் தயங்குகின்றேன். அல்லது அன்பைப் பெயரளவில் போலியாகக் காட்டுகிறேன். அல்லது அன்பு காட்டுதல் என்ற பெயரில் அன்பை விலை பேசுகிறேன்.*

*இறைவா, அன்புகாட்டக் காரண காரியங்களைத் தேடுகிறேன். ஏதோ, எப்போதோ தவிர்க்க முடியாத போதுதான் நிர்ப்பந்தச் சூழ்நிலையில் அன்பு காட்டுகிறேன். இதனை அன்பு என்று சொல்லலாமா? சொல்லக் கூடாது! இதுவும் ஒரு வகையான சூதே.*

*யாதொரு குறிக்கோளுமின்றி இயற்கையாக அன்பு செய்தலே அன்பு. அன்பு காட்டக் காரணம் அவசியம் இல்லை. அன்பு காட்ட வேண்டுமா வேண்டாமா என்று அறிவு ஆராய்ச்சி செய்ய வேண்டிய அவசியமில்லை. படைப்பின் இலட்சியமே அன்பு செய்தல்தான்.*

*அன்பு இல்லாத இடத்தில் குறைகள் தோன்றும். குற்றங்கள் தெரியும், அன்பின்மையே குறை, – குற்றங்களுக்குக் காரணம். அன்பின்மை, பகைமையைத் தோற்றுவிக்கும், வளர்க்கும்.*

*அன்பு காட்டக் குற்றங்குறைகள் தடையாக அமையா; அமைய இயலா. ஒருவர் எனக்குத் துன்பம் செய்தாலும் தாங்கிப் பொறுத்துக் கொண்டு மாற்ற வேண்டும். அதற்காக எதிர்ப்பகை காட்டுதல் நன்றன்று.*

*இறைவா, எனக்கு அன்பு செய்யும் உள்ளத்தினைத் தா. அன்பு செய்வதை இயல்பூக்கமாக்கு. தொடர்ந்து அறிவார்ந்த நிலையில் அன்பைப் பேணி வளர்க்கவும், பாதுகாத்துக் கொள்ளவும் கற்றுக் கொடு. அன்பால் அனைத்துலகும் இணைந்து வாழ்ந்திட அருள் செய்க!*

## ஜூலை 23

### வேற்றுமைகளை, பரந்த மனப்பான்மையுடன் அங்கீகரிக்கும் மனப்பக்குவத்தை அருள்க!

இறைவா, சோதியனே! துன்னிருளே! நின் இயல் போற்றி! போற்றி!! ஒளி, இருள், உண்மை, இன்மை, இவை உலகத்தியற்கை! இவ்வேறுபாடுகள் தவிர்க்க இயலாதன; என்றும் உலகம் ஒரே அச்சாக இருந்ததில்லை; இருக்கப் போவதும் இல்லை.

இறைவா, எனது உடலிலேயே விலை மதிக்கமுடியாத உயிரும் இருக்கிறது. உயிருக்கு உயிராக நீயும் இருக்கிறாய். அதே உடம்பில் அழுக்கும் மலங்களும் இருக்கத்தான் செய்கின்றன. நான் மூக்கைப் பிடித்துக் கொண்டு உடம்பைக் காலி செய்து விட்டேனா? அல்லது நீதான் ஓடிவிட்டாயா?

உலகத்தில் ஏராளமான வேற்றுமைகள் உள்ளன. இந்த வேறுபாடுகள்தாம் நுகர்வுக்கு இனிமையாக உள்ளன. இவ்வேறுபாடுகள்தாம் உலக இயக்கத்திற்கு உந்து சக்திகளாக இருந்து வந்துள்ளன; இருந்து வருகின்றன. இங்ஙனம் வேற்றுமைகளுக்கிடையே வாழும் நான் என்னளவில் மட்டும் வேற்றுமைகளைச் சீரணித்துக் கொள்ள மறுக்கிறேன்.

கருத்து வேற்றுமைகள், கொள்கை வேற்றுமைகள், கோட்பாட்டு வேற்றுமைகள் – இவைகளையெல்லாம் நான் ஏற்றுக் கொள்ள மறுக்கிறேன். இந்த வேற்றுமைகளுக்கு இசைந்தே – இணைந்தே வாழ முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை.

இறைவா, இந்த அடாத வழியிலிருந்து திருப்பி அழைத்துக் கொள். வேற்றுமைகளைப் பரந்த மனப்பான்மை யுடன் ஏற்றுக்கொள்ளும் மனப் பக்குவத்தை அருள் செய்க! வேற்றுமைகளின் காரணமாகப் பகை கொள்ளாத பேருள்ளத் தினை வழங்கிடுக. வேற்றுமைகள் பிரிவினைகளாகி விடாத வாறு காத்தருள் செய்க!

ஒன்றாக வாழ்தல், நன்றாக வாழ்தலுக்கு அடிப்படை என்ற உன் உபதேசத்தை உயிர்க் கொள்கையாக ஏற்பேன்; வாழ்வேன், அருள் செய்க!

## ஜூலை 24

### யார்மாட்டும் கருணை காட்டிட அருள் செய்க!

இறைவா, கருணைக் கடலே, எனக்கு இதயம் என்ற ஒன்றைத் தந்தருளினை. ஏன்? இதயம் உடல் முழுதுக்கும் குருதி, ஓட்டத்தை முறைப்படுத்திப் பாய்ச்சுகிறது! இதயம் வாழ்க்கையின் மையம். உடல், உயிர், இதயம், குருதி யோட்டம், வாழ்தல் இவற்றின் நோக்கந்தான் என்ன? பயன்தான் என்ன? வறிதே தின்று வாளா சாதல் அல்லவே.

இந்த உலகில் ஒவ்வொரு சிறுபொருளும் பயன் படுகிறது. ஏன், கழிவுப் பொருள்கள் கூட மீண்டும் படைக்கும் உரமாகின்றன. நான் ஏன்? என் இதயம் எதற்கு இறைவா? கருணை பொழிவதற்காக இதயம்!

இன்று என்னிடம் ஏது கருணை? கருணைக் கிழங்கு தான் இருக்கிறது. இறைவா, மன்னித்துக் கொள். "நான்", "எனது" என்ற பாசக் கயிறுகள் வலிமை பெற்றவை. அவை என் இதயத்தை நெகிழவிடாமல் இறுகப் பிணைந்துள்ளன. இறைவா, போதும் போதாதற்குப் பணம் வேறு. "இலாபம்" என்ற ஆசை என் இதயத்தைக் கல்லாக்கிவிட்டது.

இறைவா, நீதான் கல்லைப் பிசைந்து கனியாக்கும் வல்லாளனாயிற்றே. என் பாசக் கட்டறுத்து என் இதயத்தை விடுதலை செய். எனக்குள்ள பணத்தாசை எல்லை கடந்த இலாப நோக்கத்தால் பேய் உருக்கொண்டு விட்டது. இந்தப் பேயின் கொட்டத்தை அடக்கு. நான் மனிதன்.

மனுதனுக்கு இதயம் வழங்கப் பெற்றதே கருணை பொழியத்தான். இறைவா, இது எனக்குத் தெரிந்ததே. ஆனாலும் இயலவில்லை. என் இதயத்தைக் கருணை பொழியும் இதயமாக மாற்றியருள்க! எங்கும் கருணை, எப்பொழுதும் கருணை, யார் மாட்டும் கருணை, இறைவா, அருள் செய்க.

## ஜூலை 25

### பலருடன் கூடிப் பூத்துக் குலுங்கும் பொலிவுடைய வாழ்க்கையை அருள் செய்க!

*இறைவா, நின்னைக் கண்டும் கண்டிலேன். என்ன கண் மாயமே. நான் காண்பன, உறவு கொள்வன அனைத்தும் மெல்ல மெல்லத்தான் கரைந்தொழிகின்றன. திடீர் என்று எதுவும் நடந்து விடுவதில்லை!*

*நட்பு அரும்பி மெல்ல மெல்ல வளர்கிறது. அங்ஙன மில்லாது திடீர் என்று தோன்றும் நட்பு. திடீர் என்றே போய் விடுகிறது. நட்பில் பிரிவு கூட மெல்ல மெல்லத்தான் வற்றிப் பிரிந்து விடுகிறது.*

*ஆதலால் உறவில், நட்பில் நெருக்கத்தையும் பராமரித்துக் கொண்டு வரவேண்டும். இடைவெளி ஏற்பட்டால் ஆபத்துதான். பகையே இல்லாதிருந்தாலும், திரும்பப் போய்ச் சேர நாணம், கூச்சம் எல்லாம் வந்துவிடும்.*

*இறைவா, நான் பழகிய ஒவ்வொருவரிடத்தும் தலை நாள் பழக்கம் போலவே பழக விரும்புகிறேன். ஆனால் என்னால் இயலவில்லை. மன்னித்துக் கொள். நான் இனி எல்லாரிடமும் கொண்டுள்ள உறவுகளைப் பராமரித்துப் பேணுகிறேன். அடிக்கடி சந்திக்கிறேன். உறவு கலந்து உண்டு பழகி மகிழ்வூட்டுகிறேன், மகிழ்கிறேன்.*

*மற்றவர்கள் மனநிறைவு கொள்ளும் அளவு, அவர்களைப் பாராட்டுகிறேன். அடிக்கடி சந்திக்க வேண்டிய அவசியமில்லையானாலும் சந்திக்கிறேன். பழகியோரைக் காண்பதும், உறவுகளை வளர்த்துக் கொள்வதும்கூட வாழ்க்கையில் ஒரு நீங்காக் கடமை. இறைவா, இவ்வகையே வாழ்ந்திட அருள் செய்க!*

*என் இதயத்தில் வற்றாத, அன்பு ஊற்று வேண்டும். அருள் செய்க. என் இதயத்தில் நம்பிக்கை என்ற ஒளி விளக்கு அணையாமல் எரிய வேண்டும். பலருடன் கூடிப் பூத்துக் குலுங்கும் பொலிவுடைய வாழ்க்கையை எனக்கு அருள் செய்க!*

## ஜூலை 26

### நான் அறியாமையிலிருந்து முற்றாக விடுதலை பெற அருள் செய்க!

*இறைவா, சூரனைத் தடிந்தாட் கொண்டருளிய தலைவா, சூரன் யார்? வேல் எது? சூரனைத் தடிந்த வரலாற்றின் பொருள் என்ன? இறைவா, எனக்கருள் செய்க! சூரன், அறியாமையின் உருவம், புல்லறிவாண்மையின் சின்னம். அறியாமையின் விளைவு அகந்தை. அதனால் "நானே எல்லாம்" - என்ற ஆர்ப்பாட்டம்.*

*அறியாமையை, அகந்தையை அகற்றுவது அறிவு; நிறை அறிவு; பேரறிவு! அதுவே ஞானம்! இறைவா அறிவு, நிறை அறிவு, பேரறிவு, ஞானம் இவையெல்லாம் என் வாழ்க் கையில் வந்து பொருந்த அருள் செய்க! அறியாமைக் கலப்பில்லாத அறிவே அறிவு!*

*ஒன்று தெரியும் பிறிதொன்று தெரியாது என்ற நிலை கல்லாமை. அறிவு முயற்சி இன்மை; ஒன்றைப் பிறிதொன்றாக அறிதல் அறியாமை. நன்றைத் தீது என்றும், தீதை நன்று என்றும் முறை பிறழ அறிதல் அறியாமை. நான் அறியாமை யிலிருந்து முற்றாக விடுதலை பெற அருள் செய்க!*

*அறிவு வளர்ச்சியைக் கெடுக்கும் அகந்தையை, அறவே அகற்றி, யாவர்க்கும் தாழ்வாக நடந்திடும் பெற்றியினை அருள் செய்க! தாழ்தல்-தாழ்ந்து போதல் அறிவை வளர்க்கும்; ஆக்கத்தினைத் தரும்.*

*இறைவா, எனக்குத் தாழ்வெனும் தன்மை அணியா கட்டும். கற்றல், கேட்டல், உற்றறிதல் ஆகிய அறிவு முயற்சி களில் சோர்விலாது ஈடுபட அருள் செய்க!*

*தெரிய வேண்டியன தெரிந்து கொள்ளும் ஆர்வத்தை அருள் செய்க! தெளிய வேண்டியன தெளிந்து கொள்ள அருள் செய்க! வாழ்க்கைக்கு உறுதியென, நோன்பெனக், கொள்வன கொண்டு வாழ்ந்திட அருள் செய்க!.*

## ஜூலை 27

### ஒப்புரவு வாழ்க்கைக்கு உதவும் கூட்டு வாழ்க்கையே எனக்குத் தேவை!

*இறைவா, சூரனைத் தடிந்து அருள் செய்த தலைவா! அன்று ஒரு சூரன் இருந்தான். எளிதில் தடிந்தாட் கொண்டனை. இன்றோ, எண்ணற்ற சூரர்கள். இறைவா, ஏன் இந்த அவலம்? "நான்" என்ற முனைப்பு அகன்றபாடில்லை!*

*நானோ பலவீனமானவன். எனது வெற்றி பொருந்திய வாழ்வுக்குக் கூட்டாளிகள் பலர் வழங்கப்படுகின்றனர்! ஆனால் கூட்டாளிகள் எளிதில் கூடுவதில்லை. கூடுகிறார்கள், கலைகிறார்கள்! ஏன், இறைவா? "நான்" என்ற அகந்தையை இழந்த தூய சமூக வாழ்க்கையை அருள் செய்.*

*இறைவா! "நான்" திணிந்த இருள் வழிப்பட்ட ஆணவத்தின் விளைவு. ஒப்புரவு வாழ்க்கைக்கு உதவும் கூட்டு வாழ்க்கையே எனக்குத் தேவை. "நான்" வேண்டாம். என்னுடைய பெயர் சாகட்டும். "நான்" அற்ற நிலையில்தான் திருவடி ஞானம் தலைப்படுகிறது.*

*திருவடி ஞானத்தை எனக்கு அருள் செய்க! "நான்", "எனது" அற்ற சமுதாயப் பெரு வெளியில் பலரோடும் நட்பும் உறவும் கொண்டு வாழ்ந்திட அருள் செய்க. இனி நான் சமூகத்தின் ஓர் உறுப்பு. இதுவே என் விருப்பம். இறைவா, அருள் செய்க.*

௬.X.15.

## ஜூலை 28

## இறைவா, எய்ப்பினில் வைப்பாக இருந்து வாழ்வித்து அருள் செய்க!

இறைவா, நரகொடு சுவர்க்கம் நானிலம் புகினும் புக்குநின்றருளும் என் தலைவா! நின் திருவடிகள் போற்றி! போற்றி!! இறைவா, நீ என் வாழ்க்கைக்குத் துணை! என் மனத்துள் கருத்துருக் கொண்டருள்வாய்! இது உண்மை இறைவா. ஆனால், எனக்கு நாணம் மேலிடுகிறது.

என் தலைவனே! நான் ஒரு அறிவு ஜீவி. நானும் செயல்கள் செய்வேன். எனக்கும் பொறி புலன்கள், அறிவுக் கருவிகள், செயற்பாட்டுக்குரிய கருவிகள் உள்ளன. நான் என்ன சோற்றுப் பாவையா? நான் உண்டு உடுத்து மாள்வதா? பலநூறுகோடி உயிர்களைப் பயந்த வண்ணம் காக்கும் கடம் பூண்ட நின் உழைப்பிலேயே நான் வாழ்வதா? ஐயகோ, வெட்கமாக இருக்கிறது. என்னைப் பொறுத்துக் கொள்!

நான் என்ன செய்ய வேண்டும் என்று எண்ணு கின்றேன்! உன்னிடமும் என்னைப் பணிகொள்ளும் வகை கேட்டறிந்து கொள்கிறேன்! நான் சிந்திக்கிறேன். நான் செய்கிறேன். நான் உழைக்கிறேன்.

இறைவா, நான் எனக்காகவும் இந்தப் பரந்த மானுட சாதிக்காகவும் உழைக்கிறேன். உழைத்தே உண்பது என்று உறுதி கொள்கிறேன். நின் திருவுளம் மகிழப் பல அற்புதப் படைப்புகளைச் செய்கிறேன்.

இறைவா, ஒரே ஒரு வேண்டுகோள்! என்ன இருந்தாலும் நான் ஒரு சிற்றுயிர்! என் பணியில் நான் சோர்ந்தால்-எய்த்துக் களைத்துப் போனால் நீ வந்து துணை செய்! நீ எனக்கு வழக்கமாக நுகரும் நிதிபோல் அல்லாது சேமநிநிதியாக இருந்தருள் செய்க! நீ எனக்கு எய்ப்பினில் வைப்பாக இருந்து வாழ்வித்தருள் செய்க!

## ஜூலை 29

### இறைவா, என்னைச் சுற்றியுள்ள படையொடு போராட ஞானவாள் அருள்க!

*இறைவா, பெருங்கருணையாளனே! இன்று உனது கருணையாட்சியைக் காட்டியருள்க! உனது கருணை காட்டும் நெறியை நானும் அடியொற்றி நடைபயிலும் பெற்றியை அருளிச் செய்க! இன்று எங்கும் "ஞான சூன்யம்"! அதனால் படுகொலைகள் நிகழ்கின்றன. கொலை பயிலுதல் வாழ்க்கையன்று.*

*வாளெடுத்தவன் வாளாலேயே மடிவான். இது நியதி! இறைவா, எனக்குக் கருணை பொழியும் இதயத்தினை வழங்கி அருள்க! வாழ்க்கையின் பேறாகிய ஞானமே எனக்குத் தேவை. என்னைச் சுற்றி வளைத்துத் தாக்கும் பொறிகளை, புலன்களை நான் அடக்கியாண்டு வெற்றி பெற வேண்டும்.*

*நன்றில் - தீதில் நடுக்கமுறும் சவலை மனத்தினை வலிமைப்படுத்திடுதல் வேண்டும். பாசத்தால் மிகுதியும் தாக்குண்டு வழுக்கி வீழும் நான் உன்னுடைய கருணையால் எழுந்து, என்றுமே வீழாமல் நடக்க வேண்டும். அருள் செய்க! ஞானத்தின் திருவுருவே! என் வாழ்வு உய்தி பெற அருள் செய்க!*

*தூய அறிவினனே! என் அறிவை விரிவு செய்து தூய்மை செய்திடுக! அறியாமைக் கலப்பில்லா அறிவினைத் தந்தருள் செய்க! பிறப்பறுக்கும் ஞானத்தினை வழங்கியருள்க! என்னைச் சுற்றியுள்ள படையொடு போராட எனக்கும் வாள் வேண்டும், படை வேண்டும்.*

*நான் விரும்பும் வாள் ஞானவாள்! ஞானமே, இம்மை யில் என்னை வளர்க்கும்; வாழ்விக்கும். ஞானமே, ஞாலத்தை வெல்லும். ஞானமே நின்னைத்தரும், ஞானமே இன்ப அன்பினை வழங்கும். இறைவா அருள் செய்க!*

## ஜூலை 30

### நினைக்கண்டறியும் அறிவினைத் தந்தருள் செய்க!

*இறைவா, மெய் கண்டதேவன் கண்டுணர்த்திய மெய்ப் பொருளே! "மெய்" என்ற சொல் இன்று அதன் அற்புதப் பொருளை உணர்த்தும் வகையில் வழங்கப் பெறவில்லை. மெய்-உடம்பு, மெய் - மெய்யெழுத்து என்பனவே நான் அறிந்து வைத்துள்ள செய்தி.*

*மெய்கண்டார் கண்டு காட்டிய மெய்யை நான் உணர்தல் வேண்டும். இறைவா, உணர்த்தியருள்க. அல்லது உணர்த்தக்கூடிய ஆசிரியனைக் காட்டியருள் செய்க. இறைவா, உனக்குப் பொய்ம்மையாகச் சிலர் சேர்த்த பெருமையை மெய்கண்டசிவம் பறித்துவிட்டார், ஆம் இறைவா. நீ என்னைப் படைக்கவில்லை. உயிர்க் குலத்தை நீ படைக்கவில்லை.*

*இறைவா, நீ என்னைப் படைத்த தலைவனாக இருப்பின் என் குறைகளுக்கு நீயே பொறுப்பு. நான் பொறுப்பற்றவனாகி மனம் போன போக்கில் வாழ்வேன். இறைவா, இல்லை இல்லை! நீ என்னைப் படைக்கவில்லை என்ற உண்மையை உணர்ந்து கொண்டேன்.*

*நானே என் வாழ்க்கைக்குப் பொறுப்பு. எனக்கு வாய்த்திடும் நன்றும் தீதும் பிறர்தர வாரா என்ற தெளி வினைத் தந்தருள் செய்க! நான் என்றும் உள்பொருள். என் பிறப்பு என்பது உலகொடு உறவு கொள்வது. உறவைத் துண்டித்துக் கொள்வது இறப்பு, அவ்வளவு நான்!*

*நான் என்றும் உள்ளவன் என்று உணர்த்திய உத்தமனே, வினைகள் செய்யும் வாய்ப்புகளை வழங்குக! வினைப்பயன் வந்து சாராமே துலாக்கோல் போல் வாழ்ந் திட அருள் செய்க! அறியாமையை அகற்றி அருள் செய்க! நின்னைக் கண்டறியும் அறிவினைத் தந்தருள் செய்க!*

## ஜூலை 31

### இறைவா, இந்த உடலினை அடக்கி ஆண்டிடும் ஆற்றலினை அருள்செய்க!

இறைவா, ஞானத்தைத் தேட, ஆன்மா பூரணத்துவம் அடைய எனக்கு உடலைக் கருவியாகத் தந்தனை. நானே உயிர். நான் உன் மகவு. எனக்கு உடைமையே உடல். எனக்கு ஒரு கருவியே இந்த உடல்.

ஆனால், இன்று என்னைக் காணோம். என் ஆத்மா வைக் காணோம்? ஏதோ ஒரு சுட்டுப் பொருளாக நான் பயன்படுகிறேன். எனக்கு இங்கு என்ன அதிகாரம் இருக் கிறது? ஒன்றும் இல்லை! இறைவா, என் உடல் என்மீது அதிகாரம் செய்கிறது. என்னை அதற்கு இரை தேடுவதிலேயே ஈடுபடுத்துகிறது. என் உடலின் களிப்புக்கும் மகிழ்ச்சிக்குமே நான் உழைத்து எய்த்துப்போனேன்.

ஆனால், இந்த உடல் ஒரு நொடிப் பொழுது கூட என் நலன் நாடுவதில்லை. எனக்கு உரிய அறிவினைத் தேடும் முயற்சியில் துணை நிற்பதில்லை. நல்ல நூல்களைக் கற்கவே இடம் கொடுப்பதில்லை. ஏன்? ஏன் தந்தையாகிய உன்னை நினைந்து தொழக்கூட இந்த உடல் அனுமதிப்பதில்லை. உயிர்க்கு ஊதியமாகிய தொண்டினை - பிறர் நலம் கருதும் தொண்டினைச் செய்ய அனுமதிப்பதில்லை.

இறைவா, இந்த உடலை அடக்கி ஆண்டிடும் ஆற்றலினைத் தருக. நானும் நல்ல நூல்களைக் கற்றிடும் பேற்றினை அருள் செய்க! உன்னை நினைந்து நினைந்து தொழுது மகிழும் வரத்தினைத் தந்தருள் செய்க! பிறர்க்கு அன்பு செய்து அவர்தம் வாழ்வுக்குத் தொண்டு செய்யும் தூய வாழ்வினை அருள் செய்க!

## ஆகஸ்டு 1

### என் உழைப்பில் வாரா எதையும் ஏற்காதிருக்க அருள் செய்க!

இறைவா, காலமெல்லாம் உயிர்க்குலத்திற்காக உழைத்து ஐந்தொழில் நிகழ்த்திடும் அற்புதத் தெய்வமே! உண்ணும் சோறாய், பருகும் நீராய் விளங்கி வாழ்வித்திடும் அண்ணலே! நின் கருணைக்கு அடியேன் செய்யும் கைம்மாறு ஏது?

இறைவா, எல்லாம் உன் செயலே. ஆனால், அன்றும் நீ நஞ்சையே உண்டனை. பல்லூழிக்காலமாக நானாக விரும்பிக் காட்டும் சோற்றினையே பாவனையால் உண் கிறாய். உண்டது போல் பாவனை, அதையும் நீ எனக்கே திருப்பித் தந்து விடுகிறாய்.

உன் அடியவன் என்று பறை சாற்றிக் கொள்ளும் நானோ உழைப்பதற்கே சோம்பல் படுகிறேன். பிறருக்கு இல்லாத எல்லாம் எனக்குத் தேவை. கூடுதல் ஊதியம் தேவை. பிறர் உழைப்பில் வாழும் நிலை இன்று தாவரங் களுக்கு இல்லை, விலங்குகளுக்கு இல்லை. ஆனால் நான் வெட்கம் இல்லாமல் உழைக்காமல் வாழ ஆசைப்படுகிறேன். பிறர் உழைப்பில் வாழ முற்படுகிறேன். இறைவா, என்னை மன்னித்துக் கொள்.

உழைப்பே உலகத்தியற்கை என்று கற்றுத்தந்துள்ளனை. உழைப்பே உடம்பின் ஊழ். உழைத்தலே உடம்பின் இயற்கை நியதி. உழைப்பில் பயன்படுத்திடா உடம்பு நோய்க்கு இரையாகும் என்றுணர்த்திய தலைவா! "உழைத்து உண்பதே உணவு; உழைக்காது உண்பது நஞ்சு. உழைத்து உண்பதே நேரிய வாழ்க்கை" என்று அறநெறி உணர்த்திய ஆனேறூரும் அண்ணலே! பிறர் உழைப்பில் வாழ்தல் பிறர் பங்கைத் திருடுதல் என்ற தீய செயல்களிலிருந்து எடுத்தாண்ட அண்ணலே! நான் அயராது உழைப்பேன். என் உழைப்பில் வாரா எதையும் நான் ஏற்காதிருக்க அருள் செய்க!

## ஆகஸ்டு 2

### இறைவா, மரணமிலாப் பெருவாழ்வு வழங்கி அருள்க!

*இறைவா, காலனைக் காலால் தடிந்த காலகாலனே, மனிதகுலத்தை மரணபயம் வருத்துகிறது ஏன் இறைவா! நீ, மரணத்தை நிரந்தரமாகவே உயிர்களுக்கு நீக்கி அருள் செய்யக்கூடாதா? காலனுக்கு வேறு ஏதாவது பணிதரக் கூடாதா?*

*மரணபயத்தைக் காட்டியே இந்த உலகத்தை இயக்குதல் நின்கருணைக்கு அழகா? நீ மட்டும் சாகாமல் இருக்கிறாய்! எங்களுக்கு ஏன் சாவு? இறைவா, என்ன சொல்கிறாய்?*

*நானும் மரணமிலாப் பெருவாழ்வு வாழலாமா? அப்படியா இறைவா! நான் மரணமிலாப் பெருவாழ்வையே விரும்புகின்றேன்.*

*இறைவா, மரணமிலாப் பெருவாழ்வை அடையும் நெறிகளை எனக்குக் கற்றுத் தா. எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரிடத்தும் ஒத்து உரிமை பாராட்டி வாழும் இயல்பினை அருளிச் செய்க.*

*ஆருயிர்களுக்கெல்லாம் அன்பு செய்யும் பெருவாழ்வினை அருள் செய்க! இன்ப துன்பங்களில் சமநிலையில் நிற்கும் பெற்றியினை அருள் செய்க!*

*எப்போதும் எந்தச் சூழ்நிலையிலும் என் உடல் உணர்வுகள் சமநிலையில் அமைதி தழுவியதாக விளங்க அருள் செய்க! எந்தச் சூழ்நிலையிலும் என் உடலில் குருதி கொதிநிலை யடையா வண்ணம் அருள் செய்க! இவையனைத்தும் பயக்கும் மரணமிலாப் பெருவாழ்வை வழங்கி அருள்க!*

## ஆகஸ்டு 3

### காணும் காட்சியினைப் பயன் கருதா உழைப்பின் காட்சியாகக் கண்டு அங்ஙனமே வாழ அருள் செய்க!

*இறைவா, சிறியோர் செய்த பிழையெல்லாம் பொறுத் தருளும் பெரியோனே! என் பிழைகள் பொறுத்து ஆள்வதற்கு ஏன் தயக்கம்? நான் எண்ணற்ற பிழைகளைச் செய்கிறேன்; திரும்பத் திரும்பச் செய்கிறேன்.*

*இறைவா, எனக்குப் படிப்பறிவும் துணையில்லை! பட்டறிவும் கைகொடுக்க மறுக்கிறது, நான் விழுந்து விழுந்து எழுகிறேன். இறைவா, என் செய்ய? நான் ஒரு பேதை!*

*இறைவா, என் அறிவைத் திருத்து. என்னை அறி வார்ந்த ஆள்வினையில் உய்த்துச் செலுத்து. என் கண்கள் காண்க. காண வேண்டுவனவற்றைக் காண்க! புலன்கள் ஒன்றிய காட்சியை அருள் செய்க! காட்சியைக் கற்றிடும் சாதனமாக ஏற்றிடும் திறனை அருள் செய்க!*

*"கண்டதைப் படித்தால் பண்டிதனாவான்" என்ற பழமொழி என் வாழ்வில் உண்மையாகட்டும். என்னைச் சுற்றிலும் உள்ள இயற்கையை-இயற்கையின் பொருளடைவு மிக்க செயற்பாட்டை நான் கற்றறிதல் வேண்டும்.*

*இயற்கையின் அழகில்-இளமையில்-பயன்பாட்டுத் திறனில் நான் கற்றுக் கொள்வனவற்றைக் கற்றுக்கொள்ள அருள் செய்க! மலர்கள் பூத்துக் குலுங்கிய செடிகள் தாயுமானாருக்கு இறைக் காட்சியைத் தந்தன.*

*நான் இயற்கையை வாழும் காட்சியாக, பயன் கருதா உழைப்பின் காட்சியாகக் கண்டு நாளும் அங்ஙனமே வாழ்ந் திட அருள் செய்க! ஓயாது உழைத்திடும் உழைப்பாளனாக வாழ்ந்திட அருள் செய்க! என் கண் காண்பனவற்றைக் காண்க! எனக்குக் காட்ட வேண்டுவனவற்றைக் காட்டுக. இறைவா அருள் செய்க!*

## ஆகஸ்டு 4

### ஒவ்வொருநாளும் ஒவ்வொரு நொடியும் திட்டமிட்டுப் பணி செய்ய அருள் செய்திடுக!

*இறைவா, ஒருநாள் ஒருபொழுதுகூடத் தடையின்றி, இந்த உலகம் ஓயாது இயங்குகிறது. இந்த உலகம், தோன்றிய நாள் தொட்டு இயங்குகிறது சோர்வு இல்லை. மாற்றங்கள் இல்லை. ஒழுங்கமைவும் கெடவில்லை. இறைவா, என்னே நின் அற்புதம்!*

*நானோ பிறந்து வளரப் பல ஆண்டுகள் எடுத்துக் கொண்டேன்! அப்பொழுது எல்லாம் தந்தை, தாய், மற்றோர் உதவியுடன் நடந்தேன். வாழ்ந்தேன். நானாக வாழத் தொடங்கிய காலத்திலிருந்து ஒரு நாள் கூட முழுதாக உழைத்தேனில்லை. எட்டுமணி நேரம் என்ற வரையறையில் கூட முழுதாக உழைப்பில் காட்டியதில்லை. எத்தனையோ நாள் வேலைக்கு மட்டம் போட்டிருக்கிறேன்.*

*இறைவா, நான் கடிகாரம் கட்டியுள்ளேன்! ஆனால் மணியைத்தான் அளந்து பார்த்ததில்லை. கடிகாரம் எனக்கு அணி! நான் சோர்வுபட்டு விழும் வீழ்ச்சிகளுக்குக் கணக்கில்லை. நான் இப்படியே வாழ்ந்தால் உருப் பெற மாட்டேன். என்னைக் காப்பாற்றுக.*

*காலம் போற்றும் உணர்வினைத் தந்தருள்க! வீழ் நாள் படாமல் வாழ்ந்திட அருள் செய்க! என்னோடு பழகுபவர் களின் அன்பைப் பராமரித்திடும் பண்பைக் கற்றுத் தருக! மற்றவர் ஆலோசனை நல்லதுதான். ஆனால், முடிவெடுப்ப தில் மற்றவர் குறுக்கீடு கூடாது.*

*ஒரு நாள் வீழ் நாளாகப் போனால் அதனால் எண்ணற்ற தீய விளைவுகள் விளையும். இறைவா, என்னைக் காப்பாற்றுக! ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நொடியும் நான் திட்டமிட்டுப் பணிகளைச் செய்ய அருள் செய்க!*

## ஆகஸ்டு 5

### நானும் நல்ல தமிழில் உனைப் போற்றி வழிபட அருள் செய்க!

*இறைவா, மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவா! நீ தமிழை ஆய்வு செய்தாய்! தமிழை வளர்க்கும் பணியில் உன் குடும்பம் முழுதும் ஈடுபட்டது! சங்கத்தில் தமிழ்ப் புலவனாகக் கவியரங்கேறினாய்.*

*பண் சுமந்த பாடற் பரிசு பெறக் கூலியாளாக மண் சுமந்தாய். காசு நித்தம் நல்கி இச்சை மீதூர நாளும் நற்றமிழ் கேட்டாய். ஏன் இறைவா? இவ்வளவும் தெரிந்தும் உன்னோடு பேச சமஸ்கிருதம் வேண்டுமாம்! இது என்ன நியாயம்?*

*இறைவா, நீ முன்பெல்லாம் எளிவந்தருளித் திருவிளை யாடல்கள் ஆற்றினை! நல்ல தமிழ் கேட்கலாம் என்றால் நீ விரும்பி முன் நின்றனை. இப்போதெல்லாம் உன்னை எத்தனை தடவை அழைத்தாலும் நீ வருவதில்லை. ஏன்? நீ மகிழ்ந்து பூரிக்கும் தமிழ் கேட்கும் வாய்ப்பினை இழந்த மையால் நீ வருவதில்லையா?*

*எந்த இடத்தில் எந்த உருவத்தில் நீ எழுந்தருளி ஆருயிர்களுக்கு அருள் வழங்கினையோ, அங்குக்கூட நீ இருக்கிறாயோ, இல்லையோ என்ற ஐயம் எழும் அளவுக்கு நீ மௌனம் சாதிப்பது ஏன்? இறைவா, நான் ஏழை! தமிழை மட்டுமே அறிந்த ஏழைப்பாவலன்! வடமொழி தெரியாது. எனக்கு மேட்டுக் குடியோடும் உறவில்லை. எனக்காக யாரும் பரிந்துரை செய்ய மாட்டார்கள்.*

*இறைவா, நான் கூறும் தமிழ் என் தமிழல்ல, அப்ப ரடிகள் அருளிய அருந்தமிழ்! நானும் நல்ல தமிழில் உனைப் போற்றி வழிபட அருள் செய்க! ஊன் கலந்து உயிர் கலந்து நின்னருளில் திளைத்து வழிபடும் வாய்ப்பினை வழங்குக!*

## ஆகஸ்டு 6

### என்னை ஏழைமையிலிருந்து காப்பாற்றுக!

*இறைவா, ஏழைபங்காளா! ஏழையேன் முகம் ஏறெடுத்துப் பார்ப்பது யார்? யாரிடம் சென்றாலும் "ஏழை" என்பதற்குரிய முத்திரையுடன்தான் வரவேற்பு. கல்விக் கோயில் முதல் கடவுட் கோயில் வரை காசுகளின் கொட்டம், பணத்தின் ஆட்சி. நான் என்ன செய்ய?*

*இறைவா, நீ என் வாழ்க்கையில் பங்கேற்க முன் வந்திருக்கிறாய். உண்மையில் என்னை உயர்த்துவது உன் திருவுள்ளமா? அல்லது என்னை உயர்த்துவது போல நடித்து நீ உயரப் போகிறாயா? இறைவா, என் ஏழைப் புத்தி அப்படிக் கேட்கச் சொல்கிறது! நீ இயல்பாகவே உயர்வற உயர்ந்தவன். இறைவா, என்னை ஏற்று, உயர் நிலைக்கு உயர்த்துக! கற்ற அறிஞனாக அவையில் நிறுத்தி உயர்த்துக. நூலறிவும் நுண்ணறிவும் வழங்கி வாழ்க்கையில் உயர்த்துக!*

*அறிவறிந்த ஆள்வினையில் ஈடுபடுத்தி இணையற்ற வாழ்நிலையில் வாழ்ந்திடச் செய்க! சால்பு நெறியில் நிற்கும் சான்றோனாக்கி அருள் செய்க! பண்பாட்டின் தலைப்பிரியா நெறியில் உயர்த்திடுக. நயத்தக்க நாகரிகத்தில் நிலை நிற்க அருள் செய்க. என்னை ஏழைமையிலிருந்து காப்பாற்றுக.*

*நான் அறிவுச் செல்வத்தில் வளர்ந்திடத் திருவுள்ளம் பற்றுக. சிந்தையின் நிறைவில் நின்று மகிழ்ந்திடும் பெரு வாழ்வினை அருள் செய்க! நின்னருள் பெற்று நின்று உயர்ந்து வாழ அருள் பாலித்திடுக!*

## ஆகஸ்டு 7

### இறைவா, என் வாழ்க்கை ஊக்கம் நிறைந்த உழைப்பின் வழியில் நடந்திட அருள் செய்க!

*இறைவா, வானநாடனே! வழித்துணை மருந்தே! இறைவா, நான் உலகில் மேற்கொள்ளும் பயணத்திற்கு உரிய வழியை அறிந்து கொள்ள ஆசைப்படுகின்றேன். எந்த வழி சுருக்கமானது? பயணத்திற்கு எளிதானது? நலமானது? பய மற்றது? என்றெல்லாம் தெரிந்து கொண்டுதான் பயணம் செய்கின்றேன்.*

*செல்ல வேண்டிய ஊருக்குரிய பாதையை விட்டு விட்டு, வேறு பாதையை நான் தேர்ந்தெடுத்ததே இல்லை. ஐயப்பாட்டால் வழியில் போவாரிடம்-தெரிந்த ஒருவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டுதான் பயணம் தொடர்கிறது. இது ஒரு பிறப்பில் சில ஆண்டுகள் நடக்கும் பயணத்திற்கு.*

*இறைவா, ஊழிக்காலந் தொட்டு, உயிர்க்குலம் தோன்றிய நாள் முதலாகத் தொடர்ந்து என் பயணம் நடை பெற்றுக் கொண்டிருக்கிறது. நெடிய பாதையில் அல்ல, வட்ட வடிவில் அமைந்த வளைவுப் பாதையில் நடந்து கொண்டிருக் கிறேன். நான் பயணம் செய்து சென்று சேர வேண்டிய ஊர் இன்ப ஊர். ஆனால், வளைந்த பாதையில் சென்று பயணத்தைத் தொடங்கி கருவூருக்கே திரும்ப வந்து விடுகின்றேன்! இறைவா, இது என்ன கொடுமை!*

*அலைந்து எய்த்துப் போய்விட்டேன்! என்னைச் சரியான வழியில் நடத்துக. அழைத்துச் செல்க! இறைவா நான் வரும் வழி சரியானதாக அமைந்து விட்டால் போதும்! மற்றெல்லாம் தாமே நடக்கும்; நன்றாக நடக்கும். இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 8

### இறைவா, நான் என்னை ஆளும் தன்மை எனக்கு அருள் செய்க!

*இறைவா, தனக்குவமை இல்லாத தலைவா! ஒப்பாரும் மிக்காரும் இல்லாத நிலை உன் தலைமை.*

*இறைவா, எனக்கு எங்கே தலைமையின் தத்துவம் புரிகிறது. எனக்குத் தலைமைக்குரிய தகுதிகளைப் பற்றியெல் லாம் கவலையில்லை. நான் தலைவனாக வேண்டும்; அதுவே என் ஆசை!*

*"மயக்கமற்ற அறிவு; தெளிந்த-துணிவான அறிவு! அறிவறிந்த ஆள்வினைத்திறன், தன்னுடைய பொறிகளின் மீது மேலாண்மை, புலன்களின் மீது விருப்பம் நிறைந்த செயலூக்கம்; விருப்பு - வெறுப்புக்களைக் கடந்த நிலை, உண்மையைச் சாதிக்கும் திறன்; தீமையை எதிர்த்து உறுதியாகப் போராடும் திறன் - இவை எங்கு இருக்கிறதோ அங்குத் தலைமை தானே வந்து சேரும்.*

*தகுதியுடையவர்களே தலைமைக்குரியர்-இறைவா, என்ன அருளிச் செய்கின்றனை! தலைமைக்குரிய பண்புகள் சிறந்த ஆளுமை உடையவர்களிடமே அமையும். இறைவா, என்னை, நான் ஆளும் தன்மையை எனக்கு அருளிச் செய்க!*

*என் பொறிகளை எனக்கு நன்மை செய்யும் நெறியில் செலுத்திடும் வல்லமையை - ஆளுமையை அருள் செய்க! என்னுடைய புலன்கள் அழுக்கடையா வண்ணம் காத்துக் கொள்ளும் திறனை அருள் செய்க! என்னுடைய வாழ்நாட் காலம் முழுதையும் என்வசம் நிறுத்தி, ஆளுமையுடன் முழுமையான உழைப்புக்குரியதாக்கிப் பயன் கொள்ளும் வாழ்நிலையினை அருள் செய்க!*

*என்னுடைய சூழ்நிலையை நான் என்னுடைய நலனுக்கு உகந்ததாக மாற்றிடும் திறனை அருள் செய்க! இறைவா, எனக்கு இப்போது தலைமை வேண்டாம் முதலில் ஆளுமையை அருள் செய்க!*

## ஆகஸ்டு 9

### இறைவா, என்னுடன் உறவு கொள்ள இங்கே எழுந்தருள்க!

*இறைவா, ஆண்டவனே! நின்னருள் போற்றி! போற்றி!! இறைவா, நீ இன்று காணப்படும் பொருளாக இல்லை. ஆதலால் இல்லாத பொருளாகவும் ஆகிவிட்டாய். இறைவா, நீ காட்சிப்பொருளாக, சாட்சிப் பொருளாக மாறி விட்டாய்.*

*நீயும் முன்போல் இயக்கத்தில் இல்லையோ? உன்னை விரும்பித் தேடிக் காண்போரும் உன்னோடு உறவு வைத்துக் கொள்வோரும் இல்லை. ஏன் இறைவா, இந்த நிலை? எனக்கும் உனக்கும் உள்ள உறவு இன்று, நேற்றுத் தோன்றிய தன்றே! நமது உறவு இப்படிப் பலவீனமானதாக இருக்கலாமா? ஏன், இறைவா? நான் விரும்பி அழைக்கவில்லை என்று கூறுகிறாயா? இது அபாண்டமான குற்றச்சாட்டு!*

*நான் உண்மையைச் சொல்கிறேன். உனக்கு நிறைய பூசைகள் செய்திருக்கிறேன். எண்ணற்ற அருச்சனைகள் செய்திருக்கிறேன். பலநூறு ஆயிரம் உருமந்திரம் ஜபித்திருக்கிறேன். இறைவா, என்ன சிரிக்கிறாய்? இவை உனக்காகாதவை. பொருளற்ற சடங்குகள் என்கிறாயா? இவற்றில் அன்பு இல்லையா? உறவு இல்லையா? ஈடுபாடு இல்லையா? இறைவா, என்னை மன்னித்துக் கொள்.*

*நான் இனி உன்னோடு உரையாடத் தகுதியுடைய சபதத்தினைச் செய்வேன். உன்னோடு பேசுவேன், உன்னிடம் நெருங்கி உறவாடுவேன். இறைவா, அருள் செய்க! நான் செய்யும் சபதத்தினை ஏற்றருள் செய்க! என்னுடன் உறவு கொள்ள இங்கே எழுந்தருள்க!*

# ஆகஸ்டு 10

## இறைவா, மெய்யன்பு காட்டும் திறன் அருள்க!

*இறைவா, மெய்ப் பொருளே! நின்னருள் போற்றி! போற்றி!! இறைவா, பொய்யை நீக்க முயற்சி செய்கின்றேன், முடியவே இல்லை. பொய்! - ஆம், இறைவா, என் வாழ்க்கையே ஒரு பொய்தானே!*

*அன்பு செய்வேன். இல்லை அன்பு செய்வதாகக் காட்டிக் கொள்வேன். வேலை செய்வேன். இல்லை- வேலை செய்வது போல ஒரு தோற்றத்தை உருவாக்குவேன். இறைவா, பொய்ம்மையில் பிறந்து உழலும் நான் பொய்யை நீக்க வேண்டும். எப் பணிக்கும் முதற்பணி பொய்யை நீக்குதல். அடுத்து அன்பு காட்ட வேண்டும். ஆம், இறைவா! மெய்யன்பு காட்ட வேண்டும்.*

*அன்பில் பொய்யன்பு, மெய்யன்பு என்ற வேற்றுமை உண்டு. பொய்யன்பு என்பது பயன் கருதிச் செய்யும் அன்பு. இது அன்பன்று! வணிகமாகும். ஆம், இறைவா, தூண்டிலில் புழுவைக் காட்டி மீன் பிடிப்பது போல. இறைவா, பயன் கருதிச் செய்யும் அன்பு, அன்பன்று! எண்ணிய பயன் கிடைக்காது போனால் அன்பு பகையாக மாறிவிடும்.*

*இறைவா, கனவிலும் நான் பொய்யன்பு செய்யக் கூடாது. நான் என் உள்ளத்தில் மெய்யன்பை வருந்தி அழைத்துக் கொள்ளவே விரும்புகின்றேன். நான் வாழ்தல் வேண்டும். அதற்கு ஒரே வழி அன்பு செய்தல், அதுவும் மெய்யன்பு காட்டுதல்.*

*இனி நான் மெய்யன்பு காட்டுவேன்! மெய்யன்பு காட்டும் திறனை அருள் செய்க! மெய்யே உன் பொன் னடிகள் கண்டு இன்று வந்து அடைந்தேன். மெய்யன்பு காட்டும் திறனை அருள் செய்க! இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 11

### இறைவா, மண்ணுக்குள் வேரென மறைந்து கிடந்து சாதனை செய்திட அருள் செய்க!

*இறைவா, அமரரேறே! கலந்தார் மனங்கவரும் காதலானே! இன்பத்தை விரும்புகின்றேன். ஆனால், நான் அடைவதோ துன்பம்தான். ஆம் இறைவா, மகிழ்வுக்குரிய அறிவு, செல்வம், புகழ், கூட துன்பங்கலந்த இன்பமாகவே அமைந்துள்ளன. என் வாழ்க்கையில் துன்பம் ஒரு தொடர் கதை. ஏன், இறைவா, இந்தத் துன்பத்திலிருந்து எனக்கு விடுதலை இல்லையா? உய்தி இல்லையா?*

*இறைவா, "துறவாத துன்பத்தைத் துற" என்கிறாய்! நான் துன்பத்தைத் துறக்க எப்பொழுதும் ஆயத்தமாக உள்ளேன். ஆசைப்படுகின்றேன். ஆனால், துன்பத்தின் காரணத்தைத் துறக்க நான் ஆயத்தப்படவில்லை. உண்மை தான். துறவாத துன்பம் எது? அதுதான் ஆணவம்!*

*ஆணவமே துன்பங்களுக்கு எல்லாம் முதல்! ஆணவம் பொல்லாதது; பெருமை போலக் காட்டித் தீமை செய்வது. எனக்குத் தீமை செய்யும் இந்த ஆணவம் எனக்குத் தெரியாமலே பற்றிக் கொண்டது. எளிதிலும் நீக்க இயல வில்லை. இறைவா, மன்னித்துக் கொள்!*

*ஆணவத்தின் வாயில்களாகிய "நான்", "எனது" கெட்டால் போதும்! "நாம்", "நம்முடையது" என்ற கூட்டு வாழ்க்கை மேற்கொண்டால் ஆணவத்தை முற்றாகத் துறக்க இயலும். ஆணவத்தின் ஆற்றலை முற்றாக அடக்கிவிடலாம்! இறைவா, அருள் செய்க!*

*அடக்கத்தினை அருள் செய்க! யார் மாட்டும் தாழ்வு காட்டும் பண்பினை அருள் செய்க! மண்ணிற்குள் வேரென மறைந்து வாழ்ந்து சாதனைகள் செய்திட அருள் செய்க! துறவாத துன்பத்தையும் துறந்து வாழ அருள் செய்க!*

## ஆகஸ்டு 12

### எத்தனை தடவை கருவூருக்கும் சாவூருக்குமாகச் சுற்றுவது? இறைவா அருள் செய்க!

*இறைவா, பிறவா யாக்கைப் பெரியோனே! நீ சாதலுக்கும் பிறத்தலுக்கும் அப்பாற்பட்டவன்! நானோ செத்துப் பிறப்பதையே தொழிலாகக் கொண்டு பிறந்து இறந்து கொண்டிருக்கின்றேன்! ஏன் இறைவா?*

*என்னைப் பெருநோய்கள் நலியத் துன்புறுத்தற்கு உரியவாகிய இறப்பு, பிறப்பிலிருந்து மீட்கக் கூடாதா? நின் கருணையைப் பெறுதற்கு நான் தகுதியுடையேன் இல்லையா? நீ சூடியுள்ள பிறைமதியைவிட நான் என்ன தாழ்ந்தவனா? இறைவா, நின் திருவருள் நோக்கு என்பால் விழவில்லை.*

*இறைவா, எல்லாம் நியதிகளின்படி நடப்பது என்றா கூறுகிறாய்? நீ, எனக்குத் துணை! ஆனால் என்னுடைய ஆக்கம் என் இதய வளர்ச்சியில் பொருந்தியிருக்கிறது. "தகுதியுடையோர் பெறுவர். வாழ்வர்" என்ற வாக்கு வாய்மைத் தன்மையுடையது.*

*இறைவா, நான் என்னைத் தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்! நான் இங்கேயே வாழுங்காலத்திலேயே இந்த உடலுடன் உலாவரும் காலத்திலேயே "நான்" சாகக் கற்றுக் கொள்ள வேண்டும்.*

*ஆம், இறைவா! என் நெஞ்சில் நின் திருநாமம்! என் நாவில் நின் திருநாமம்! என் கால்கள் நின் திருக்கோயில்களின் திருச்சுற்றில்! கைகள் மலர்பறித்திடுதலில்! இன்ன பிற பணிகளால் "எனது" இல்லாமல் போய் "நான்" செத்துப் போன பிறகு, நின் திருவருள் நோக்கு, என்பால் வீழ்ந்து அவ்விருளை அகற்றி, ஞான ஒளியினை என் அகத்தில் ஏற்றும்!*

*நான் ஞானம் அறிந்து உணர்ந்து வாழ்ந்தால் சாதலும் இல்லை; பிறத்தலும் இல்லை! இறைவா, என்னைக் காப்பாற்று! எத்தனை தடவை கருவூருக்கும் சாவூருக்குமாகச் சுற்றுவது? இறைவா, அருள் செய்க!*

ஆ.X.16.

## ஆகஸ்டு 13

## இறைவா, என்பிழைகளைப் பொறுத்து ஆட்கொள்ளக் கூடாதா? அருள் செய்க!

*இறைவா, தேவ, தேவா! நின் திருவடி அடைந்தேன். காப்பாற்றுக! இறைவா, நான் உனக்குத் தொழும்பாய்க் கிடந்து தொண்டு செய்து வருகின்றேன். இறைவா, உன்னை நினைந்தே என் ஆவி கழிந்து வருகிறது. நானும் உன்னை இறைஞ்சி வேண்டும் யாவற்றையும் அருளிச் செய்கின்றாய் இல்லை.*

*இறைவா, என் மனக் கருத்தறிந்து முடிக்கின்றாய் இல்லை! நானும் இன்று நடக்கும், நாளை நடக்கும், நம் இறைவன் அருள் செய்வார் என்று எண்ணி வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நீயோ அருளிச் செய்கின்றாய் இல்லை. நானோ சாவை நோக்கிப் பயணம் செய்து கொண்டே யிருக்கிறேன்! இப்பிறப்பில் இப்போது அருளிச் செய்யாது போனால் நான் செத்துப் போனபிறகு என்ன செய்யப் போகிறாய்! என்ன செய்து என்ன பயன்?*

*இறைவா, அடியேனின் விண்ணப்பத்தைத் திருவுள்ளம் பற்றுக! நான் இப்பிறப்பில் அறிந்து செய்த பாவம் ஒன்றும் இல்லை! நான் குணம் பொல்லேன் அல்லேன்! குற்றமும் உடையேன் அல்லேன்! இறைவா, அப்படியே குற்றங்கள் இருந்தாலும் நின் திருவுள்ளம் குணமாகக் கொள்ளக் கூடாதா? என் பிழைகளைப் பொறுத்தாட் கொள்ளக் கூடாதா?*

*இறைவா, எனக்கு அருளி உதவி செய்வதற்காக என் பிழைகளைப் பொறுத்து நிறை செய்யக்கூடாதா? என் பிழை களைப் பொறுத்தாட்கொள்க! இப்போதே ஆட்கொள்க!*

*நானிலம் அறிய ஆட்கொண்டருளுக! இன்ப வாழ் வினை அருள் செய்க! நின் திருவருளில் நலம் மிகுந்திடும் இன்ப வாழ்வினை அருள் செய்க!*

## ஆகஸ்டு 14

### இறைவா, பெரியோர் நட்பை எனக்கருளி இன்பம் சேர்த்திடுக!

*இறைவா, அமரர்கள் சூழ இருந்தருளும் இறைவா! நான் தனியனாக உள்ளேன்! என் தனிமை தாங்க முடியாமல் நட்பினை நாடி அலைகின்றேன்! நட்பு சாதாரணமானதா?*

*இறைவா, என் வாழ்வின் உயர்வும், தாழ்வும், வெற்றியும், தோல்வியும், ஈட்டமும், இழப்பும் நான் பெறும் நட்பில் தான் அமைகின்றன. "ஆமாம் சாமிகள்" நட்பினராய் வந்தமையால் மோசம் வந்து விட்டது என்று பொருள்.*

*இறைவா, நான் வளர, வாழ்ந்திட எனக்கு நட்பு தேவை. அப்படியானால் நான் பெறக்கூடிய நட்பு என்னிலும் உயர்ந்ததாக இருத்தல் வேண்டும். அதே போழ்து உயர்வு நிலை கருதாது என்னுடன் எளிமையாக வேறுபாடின்றிப் பழகுபவராகவும் அமைதல் வேண்டும்.*

*நல்ல நட்பு, வாழ்க்கைக்கு இன்றியமையாத உறுப்பு. நட்புள்ள வாழ்க்கையில் துன்பம் குறையும்; துணிவு சிறக்கும்! "பெரியாரோடு நட்பு இனிது" என்று தேவாரம் சிறப்பித்துக் கூறும். பெரியோருடன் எனக்கு நட்புத் தேவை. இறைவா, அருள் செய்க!*

*கற்றல் கேட்டலுடைய பெரியோருடன் நட்புக் கூட்டியருள்க! சீலத்தில் சிறந்து விளங்குவாருடன் நட்பு இனிதாகச் சேர்த்தருள்க! செயற்கரிய செயல் செய்யும் திறனுடையாருடன் நட்புக் கூட்டியருள்க! நின்னை மறவாத அடியாருடன் நட்புக்காட்டி இணைத்தருள்க! நான் பிழைத்திட இதுவே வழி! நான் இப்பெரியோர் நட்பைப் பேணி பாதுகாத்துக் கொள்கிறேன்!*

*இறைவா, நீ நட்புக்காட்டி, நட்பினை ஏற்படுத்தித் தந்தருள்க! பெரியோர் நட்பு இனிது! இம்மைக்கும் இனிது! மறுமைக்கும் இனிது! இறைவா, பெரியோர் நட்பினை எனக்கருளி இன்பம் சேர்த்திடுவாயாக! இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 15

### இறைவா, என்மீது முழு அதிகாரம் செலுத்தி, முழுச் சுதந்தரம் அடைய அருள்செய்க!

*இறைவா, பரிபூரண சுதந்தரம் உடையவனே! எல்லாவற்றையும் வைத்து வாங்கும் அதிகாரமுடைய ஊழி முதல்வனே! போற்றி! போற்றி!! இறைவா, என் வாழ்க்கையில் சுதந்தரத்தின் சுவை இல்லவே இல்லை!*

*"ஆடுவோம், பள்ளுப்பாடுவோம்! ஆனந்த சுதந்தரம் அடைந்து விட்டோம்" என்று. ஆனால் சுதந்தரம் என்பது இன்னது என்று எனக்கு இதுவரையில் தெரியாது! சத்தியமாகத் தெரியாது! மன்னித்துக் கொள்!*

*சுதந்தரத்தின் அனுபவம் இல்லை! "அதிகாரச் சுவையையாவது அனுபவித்தது உண்டா?" என்று கேட்கிறாய் இறைவா! ஐயகோ, அதிகாரமா? அப்படியென்றால் என்ன? இறைவா, அதிகாரமும் எனக்குத் தெரியாது! ஆனால், இறைவா, சில சமயங்களில் சில உத்தரவுகள் போடுவேன்! சிலர் மீது கோபிப்பேன்! இதற்கெல்லாம் அப்படியொன்றும் விளைவுகள் இருந்து விடுவதில்லை.*

*இறைவா, ஒருவன் முழு அதிகாரம் உடையவனாக இருந்தால் முழுச் சுதந்தரத்தை அனுபவிப்பான்! இறைவா, நன்றருளிச் செய்தனை! முழு அதிகாரம்! என் பொறிகள், புலன்கள், பழைய பழக்கங்கள், மரபுகள், சமூக நிர்பந்தங்கள் ஆகியவற்றிலிருந்து என் ஆன்மா முழுச் சுதந்தரத்தை அடைதல் வேண்டும்.*

*இந்த முழுச்சுதந்தரம் எனக்குக் கிடைத்த பிறகு எனக்கு முழு அதிகாரம் கிடைக்கும்! முழு அதிகாரமும் முழுச் சுதந்தரமும் இணை! ஒன்றே யொன்று பிரிக்க இயலாதவை. அப்படியா, இறைவா!*

*நான் இன்றுமுதல் என் வாழ்க்கையில் அனுசரிக்க முயலுகின்றேன்! நான் முழுச்சுதந்தரம் வழங்குவேன்! இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 16

### இறைவா, ஞானமே நின் திருவடிகள் போற்றி! போற்றி!!

இறைவா, என் ஆன்மாவை விழித்தெழும்படி செய்து அருள்க! சுயநலச் சிந்தனையில்லாத தனிப்பெருவாழ்வினை அருள் செய்க! பிறருக்கு நலம் புரிவதில் உறுதியினைத் தந்தருள் செய்க.

இறைவா, என் பணிக்கு முதல் தேவை மனிதர்! இரண்டாவது தேவை பணம்! இறைவா, என் நாடு விடுதலை பெற்று ஆண்டுகள் பல ஆகிவிட்டன! ஆனால் நாட்டுமக்கள் இன்னமும் விழிப்படையவில்லை.

மக்கள் பரம ஏழைகள். அவர்கள் இருக்கும் இடம் தேடிச் சென்று கல்வியை, ஞானத்தை, வாழுங்கலையைக் கற்றுத்தரவேண்டும். இது என் ஆசை! இதனை முழுதாக முடித்தால் இந்தியாவின் ஆன்மா விழித்தெழும். ஆவேசம் அடுத்த நொடியிலேயே கொள்ளும். இந்தியாவைப்பற்றியுள்ள வறுமை அகலும், இழிவு நீங்கும்.

இறைவா, இந்த நற்பணியைச் செய்யும் உறுதியைத் தந்தருள் செய்க! பல தடவை முயன்றாயிற்று! மக்கள் வந்த பாடில்லை! இறைவா, உன் அடிச் சுவட்டில் நான் அவர் களுடைய வீடுகளுக்குச் சென்றாக வேண்டும். அவர்களின் நிலையை உயர்த்தியாக வேண்டும். இதுவே, என் பணி! இறைவா, இந்த நாட்டின் இது ஐயம்!

இந்த நாட்டில் கல்வி முதல் கடவுள் வரை பணமே ஆட்சி செய்கிறது. பணம் மட்டுமே ஆட்சி செய்யும் இந்த உலகத்தில் இது சாத்தியமில்லை!

இறைவா, எனக்குரிய மனிதரைத்தேடி நான் கண்டிட அருள் செய்க! இறைவா, எனக்குப் பணம் தருவாரையும் காணோம்! நானே என் செலவுக்குரிய பணத்தையும் தேடிட அருள் செய்க! இந்த நாட்டின் ஏழை பாமர மக்களை உயர்த்தும் பணியில் அர்ப்பணிப்பு உணர்வுடன் ஈடுபட அருள் செய்க!

## ஆகஸ்டு 17

### இறைவா, என் மனம் எனக்கு உற்ற துணையாக இருக்க நயந்தருள் செய்க!

*இறைவா, மனத்தகத்தானாக, தலைமேலானாக இருந்தருளும் இறைவா! என் மனத்தில் நீ இருக்கிறாயா? நான் தேடிப்பார்த்தேனே! நீ இல்லையே! என் மனத்தில் உன்னைத் தவிர மற்றதெல்லாம் குவிந்திருக்கின்றன.*

*அம்மம்ம! மாநகராட்சிக்குப்பைத் தொட்டியை விட மோசமான குப்பைகள் என் மனத்தில் குவிந்துள்ளன. என் மனம் எங்கெங்கோ சுற்றுகிறது; எதை எதையோ எடுத்துக் கொண்டு வருகிறது! என் மனம் எளிதில் பற்றிக் கொணர்ந்த செய்திகள் எதுவாலும் எனக்கு யாதொரு பயனும் இல்லை! இறைவா என் மனம் உலைப்பானையில் நின்று திளைத்தாடும் ஆமைபோல் களிக்கிறது!*

*திருந்து நல் அமரர்களுக்குத் தலைவா! என்னையும் திருத்தி ஆட்கொள்க! மனம் போகும் போக்கில் நான் செல்லாமல் இருக்க அருள் செய்க! என் மனத்தின் மீது மேலாணை தந்து அருள் செய்க! மனத்துக்கண் மாசிலனாக வாழ்ந்திட அருள் செய்க!*

*மனதிற்கு விஷயங்களைக் கொண்டு சேர்க்கும் பொறிகள் விஷத்தோடு இல்லாதபடி அருள் செய்க! மனம் நன்றே நினைத்திட அருள் செய்க! என் மனம் அன்பிலே கரைந்து தூய்மை நிலை எய்திட அருள் செய்க! என் மனம் கவலையிலிருந்து மீள்க! என் மனம் ஊக்கத்துடன் பணிகளில் ஈடுபட அருள்க!*

*பணியில் இன்பம் காணும் பண்பை என் மனம் அடைந்திடுக! என் மனம் நல்லறத்தையே நாடும்படி அருள் செய்க! என் மனம் எனக்கு உற்ற துணையாக இருக்க நயந்தருள் செய்க! இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 18

## இறைவா! உழைக்கும் தவத்தினில் ஆற்றுப்படுத்தி நலத்துடன் வாழ அருள் செய்க!

*இறைவா, நீ எனக்கு அருமையாக அருள் பாலித்த உடலை நலத்தோடு பேண வேண்டும். தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். நல்லவகையில் முழுமையாகப் பயன் படுத்த வேண்டும். உடல் நலம் பேணலும் கடமையே!*

*இறைவா, நல்ல காற்று சுவாசிக்க வேண்டும். நல்ல தண்ணீர் குடிக்க வேண்டும். காய்கனிகளை உண்ண வேண்டும். இறைவா, இவை யெல்லாவற்றையும் எனக்கருள் செய்க! உடம்பை இகழ்தல், நோய்க்காளாக்குதல் உனக்கு விரோதமான செயல்.*

*உடலைப் போற்றி வளர்த்தால்தான் உயிர் வளரும்! உயிர் வளர்ந்தால்தான் உணர்வு வளரும்! உணர்வில்தான் ஒழுக்கம் வளரும்! ஒழுக்கத்தில்தான் உயிர் அன்பு தலைப்படும்! அப்பொழுதுதான் நீ என் உடலை இடமாகக் கொண்டு எழுந்தருள்வாய்!*

*இறைவா, இது என் உடம்பன்று, உனது திருக்கோயில். நான் புலர் காலையில் எழுந்தும், கதிரொளியில் தோய்ந்தும், காற்றில் களித்தும், புனலில் குளித்தும் இயற்கையோடிசைந்து வாழ்தல் தவம்! வாழ்வாங்கு வாழ்தல் அறம்!*

*இறைவா, நல்ல உடல், உழைப்பை நாடுகிறது, அவாவு கிறது! உழைத்தால் உடம்பு நன்றாக விளங்குகிறது. உடலுக்கு நோய் உழைக்காமையே!*

*இறைவா, உடல் வருந்த உழைத்தலே உடலுக்குப் பாதுகாப்பு. உடம்பு வலிமையுறுதலே பயனுறுதலுக்கு வழி. உடல் சோம்பலில் சுகம் கண்டால் இயற்கை தண்டனை தருகிறது. ஆம், நோயினைத் தருகிறது.*

*இறைவா, உடலின் நலனுக்கு அருள் செய்க! உடல் வருந்த உழைக்கும் தவத்தில் ஆற்றுப்படுத்தி, சுவையான, பயனுள்ள உணவுகளை வழங்குக. நல்ல உறக்கத்தினைத் தந்து நன்றாக வாழ அருள் செய்க!*

## ஆகஸ்டு 19

### இறைவா, என் உள்ளத்தில் ஞான ஒளிவிளக்கை ஏற்றுக!

இறைவா, நேற்று நன்றாக வாழ அருள் புரிந்தனை. நன்றிப் பெருக்கு நிறைந்த போற்றுதல்கள் ஆயிரம், ஆயிரம் உனக்கு. இறைவா, இன்றும் வாழ அருள் செய்க!

இறைவா, நீ தாய்! சேயாகிய என் தேவை உனக்குத் தெரியாதா? அதை நீயே அருள் செய்க! இறைவா. இன்று நீ பாராமுகமாக இருப்பது ஏன்? நான் பாவி என்பதனாலா? தாயாக விளங்கும் நீ என்னைப் பாவி என்று புறக்கணிக்கலாமா?

இறைவா நீ புறக்கணித்தால் வேறு யார் எனக்குத் துணை? நானா பாவம் செய்கிறேன்! நீ, கொடுத்த ஊன் பொதி உடல் தானே பாவத்தைத் தூண்டுகிறது! என் உடல் அதன் தேவைகளையே நாடுகிறது!

என் உடலுக்குத் தியாகமோ, அர்ப்பணிப்பு உணர்வோ இல்லை! இறைவா. உடலைத் திருத்து! என் உடலைச் சமூக உழைப்பில் ஈடுபட அருள் செய்! எளிதில் நெகிழ்ந்து கொடுக்கக்கூடிய உருக்கத்தினைத் தா! என் உள்ளத்தில் ஞான ஒளிவிளக்கை ஏற்றுக! நின் அருளின்பத் தேனை - உலப்பிலா ஆனந்தத்தை வழங்குக.

இறைவா, ஒரு வேண்டுகோள்! நீ என் கூடவே வர வேண்டும்! ஆம் இறைவா, நான் எங்கு போனாலும் நீ வர வேண்டும். நான் வாழ்க்கையில் வழுக்கி விழுந்து விடாமல் என்னைத் தொடர்ந்து வந்து காப்பாற்ற வேண்டும்! தவறி விழுந்துவிட்டால் தூக்க வேண்டும்.

இறைவா, நீயே என் செல்வம்! நீ பெருங்கருணையுடன் என் உடலிடத்தில் எழுந்தருளி அருள் செய்கின்றனை. இறைவா, ஆயிரம், ஆயிரம் போற்றிகள்!

## ஆகஸ்டு 20

### இறைவா, நின்னை மறவா வரம் தந்தருள் செய்க!

இறைவா, நினைப்பும் மறப்பும் இல்லாத தலைவனே! நின் கருணைக்கு ஆயிரம் ஆயிரம் போற்றிகள்! இறைவா, உன்னை நினைந்தபடியே நான் வாழ ஆசைப்படுகிறேன். நான் மறந்தாலும் என்நா, நின் நாமத்தை மறக்காது.

என்னுடைய இடர்கள் நிறைந்த வாழ்க்கைப் பாதையில் நான் தளர்ந்தொழிந்தாலும் உன்னை ஒரு பொழுதும் மறக்க ஒருப்படேன். வழுக்கி வீழ்ந்தாலும் நின் திருநாமம் மறக்க மாட்டேன். உன்னை நினைந்தே என் ஆவி கழியும்.

இறைவா, ஆயினும் என் வாழ்க்கை அலைகடல் எனக் கொப்புளிக்கிறது! ஆர்ப்பரிக்கிறது! ஆயிரம் ஆயிரம் வேலைகள், ஏராளமான பணிகள்! செய்து முடிக்க வேண்டிய பணிகளுக்குரிய காலம் இல்லை. இருக்கும் காலமும் பொய்யாய். கனவாய், பழங்கதையாய்க் கரைந்து கொண்டிருக்கிறது!

இறைவா, இன்று எனக்கு ஏராளமான வேலைகள் உள்ளன. இறைவா, எனக்குள்ள பணிகளின் நெருக்கடி உனக்குத் தெரிந்ததே. ஆதலால், நான் பணிக் களத்தில் நின்று செய்ய வேண்டியிருக்கிறது. இந்தப் பணிகளின் நெருக்கடி காரணமாகவும் உன்னை ஒரு பொழுதும் மறக்கமாட்டேன்.

இறைவா, என்னையும் அறியாத சூழ்நிலையில் உன்னை நினைக்க நான் மறந்துவிட்டால் என்னை மன்னித்து விடு! நீ என்னை மறக்காதே! நீ என்னை மறப்பது முறையன்று; நீ, நினையும் ஆற்றல் இல்லாத புல், பூண்டு, பறவைகள், விலங்குகளுக்கு எல்லாம் அருளிச் செய்கின்றனை!

இறைவா, என்னை நீ மறத்தல் கூடாது! இதுவே என் வேண்டுகோள், பிரார்த்தனை. என்னை உன் நினைவில் இருத்தி அருள் செய்க. நின்னை மறவாத வரம் தந்தருள் செய்க!

## ஆகஸ்டு 21

### இறைவா! துன்பத் தொடக்கில்லாத இன்ப வாழ்க்கை அருள்க!

*இறைவா, பாவநாசா! என் பாவத்தை எப்போது நாச மாக்கி அருள் செய்வாய். இறைவா, பாவனைக்கும், பாவத்திற் கும் உறவு இருக்கும் போல் தெரிகிறதே. ஆம், இறைவா, 'பாவம்' என்பது நன்மையையும் சுகத்தையும் பாவனை செய்து அதுபோலக் காட்டுகிறதே. ஒரு பொய்த் தோற்றம். இதில்தானே நான் ஏமாந்து போகிறேன்.*

*இறைவா, பாவம் என்பது பாவமாகவே – துக்கமாகவே தோற்றமளித்து என்னை ஆட்படுத்துவதில்லை. பாவம், தொடக்கத்தில் நன்மையாகத் தெரிகிறது, இன்பமாகத் தெரி கிறது! சுகமாகத் தெரிகிறது! பின் விளைவு துன்பமாக இருக் கிறது.*

*இறைவா, விளக்கொளி, விட்டிலுக்கு விருந்தாகத்தான் தெரிகிறது! தூண்டில் வாய்ப் புழு மீனுக்கு உணவாகத்தான் தெரிகிறது! இளஞ்சூடுடைய நீர் ஆமைக்கு இதமாகத்தான் இருக்கிறது! சொறி சிரங்குடையானுக்குச் சொறிதல் சுகம் தான்! ஆனால், இவற்றின் பின் விளைவு என்ன?*

*இறைவா, தன்னலம் தொடக்கத்தில் நன்மையாகத் தான் தெரியும்! பதவி சுகம் தொடக்கத்தில் அற்புதம்! அதிகாரச் சுவை தொடக்கத்தில் அபாரம்! ஆனால் இந்தச் சுகங்களிடையே சிக்கி, தேனில் விழுந்த ஈப்போல் ஆனேன்.*

*இறைவா, துன்பக் கலப்பில்லாத அந்தமில் இன்பமே எனக்குத் தேவை! துன்பத் தொடக்கிலாத இன்பமே என் வாழ்க்கையில் இலட்சியம். இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 22

### இடர்களைக் கடந்து என் குறிக்கோளை அடைந்திட அருள்க!

*இறைவா! அற்புதங்கள் இயற்றிடும் அண்ணலே! இறைவா! நீ, எத்தனையோ அற்புதங்களைச் செய்து வழங்கி யிருக்கிறாய். இறைவா, என் வாழ்க்கைக்குரிய மூலங்கள் அனைத்தையும் நீயே வழங்கியிருக்கிறாய். அவற்றைப் பயன் படுத்திச் சிறப்போடு வாழ்தல் என் கடமை!*

*இறைவா, சிறப்பாக வாழும் முயற்சியில் மனித குலம் பலநூறு ஆயிரம் ஆண்டுகளாக முயன்று வருகிறது. ஆனால், கிடைத்த பலனோ மிகக் குறைவு.*

*இறைவா, இந்த உலகில் துன்பத்தைத் தொலைத்தல் இயலாது. பகையை அறவே மாற்றுதல் இயலாது. போர் ஒடுக்கம் நடக்கவே நடக்காது.*

*இறைவா, மானுடத்தின் வெற்றி நடவாத ஒன்று! என் வாழ்க்கையின் நிலை இதுதான். கொடுத்து வைத்தது அவ்வளவுதான். பிறப்பு எனும் சுழல் வட்டத்தில் சுழன்று வர வேண்டியதுதானா? வேறு வழியில்லையா? இறைவா, அருள் கூர்ந்து இன்னும் ஒரு தடவை அருளிச் செய்க!*

*இறைவா! இடர் வேறு, இயலாமை வேறு! ஆம் உண்மைதான். நான் என்னுடைய முயற்சிகளில் காணும் இடர்களைக் கண்டு, மலைத்து, இது ஆகாது என்று வாளா இருந்து விடுகிறேன். இது தவறு. இப்பொழுதுதான் வாழ்க் கையின் உண்மை புரிகிறது!*

*இறைவா, என் பணி சார்ந்த வாழ்க்கையில் இனி இடர் களைக் கண்டு கலங்கா மனம் அருள் செய்க! இடர்களை-துன்பங்களைக் கடந்து சென்று, என் குறிக்கோளை நான் அடைய அருள் செய்க! என்னால் இயலாதது என்று ஒன்று இல்லை. இன்பமே எந்நாளும் துன்பமில்லை! இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 23

### அன்பே சிவமாக அமர்ந்து ஞானத்தவம் இயற்றும் நிலையினை அருள்க!

*இறைவா, அன்பே உருவாக அமர்ந்துள்ள அண்ணலே! இறைவா, நான் வேண்டுவது அருள் செய்க. பொன் வேண்டேன். புகழ் வேண்டேன். இறைவா, சில மணித் துளிகள் தனித்து வாழ்ந்திட அருள் செய்க!*

*இறைவா, நின்னருளின் மாட்சியைக் காட்டும் இயற்கை எழிலின் மடியில் தவழ்ந்து நின்னை அனுபவிக்கும் ஆரா அனுபவத்தினை அருள் செய்க! இறைவா, நான் வேண்டுவது வீடு அன்று! இறவா அன்பே!*

*அன்பினிலே என் உயிர் கரைந்து விட வேண்டும். அந்த அன்புக் கரைசலில் உன்னை நான் அமுதமெனக் கண்டு அனுபவிக்க வேண்டும். இறைவா, என் உள்ளத்தில் என் வாழ்வைப் புனிதமாக்கும் ஒரு துளி அன்பினை அருள் செய்க!*

*என் வாழ்க்கை பட்ட மரமாகி விடுமோ என்ற கவலை அரித்து அழிக்கிறது! யாதுமோர் குறைவில்லை! ஆனாலும் என் இதயத்தில் வற்றாத ஊற்றாக அன்பு வேண்டும்.*

*இந்த வையகத்தை அன்பால் வளர்த்துப் பேண வேண்டும். "அன்பே அன்பே" என்றழுதழுது அரற்றிடுதல் வேண்டும், இறைவா, அருள் செய்க! இந்த அன்பில் இந்த வையகத்தை நனைத்து, பகைக் காளான்களை அகற்றிட அருள் செய்க! அன்பால் என் ஆன்மா பூரித்துப் பொலிவுடையதாகிட அருள் செய்க!*

*என்னை வருத்தும் ஆணவ வெப்பம் தணித்திடுக. இறைவா, ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த என்னுடைய அன்பே! அருள் செய்க. அன்பே சிவமாக அமர்ந்து ஞானத் தவம் இயற்றும் இன்ப நிலையினை அருள் செய்க!*

## ஆகஸ்டு 24

### இறைவா, என் இயக்கம் பயன்பாட்டு நிலையில் அமைய இன்னருள் புரிக!

*இறைவா, ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே! போற்றி, போற்றி. இறைவா. நீ பெரியோய்! அதே போழ்து எளியோனாகவும் விளங்குகின்றாய்!*

*இறைவா, பொருளில் பெரியது எது? சிறியது எது? தங்கம் விலைமதிப்புள்ள பொருள்தான். உப்பு, விலை குறைவான பொருள்தான். ஆனால் பயன்பாட்டில் உப்பே சிறந்தது! உப்பு இன்றி வாழ்தல் இயலாது.*

*இறைவா, நான் தோற்றத்தை-மதிப்பை வைத்துப் பொருளின் தரத்தை நிர்ணயிக்க இயலாது. இறைவா, எல்லாப் பொருளும் பயன்பாட்டுக்கு உரியனவேயாம். இவை களில் நான் யாதொன்றையும் அலட்சியப்படுத்தக் கூடாது.*

*வேலைகளில் சிறிய வேலை, பெரிய வேலை ஏது! பயன்பாட்டு நிலையே அளவுகோல்! இறைவா, அருள் செய்க! எல்லாப் பொருள்களையும் பாதுகாப்பாக வைத்துப் போற்றிப் பயன்கொள்ளும் பாங்கினை அருள் செய்க!*

*இறைவா, எந்த ஒரு பணியும் அதனதன் நிலையில் சிறப்பானதே, பயனுடையதே என்று கருதிச் செயற்படும் வாழ்க்கைப் போக்கினையே அருள் செய்க! இறைவா, அருமை என்பது மதிப்பைப் பொருத்ததன்று. பயன்பாட்டு நிலையே!*

*இறைவா, நானும்கூட பெரிய நிலையில் இருப்பது முக்கியமல்ல. நான் எளியனாக, பயன்பாட்டு நிலையின் வாழ்க்கையை நடத்தும் இயல்பினை ஏற்று வாழ்ந்திட அருள் செய்க! உலகத்தின் இயக்கம் பயன்பாட்டிலேயே இருக்கிறது. இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 25

### இறைவா, ஒழுங்கினைக் கடைப்பிடிக்க அருள் செய்க!

*இறைவா, "ஒழுங்குபடச் செய்க! ஒழுங்கு படவாழ்க!" என்று அறிவுறுத்துகிறாய். என்னால் முடியவில்லையே! பல ரோடு கூடிவாழ்கின்றேன். அவர்களின் உறவுகள் என்னிடம் ஏராளமான பாதிப்புகளை உண்டாக்குகின்றன; தர்க்கங் களைச் செய்கின்றன! இறைவா, இதனால் நான் விரும்பு கின்ற ஒழுக்கத்தில், ஒழுங்கில் நிற்க முடியவில்லை.*

*இறைவா, ஒழுங்கு இருந்தால் போதுமா? ஒழுக்கமும் வேண்டாமா? இறைவா, என்ன சிரிக்கிறாய்! இரண்டும் ஒன்றேதானா? பொறிகளால் ஒழுகப்படுவது ஒழுங்கு - செயல்முறைகளில் காணப்பெறுவது ஒழுங்கு! புலன்களால் ஒழுகப் பெறுவது ஒழுக்கம்! இவ்விரண்டும் தேவை!*

*ஏன், இறைவா, ஒழுங்கு, ஒழுக்கம் இவற்றில் எது முதல்? எது எதற்கு ஆதாரம்? ஒழுங்கு-ஒழுக்கத்தினைப் பிரித்து முதனிலைப் படுத்த முடியாது! அப்படியா, இறைவா? ஆதார நிலையும் அப்படித்தானா?*

*புலன்களில் - மனதில் - உயிரில் நின்றியங்கும் ஒழுக் கங்கள் புறத்தே ஒழுங்குகளாக இயங்குகின்றன! இறைவா, புறத்தே பொறிவழி வாழ்க்கையில் ஒழுங்குகளைக் கடைப் பிடிப்பதன் மூலம் ஒழுக்கத்தினை வளர்த்துக் கொள்ளலாம்; பாதுகாத்துக் கொள்ளலாம்.*

*ஏன் இறைவா? ஒழுக்கம் இல்லாதவர்கள் நிலை என்ன? இறைவா, ஒழுக்கம் இல்லாதவர்கள் ஒழுங்குகளைக் கடைப்பிடித்தால் அவ்வழி ஒழுக்கமும் வந்தமையும். இறைவா, நீ வசமாக மாட்டிக் கொண்டாய்! இறைவா, ஒழுங்கு, ஒழுக்கத்தைத் தரும், வளர்க்கும் பாதுகாக்கும்!*

*இறைவா, நான் ஒழுங்காக வாழ - கடமைகளைச் செய்ய அருள் செய்க! இறைவா! இதுவே நியதி! விதி! அருள் செய்க!*

## ஆகஸ்டு 26

### இறைவா, அமைதி தழுவிய மனம்! உறுதியான மனம்! தெளிவான தீர்மானம்! இவற்றை அருள்க!

*இறைவா, மனக்கவலை தீர்க்கும் மருந்தே! நின் அருள் திறத்திற்குப் போற்றி! போற்றி!! இறைவா. கவலை, எனது வாழ்க்கையை அரித்து அழித்துக் கொண்டிருக்கிறது. ஓயாத நச்சரிப்பு!*

*இறைவா, கவலை போக என்ன செய்வது? இறைவா, ஏன் மௌனம் சாதிக்கிறாய்? இறைவா, என்ன? என்ன? மௌனம்தான் பதிலா? பாடமா? இறைவா, நன்றருளிச் செய்தனை!*

*கவலைகளை மூட்டை கட்டி ஓரிடத்தில் வைக்க வேண்டும். முதலில் அமைதியாக இருத்தல் வேண்டும். பர பரப்பு, அவசரம், கவலை இவைகளிலிருந்து மனம் விடுதலை பெற்றுவிட்டதா? நல்லது, அமைதி தழுவிய மனம் வந்து விட்டதா? உற்றுக் கவனித்துக் கொள்.*

*மனநிலையில் பரிபூரண அமைதி கிடைத்தவுடன் சிந்தனை செய்யத் தொடங்கு! கவலைக்குக் காரணமாகிய சிக்கல்களை, சிக்கல்களுக்குரிய காரண காரியங்களை ஆய்வு செய்க!*

*சிக்கல் தோன்றுவதற்குக் காரணமாயமைந்தவைகளை முதலில் நீக்குக! இதனால் சிக்கல்கள் உடன் மேலாண் மைக்குக் கட்டுப்பட்டு, மேலும் வளர்வது தடைப்பட்டுப் போகும்! சிக்கல்கள் மேலும் வளர்வதற்குரிய சூழ்நிலைகளை இழப்பதின் மூலமே வலிவு இழந்து போகிறது. பின் சிக்கல்களுக்கு எளிதில் தீர்வு காணலாம்! சிறப்புடன் வாழ லாம்!*

*இறைவா, இன்றோடு தொலைத்தேன் என் மனக் கவலையை! நச்சரிப்புகளை விட்டொழித்தேன்! இறைவா! அமைதி தழுவிய மனம்! உறுதியான மனம்! தெளிவான தீர்மானம்! இறைவா, அருள் செய்க!*

## ஆகஸ்டு 27

### இறைவா, திரிபுபடாத அன்பை நின் திருவடிகளில் அர்ப்பணிக்க அருள் செய்க!

இறைவா, பேராளா! எம்பெருமானே போற்றி! போற்றி!! நான் நின் சந்நிதிக்கு நாள் தோறும் வருகின்றேன். உன்னை மனமுருகி அழைக்கிறேன். ஆயினும் பலன் ஏதும் கிட்டவில்லை. இறைவா, என் வஞ்சனைஆறு வற்றிய பிறகல்லவா பக்திப் புனல் பாயும்.

ஆம் இறைவா! நான் ஒரு மனிதனல்லன்! இரு வேறு நிலையினை ஏற்கும் மனிதனாக ஒரே போழ்து விளங்கு கின்றேன். ஆம் இறைவா! எதிலும் இரட்டை மனப் பான்மை. நான் எந்த ஒன்றுக்கும் உண்மையாக, நிலைப் பற்றாக விளங்குவதில்லை. அது மட்டுமா? வஞ்சனையையே பாற் சோறு போலக் கருதுபவன். இறைவா, இது மட்டுமா? நான் எதையும் பயன் கருதியே செய்வேன்.

இறைவா, நின் சந்நிதிக்கு வந்து நின்னைத் தொழுவது கூடத் தன்னலப் பற்றோடுதான்! நின் திருவருள் நலம் போற்றிய கண்ணப்பர் போல் நின்னைக் கருதியேயன்று. நின் நலம் கருதியதன்று! இறைவா. என்னை மன்னித்தருள் செய்க!

என்னை வஞ்சனையிலிருந்து மீட்டு எடுத்தருள் செய்க! நான் எங்கும் எப்போதும் ஒரு நிலையினையே கடைப்பிடித்து ஒழுகும்படி அருள் செய்க! இறைவா, என் வாழ் நாள் முழுவதும் மற்ற உயிரினத்துக்குரிய நன்மைகளை நாடிச் செய்திடும் நல்வாழ்க்கையை அருள் செய்க!

இறைவா, நீ எனக்கு நன்றருளுதல் வேண்டும். நீ நன்றே செய்தாலும் சரி! பிழையே செய்தாலும் சரி! நான் இனி உன்னிடத்தில் வேறு குறிக்கோள் இல்லாத தூய அன்பையே காட்டுவேன்.

இறைவா, திரிபு படாத அன்பை நின் திருவடிகளில் அர்ப்பணிக்க அருள் செய்க! நின் அடியார் குறிப்பையே கடமையாகக் கொண்டு வாழ்ந்திட அருள் செய்க! இறைவா, அருள் செய்க!

## ஆகஸ்டு 28

### அன்றாடம் தோன்றும் இடர்களை அன்றாடம் நீக்கிக் கொள்ளும் இயல்பினை இறைவா, அருள்க!

இறைவா, மனக்கவலை தீர்க்கும் மாமருந்தே! இறைவா, நான் என் வாழ்க்கைப் போக்கில் தோன்றும் சங்கடங்களை உடனுக்குடன் சரிசெய்து கொள்ளவேண்டும்.

என் வாழ்க்கையில் துன்பங்கள் தோன்றாமல் இல்லை. எண்ணற்ற இடர்ப்பாடுகள்; தொல்லைகள்; துன்பங்கள்! இறைவா, இவை என்னால் உணரத்தக்கன. ஆனால், என் வாழ்க்கையில் ஒரு அசாதாரணமான அலட்சியப் போக்கு! நாளை சரியாகப் போய்விடும் என்ற பொய்ம்மை தழுவிய மனப் போக்கு.

இறைவா, உண்மையில் நிகழ்வது என்ன? என்னுடைய சிறு சிறு சங்கடங்கள் வளர்ந்து பெரிய இடர்களாக வளர்ந்து விட்டன. என்னையே எடுத்துச் சாப்பிடும் இடர்களாக வளர்ந்து விட்டன. இந்தச் சூழ்நிலையில் அழுகிறேன்! இறைவா, நன்றருளிச் செய்தனை.

ஒரு பெரிய யானையை - இடர்ப்பாட்டில் சிக்கிக் கொண்ட யானையை. ஒரு சாதாரண உயிர்கூட வருத்த முடியும். இறைவா, என் வாழ்க்கையில் அன்றாடம் தோன்றும் இடர்களை அன்றாடம் நீக்கிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபடுவேன். அன்றாடம் வாழ்க்கையில் புத்துணர்ச்சியிருந்தால் இடர்களை - தளர்வுகளைத் தாங்கிக் கடத்தி விடுவேன்.

எப்போதும் என்னுடைய வாழ்க்கையில் அசைவிலா ஊக்கம் கொண்டு ஓயாது உழைக்க அருள் செய்க! துன்பம் தொடரா நிலையைக் காண்பேன்! எந்நாளும் துன்ப மில்லை என்பேன்! இறைவா, அருள் செய்க! வெற்றி பொருந்திய வாழ்க்கையை அமைப்பேன்! இறைவா அருள் செய்க!

கூ.X.17

## ஆகஸ்டு 29

### காலங்கடந்து விடுகிறது என்ற உணர்வினைத் தந்து கடமைகளில் செலுத்துக இறைவா!

*இறைவா, நீண்ட இடைவெளிக்குப்பின் உன்னை அழைக்கின்றேன். ஆம், இறைவா, இடையில் உன்னை நினைக்கவில்லை. ஆனாலும் மறந்தேனில்லை. இறைவா, நீ தான் காலங்களைக் கடந்தவனாயிற்றே? நீ, இதைப்பற்றிக் கவலைப் படுகிறாயா?*

*இறைவா, நீ காலத்தைப் பற்றிக் கவலைப்படுகிறாய். ஆம், எங்களுக்காக. ஆம் இறைவா, கால தேவதை நிற்க மறுக்கிறாள். நானோ ஒத்திப்போடும் சுபாவமுடையவனா கின்றேன். இறைவா, நீ எல்லையற்ற கருணையுடைய வனாயிற்றே! நீ ஏன் எனக்குத் தாராளமாக வாழ்நாளைத் தரக்கூடாது?*

*இறைவா, என்ன சொல்கிறாய்! அளவிடற்கரிய காலம் தருவதில் உனக்கு ஆட்சேபணை இல்லையா? என்ன இறைவா, "ஆனால்..." என்கிறாய்! காலத்தைத் தள்ளுபவர் கள், கடமையைக் கடத்துபவர்கள், என்றும் எவ்வளவு நாள் கொடுத்தாலும் செய்ய மாட்டார்கள்.*

*இன்று, இப்பொழுது வாழாதவர்கள் நாளை, நாளை மறு நாள் வாழ்வார்கள் என்பதற்கு என்ன உத்தரவாதம்? எப்போதும் "இன்று", "நாளை" என்பவர்கள் என்றுமே செய்யார்கள்.*

*இறைவா, நீ எங்களைக் காலக்கெடு என்னும் கத்தரிக் கோலில் நெருக்கி வாழச் செய்வது எங்கள் நன்மைக்கேயாம். ஆம், இறைவா! காலம் கடந்து விடுகிறது என்ற அறிவார்ந்த உணர்வை எனக்குத் தந்து கடமைகளில் செலுத்துக! வாழ்வித்திடுக!*

## ஆகஸ்டு 30

### இறைவா, மனம் நல்லதாக அமைய அருள்க!

*இறைவா, ஏன், மனம் என்ற ஒன்றினைத் தந்தனை? இந்த மனம் என்னோடு ஒத்துழைப்பதே இல்லை.*

*மனம் நாலு புறமும் சுற்றி அலைகிறது; கண்ட கண்ட செய்திகளை எல்லாம் கொண்டுவந்து சேர்க்கிறது. இதனால் நான் உணர்ச்சி வசப்படுகிறேன். ஆத்திரம் வருகிறது. கோபம் வருகிறது. ஏன், பகைமை கொண்டும் விடுகின்றேன்.*

*இறைவா, முதலில் என்னை இந்த மனத்தினிடமிருந்து விடுதலை செய். அல்லது மனத்துக்கு நான் சொன்னபடி நடக்குமாறு புத்திமதி கூறு! இறைவா, என்ன சொல்கிறாய்! மனம், அதற்கென்று இயல்பு அற்றது.*

*நான் பழக்குவதைப் பொறுத்து மனம் பழகுகிறது. இறைவா, நான் என் மனத்தை அடக்க வேண்டும். ஆம் இறைவா, மனதிற்கு ஓயாது நல்ல வேலைகள் கொடுத்தால் அது ஒழுங்காக இருக்கும்! சொன்னபடி கேட்கும்.*

*என் மனம் ஓயாது நல்ல எண்ணங்களை எண்ணும்படி அருள்க! நல்ல கலைஞானங்களைப் பயின்றிட அருள்க! அன்பு செய்யும் பழக்கத்தில் ஈடுபட அருள்க! அப்புறம் பார். மனம் நல்லதாக அமையும்.*

*மனம் ஒரு குதிரை போன்றது! இந்த மனத்தை அறிவு, காலம் என்ற இரு பட்டையுடைய கடிவாளம் போட்ட குதிரைகளைப் போலாக்கிடுக! இறைவா, மனம் நல்லதாக அமைய அருள் செய்க!*

## ஆகஸ்டு 31

### கடமைகளை இப்போதே செய்யும் மனப்பாங்கினை அருள்க.

*இறைவா, காலகாலனே! இந்த வியத்தகு உலகத்தின் நிகழ்வுகளைக் கால நியதிகளின்படி இயக்குபவனே இறைவா, நீ பெரியோன்! ஆற்றல் மிக்குடையோன். ஆயினும் காலங் கடத்துவதில்லை.*

*இறைவா, உரிய காலங்களில் உரிய கடமைகள் நிகழ் கின்றன! இறைவா, என்ன அற்புதம்! நானோ இன்று நாளை என்று எத்தனை நாள்களைக் கடத்துகின்றேன். ஆம் இறைவா, நான் இன்று வாழ ஆசைப்படுவதில்லை! நாளைக்கு வாழ்வதாக எண்ணம்; திட்டம்.*

*இறைவா, நான் ஒரு சோம்பேறி. சோம்பேறி இன்று எதுவும் செய்ய மாட்டான். நாளை என்று இன்றைய கடமையை ஒத்திப் போடுவான். நாளை வேறு புதிய கடமைகள் வந்து நிற்கும். நிறையச் செய்ய வேண்டியிருக்கும். சோம்பலுடையார்க்குக் காலம் ஒரு வழுக்குப் பாறை.*

*இறைவா, இன்று நாளை வருமா? இன்று நான் ஒன்று செய்து பயன் பெற்றால் பயன் கூடுதல் அல்லவா? இறைவா, உண்மை உணர்ந்தேன். இனி என் வாழ்க்கையில் சோம்பல் தலைகாட்டாதிருக்க அருள் செய்க!*

*"நாளை" என்பது வரையறையில்லாத ஓர் எல்லை. நாளை, நாளை என்றே ஆண்டுக் கணக்கில் ஓடிவிடும்! ஆன்மவளர்ச்சி கெடும். ஆக்கம் கெடும். இறைவா, இன்றே எனது நாள்! நாளை என்னுடையதல்ல.*

*இறைவா, என் கடமைகளை இன்றே, இப்பொழுதே செய்யும் மனப்பாங்கினை அருள் செய்க! இன்றே செய்க! இப்பொழுதே செய்க. இதுவே என் நிலை. இறைவா, கடமைகளை உடனே செய்ய, அருள் செய்க.*

## செப்டம்பர் 1

### இறைவா, கடமை செய்தலாகிய பணியை மேற்கொள்ள முழு ஆற்றல் தா!

*இறைவா, எந்தையே! நின் பொன்னடிகள் போற்றி! போற்றி!! இறைவா, நாள்தோறும் எண்ணற்ற நொடிகள் ஓடிக் கழிகின்றன. ஆனால் கடமைகள் முடிந்தபாடில்லை.*

*ஏதோ இங்கொன்றும் அங்கொன்றுமாக எனக்குக் கிடைத்த வேலையை முழு முயற்சியின்றி, செய்ய இயன்ற வரையில் செய்தலையே, நான், கடமையைச் செய்து விட்டதாக, நினைத்து மன நிறைவு கொள்கின்றேன்.*

*இறைவா, கோடிக்கணக்கான செங்கற்கள் கொட்டிக் கிடந்தால் அழகு அமைந்த மாளிகையாகாது. அவற்றைக் கொண்டு அழகு மாளிகை அமைக்க வேண்டும். கடமை களின் தொகுப்பே வாழ்க்கை.*

*இறைவா, நான் செய்ய வேண்டிய கடமைகளில் சிறியது இல்லை. பெரியது இல்லை. அனைத்துக் கடமை களுமே என் வாழ்க்கையை வளர்ப்பன; உறுதிப்படுத்துவன. நான் எந்த ஒரு கடமையைப் புறக்கணித்தாலும் என் வாழ்க் கையைப் பாதிக்கும்.*

*இறைவா, என் உரிமைகள், என் கடமைகளின் வாயி லாகத்தான் என்னை வந்தடைகின்றன. படைக்கட்டுப் பாட்டுணர்வுடன் செய்யப்பெறின், எந்தக் கடமையும் எளிதில் முடியும். கடமைகள் செயற்பாட்டின் வழி உரிமைகள் வந்தமையும்.*

*இறைவா, எனக்குக் கடமையே தாய்! கற்பகத் தரு! இறைவா, நான் என் கடமைகளைத் தெரிந்து தெளிவுடன் முடிவு செய்வேன்! தராதரமின்றி எல்லாக் கடமைகளையும் பொறுப்புணர்வுடன் நிறைவேற்றுவேன்!*

*இறைவா, என்னுடைய உரிமைகளுக்குரிய விலை யாகிய கடமையைச் செய்தலாகிய பணியை மேற்கொள்ள முழு ஆற்றல் தா! அருள் செய்க!*

## செப்டம்பர் 2

### உழைப்பின் பயனே கூலியென உணர்த்திய உத்தமனே! போற்றி!

*இறைவா, பிட்டினைக் கூலியாகக் கொண்டு மண் சுமந்த மாதேவா! போற்றி! போற்றி! எனக்கு நீ அளிக்கும் கூலி மிக மிகக் குறைவு. இறைவா, நின்னிடம் கூலி போதாதென்று இரக்கின்றேன். இரக்கம் காட்டக்கூடாதா?*

*இறைவா, என்னை நக்கீரர் ஆக்கிவிடாதே! நான் முழுதாக உழைக்கின்றேன். கூலி கேட்கிறேன். உழைப்பை நிர்ணயிப்பது உழைத்த காலத்தின் அளவைக் கொண்டா? உழைத்த உழைப்பின் அளவைக் கொண்டா? அல்லது உழைப்பின் பயனைக் கொண்டா?*

*இறைவா, நான் உழைக்கின்றேன்! பயன் கிடைக்க வில்லை! நான் உழைத்தது என்னவோ உண்மை! நல்ல நோக்கத்துடன் நன்றாகத் தேர்ந்து தெளிந்து வகைபட அறிவறிந்த ஆள்வினையுடன், உழைத்தால் அதன் பலன் வராமல் போகாது.*

*ஏதோ, கடனுக்குக் கழித்தால், கடிகார முள் நோக்கி உழைப்பை நகர்த்தினால் பயன் கிடைக்காது! எனக்கு மிகுதியான கூலி கேட்கும் உரிமையே இல்லை. மன்னித்துக் கொள். இறைவா! நன்றருளிச் செய்தனை!*

*ஒவ்வொரு பூரணத்துவம் வாய்ந்த உழைப்பிலும் இயற்கையாகவே அதற்குரிய கூலி பொருந்தி அமைந்திருக் கிறது. அது தப்பாமல் கிடைக்கும் என்கிறாய். இறைவா, என்னுடைய உழைப்பைப் பூரணத்துவம் உடையதாகச் செய்ய அருள் பாலித்திடுக!*

*என் உழைப்பை முழுப்பயனுடையதாகச் செய்ய அருள் பாலித்திடுக! என் உழைப்பின் பயனே எனக்குரிய கூலியின் வாயில்! இறைவா, அருள் செய்க!*

## செப்டம்பர் 3

**இறைவா, என் மனம் எனக்கு நட்பாக இருக்க அருள் செய்க.**

*இறைவா, நினைப்பவர் மனம் கோயிலாகக் கொள்ளும் தலைவா! இறைவா, என் மனம் ஓர் அறை. இந்த அறையை நான் பூட்டி வைத்துவிட்டால் என்ன உள்ளே போகும்? கதிரொளி போகாது! காற்று உள் புகாது. இந்த அறையில் நான் எப்படி வாழமுடியும்? வாழ்ந்தாலும் இன்ப வாழ்க்கை யாக அமையுமா?*

*இறைவா, என் மனம் எனும் அறையை நான் பூட்டி வைத்து விட்டேன். எந்தப் புத்தறிவும் என்னிடம் வரா வண்ணம் பூட்டி வைத்து விட்டேன்! பழைமை அல்லது என் பழக்கங்களே சரி என்று முடிவுக்கு வந்து, வளர்ச்சிக்குரிய வாயிலையே அடைத்துவிட்டேன்.*

*ஞானப் பேரொளி நுழையா வகையில் இருளையே கொள் பொருளாக, அறியாமையையே என் பொருள் எனக் கொண்டுழல்கின்றேன். நல்லவர்கள் நாலுபேருடன் பழகி, கொண்டும், கொடுத்தும் என்மனத்தை வளப்படுத்தாமல் வாழ்கின்றேன்.*

*இறைவா, இவ்வளவு மோசமான மனத்தில் நீ எப்படி எழுந்தருளியிருக்கிறாய். இறைவா, என் மனம் என் வசமாதல் வேண்டும். எனக்கு ஏன் நூறாயிரம் நட்புகள்.*

*என் மனம் எனக்கு நட்பாக இருந்தாலே போதும். என் மனம் நேற்றைய நிகழ்வுகள் பற்றிய கவலையைத் தூக்கிச் சுமப்பதைத் தவிர்க்க வேண்டும். என் மனம் நாளைக்கு ஆபத்து வரப்போகிறது என்று இன்றே அழுவானேன்? அழக் கூடாது.*

*நாளை வரும் ஆபத்தை இன்றைய நன்மனம் நிச்சய மாகச் சந்திக்கும்! வெற்றி கொள்ளும்! இறைவா, என் மனத்தை நன்னட்பாக்க முயற்சி செய்கிறேன்! இறைவா, அருள் பாலித்திடுக!*

## செப்டம்பர் 4

### இறைவா, என்னை அடிமைக்கு ஆளாக்கும் ஆசைகளிலிருந்து மீட்டு எடுத்தாள்க!

*இறைவா, என் தலைவா! நான் உனக்கே ஆட்பட்டேன்! ஆனால் ஆட்கொண்ட நீ கைவிட்டு விட்டனை! என்னை ஐம்பொறிகளுக்கும் போகத்திற்கும் பொய்க்கும் ஒத்தியாகக் கொடுத்து விட்டனை! நான் என்ன பிழை செய்தேன்!*

*இறைவா, இப்பிறப்பில் யானறி தீவினை யாதொன்றும் செய்திலேன்! எந்தவினை இங்ஙனம் வந்து மூண்டது? இறைவா, எந்த வினை வந்து மூண்டால் என்ன? இப்பிறப்பில் நான் என் தீவினைகளை வெற்றி கொண்டிடத் துணிந்து முயற்சி செய்கின்றேன்! அருள் செய்க!*

*எய்த்துக் களைத்துப் போகும் போது ஆற்றலாக நின்றருள் செய்திடுக! நான் உனக்கே அடிமை! நான் உனக்கே ஏவல் செய்வேன்! நான் மண்ணில் வாழ்வார் யாருக்கும் குற்றவேல் செய்ய மாட்டேன்! நான் பொய்யில் கிடக்க மாட்டேன்! பொய்யிலாத மெய்யே என் வாழ்க்கையின் இலட்சியம்.*

*இறைவா, நான் பொய்யிலிருந்து விடுதலை பெற்றாலே அச்சத்திலிருந்து விடுதலை பெற்றுவிடுவேன். இறைவா, நான், அடிமைத் தனத்திலிருந்து மீள அருள் செய்க!*

*இறைவா, என்னை, அடிமைக்கு ஆளாக்கும் ஆசைகளிலிருந்து மீட்டு எடுத்தாள்க! இறைவா, ஆசைகளால் விளையும் பொய்யிலிருந்து விடுதலை தருக. பொய்யிலிருந்து மீண்டு அச்சமிலாத பெரு வாழ்வு வாழ அருள் செய்க!*

*இறைவா, என் வாழ்க்கையில் துன்பமே தலைக் காட்டாத வண்ணம் வாழ்ந்திட அருள் செய்க! இன்பமே என்றும் சூழ்க! இறைவா, அருள் பாலித்திடுக!*

## செப்டம்பர் 5

### அன்பு செய்தலே என் வாழ்க்கையின் தொழிலாக அமைய அருள் செய்க!

*இறைவா, பெருந்தகையாளனே! நின் பெருந்தகைமைக்கு யாது கைம்மாறு? நான் பெருந்தகையாளனாக விளங்க அருள் செய்க! ஆம், இறைவா! நான் சின்னச் சின்னச் செய்திகள் பற்றி அலட்டிக் கொள்ளக்கூடாது. யார் மாட்டும் அன்பு! இது என் வாழ்க்கையின் தொழிலாக அமைய அருள் செய்க!*

*இறைவா, எனக்கு ஏன் பகை? என் மீது யார் வேண்டுமானாலும் பகை கொள்ளட்டும். நான் ஏன் பகை கொள்ள வேண்டும். இறைவா, யாருடைய தவறையும் மறக்கும் பெருந்தன்மையை அருள் செய்க!*

*தீமையை மறத்தல், மன்னித்தல் ஆகிய நற்குணங்களை அருள் செய்க! திறந்த மனம், திறந்த கரம் இவை என்னுடைய வாழ்க்கையின் இயல்புகளாக அமைந்திட அருள் செய்க!*

*இறைவா, என் சித்தத்தில் இரக்கமும் ஈகையும் இடையறாத இயல்புகளாக நின்று விளங்க அருள் செய்க! இறைவா! நான் பெரிய மனிதனாக வேண்டாம். எளிய தொண்டனாக விளங்க அருள் செய்க!*

*மற்றவர் மகிழ்ச்சிக்காக நான் துன்புற நேரிட்டாலும் பரவாயில்லை! இறைவா, அருள் செய்க! என் வாழ்க்கை மருந்து மரம் போல அமைந்திட அருள் செய்க!*

*என் பணி கொள்வோர், என் தலைவர் என்று ஏற்கும் பெற்றியினை அருள் செய்க! பெறற்கரிய பெருந்தகைமையே என் வாழ்வின் குறிக்கோள்! இறைவா, அருள் செய்க!*

## செப்டம்பர் 6

### இறைவா, எனக்கு இயல்பார்வத்தினை அருள்க!

*இறைவா! அண்ணலே! எங்கே என, எனைத்தேடி வந்தருள் செய்யும் தேவே! மண்ணில் புகுந்து மானிடரை ஆட்கொள்ளும் ஐயனே! நீ ஐந்தொழில் நிகழ்த்துகின்றனை! ஏன்? நின் ஐந்தொழில் நிகழ்த்தும் ஆர்வம் இயல்பானது. அதற்கு உந்து சக்தியாக எதுவும் இலலை. பயனார்வமும் இல்லை! அது என் போன்றோரை ஆட் கொண்டருள இயல்பாகத் தோன்றிய ஆர்வம், இரக்கம்!*

*இறைவா, என் வாழ்க்கையிலும் இயல்பான ஆர்வம் தலைப்படின் நான் உய்வேன்; வாழ்வேன். என்னிடம் இயல்பான ஆர்வம் என்று ஒன்றும் இல்லை. "பிழைக்க வேண்டுமே" என்பதற்காக மனம் இல்லாமல் உழைக் கின்றேன்.*

*இறைவா, என்னைத் தூண்டித் தூண்டி இயக்க வேண்டியிருக்கிறது. என் வாழ்க்கை கேவலமானது. வெட்க மாக இருக்கிறது. இறைவா, மன்னித்து அருள் செய்க! இனி, என் வாழ்க்கையில் இயல்பான ஆர்வத்துடனேயே, வாழ்தல் வேண்டும். அன்பு செய்ய வேண்டும்.*

*இறைவா, இயல்பார்வத்தில் தோன்றும் இயல்பூக்கம், அளவற்ற ஆற்றலுடையது. என் வாழ்க்கையில் செயற்கை மூச்சு வேண்டாம்! இயல்பார்வம் நிறைந்த நல்வாழ்க்கையை அருள் செய்க! இயல்பூக்கத்தினை அருளிச் செய்து செய்யா தனவெல்லாம் செய்யும் திறனைத் தந்தருள் செய்க!*

*இயல்பார்வம் என் வாழ்க்கையின் முதல். இந்த முதலை எனக்கருளிச் செய்யின் என்றும் எப்பொழுதும் ஆட்பட்டிடுவேன்! ஓயாது உழைத்தே வாழ்வேன்! இயல் பார்வம் ஆற்றல் மிக்குடையது! இறைவா, எனக்கு இயல் பார்வத்தினை அருள் செய்க!*

## செப்டம்பர் 7

### இறைவா, நான் வலிமையுடையோனாக வேண்டும்! அருள்க!

இறைவா, தனக்குவமையில்லாத் தலைவனே! போற்றி! போற்றி! நான் நிலையாக முற்றாக எனக்கு விருப்புடைய தாகிய தற்சார்பை அடையவில்லையே? இறைவா, என் வலிமை என்னிடத்திலேயே இருக்கிறது. ஆனால் நானோ புறத்திலேயே தேடிக் கொண்டிருக்கிறேன்.

இறைவா, நான் வாழ என் வலிமை துணை செய்யும்! நான் வெளிப்புறத்தில் தேடும் வலிமைகள் கடைசிவரையில் துணை நில்லா. இறைவா, நான் தனியனாகவே வலிமை யுடையோனாக வேண்டும். என் அறிவு வளர்ந்து வலிமை பெற்று விளங்க வேண்டும்.

இறைவா, என் உடல் எஃகினும் வலிமையுடையதாக விளங்க அருள் செய்க! என் மனம் நன்னிலையில் நிலை திரியாது மலையென நிற்கவேண்டும். என் சித்தம் தடுமாறாது தகுதியின் பாற்பட்டொழுகும் நிலையில் இருத்தல் வேண்டும்.

என் புத்தி பேதலித்தல் கூடாது! என் புத்தி துணிவுடையதாக விளங்கவேண்டும். என் செயற்புலன்- அகங்காரம் எந்த நிலையிலும் செயற்படுதல் வேண்டும். இறைவா, இங்ஙனம் அருள் செய்க!

நான் என் உடலினை உணவாலும் பயிற்சியாலும் ஒழுக்கத்தாலும் திறனுள்ளதாகப் பேண வேண்டும். நாளும் கற்று, என் அறிவை விரிவாக்கிக் கொள்வேன். என் மனம் என் வசம் இருக்கும். என் புத்தி தடுமாறாது. சிந்தனை ஒரு நிலையானது; என் பொறி, புலன்கள் ஒரு ஆணைவழி நிற்கும்! - இது உறுதி ஐயனே!

என்னை என்காலில் நிற்கச் செய்த கடவுளே! என் வலிமையைக் காத்தருள் செய்க! நான் என் வலிமைக்கு உன்னைத் தேடுவதா? கூடாது. ஆயினும் நீ வெளியே உள்ள பொருள் அல்ல. நீயும் என் அகத்திலிருக்கும் அழியாப் பொருள்! இறைவா, அருள் செய்க!

## செப்டம்பர் 8

### இறைவா, நான் மற்றவர் வாழ்வாக அமைய அருள் செய்க!

*இறைவா, அறநெறி அண்ணலே! நான் அறநெறியில் நிற்க ஆசைப்படுகிறேன்! ஆனாலும் இயலவில்லை! இறைவா, நன்றருளிச் செய்தாய்! அறநெறி என்பது தர்மங்கள் செய்வ தன்று. அறநெறி என்பது ஒரு வாழ்க்கை முறை.*

*அறநெறியை அடைதல் எளிதன்று. அஃது ஓர் அருமை யான முயற்சி! அறநெறி வாழ்க்கைக்கு, முதலில் தியாக உணர்வு வேண்டும். தியாகம் என்பது என்ன? தனக்குத் தேவையானதெல்லாம் மற்றவர் பெற்று வாழ, தன் வாழ்க்கை தடையில்லாதவாறு நடந்து கொள்ளுதல்.*

*வையம் உண்ண உண்ணுதல், வையம் உடுத்த உடுத்தல், மற்றவர் வாழ்க்கைக்குத் தான் இழக்க வேண்டியதிருப்பின் இழக்கவும், துன்புற வேண்டியிருப்பின் துன்புறவும் தயங்காது ஒருப்படுதல்! தான் அழிய வேண்டிய நிலை வந்தாலும் ஏற்றுக் கொள்ளுதல்! இதுவே தியாகம்!*

*இறைவா, தியாகம் என் வாழ்க்கையில் எளிதில் வராது! ஆனால், தியாக உணர்வு பெற்றால் வாழமுடியும். நான் தியாகத்தைச் செய்யப் பழகிக் கொள்ள வேண்டும். எல்லாரையும் மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.*

*சின்னச் சின்னச் செய்திகளிலும் விட்டுக் கொடுக்க வேண்டும். தனியே உண்ணாது கூடி உண்ண வேண்டும். மற்றவர் வேலையில் பங்கேற்க வேண்டும். இறைவா, அருள் செய்க! பழுத்த மரங்களின் தியாகம், என் வாழ்வாகிறது! விளைந்த செந்நெல் கதிர், என் வாழ்வாகிறது! என் தாய் என் வாழ்வானாள்!*

*நான், மற்றவர் வாழ்வாக அமைய அருள் செய்க! இதுவே தியாகம்! ஓடி ஓடி மற்றவர்க்குற்றது செய்ய அருள் செய்க! தியாகேசா! தியாகம் செய்யக் கற்றுத் தா!*

## செப்டம்பர் 9

### இறைவா, நான் "கௌரவம்" என்ற பந்தத்திலிருந்து விடுதலை பெற அருள் செய்க!

இறைவா, அடியார்க்கு எளியன் சிற்றம்பலவன் என்று எழுதித் தந்த தலைவா! ஆரூரரை "அடியேன் அடியேன்" என்று கூற வைத்து ஆட்கொண்ட தலைவா! இந்த மானுட உலகத்தில் நான் வாழ்ந்து வருகின்றேன்! சுதந்தரமாகவா? இல்லை, இல்லை! இறைவா, ஏராளமான பந்தங்களுடன்!

மனைவி, மக்கள், வாழ்வு பந்தங்கள் கூட உண்மையில் பந்தங்கள் ஆகா! இறைவா, இவை வளர்ச்சிப் போக்கில் ஆன்ம விடுதலைக்குத் துணை செய்யும்!

ஆனால், நான் மிகவும் விரும்பிப் போற்றுகின்றேனே "கௌரவம்" என்ற ஒன்று! இறைவா, அது பந்தங்களுள் எல்லாம் பெரிய பந்தம்! தீமைகளுள் எல்லாம் பெரிய தீமை.

இறைவா! நான் கௌரவம் என்ற பந்தத்திற்கு ஆளாகிச் சமுதாயத்தினின்று ஒதுங்குகின்றேன். என்னை உயர்த்திக் கொள்கின்றேன்! கௌரவம் என்ற பெயரால் எளியரிடத்தில் அன்பு காட்டுவதில்லை; பழகுவதில்லை.

கௌரவம் என்ற பெயரால்-வறட்சித் தன்மையால், வீணே அலைகின்றேன். செலவழிக்கின்றேன். இறைவா, ஏன் உன்னிடத்தில்கூட கௌரவத்தின் பெயரால் எளிதில் நான் அடிமையாவதில்லை. நான் தருக்கியே தலையால் நடக்கின்றேன்.

இறைவா, என்ன கொடுமை! அடிக்கொருதரம் என் கௌரவம் என்னாகுமோ என்று பயப்படுகின்றேன். இறைவா, இத்தகைய இழிநிலையில் கௌரவம் என்ற பிரமையில் வீழ்ந்து கிடக்கும் என்னை எடுத்தாள்க!

இறைவா, என்மீது நின் கருணை பொழியவேண்டும். நான் கௌரவம் என்ற அசுர பந்தத்திலிருந்து விடுதலை பெற வேண்டும். யார்க்கும் எளியனாய் வாழ்ந்து தொண்டு செய்ய வேண்டும். இறைவா, அருள்செய்க!

## செப்டம்பர் 10

### அந்தஸ்து என்ற ஆணவத்தினின்று விடுதலை பெற்று அருள் காட்சியில் திளைத்திட அருள் செய்க!

இறைவா, தாய்ப் பன்றியாகிப் பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்த தலைவா! கொற்றாளாகி மண் சுமந்த கோவே! இறைவா, நீ உயிர்களை ஆட்கொள்ளும் திறத்தில் மிகவும் எளிமையாக நடந்து கொள்கின்றனை! தகுதி பார்ப்ப தில்லை!

அண்ணலே! நீ அந்தஸ்து பார்ப்பதில்லை! நானோ அந்தஸ்தின் பேரால் இழந்த உறவுகள் எண்ணிக்கையில் அடங்கா. அந்தஸ்து என்ற பெயரால் நான் அடைந்த இழப்புக்கள் பலப்பல!

இறைவா! அந்தஸ்து - தகுதி இவை என்னுடைய உய்திக்குத் தடையாய் உள்ள பந்தங்கள்! இவை என்னைப் பொய்ம்மை நிறைந்த ஒழுக்கத்துக்கு இரையாக்கிக் கெடுத்து விட்டன!

அந்தஸ்து!- இது மிகவும் கொடுமையான பந்தம். அன்பைக் கெடுப்பது. உறவைக் கெடுப்பது. உய்தியைக் கெடுப்பது. இறைவா, என்னை அந்தஸ்து என்ற பேயிலிருந்து காப்பாற்று! நான் யார்க்கும் எளியனாக வாழ அருள் செய்க!

நான் யார்க்கும் தொண்டனாகத் தொண்டாற்ற அருள் செய்க! அந்தஸ்து என்ற பொயம்மையால் நான் கெட்டது போதும்! அந்தஸ்து என்ற பொய்ம்மையைப் போக்கி யாண்டும், யாரிடமிருந்தும் அறிவை இரந்து பெற்றிட அருள் செய்க!

இறைவா, நானும் எளியருக்கு எளியனாக அடைந்து அணைந்து அவர்தம் ஏவலை என் தலைக்கடனாக ஏற்றுச் செய்ய அருள் செய்க! 'அந்தஸ்து' என்ற ஆணவத்தினின்று விடுதலை பெற்று அருட் காட்சியில் தங்கிட தொண்டுலகில் வாழ்ந்திட அருள் செய்க! இறைவா, அருள் செய்க!

## செப்டம்பர் 11

### இறைவா, இந்த வாழ்க்கையின் இரகசியம் என்ன? அருள் செய்க!

*இறைவா, வான் பழித்து இம்மண் புகுந்த புனிதனே! போற்றி! போற்றி!! என் வாழ்க்கை ஒரு தொடர்கதையாக நீள்கிறது.*

*இறைவா, என் வாழ்க்கை மயக்க நிலையிலும் ஒரோ வழி தெளிவு நிலையிலும் நகர்ந்து கொண்டிருக்கிறது! என் வாழ்க்கை ஒரு போராட்டக் களமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது!*

*அம்மம்ம! எத்தனை வகையான போராட்டங்கள்! ஒன்றோடொன்று ஒவ்வாத பொறிகளுடன் போராட்டங் கள்! மயக்க நிலையில் தீதை நன்றெனத் தழுவி நின்றதால் விளைந்த போராட்டங்கள்! இறைவா, இப்படிச் செல்லும் என் வாழ்க்கையின் முடிவுதான் என்ன?*

*இறைவா, இவ்வளவு நீண்ட போராட்டங்களுக்குப் பிறகும் நான் இன்னும் என் வாழ்க்கையின் இரகசியத்தை அறிந்தபாடில்லை! உணர்ந்தபாடில்லை! இறைவா, இந்த உலக வாழ்க்கையின் நோக்கம் என்ன? இரகசியம்தான் என்ன? இறைவா, என் வினாவை என் பக்கமே திருப்பி விடுகின்றாயா?*

*வாழ்வின் இரகசியம் போகம் அன்று! வாழ்க்கையில் நிகழும் அனுபவத்தின் மூலம் கல்வி பெறுவதேயாகும். இறைவா, எனக்கு ஏது அனுபவம்! ஏதோ வெந்ததைத் தின்று விதி வந்தால் சாகின்றேன்! இறைவா, இந்த உலக நிகழ்வு களைக் கூர்ந்து நோக்கும் உளப் பார்வையை எனக்கு அருள் செய்க!*

*இறைவா, என் வாழ்க்கைப் போராட்டத்தில் என்னு டைய பணியின் மீது ஒரு சுழற்காற்று வந்து மோதினாலும் நிலைத்து நிற்கும் இயல்பினை அருள் செய்க! மயக்க நிலை வேண்டாம். தெளிவு தந்து அருள் செய்க.*

## செப்டம்பர் 12

### இறைவா, நான் மரணத்திற்கு ஒப்பான சுயநல வாழ்க்கையினின்றும் விலகி அன்பு செய்து வாழ்ந்திட அருள்க!

*இறைவா, ஆதியும் அந்தமும் இல்லாத இறைவனே! நான் வாழ்கின்றேன்! ஆம். இறைவா, இதில் உனக்கு என்ன ஐயம்! நான் வாழ்கின்றேன். வேலை செய்கின்றேன்! பொருள் செய்கின்றேன். தொண்டும் செய்கின்றேன்.*

*இறைவா, என்ன அருளிச் செய்கின்றாய்? இறைவா, நீ அருளிச் செய்வது என் செவிப்புலனைத் தாக்குகிறது! உணர்ச்சி வசப்படுகின்றேன்! இறைவா, என்னை, செத்து விட்டதாக அருளிச் செய்கின்றனையே! நான் பிணமா? ஆம், ஆம்! நான் ஒரு பிணம்! உண்டு நடமாடும் பிணம்! இப்படி அருளிச் செய்கின்றனை!*

*இறைவா, என்னைப் பழி சொன்னால் போதுமா? என்னைச் சாவிலிருந்து மீட்டருள்க! நின் நெறி பிழையாது வாழ்வேன்! இறைவா. உண்மை! முற்றிலும் உண்மை!*

*நான் அன்புடையவன்! ஆனால் என் வாழ்க்கை முழுதும் அன்பாக மாறவில்லை! அன்பே, என் வாழ்வை இயக்கும் விதியாகவில்லை! ஆம் உண்மை! என்ன இறைவா! சுயநலம் மரணத்திற்குச் சமம்!*

*இம்மை, மறுமை இரண்டிலும், சுயநலம் மரணத்திலும் கொடிய துன்பத்தையே தரும். இறைவா, நன்றருளிச் செய்தனை! நலம்புரிவதே வாழ்வு ஆகும். பிறருக்கு நலம் செய்யாது வாழ்தல் சாதலுக்குச் சமம்! இல்லை, சாதலே தான்! இறைவா, நான் சாகாமல் காப்பாற்று!*

*என் வாழ்க்கை அன்பு ஆகட்டும்! வஞ்சகமின்மை வாழ்க்கையின் நியதியாகட்டும்! பொறுமையுடன் என்னைச் சுற்றி வாழ்வோரின் நலத்திற்காகப் போராடும் இயல்பினைப் பெற்றுள்ளேன். வாழ்த்தியருள்க! வாழ்ந்திட அருள் செய்க!*

## செப்டம்பர் 13

### என் கால்கள் சொந்த வலிமையில் ஊன்றி நிற்க அருள் செய்க!

*இறைவா, நின் திருவடிகள் வாழ்க! வாழ்க! இறைவா, நின் திருவடிகள் மன்னுயிர் காக்கும் தாளாண்மையிலேயே நோன்பாக ஏற்றுள்ள திருவடிகள்! நின் திருவடிகளே உலக இயக்கத்தைச் செய்கின்றன. அடியோங்களைத் தாங்கு கின்றன.*

*இறைவா, என் கால்கள் தாளாண்மையில் முற்றாக ஈடுபட்டால் நல்வாழ்வு கால்கொள்ளும். உடல் நலமும் விளங்கும். இறைவா, என் கால்கள் ஓயாது நடக்கவேண்டும். எங்கு? ஏழைகளின் வீடுகளை நோக்கி நடக்க வேண்டும். நின் திருக்கோயிலைச் சுற்றி வலம் வரவேண்டும்.*

*வழி வழி கால்கொள்ளக் கூடிய நாகரிகத்தினைப் படைத்திடுதல் வேண்டும். நல் நடைக்கும் என் கால்கள் அரண் செய்யவேண்டும். இறைவா, அருள் செய்க. என் கால்களின் வலிமையில் நான் நிற்க வேண்டும்! இறைவா, பொய்க்கால் கூடாது. நான் உழைப்பில் தற்சார்புடைய வனாக இருப்பது அவசியம்.*

*இறைவா, நான் என் வாழ்வினை நடத்தும் தகுதியில் தரத்தில் என் கால்களையே சார்ந்திருத்தல் வேண்டும். இறைவா, என் ஒழுக்கம் வலிமை வாய்ந்தகாக என் சார்பின தாக இடம் பெறுதல் வேண்டும்.*

*இறைவா, என் கால்கள் நடக்கட்டும். நன்னெறியில் நடக்கட்டும்! இறைவா, என் கால்கள் நின்திருக்கோயிலைச் சுற்றி வலம் வரட்டும்! என் கால்கள் பொருளீட்டத்திற்கும் உழைக்கட்டும். இறைவா, நான் என் கால்களால் ஊன்றி நிற்க அருள் செய்க!*

கு. X. 18.

## செப்டம்பர் 14

### இறைவா, அன்பெனும் கசிவு கண்டு, காட்டி உதவி செய்க!

*இறைவா, கல்லைப் பிசைந்து கனியாக்கும் 'வல்லாளன்' என்று உன்னைப் புகழ்வது பொருந்துமா? இறைவா, என் மனம் கல்லாக இருக்கிறதே! இறைவா, என் மனம் கல்லாக இருந்தால் பரவாயில்லை! கல் வலிமையான பொருள். நின் திருக்கோயில் கட்டுமானத்திற்குக் கல்தானே பயன்படுகிறது!*

*ஏன் இறைவா? நின்னைக் காண-உறவு கொள்ள உன்னையே கல்லில் தானே சிலையாக வடித்துள்ளோம். இறைவா, என் மனம் இப்படி நல்ல காரியங்களுக்குப் பயன் படுவதில்லையே.*

*இறைவா, கல் - அதன் நிலையில் பிடிவாதமாக இருப்பதில்லையே. அது பயன்கொள்வார் விருப்பத்திற்கு ஏற்ப வாயிற்படியிலிருந்து உனக்குச் சிலை வடிக்கும் வரை பயன்படுகிறது.*

*என்னுள் ஏதுமாற்றம்? என்னைப் பயன்படுத்துவோர் யார்? 'எல்லாம் நானே! எல்லாம் எனக்கே'. இறைவா, இத் தகைய கல்மனத்தை நெகிழச் செய்வாயா? அன்பெனும் கசிவு கண்டு காட்டி உதவி செய்க!*

*இறைவா, நான் அன்பினால் அரற்றி அழவேண்டும். உலகமே என் குடும்பம் ஆக வேண்டும். இறைவா, அருள் செய்க! தன்னலம் மறந்து அனைத்துயிர் நலம் நாடித் தொண்டு செய்ய அருள் செய்க!*

## செப்டம்பர் 15

### மகிழ்வுடன் வாழ அருள் செய்க!

*இறைவா, ஞாலமே! விசும்பே! இவை வந்து போம் காலமே! ஞாலத் தலைவனே! நின் திருவருள் போற்றி! போற்றி!! இறைவா, எனக்கு மகிழ்வும், இன்பமும் தேவை. அருள் செய்க!*

*நான் என் புத்தியைக் கொண்டு மகிழ்வினைத் தேடித் திரிந்தேன். கண்டனவே களிப்பு இது என் நிலை!*

*இறைவா, நான் களிப்பை, சுவை நிறைந்த சோற்றில் அடைய முயன்றேன். ஆனால் அதில் அது இல்லை. களிப்பை விரும்பி அணிகலன் ஆடைகளை ஏற்றுக் கொண்டேன்! அவா அடங்கியபாடில்லை. உற்ற காதலில் மூழ்கிப் பார்த்தேன். ஒன்றும் பயன் இல்லை! என்னை ஆட் கொள். ஒன்றுக்கும் உதவாத பொல்லா நாயேனை ஆட் கொண்டருள் செய்க!*

*நான் இன்பத்தைத் தேடுகின்றேன். ஆனால் இன்பம் இருக்குமிடத்தில் தேடவில்லை! உண்மையான இன்பம் ஆசையில் தோன்றாது. அறிவால் காண இயலாது. இறைவா, எனக்கு ஞானத்தினைக் கொடு. இந்த உலகின் அமைவுகளை – நிகழ்வுகளைத் தெரிந்து தெளியும் ஞானத்தினை அருள் செய்க!*

*ஞானமுடையோனுக்கே இந்த உலகம். இந்த உலகத்தில் ஞானமுடையோனுக்கே ஆக்கம், இன்பம்! இறைவா, ஞானத்தைத் தந்தருள் செய்க! ஞானம் தெளிவில் பெறுவது. இறைவா, அருள் செய்க! நில்லாதனவற்றை நிலையெனக் கொண்டாடும் பேய்த் தனத்தினின்று மீட்டருள்க.*

*இந்த உலகின் நடையை மெய் என்று கருதாது ஊடுருவி மெய்ப்பொருள் தேறும் உணர்வினைத் தந்தருள் செய்க! ஞானத்தினால் என்னை ஆட்கொள். வாழ்வித்திடு. மகிழ்வுடன் வாழ்ந்திட அருள் செய்க!*

## செப்டம்பர் 16

### அருள் வாழ்வினை அருள் செய்க!

*இறைவா, நெய், பால், உகந்தாடும் இறைவா! நீ ஏன் நெய், பால் உகந்தாடுகின்றாய்! இறைவா, நன்றருளிச் செய்தனை! நெய், பால், சின்னம் எதன்சின்னம்? அன்பின் சின்னம். அன்பின் பொழிவு. சேவையின் சின்னம்.*

*மனிதன் உண்ணாதனவாகிய தவிடு, வைக்கோல் இவையே பசுவின் உணவு. சுவையற்ற உணவைத்தின்னும் பசு, எனக்கு அமுதமாகிய பாலைப் பொழிந்து தருகிறது. ஒரு பசு தன் வாழ்நாளில் 24, 960 பேருக்கு ஒரு வேளைக்குத் தேவையான பாலைப் பொழிந்து தந்து வளர்க்கிறது.*

*ஒரு பசு, தன் தலை முறையில் தான் தன் வழிக்கன்று கள் மூலம் 4, 75, 600 பேருக்கு ஒரு வேளைக்குரிய பாலை வழங்கிக் காப்பாற்றுகிறது! இத்தகைய வாழ்க்கை முறை, பகுத்தறிவு படைத்த மனிதனுக்குக் கைகூடவில்லையே! எனக்குக் கைகூட வில்லையே.*

*நான், எனக்கே நன்மை தேடி அலைகின்றேனே தவிர என்னால் மற்றவருக்கு என்ன நன்மை என்று ஆராய்வ தில்லை. எண்ணுவதில்லை! இறைவா, ஏன் இந்த இழிபிறவி?*

*என் வாழ்க்கை மற்றவர் வாழ்க்கையின் தேவையாக மாறி வளர்ந்து விட்டால் நான் என் வாழ்க்கையைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். என் வாழ்க்கை தானே நடக்கும்.*

*அன்பென்ற அமுதம் பொழிந்து தந்து என்னை வாழ்விக்கும் பசுவையே நான் காப்பாற்றுவதில்லையே. இறைவா, என்னை இந்நிலையிலிருந்து எடுத்தாள்க. என் புத்தியினைப் பொருந்துமாறு திருத்துக.*

*நான் வாழ்தலுக்கு, உரிய சாதனம் பிறரை வாழ் வித்தலே என்ற உண்மையை அறிந்து, பணி செய்யும் பாங்கினைத் தந்தருள் செய்க!*

## செப்டம்பர் 17

### வாழும் நெறியில் நிறுத்தியருள்க!

இறைவா, சாவா, மூவா மருந்தே! போற்றி! இறைவா, என் வாழ்க்கை நகர்ந்து கொண்டே இருக்கிறது. என் வாழ்நாள் சுருங்கிக் கொண்டே இருக்கிறது. காலனின் அழைப்புக்குரல் கேட்கிறது.

காலனின் தூதர்கள் அதிவேகமாக முன் கூட்டியே வந்து அமுக்கிப் பிடிக்க முயற்சி செய்து நோய்ப் படுக்கையில் படுக்க வைக்கின்றனர். நான் சாகப் பயப்படுகின்றேன். நான் வாழ ஆசைப்படுகின்றேன்.

இறைவா, ஆசைப்பட்டால் போதுமா! ஆசைகளை நிறைவேற்றுவது முயற்சி அல்லவா? இறைவா, என்னைக் காப்பாற்று! காலனிடமிருந்து காப்பாற்று. இந்த ஒரு தடவை மட்டும் என் சாவைத் தள்ளிப் போடு. சில ஆண்டுகளுக் காவது தள்ளிப்போடு.

எஞ்சிய ஆண்டுகளிலாவது வாழ்ந்திட முயற்சி செய்கிறேன். இங்கே வாழ்ந்தால்தானே சாவுக்குப் பிறகும் நான் வாழலாம்! ஆம் இறைவா, நான் நன்மையே எண்ண வேண்டும்! எண்ணிய நன்மைகளையே செய்ய வேண்டும்.

இந்த உலகில் எல்லா உயிர்களிடத்தும் நான் அன்பு காட்ட வேண்டும். அவற்றின் துன்பத்தை என் துன்பமாக எடுத்துக் கொண்டு மாற்றிடுதல் வேண்டும். உண்பித்து உண்ணல், மகிழ்வித்து மகிழ்தல், வாழ்வித்து வாழ்தல் இதுவே வாழும் முறைமை. இந்த முறையில் நான் வாழ்ந்திட அருள் செய்க!

என் வாழ்க்கையில் நன்மையே செய்க! தீமைகள் இல்லாத நன்மையை நாடிச் செய்திடும் நன்னெறியில் - வாழும் நெறியில் நிறுத்தி அருள்க. நான் வாழ்தல் வேண்டி நின்னை இரந்தனன்! இறைவா, அருள் செய்க!

## செப்டம்பர் 18

### வரலாறு எனக்கு ஒரு படிப்பினையாக அமைய அருள் செய்க!

*இறைவா, பல்லூழிக்கால வரலாற்றுக்கு உரிமை உடைய நாயகனே! இறைவா, வரலாறும் உன்னைப் போலவே தொன்மையானது. பழமையானது. இந்த வரலாறு நான் படிக்கத் தக்கது இல்லை. படிக்க வேண்டியது, தெரிந்து தெளிய வேண்டிய உண்மைகள் வரலாற்றில் உண்டு.*

*வரலாறு எனக்குக் கற்றுத் தரும் பிடிப்பினை, எதை எல்லாம் நான் தவிர்க்க வேண்டும் என்பது. இறைவா, வரலாற்று வெள்ளத்தில் நீந்திக் கரையேறியவர்கள் சிலரே; மிகச் சிலரே. ஆனால், இழுத்தெறியப் பட்டவர்களின் எண்ணிக்கை மிகுதி.*

*இறைவா, வரலாற்றைக் கூர்ந்து நோக்கின் கவிழ்ந்த அரசுகள்-அழிந்த அரசுகள்-கொல்லப்பட்ட அறிஞர்கள் ஆகியோர் தெரிகின்றனர். இறைவா, நான் வரலாறு படித்தால் போதாது. வரலாற்றினை வாழ்க்கையின் படிப்பினை யாக ஏற்றுக் கொள்ள அருள் செய்க!*

*கருணை இல்லாத ஆட்சிகள் ஒழிந்துள்ளன. இரக்க மற்ற அரசுகள் கட்டிய கோட்டைகள் இடிபாடுகளுக்கு ஆளாகியுள்ளன. இறைவா, வரலாற்றைக் கூர்ந்து நோக்கின் அறியாமை, தெளிவின்மை. துணிவின்மை, தனிமுடி கவித்து ஆள்வதற்கெனச் செய்யப்படும் அரசியல் கொலைகள் இன்னோரன்ன தீமைகள் வரலாற்றுப் போக்கில் தள்ள வேண்டியவை.*

*இறைவா, ஆகாதவற்றைத் தள்ளி ஒதுக்கும் துணிவைத் தா. வரலாற்றின் பயனை வாழ்வுக்கு அருளிச் செய்க. சென்ற கால மனிதர்கள் தோல்வியைத் தழுவியவைகளை அறவே ஒதுக்கிடும் துணிவைத் தா. சென்ற கால வரலாறு எனக்கு ஒரு படிப்பினையாக அமைய அருள் செய்க!*

## செப்டம்பர் 19

### தப்பெண்ணம் இல்லாது வாழ்ந்திடும் பேற்றினை அருளுக!

*இறைவா, என்னை ஆட்கொண்டருள முடியும் என்ற நம்பிக்கையுடன் என்னைத் தொடரும் தலைவா! என்னை நீ எடுத்தாள முடியுமா? இறைவா, நான் தப்பெண்ணங்களின் வழிப்பட்டு, ஐயப்பட்டு உழல்கிறேன். நான் தப்பெண்ணங் களின் கொள்கலம். அதனால் நான் அகந்தை உணர்வுடன் போட்டியிடுகிறேன்.*

*இறைவா, "நான் சொல்வதே சரி! செய்வதே சரி!" என்ற முடிவுக்கு ஒத்திசையாதவர்கள் எனக்கு வேண்டாத வர்கள் என்று அவர்கள் மீது தப்பெண்ணம் குடிகொண்டு விட்டது. தப்பெண்ணம் உடல் நலத்தைக் கெடுக்கிறது.*

*என் உடல்நலம், அறிவு, உணர்வுகளை, எல்லாம்கூட தப்பெண்ணம் கெடுத்து விடுகிறது. நண்பர்களைப் பகைவர் களாக்கிவிடுகிறது. ஏன்? மற்றவர் சொல்வதைக் கேட்பது இல்லை என்ற முடிவில் என் மனம் தாழ்ப்பாள் போட்டுக் கொள்கிறது.*

*இறைவா, நீ தப்பெண்ணங்களுக்கு அப்பாற் பட்டவன். நீ பஸ்மாசுரனைக் கூடத் தப்பாக எண்ணவில்லை. இறைவா, நானோ ஒரு சந்தேகப் பிராணி. தப்பெண்ணங்களே என் முதல். தப்பெண்ணங்களை நான் தற்காப்பு என்று எண்ணு கிறேன். இது தவறு.*

*இறைவா, நான் நன்றாக எண்ணி நம்பிக்கையோடு நாலுபேருடன் வாழ்ந்தாலே போதும். நான் வெற்றி பெறு வேன் இறைவா, தப்பெண்ணம் இல்லாது வாழ்ந்திடும் பேற்றினை அருள் செய்க!*

# செப்டம்பர் 20

## எண்ணிய எண்ணியாங்கு எய்தும் விழிப்பு நிலையினை அருள் செய்க!

*இறைவா, நின் அருள் திறத்திற்கு யாதுமோர் குறை வில்லை. நான் வளர்வதற்கு நீ வழங்கியருளிய வாய்ப்புகள் எண்ணில. ஆனால், நான் வாழ்ந்தேனில்லை. உன்னால் ஒன்றும் குறைவில்லை.*

*நான் வெள்ளத்துள் நா வற்றிச் சாவதைப் போல் செத்துக் கொண்டிருக்கிறேன். மழை பொழிந்தாலும் தளிர்க்க வேண்டியவை மரங்கள் அல்லவோ? வெள்ளப் பெருக்கே யானாலும் அள்ளிக் குடிக்க வேண்டியவை உயிர்களே யன்றோ? கதிரொளி காய்ந்தாலும் காணவேண்டியவை கண்கள் அன்றோ?*

*இறைவா, நின்னருள் வெள்ளத்திற்கு யாதொரு குறையு மில்லை. இறைவா, நின்னருளைப் பெற்று வாழ்தலுக்கு எனக்கு விழிப்புநிலை தேவை. எப்போதும் ஆயத்த நிலையில் இருத்தல் வேண்டும். நானோ தூங்கி வழிகின்றேன். கண்களை மூடிக்கொண்டே உலகத்தைப் பார்க்கிறேன்.*

*இறைவா, என் சிறுமையைத் தள்ளி ஆட்கொள்க. எப் போதும் விழிப்புநிலையில் என் உணர்வு இருக்க வேண்டும். எப்போதும் எதையும் சிந்தித்து உடன் முடிவு செய்யும் அறிவு நிலையில் என் உணர்வு இருக்க வேண்டும். எப்போதும் எதையும் எந்தவகை உழைப்பையும் ஏற்றுச் செய்யும் நிலையில் என் உடல்நிலை ஆயத்தமாக இருக்க வேண்டும். இறைவா அருள் செய்க!*

*விழிப்பு உடையார் வீழ்ச்சி அடையார். ஆயத்த நிலையில் அடையாத ஆக்கங்கள் இல்லை. இறைவா, அருள் செய்க! என் உயிர் நிலையில் துடிப்பினை அருள் செய்க! எண்ணிய எண்ணியாங்கு எய்தும் விழிப்பு நிலையினை அருள் செய்க!*

## செப்டம்பர் 21

### அன்பைப் பொழிந்து அன்புலகமாக்க அருள்க!

*இறைவா, என்னுடைய அன்பே! நின் திருவடிகள் போற்றி! இன்ப விழைவினாலேயே வாழ்க்கை நிகழ்கிறது. எல்லா உயிர்களுக்கும் இன்பமே விழைவு; நோக்கம். இன்ப நுகர்வே, இந்த உலக இயக்கத்திற்கு உந்து சக்தி.*

*இன்ப விழைவினாலேயே அறம் செய்யப் பெறுகிறது. வாழ்க்கையின் பயனே இந்த அன்புதான். இறைவா, இந்த இன்பத்துக்கு முதல் எது? உந்து சக்தி எது? இறைவா, நன்றருளிச் செய்தனை.*

*இன்பத்திற்கு முதல் அன்பு. இன்பத்திற்குக் காரணம் அன்பு. அன்பு தழீஇய வாழ்க்கை இன்பத்தைத் தரும். காரைக்கால் அம்மையார் விழைந்ததும் இன்ப அன்பே. அன்புக்கு வாயில்கள் எண்ணற்றன உண்டு. இறைவா, நான் அன்பின் வழியில் வாழ்ந்திடும் வழக்கத்தை அருள் செய்க! இறைவா, என் அன்பு ஆற்றலுடையதாக அமைதல் வேண்டும்.*

*இறைவா, கனிந்த அன்பால்-காரண காரியத்தை ஆய்வு செய்யும் அறிவு அழிதல் வேண்டும். இறைவா ஏன்? உன்னையே நான் அன்பினால் வழிபாடு செய்தல் வேண்டும். இறைவா அருள் செய்க.*

*நான் அன்பிலே பிறந்தேன். அன்பிலே வாழ்கின்றேன். நான் அன்பை என்னைச் சுற்றி-உலகத்தில் பொழிந்து இந்த வையகத்தை அன்பு உலகமாக்குதல் வேண்டும்.*

*யாண்டும் அன்பு! யார் மாட்டும் அன்பு! அன்பே இன்பம்! அன்பே ஆற்றல்! அன்பே சிறப்பு! அன்பே குடும்பம்! அன்பே வழி! அன்பின் வழியது என் வாழ்வு. வளம் எல்லாம்! இறைவா, அருள் செய்க!*

## செப்டம்பர் 22

### தோல்விகளும் வெற்றிகளே என்றுணர்த்திய கருணையே போற்றி!

*இறைவா, என்னுடைய சேம நிதியே! நின்னருள் போற்றி! போற்றி! என் வாழ்க்கையில் வெற்றிகள் தேவை. இது என் ஆசை. இறைவா, எனக்கு எடுத்த காரியம் யாவினும் வெற்றியை அருள் செய்க!*

*இறைவா, என்ன அருளிச் செய்கின்றனை! வெற்றி என்பது ஒன்றும் அவ்வளவு பெருமைக்குரிய தன்று. சில சமயங்களில், பலருக்கு வெற்றி, நல்வாய்ப்பால்கூட வந்து விடலாம்.*

*என்னை வளர்ப்பது வெற்றிகள் அல்ல. என் தகுதிக்கு அளவுகோல் வெற்றிகள் அல்ல! இல்லையா? இறைவா! மனிதனை வளர்ப்பன தோல்விகளே.*

*ஒரு வெற்றியை விட ஒரு தோல்வி போற்றத்தக்கது. பெருமைப் படத்தக்கது. வரலாற்றில் நிலைத்து நிற்கக் கூடியது. உலகியல் நெறிப்படி ஏசுபெருமான் தோற்றார். ஆனால், வாழ்வியல் நெறிப்படி வென்றார். இன்றும் மனித உலகத்தை வென்று வாழ்கின்றார்.*

*என் வாழ்க்கையில் உயர் குறிக்கோளை எடுத்துக் கொள்வேன். என் வாழ்க்கையைப் போர்க்களமாக்கிக் கொள் வேன்; ஓயாது போராடுவேன்.*

*இந்த நடைப்பயணத்தில் நான் சந்திக்கும் துன்பங் களைக்கண்டு துவண்டு விழுந்துவிடமாட்டேன். சோர்ந்து விடமாட்டேன். என் பயணத்தை இடையில் நிறுத்தவும் மாட்டேன்.*

*நான் தோல்விகளைச் சந்தித்தாலும், அழுது கலங்க மாட்டேன். அத்தோல்விகளை, வெற்றிப் பயணத்தின் படிக் கற்களாக்கித் தொடர்ந்து நடப்பேன். இறைவா, இது உறுதி. எனக்குத் தோல்விகளும் வெற்றிகளே என்றுணர்த்திய உன் கருணைக்கு நன்றி. போற்றி! போற்றி!!*

## செப்டம்பர் 23

### இறைவா ஒற்றுமைப் பண்பை வழங்கியருள்க.

இறைவா, களிற்றுரிவை போர்த்த அண்ணலே! எனக்கு வலிமை தேவை. பலம் தேவை. ஆம், இன்று தேவை! இறைவா, நீயோ சிரிக்கிறாய். எனக்கோ வேதனையாக இருக்கிறது. வெட்கமாக இருக்கிறது. "ஏன் அப்படி?" என்று கேட்கிறாய்.

இறைவா, ஏன் இப்படி நடிக்கின்றாய், ஒன்றும் தெரியாதவன் போல! தலைமுறை, தலைமுறையாக நானும் என் உறவினரும், சுற்றத்தினரும் வறுமையில் வாடி, புலன்கள், பொறிகளை இழந்து வருகின்றோம்.

எத்தனை தலைமுறையாகச் சாதிச் சண்டைகளால் பண்பாடழிந்து வருகின்றோம். நடைபெற்றுள்ள கொலைகள் எத்தனை? இறைவா, போதும், போதும், இந்த நரக வேதனை.

எனக்கு வலிமையைத் தா. எங்களுக்கு வலிமையைத் தந்தருள் செய்க! ஒற்றுமையே வலிமை. வலிமையே ஒற்றுமை. ஆம் எங்களுக்குள் வேற்றுமையில்லை. பிரிவினை இல்லை. எங்களை எந்தச் சக்தியாலும் பிரிக்க இயலாது. இறைவா, ஒற்றுமைப் பண்பை வழங்கியருள்க!

நான் எளியன்! வேறு யாரினும் உயர்ந்தவன் அல்லன்; என் வாழ்க்கை, மற்றவர்களுக்காகவே. மற்றவர் வாழ்க்கையே என் வாழ்க்கை. மற்றவர் மகிழ வாழ்தலே என் கடமை. இந்த நிலை எய்திட அருள் செய்க!

## செப்டம்பர் 24

### உள்ளதைக் கொண்டு நல்லதைச் செய்து வளர அருள் செய்க!

*இறைவா, நரியைப் பரியாக்கிய நாயகனே! என்ன அற்புதம். ஒன்றுக்கும் உதவாத-அழகில்லாத-உபத்திரவம் செய்யக்கூடிய நரிகளைக் குதிரைகளாக்கி நாட்டில் நட மாடச் செய்த வித்தகனே! நீ ஏன் இதைச் செய்தருளினை? மானிட சாதிக்கு ஒரு படிப்பினை தரச் செய்தருளினை!*

*ஆம். இறைவா! நான் "எனக்கு நல்ல வேலையாகக் கிடைக்க வேண்டும். கைநிறைய ஊதியம் கிடைக்கவேண்டும். சிக்கல் இல்லாத சுலபமான வேலையாக அமைய வேண்டும். சுற்றுப்புறச் சூழ்நிலையெல்லாம் நன்றாக அமையவேண்டும்" - என்றெல்லாம் எண்ணிக் காத்துக் கொண்டிருக்கிறேன். உள்ளதைக் கொண்டு நல்லதைச் செய்து வளர மனம் இல்லை.*

*இறைவா, நான் எனக்கு வாய்த்ததை வழிமுறையுடன் சிறப்பாகச் செய்கின்றேனா? இதுதான் வினா. எனக்கு வாய்த்த வேலை மோசமான வேலையாக இருக்கலாம். எனக்கு வாய்த்த சூழ்நிலைகள் மோசமாக இருக்கலாம். நான் முயன்றால் எதையும் நல்லதாகச் செய்ய இயலாதா? நின் திருவருள் எனக்குத் துணை செய்யாதா?*

*இறைவா, அழகை அழகுபடுத்துவதில் என்ன இருக் கிறது? நல்லதை மேலும் நல்லதாக்குவதில் என்ன முயற்சி வேண்டியிருக்கிறது?*

*இனி நான் நல்ல வேலைக்காக காத்திருக்க மாட்டேன்! எந்தப்பணி கிடைத்ததோ அந்தப் பணியை அது எவ்வளவு மோசமான பணியாக இருந்தாலும் முழு ஊக்கத்துடன் செய்து சிறப்படைவேன்!*

*இறைவா, கெட்டதை நல்லதாக்குவதே ஆள்வினை. பயனில்லாததைப் பயன்பாடுடையதாக்குவதே முயற்சி. இனி என் வாழக்கை இங்ஙனம் அமைய அருள் செய்க!*

## செப்டம்பர் 25

### ஒருமையுணர்வுடன் உலகியல் நடத்த அருள்க!

இறைவா, "ஆ, வா!" என அருளி ஆண்டு கொண்டருளும் தலைவனே! போற்றி! போற்றி! என் வாழ்க்கையில் வளர்ச்சி, இன்பம், அமைதி இவ்வளவும் அமையவேண்டும்.

மனிதகுல வாழ்வியலை இயக்குவது உலகியல்! ஆதலால் என் வாழ்க்கை சீராக அமையவேண்டுமெனில் நான் உலகியலைத்தான் அணுகவேண்டும். நான் வாழும் உலகியல் செப்பமாக அமைந்தால் என் வாழ்க்கையும் செப்பமாக அமையும்!

இறைவா, உணர்ந்தேன்! உலகியல் செப்பமாக இல்லாமையினால்தான் அறிஞர்களை, அருளாளர்களை இந்தப் "பொருந்தா உலகியல்" கொன்றுவிட்டது!

இந்த உலகியலை ஒருவர் நடத்தக்கூடாது; நடத்த அனுமதிக்கக்கூடாது. பலர் கூடி நடத்த வேண்டும்! அவருள்ளும் ஒரே வகையினராக இருந்தால் வளர்ச்சி இருக்காது! புத்தறிவுக்கு வழியில்லாமற் போய்விடும்! இறைவா, என்னோடு ஒத்தார் பலர் இருந்து நடத்துதல் வேண்டும்.

என் வாழ்க்கையில் பங்கு பெறுபவர்கள் ஒத்தாராக இருந்தால்தான் எனக்கு அவ்வப்பொழுது எடுத்துக்கூற இயலும். நான் வளர வேண்டியவன். உயரவேண்டியவன். ஒத்தாரோடு மட்டுமே உறவானால் உயர்வு இல்லை. ஆதலால், உயர்ந்தாருடனும் கூடி உலகியலை நடத்த வேண்டும். அப்போதுதான் என்நிலை உயரும்.

என் வாழ்க்கையில் அன்பு, இரக்கம் முதலியன ஊற்றெடுத்து என்னை வளர்க்க, தாழ்ந்தாரும் என்னுடன் உலகியலில் பங்கேற்க வேண்டும். நான் எல்லை கடந்த நிலையில் யாரையும் ஒதுக்காமல் ஒதுங்காமல் வளர வேண்டும்.

அன்புக்கும் உறவுக்கும் எல்லையில்லை. ஆதலால், அனைவரும் என்னுடன் சேர்ந்து உலகியல் நடத்தினால் எனக்கு உயர்வு கிடைக்கும். இறைவா, அருள் செய்க!

## செப்டம்பர் 26

### இறைவா, நெஞ்சம் தளராதிருக்க அருள் செய்க!

*இறைவா, கற்பகமே! நான் என் பிறப்பின் பயனை அடைய வேண்டாமா? என் வாழ்க்கை பூரணத்துவம் அடைய வேண்டாமா?*

*இறைவா, எனக்கு என்ன குறை என்றா கேட்கிறாய்? இது என்ன கேள்வி! இப்போது என் கையில் பொருள் இல்லை. இந்தக்காலம் நான் ஒன்றுமே செய்ய இயலாத காலமாக இருக்கிறது. இறைவா, ஏன் காமனைக் கனன்று விழித்த பார்வையோடு என்னை நோக்குகிறாய்? நின் சினம் தாங்கும் ஆற்றல் எனக்கில்லை!*

*இறைவா, நான் ஏதேனும் தவறு செய்தால் மன்னித்துக் கொள்! என் பொல்லாத காலம் கையில் பொருள் இல்லை என்று வாளா இருந்துவிட்டேன். என்னுடைய செயலின் மையைக் காலத்தின் மீது பழியாகப்போட்டு விட்டு நெஞ்சில் தளர்ச்சியைத் தாங்கி நடைப்பிணமாக வாழ்கின்றேன்.*

*இறைவா, என் இழிநிலையைச் சுட்டிக்காட்டி உணர்த்தியதற்கு நன்றி! ஆயிரம் ஆயிரம் போற்றிகள்! பொருள் இருப்பதல்லவே. அறிவறிந்த ஆள்வினையால் பொருள் படைக்கப்படுவது. இறைவா, நீ செல்வத்தை, இயற்கை உலகத்தில் மறைத்து வைத்து எனக்குத் தந்தருளி உள்ளனை.*

*என் உழைப்பின்மூலம் அச்செல்வத்தைத் தேடி எடுத்து வாழச் சொல்கிறாய். நானோ அறிவறிந்த ஆள் வினையில் ஈடுபடுவதில்லை. இறைவா, உண்மை உணர்ந்தேன். எந்தச் சூழ்நிலையிலும் நெஞ்சில் தளரேன். இலமென்றுவாளா உறங்கேன்.*

*காலத்தின் மீது பழிசுமத்த மாட்டேன். என் உழைப் பின் மூலம்தான் காலம் நிலை பெறுகிறது. புகழ்பெறுகிறது. இறைவா, என் உழைப்பால் நான் பொருள் படைத்தவனாக அருள்செய்க! இறைவா, வாழ்வித்திடு!*

## செப்டம்பர் 27

### இறைவா, உள்ளொன்றும் புறமொன்றும் இல்லாத திறந்த மனத்தினை அருள்க!

*இறைவா, தூயவெள்ளேறுடையானே! என் மனம் நீ எழுந்தருளும் திருக்கோயிலாக விளங்க வேண்டும். இது என் ஆசை. ஆனால், என் ஆசை எளிதில் நிறைவேறாதுபோல் இருக்கிறதே.*

*இறைவா, என்மனம் தூய்மையாக இல்லை. வெண்மை யாக இல்லை. ஏராளமான செய்திகள் இரகசியம் என்ற பெயரில் அங்கு உள்ளன. அவைகளை மற்றவர் அறிய நான் கூறுவதில்லை.*

*என்னுடைய வாழ்க்கையில் ஒளிவு, மறைவுகள் அதிகம். இதற்கு ஏதேதோ காரணம் சொல்லி என்னை நானே ஏமாற்றிக் கொள்கின்றேன். இறைவா, நான் என்ன செய்ய? இங்குள்ள சூழ்நிலையில் உண்மை சொன்னால் உலகம் பைத்தியக்காரன் என்ற பட்டம் கட்டிவிடும். வாழத் தெரியா தவன் என்று எள்ளி நகைக்கும். இது இன்று என்னுடைய நிலை.*

*இறைவா, நீயோ திறந்த மனத்துடன் வாழ்பவர் களையே நேசிக்கிறாய். விரும்பி ஏற்றுக் கொள்கிறாய். எனக்குத் தூய்மையான மனத்தினைத் தந்தருள் செய்க! உள்ளொன்றும், புறமொன்றும் இல்லாத திறந்த மனத்தினை அருள் செய்க!*

*என் வாழ்க்கை ஒரு திறந்த புத்தகம் போல விளங்க அருள் செய்க! கள்ளமற்ற திறந்த மனம், இன்பம் தழீஇய சொற்கள், மனம் திறந்த பேச்சு இவற்றை என் வாழ்க்கையின் நியதிகளாக ஏற்றுக் கொள்ள அருள் செய்க!*

*இறைவா, திறந்த மனம் உனது அருட் கொடை; நீ விரும்பி நேசிப்பது. இறைவா, திறந்த மனத்தினை அருள் செய்க!*

## செப்டம்பர் 28

### சிந்தனை நின்தனக்காக்கி வாழ்ந்திட அருள் செய்க!

*இறைவா, மந்திரமும் ஆகிய அண்ணலே! "மந்திரம்" என்றால் என்ன? நான் சில சொற்களை முணு முணுக் கின்றேனே! அதுவா, மந்திரம்? இறைவா, நீ அருள் செய்யும் திறப்பாடு வாழ்க!*

*மந்திரம் எழுத்தில்லை, சொல் இல்லை, சொல்லின் பொருளும் இல்லை! இறைவா, என்ன வியப்பு? இன்று மந்திரம் என்ற பெயராலேயே அன்பு மதம் புரோகித மதமாகிவிட்டது. பணம் செய்யும் தொழிலாக மாறிவிட்டது! எங்கு பார்த்தாலும் காட்டிரைச்சல்.*

*இறைவா, நீ, மந்திரம் என்பது சிந்தனை என்று உணர்த்தியருளிய திறத்துக்குப் பலகோடி போற்றிகள்! உன்னைப் பற்றிச் சிந்தித்தலே மந்திரம்!*

*இறைவா, உன்னோடு தொடர்பு கொள்ள வேண்டியது சிந்தனை! என் சிந்தனையை நான் வேண்டிய அளவுக்குத் தூண்டி விட்டுக் கொண்டு சிந்திப்பேன்.*

*இறைவா, நீ என் சிந்தனையில் தெளிவு கிடைக்க அருள் செய்க! சிந்தனைத் தெளிவில் நீ சிவமாக எழுந்தருளி ஆட்கொண்டருள்க!*

*இறைவா, நின்னை அடையும் சிந்தனையில் நான் வளர அருள் செய்க! இறைவா, சிந்தனை நின் தனக்கு ஆக்கி வாழ்ந்திட அருள் செய்க!*

## செப்டம்பர் 29

### ஆற்றலைப் பெருக்கிக் கொள்ள இறைவா, அருள்க!

*இறைவா, மனத்துள் நின்று கருத்தை யறிந்து முடிக்கும் தலைவா! துன்பத் தொடக்கே இல்லாத மனித சமுதாயத் தைக் காண வேண்டும். இது என் ஆற்றலை விஞ்சிய குறிக்கோளா? இல்லையே இறைவா!*

*என் ஆற்றலுக்கு ஏது எல்லை? அளவு? என் ஆற்றல் எல்லையற்றது! அளவற்றது! என் குறிக்கோளை அடைய வேண்டும் என்று உறுதி எடுத்துக் கொண்டேன். என்னால் முடியும். என் வாழ்க்கையில் விடா முயற்சியே தேவை.*

*இறைவா, என்னிடம் முயற்சியே இல்லை. விடா முயற்சி வேண்டும் என்கிறாய். போகாத ஊருக்கு வழி சொல்கிறாயா! இறைவா வேறுவழி இல்லையா? இல்லை. விடா முயற்சியே தேவை. ஒரு நாள் செய்து பல நாள் செய்யாதொழிதல் கூடாது. தொடர்ச்சியே தேவை. நின்று நின்று உழைத்தல் கூடாது. தொடர்ந்து உழைக்க வேண்டும்.*

*உழைப்பில் ஆற்றலைப் பெருக்கி வளர்க்கும் உயரிய குறிக்கோள் தேவை. அக்குறிக்கோளில் ஆவேசம் தேவை. அறிவு, உணர்வுகளில் அந்த உயரிய குறிக்கோள்கள் அதிட்டித்து நின்று இயக்குதல் வேண்டும்!*

*இறைவா, நான் ஒரு சுடரே! ஆனால் தூண்டினால் எரியும் சுடர் நான். எந்த விளக்குக்கும் தூண்டுதல் தேவை. இறைவா, என்னைத் தூண்டிவிடு. நான் ஆற்றல் மிக்குடை யவனாக வாழ்கின்றேன்! என் ஆற்றல் எரியும் சுடர்! தூண்டி விட்டால் பரிணமித்துச் செயல்படும்.*

*இறைவா, என் உணர்வு நிலையில் இருக்கும் சமுதாயத்தை அமைக்க முதல் தேவை என் ஆற்றல். என் ஆற்றலை நான் பெருக்கிக் கொள்ள இறைவா, அருள் செய்க.*

கு-X.19.

## செப்டம்பர் 30

### என் வாழ்க்கையில் காலந்தவறாமை அமைய அருள் செய்க!

*இறைவா, இன்று காலை மெல்லிய தண்ணளிமிக்க காற்று வீசிய காட்டின் சூழ்நிலை. இனிய குயில் இசை எழுப்பியது. எழுந்தேன். ஆம். இறைவா, குயிலின் இசையே என்ன எழுப்பியது.*

*கடிகாரம், நாட்காட்டி இல்லாத இயற்கை, காலம் தவறுவதில்லை. ஏன், இறைவா? காலந்தவற விடுதல் கூடாதா? ஆம், இறைவா! காலந்தவற விடாநிலையே வாழ்நிலை.*

*காலம் பொன் போன்றது. காலத்தினாற் செய்வதே பயன்பட்ட வாழ்நிலை. பொருள் பொருந்திய வாழ்நிலை, இறைவா, எனக்கு அருள் செய்க!*

*இறைவா, என்னைச் சுற்றி ஓர் ஒழுங்குபட்ட உலகைக் காண்கிறேன். எங்கும் ஒழுங்கு. முறை பிறழாத நிகழ்வுகள். ஆம், இறைவா, என் வாழ்க்கையிலும் ஒழுங்கும், முறை பிறழாத செம்மையும் வந்தமைய வரம் தருக!*

*இறைவா, என் வாழ்க்கையில் காலம் தவறாமை அமைய அருள் செய்க! என் வாழ்க்கையில் காலத்தின் அருமையை உணர்ந்து செயலாற்றும் பாங்கினை அருள் செய்க.*

## அக்டோபர் 1

## இறைவா, என் வாழ்வை வளமார்ந்த அருட்சோலையாக்கி அருள் செய்க!

*இறைவா, நன்னெறியே! நெறியின் பயனே! நின் திருவருள் போற்றி! போற்றி! இறைவா, ஓர்மை! ஓர்மை என்ற சொல் தரும் பொருள், பயனுடையது. என் வாழ்க்கை வாழ்க்கையின் வார்த்தைகள், செயல்கள் நீரில் குமிழியென ஆகாமல் நிலைத்தன்மையுடையனவாக அமைதல் வேண்டும்.*

*என் வாழ்க்கையின் குறிக்கோளில் ஒருமை வேண்டும். குவிந்த கதிரொளி மிகு ஆற்றலுடையது. மழை நீர்த்துளிகளே திரண்டு பெரு வெள்ளமெனப் பாய்ந்து பயன்படுகின்றன. பல நூறாயிரம் காசுகள் கூடி ஒன்று சேர்ந்தால்தான் செல்வம்.*

*செல்வமே மனித வாழ்க்கைக்கு முதலாக அமையும். அதுபோல என் ஆற்றல், ஒரு குறிக்கோளில் ஒருமைப் படுத்தப்பெற்றுப் பாடுறுதல் வேண்டும்.*

*ஒரு மனம் வேண்டும். இறைவா, என்ன சிரிக்கிறாய்? இல்லை இறைவா! எனக்கு இருப்பது ஒரே மனந்தான்! ஆனால் அது அடிக்கடி மாறுபட்டுத்திரிவது ஆற்றொணாத் துயரத்தைத் தருகிறது.*

*நட்டம்-ஈட்டம் என்ற சுருக்குக் கயிறுகள் என்னை இழுத்து அலைக்கழிவு செய்கின்றன! எவ்வளவு மோசமாகி இருக்கிறேன். ஆதாயம் இருந்தால்தான் நான் செயல்படுகிறேன்.*

*முறைகேடான ஈட்டம் கருதியே வாழ்தல், பழகுதல் விபசாரம் அல்லாமல் வேறு என்ன? இறைவா, என்னைக் காப்பாற்று.*

*என் வாழ்க்கை நன்னெறியில் நடைபயிலுதல் வேண்டும். நட்டம்-ஈட்டம் பற்றிக் கவலையில்லை. என் வாக்கினை வாய்மையாக்கி, வாழ்வை வளமார்ந்த அருட்சோலையாக்கி அருள் செய்க!*

## அக்டோபர் 2

### அன்பு செய்யும் வரம் தந்தருள்க!

இறைவா! பல்லுயிராய்ப் பரந்து நிற்கின்ற எம் தலைவா! நின்னருள்பெறும் உயிர்க்குலத்திற்கு யாதொரு துன்பமும் என்னால் நிகழக் கூடாது.

இறைவா, எனது பொறிகளில் கொல்லாமை, துன் புறுத்தாமை ஆகிய நோன்புகளை மேற்கொண்டொழுகும்படி அருள் செய்க! யாதோர் உயிருக்கும் என் வாழ்க்கை முறையில் - மனத்தால், வாக்கால், உடலால்-நான் துன்பம் செய்யக்கூடாது! கொல்லாமையே என் வாழ்க்கையாக வேண்டும்.

இறைவா, இம்சையால் உலகம் வளர்வதில்லை. எனக்கு அகிம்சை தேவை. எனது பகைவனுக்கும் நான் அன்பு காட்ட வேண்டும்! யாதோர் உயிருக்கும் மனத்தினால் கூடத் துன்பம் கருதுதல் கூடாது. இறைவா, அருள் செய்க.

கொல்லாமை நோன்பால்-அகிம்சையால் அரசிய லையே நிகழ்த்திப் பெருமை பெற்றவர் அண்ணல் காந்தியடிகள். நான் என் சொந்த வாழ்வில் அகிம்சையைக் கடைப்பிடிக்க இயலாதா? இறைவா, அருள் செய்க!

என் மனம் யார் மாட்டும் அன்பு செய்யும் வரத்தினைத் தா. வாழ்த்தியே பேசும் வாயினைத் தா. அருள் சுரக்கும் நெஞ்சினையே தந்தருள் செய்க! அன்பே! அன்பே! என்று அரற்றி அழும் அருள் நலம் சார்ந்த நன்னெஞ்சத்தைத் தந்தருள்க!

அகிம்சையே என் வாழ்க்கையில் அமைவதாக. கொல்லாமை அறம் குவலயம் முழுதும் குடி கொள்வதாக! உலகு, கொலைகளிலிருந்து விடுதலை பெறுக. எங்கும் சமாதானம் - சகவாழ்வு தழைப்பதாக!

## அக்டோபர் 3

### இறைவா, அமைதியை அருள் செய்க!

இறைவா, உனது மறு பெயர்கள்-அமைதி, இன்பம் என்பன! ஆனால் இறைவா! உன்னை நான் அமைதியாகக் கண்டு ஆராதித்தேனில்லை. இன்பமாக நினைந்து ஏத்திப் புகழ்ந்தேனில்லை.

ஆம், இறைவா! அமைதியின் தரிசனம் கிடைப்பதே இல்லை. எங்கு நோக்கினும் பதற்றநிலை! பழைய காட்டு மிராண்டிகளைப் போலவே அடுதலும் தொலைதலும் நிகழ் கின்றன. இந்த நிலை வீட்டிலிருந்து நாடு வரை உள்ளது!

இறைவா, இந்தக் கலக உலகை மீட்டு அமைதிக்குக் கொண்டு வர வேண்டாமா? ஆம் இறைவா! நிச்சயம் கொண்டுவர வேண்டும்!

ஆழ்ந்த அறிவிலேயே அமைதி தோன்றும். தெளிவான சிந்தனையிலேயே அமைதி தோன்றும். தன்னல மறுப்பிலேயே அமைதி தலைகாட்டும். பிறர்க்கென முயலும் பண்பிலேயே அமைதி வந்தமையும். இதுவே நியதி.

அன்பே இன்பம்! இன்பமே அன்பு! அமைதியே வழி பாடு. இறைவா, அமைதியை அருள் செய்க! உலகில் அமைதி நிலவ அருள் செய்க!

## அக்டோபர் 4

### இறைவா, தவறுகளைத் தைரியமாக ஒப்புக் கொள்ளும் மனப்பான்மையைத் தந்தருள்க!

*இறைவா! தாயிற் சிறந்த தயாவுடைய தலைவனே! என்னைப் "பயம்" என்ற இருட்டறையிலிருந்து மீட்டுக் காப் பாற்றியருள்க!*

*இறைவா, என் பயம் என்னைப் பேயாகப் படைத் தாட்டுகிறது! என்னுடைய பயம் எதையும் எதிர்மறை யாகவே ஆராயத் தூண்டுகிறது! பயம் என்ற சூழ்நிலையில் சிக்கித் தவிக்கின்ற நிலையில்தான் நான் நல்லவனல்லன்.*

*இவன் நல்லவனல்லன். தோல்வி வரும். துன்பம் சூழும் என்றெல்லாம் நினைந்து நானே முடிவுகளையும் எடுத்துக் கொண்டு, அரண்ட நிலையில் வாழ்நாளைக் கழித்துக் கொண்டிருக்கிறேன்.*

*நான் ஏன் பயப்பட வேண்டும். பயம் மனிதனைக் கொன்றுவிடுகிறது. மனிதனின் ஆக்கத்தை அழிக்கிறது. சுற்றத்தை அழிக்கிறது. ஆதலால் பயத்திலிருந்து மீள்வதே என் முதல் பணி.*

*நான் பயத்தால் இழக்கும் இழப்பே மிகுதி! பயத்திற்குப் பதிலாக நான் உண்மையுடன் வாழ்ந்தால் - தவறு நிகழ்ந்து விட்ட நிலையில் அதனை ஒத்துக் கொள்வதில் முன் நின்று மன்னிப்புக் கேட்டால் நான் பிழைத்து விடுவேனே! இறைவா, என்னைப் பயத்திலிருந்து மீட்டுக் காப்பாற்று!*

*தவறுகளுக்குக் காரணமாகிய அறியாமை, அகந்தையி லிருந்து காப்பாற்று! தவறுகள் நிகழ்ந்து விட்டால் தைரிய மாகத் தவறுகளை ஒத்துக் கொள்ளும் மனப்பான்மையைத் தா!*

*தவறுகளை நினைத்து வருந்தி மன்னிப்புக் கேட்கும் இயல்பினைத் தா! இறைவா. என்னைப் பயத்திலிருந்து மீட்டு வீரம் செறிந்த வாழ்க்கையில் செலுத்தியருள்க! இறைவா, அருள் செய்க!*

## அக்டோபர் 5

### இறைவா, நன்மையே ஒழுக்கமாய் அமைந்திட அருள்க!

*இறைவா, எனக்கு எத்தனையோ ஆர்வ நிலைகள். ஆம், இறைவா! எல்லாம் நன்மையைச் சார்ந்த ஆர்வங்கள்தாம். ஆனாலும் அடைவு இல்லை, மகிழ்ச்சி இல்லை. ஏன் இறைவா?*

*நன்மையை எண்ணினால் போதுமா? எழுதினால் போதுமா? சொன்னால் போதுமா? நன்மை செயல்களாக, ஒழுக்கங்களாக மாறி வளர வேண்டும். அப்போதுதான் நன்மையால் பயன் உண்டு.*

*அலைகடல் போல் அலையும் மனத்தில்-உள்ளத்தில் நன்மை வேரூன்றி நிற்காதே! அலைக்கழிவு செய்யுமே! இந்த நிலைகளில் வெற்றி பெற வேண்டும்.*

*ஊன்றிய உணர்வு தேவை. ஒரு நெறிப்பட்ட செயல், நன்மையாகவே அமைந்த ஒழுக்கம்-இவையே வாழ்வின் ஆக்கம். இறைவா, இவற்றை எனக்கு அருள் செய்க!*

*தீமையை வெற்றி கொள்ள நன்மையாலேயே முடியும். எண்ணத்தில் நன்மை. சொல்லில் நன்மை. செயலில் நன்மை. நன்மையே ஒழுக்கம். ஒழுக்கமாய் அமைந்தது நன்மை. இறைவா, அருள் செய்க!*

*இறைவா, நன்மையே ஒழுக்கமாய் அமைந்திட அருள் செய்க!*

## அக்டோபர் 6

### இறைவா, என் பொதுத்தொண்டில் குறைகள் வாராது காத்தருள்க!

*இறைவா, நன்றுடையானே! தீயதில்லானே. நின் திருவடிகள் போற்றி! போற்றி!! நான் எத்தனையோ பணிகள் செய்கின்றேன், பலருடன் கூடிச் செய்கின்றேன். நான் செய்யும் பணிகளில் பொதுப் பணியும் இருக்கிறது.*

*இறைவா, நான் பொதுமக்களுக்காகத் தொண்டு செய்தாலும் பொது மக்கள் என் எஜமானர்கள். நான் என் பணியை அலட்சியமாகச் செய்யக்கூடாது. நிர்வாகக் குறையும் ஏற்பட்டு விடக்கூடாது.*

*பணியைக் கவனக்குறைவுடன் செய்யக் கூடாது. ஆம், இறைவா, இவையெல்லாம் உண்மைதான். அதுமட்டுமன்று. அறிந்த செய்திகளும் கூட. ஆயினும் இறைவா பல சமயங் களில் நான் என் பணிகளைச் சரியாகச் செய்வதில்லை. செய்ய முடிவதில்லை.*

*பணிகளைச் செய்ய முடிவதில்லை என்பதற்காக நான் வருந்துகிறேன்! வருந்தி என்ன பயன்? இறைவா, முதலில் குற்றத்தை ஒப்புக் கொள்ள வேண்டும்.*

*நான் என் குற்றத்தை எளிதில் ஒத்துக் கொள்வதில்லை. இனி நான் என் குற்றத்தை ஒப்புக் கொள்கிறேன். நான் என்னைத் திருத்திக்கொள்ளவும் முயற்சி செய்கிறேன். இல்லை, இல்லை. என்னைத் திருத்திக் கொள்கிறேன்.*

*என் குற்றத்தை, நான் ஒப்புக் கொள்ளும் துணிவைத் தந்தருள் செய்க. திருந்திய வாழ்வையும் ஏற்றுக் கொள்ள அருள் செய்க! இறைவா, என்னை ஏற்றருள் செய்க! என் பொதுத் தொண்டில் குறைகள் வாராது காத்தருள் செய்க! காலந் தாழ்த்தாமல் அருள் செய்க!*

## அக்டோபர் 7

### இறைவா, காரியங்களில் முறைப்பாடுகள் அமையும்படி அருள்க!

*இறைவா, குறைவிலா நிறைவே! கோதிலா அமுதே! நின்னருள் போற்றி! போற்றி!! இறைவா, நின் இயல்பில், நின் தொழிலில் சிறப்பான முறைப்பாடுகள் அமைந்துள்ளன.*

*இறைவா, நின் அமைவு பொருந்திய முறைப்பாடுகள் வியப்பிற்குரியன! ஆனால், நின் தொழிலில் அமைந்துள்ள முறைப்பாடுகளை அனுபவிக்கும் நான், என்வாழ்க்கையில் முறைப்பாடுகளை ஏற்றுக் கொள்ள முயற்சி செய்வதில்லை.*

*முறைப்பாடுகள் இல்லையானால் முன்னேற்றம் ஏது? இறைவா, நான் செய்யவேண்டிய பணி எது? அந்தப் பணியின் பல்வேறு கூறுகள் என்ன? அந்தப்பணி நடைபெற வேண்டிய பல்வேறு காலக் கட்டங்கள் என்ன?*

*பணிகளைத் தொகுத்தும் வகுத்தும் முறைப்படுத்திக் கொண்டால் நான் ஏராளமான பணிகளைச் செய்ய இயலும். காலத்திலும் செய்யக்கூடும். யாதொரு இழப்பும் வராமல் செய்யக்கூடும். அப்படியா இறைவா?*

*என் பணிகள் முறைப்படுத்தப்பட்டு விட்டால் பணிகளில் அளவுகூடக் குறையும். என் ஆற்றல் மிஞ்சும். உழைப்பும் குறையும். அதே போழ்து நிறைவு பலவும் கிடைக்கும். இறைவா, நன்றருளிச் செய்தனை!*

*என் பணிகளில் முறைப் பாட்டினை ஏற்றுக் கொள்ள அருள் செய்க! என் வாழ்க்கையில் அமையும் முறைப் பாடுளே என் வெற்றியை நிர்ணயிக்கின்றன. இறைவா, அருள் செய்க!*

*இறைவா, நான் மேற்கொள்ளும் சிறிய, பெரிய காரியங் களில் முறைப்பாடுகள் அமையும்படி அருள் செய்க!*

## அக்டோபர் 8

### இறைவா, உன்னை நினைந்து வாழ்வது என் கடன்!

*இறைவா, நேற்று இரவு உறக்கமே இல்லை. இறைவா! உடலில் குறையில்லை! கன்றை, தாய்ப்பசுவிடமிருந்து பிரித்துக் கட்டி விட்டார்கள். கன்று தாயை நினைந்து கத்தியது. இறைவா, ஆறறிவு இல்லாத உயிரால் தாயின் பிரிவைத் தாங்க இயலவில்லை. ஆதலால் அது கத்துகிறது!*

*இறைவா, நீ எனக்குத் தாய்! இல்லை, இறைவா! தாயினும் சிறந்த தாய். என் பிறவி கெட நீ உருக்கொண்டாய்! இறைவா, நான் ஆணவத்தில் கிடந்த போது- அறியாமையில் ஆழ்ந்து கிடந்த போது என் இரங்கத்தக்க நிலையினை எண்ணி உடல் கொடுத்தாய்.*

*உடலும் உள்ளமும் தந்து பொன்னோடும் பொரு ளோடும் புணர்த்தினாய்! இதற்கு ஏது கைமாறு! ஆனால், நின்னைப் பிரிந்து வாழ்கின்றேன்! இல்லை இறைவா, மறந்து வாழ்கின்றேன்!*

*உன்னை நினைப்பது - உன்னை நினைந்து, நினைந்து உணர்ந்து உணர்ந்து வாழ்வது என் கடன். என் பணி. இறைவா, என்னை மன்னித்துக் கொள். நினைக்கிறேன். நினையாது ஒருபோதும் இருந்தறியேன். இறைவா, மன்னித்து அருள்க!*

*இறைவா, உன்னை நினைந்து வாழ்ந்திட அருள் செய்க!*

# அக்டோபர் 9

## என் இதயத்தை உன் கோயிலாக்குகிறேன்! இறைவா, அருள் செய்க!

*இறைவா, இந்த மனிதன் உனக்கு எத்தனை கோயில் களைக் கட்டியிருக்கிறான்! எத்தனை "கும்பாபிஷேகங்களை" நடத்தியிருக்கிறான்! எத்தனை கோடி மந்திரங்களை ஜெபித் திருக்கிறான்! ஏன் இறைவா, இன்னும் மக்களைச் சுற்றித் துன்பங்கள்?*

*மனிதன் செய்யும் செயலெல்லாம் மனிதனின் புகழ் வேட்டைக்கும் பொருள்வேட்டைக்கும்தான் பயன்படு கின்றனவா? இறைவா, அப்படியானால் நீ கோயிலில் எழுந் தருளவில்லையா?*

*"சாதிப் பிரிவுகளின் ஆணவம், பண வியாபாரம், ஏழை மக்களைச் சுரண்டிக் கொழுக்கும் முதலாளியின் கொலு விருக்கை, பெருமை-சிறுமைப் போராட்டங்கள் முதலியன கோயிலை ஆட்சி செய்யும் வரை அங்கு எனக்கு என்ன வேலை" என்றா கூறுகிறாய்? இறைவா, மன்னித்து விடு. என் இதயத்தை உன் கோயிலாக்குகிறேன்!*

*அன்பால் என் இதயத்தை மெழுகி நீ எழுந்தருளும் திருக்கோயிலாக்குகிறேன்! தொண்டால் நின்னை வழிபடு கின்றேன்! உயிர்க்குலத்தின் மகிழ்வை உனக்கு நிவேதன மாகப் படைக்கின்றேன்.*

*இறைவா, நின்னைக் காட்டும் மந்திரம் அன்பு! இறைவா, நின்னை அடையும் வழி, தொண்டு! இறைவா, நின்னை அனுபவிக்கும் முறை அர்ப்பணிப்புணர்வுடன் செய்யும் பணி. தெளிவு பிறந்தது. இந்த வாழ்க்கைக்கு என்னை ஆளாக்கு.*

*நான் நின் நெறிவழி நிற்பேன். அறியாமையாலும் பழக்க வாசனையாலும் தவறுகள் செய்தால் என்னை அடித்துத் திருத்து. மறந்து விடாதே! இறைவா, பிரிந்து விடாதே! உன் பிரிவு எனக்குத் தாங்கொணாத் துயரம் தரும். இறைவா, என் இதயம் உன் கோயிலாக அருள் செய்க!*

## அக்டோபர் 10

### இறைவா! பாராட்டில் மயங்காத பண்பாட்டைத் தா!

*இறைவா, ஆயிரம் தடவை எண்ணுகிறேன், நல்லன பற்றி! ஆனால், ஒரு தடவை கூட வாழ முயலுகின்றேன் இல்லையே! இறைவா, ஏன் இந்தத் தீயூழ்? உனக்கு இரக்க மில்லையா? என்னைத் திருத்தக் கூடாதா?*

*பொல்லாத தன்னல நயப்பிலிருந்து விடுதலை பெறாத வரையில் நல்லவனாகவாழ இயலாதா, இறைவா. நானும் தன்னல நயப்பிலிருந்து முற்றாக விடுதலை பெறவே விரும்புகிறேன்! அதற்காகவே பேசுகிறேன். எழுதுகிறேன். கூட்டுறவாளனாகத் தொண்டு செய்கிறேன். இறைவா, என்ன சொல்கிறாய்?*

*நான் இவ்வளவு பணி செய்தும், பாராட்டில் மயங்குவதும், பெருமைபடப் பேசப்படுவதைக் கேட்பதிலும் இச்சை இருக்கிறதே!*

*இறைவா, இந்த இச்சைகளிலும் எனக்குப் பெரு விருப்பம் இல்லையே! விருப்பத்தில் பெருவிருப்பம் என்ன? சிறு விருப்பம் என்ன? கூரையில் பெரு நெருப்பு விழுந்தால் தான் தீப்பிடிக்குமா? சிறு நெருப்பு விழுந்தால் தீப்பிடிக் காதா? கவனத்தில் கொண்டேன்.*

*என்னைப் பாராட்டுபவர்கள் பக்கம் மறந்தும் சார்ந்து இருக்க மாட்டேன். ஆம், இறைவா, எனக்கு வேண்டிய வர்கள், உதவி செய்பவர்கள்,-பாராட்டுபவர்கள் அல்லர்.*

*உடனிருந்து உழைப்பவர்களே! உதவி செய்பவர்கள். இத்தகையோரைத் தோழமையாகக் கொள்வேன். கிடைக் காதுபோனால் தன்னந்தனியனாக உழைக்கும் உறுதியைத் தா! சோர்ந்தால் நீ தெம்பு கொடு. ஆற்றுப்படுத்து! இறைவா, அருள் செய்க!*

## அக்டோபர் 11

### இறைவா, என் வாழ்க்கையில் மனித நேயத்தை அருள்க!

*இறைவா, வள்ளற்பெருமான், ஒருமையுடன் நினது திருவடி நினைக்கும் வரம் வேண்டினார். இறைவா, ஒருமை உணர்வு எளிதில் வர மறுக்கிறதே. ஆம், இறைவா! பொறி களின் அராஜகம் ஒரு புறம். புலன்களின் சேட்டை ஒரு புறம்.*

*"நான்", "எனது" என்று நஞ்சேறிய நாணயமற்ற செயல்கள், ஆணவத்தின் அட்டகாசம், மொழி, இனம், மதம் என்பவற்றின் பெயரால் வளரும் பகைகள், இத்தனையும் என்னை நிலைகுலையச் செய்கின்றன.*

*இறைவா, ஒருமை உணர்வு அரும்பவில்லை. அரும்ப மறுக்கிறது. ஒருமைப் பாட்டுணர்வினைத் தந்து ஆட்கொள். ஆம், இறைவா, நீ சொல்வது முற்றிலும் உண்மைதான். வேற்றுமையில் ஒற்றுமை காணும் உயர் பண்பாடு தோல்வி கண்டுள்ளது - ஏன், இறைவா?*

*ஒருமைப்பாட்டின் ஆதாரசுருதி மனிதநேயம்தான். எல்லாரையும் மனிதர்களாக மதிப்பதுதான். மனிதர்களிடம் அன்பு காட்டுவதுதான். "உன்னைப் போல் பிறரை நினை." இறைவா, நல்லமந்திரம் கற்றுக் கொடுத்துள்ளனை!*

*இனி, என் வாழ்க்கையின் ஆதார சுருதி மனித நேய மாகத்தான் இருக்கும். புற நிலையில் ஒருமை நிலை கண்டு விட்டால் அகநிலை ஒருமை தானே வந்தமையும். ஆம் இறைவா, என் வாழ்க்கையில் மனித நேயத்தை அருள் செய்க!*

## அக்டோபர் 12

## இறைவா, அழுக்காறு அகல அருள் நயக்கும் வாழ்வினை அருள் செய்க!

இறைவா, உயர் மலைகளில் எழுந்தருளியுள்ள இறைவா! படிகளைக் கடந்து நின் சந்நிதிநோக்கி ஏறி வரும்பொழுது கால் கடுக்கிறது. ஆனாலும் ஏறியபிறகு உன் அழகிய திருக்கோயிலில், நீ வழங்கும் அருள், உடல் நலம், உயிர் நலம், உணர்வு நலம் அனைத்தும் கிடைக்கின்றன.

வாழ்க்கை, பள்ளத்தில் கிடக்கிறது. குணம் என்னும் குன்று ஏற வேண்டும். அழுக்காறு, அவா, வெகுளி என்னும் பள்ளங்கள், பொச்சாப்பு, பொய்ம்மை, அறியாமை ஆகிய பள்ளங்கள், வறுமை எனும் படுகுழி ஆகியவைகளிலிருந்து கரையேறிக் குணம் என்னும் குன்றேறுதல் வேண்டும்.

உடல்வருந்த உழைத்தல், பிறர் மகிழத் தாம் மகிழ்தல் என்ற நெறிகள் வழி அழுக்காற்றினைக் கடக்கலாம். பிறர் வாழ்க்கையைக் கண்டு தன் தகுதிக்குமேல் அவாவுறுதலைத் தவிர்த்தல் மூலம் அவாவினைக் கடக்கலாம்.

அவா- அழுக்காற்றினைக் கடந்தாலே வெகுளி, இன்னாச் சொல்லினைக் கடக்கலாம். நல்லன நினைந்து பழகு தல் மூலம் பொச்சாப்பினைக் கடக்கலாம். யாருக்கும் தீங்கு செய்யாதிருத்தல் என்ற நெறி வழி பொய்ம்மையைக் கடக் கலாம்.

கல்வி- அனுபவங்கள் மூலம் அறியாமையைக் கடக் கலாம். பொருளினைச் செய்தல் மூலமும் வரவுக்கு மேல் செலவைத் தவிர்ப்பதன் மூலமும் வறுமையைத் தவிர்க்கலாம்.

இறைவா, அழுக்காறு முதலியன அகல, அருள் நயக்கும் வாழ்வினை அருள் செய்! வாய்மை தவறா வாழ்க் கையை அருள் பாலித்திடுக! வறுமையால் சிறுமை தப்பி வளமாக வாழ்ந்திடத் திருவுளம் பற்றுக. குணமென்னும் குன்றேறி நின்று நின் திருவடிக்குத் தொழும்பாய் ஆட் செய்யும் பேற்றினை அருள் செய்க!

# அக்டோபர் 13

## உழைப்பு ஒரு வேள்வி! இதை முழுமனத்துடன் இயற்றிட அருள் செய்க!

*இறைவா, என்னை இந்த உலகக் கவர்ச்சிகளிலிருந்து காப்பாற்று! தூண்டில்வாய்ப் புழுப்போல நான் இருக்கின்றேன். எனக்குச் சில சுவைகளைக் காட்டுகின்றனர். சில சலுகைகளைக் கூடத் தருகின்றனர். ஆனால், இவற்றால் என்ன பயன்? இறைவா, நான் வாழ வேண்டும். "பிழைக்க" விரும்பவில்லை.*

*வாழ்வாங்கு வாழ வேண்டும். ஆம் இறைவா. தெளிந்த அறிவு, அசைவிலா உறுதி, பழுதிலா உழைப்பு, பழியிலா ஆக்கம், ஊரவருடன் ஒப்புரவு - இவையே என்னை வாழ்விக்கும். இவைகளை அருள் செய்க.*

*இன்று அறிவில் நிறைய குழப்பம். நன்றும் தீதும் எளிதில் துணிய முடியாத அளவுக்குப் பொய்ம்மைகளிடையில் வாய்மை. உழைப்பு, பழுதிலா உழைப்பு. உழைப்பு ஒரு வேள்வி. இதை - முழுமனத்துடன் இயற்றுதல் வேண்டும்.*

*ஆக்கம், செல்வம் தேவை. நிறையத் தேவை! ஆனால், பிறர் உழைப்பைச் சுரண்டிவரும் செல்வம் வேண்டாம். பழிகளைச் சுமந்துவரும் செல்வம் வேண்டாம். அன்பு, நாண், ஒப்புரவு ஆகிய வண்டிகளில் வரும் செல்வமே வேண்டும்.*

*இறைவா, ஊரவர்களுடன் கூடி வாழ்தல் வேண்டும். கொண்டும் - கொடுத்தும் வாழ்தல் வேண்டும். இறைவா, அருள் செய்க! வாழ்வாங்கு வாழ அருள் செய்க!*

## அக்டோபர் 14

### இறைவா, பொறிகளின் மீது தனியரசாணை புரிந்திட அருள்க!

இறைவா! "தண்ணீர் அண்டாவில் விழுந்த தவளை போலத் தவிக்கும்" என்னைக் கரையேற்றக் கூடாதா? தவளைக்குத் தண்ணீர் தேவைதான். ஆனால், தண்ணீருக் குள்ளேயே எப்போதும் கிடக்க முடியாதே.

தண்ணீர் ஆசையினால் தவளை அண்டாவினுள் விழுந்து விட்டது. தண்ணீர், அண்டாவில் அடிமட்டத்தில் கிடக்கிறது. அதனால் தவளையால் தாவி வெளியேற முடியவில்லை. ஏறி னால் வழுக்குகிறது. ஐயோ பாவம்! நான் துய்க்கலாம்- உய்யலாம் என்ற பெருவேட்கையின் காரண மாகவே வீழ்ந்தேன்.

ஆனால், நான் வீழ்ந்த சமூகம் வளர்ச்சியில்லாத சமூகம். பிரிவினைகளாலும் அழுக்காறு வயப்பட்ட போட்டி களாலும் அலமந்து அழிந்து கொண்டிருக்கும் சமுதாயம். என் தகுதியோ எவற்றிலும் நிறைவில்லாதது! அரைகுறை.

தாவி வளர்ந்து உய்யுமாறு அறியேன். நான் தொடங் கும் முயற்சிகளில் எல்லாம் வழுக்கி வீழ்கிறேன். தவளைக்கு நான்கு கால்கள் இருந்தும் ஏறமுடியவில்லை! எனக்கு மூன்று கால்கள் முழுதாகக் கிடைத்தால் போதும். அறம், பொருள், இன்பம் என்ற கால்களில்தானே, நான் நிற்க வேண்டும்.

அறம், உழைத்து வாழ்தல், வாழ்வித்து வாழ்தல். பொருள், துய்த்தல், பொறிகளார, புலன்களாரத் துய்த்தல். இதில் பொறி களும் புலன்களும் செய்யும் சேட்டைகள் தாங்கொணாதவை.

இன்பம் - உள்ளவாறு அனுபவத்தில் இல்லை. எதை எதையோ இன்பம் என்று மயங்கித் துய்க்கிறேன். அந்த இன்பங்களே எனக்குத் துன்பமாய்ப் பின் அமைவதையும் கண்டிருக்கிறேன்.

இறைவா, எனக்கு உண்மையான அன்பு தேவை. தண்ணீர் அண்டாவுள் வீழ்ந்த தவளையானேன். உழைத்து வாழ்வித்து வாழும் வாழ்வினைத்தா! தேவையான பொருள் களை வழங்கு. என் பொறிகளின் மீது தனியரசு செலுத்தும் உரத்தினைத் தா! துன்பமில்லா இன்பத்தினை அருள் செய்க!

## அக்டோபர் 15

### முறைப்படுத்திச் செய்தால் எல்லாப் பணிகளும் செய்யலாம்! இறைவா, அருள் செய்க!

*இறைவா! குலச்சிறையார் போற்றி வணங்கிய இறைவா! இன்று நீ எனக்கு இடும் பணி யாது? இன்றைய சமூக அமைப்பு நான்குபுறமும் கலகலத்து வருகிறது. நோக்குந் திசைதோறும் அமைதி இல்லை.*

*நான், நான்கு திசையிலும் ஓடி அலைகிறேன். எல்லாம் அவசியம் போலத் தெரிகிறது. ஆனால், ஒன்றையும் உருப்படியாகச் செய்ய முடிவதில்லை. நின்னருளிச் செயலில் யாதொரு குறையுமில்லை. என் முயற்சியிலும் குறையில்லை.*

*இப் பிறப்பில் யானறிந்து பணி செய்யாத நாள் இல்லை. ஆயினும், சமூகம் எழுந்திருக்க முடியாத அளவுக்குப் பிரிவினை வாதம் பிடித்தும், ஆணவம் பிடித்தும், படுத்துக் கிடக்கிறது.*

*நின் சந்நிதியில் தொழும்பாய்க் கிடந்து தொண்டு செய்ய வேண்டும். இது என் ஆசை. நின்னருட் பேற்றிற்குரிய மக்களுக்குப் பணி செய்ய வேண்டும். படிக்க வேண்டும். எழுத வேண்டும். இத்தனை ஆசைகள் இறைவா, நான் என்ன செய்ய?*

*நீ பணித்திடும் பணியைச் செய்ய மனம் ஒருமைப் படு கிறது. அனைத்துப் பணிகளும் தேவைதானா? முறைப்படுத்திச் செய்தால் எல்லாம் செய்யலாம் என்பது நின் அருட்பாலிப்பு.*

*குலச்சிறையார் அமைச்சுப் பொறுப்பிலும் இருந்தார். நின்றசீர் நெடுமாறனின் நம்பிக்கைக்கு உரியவராகவும் இருந்தார். மங்கையர்க்கரசியாரின் குறிக்கோளையும் அடை வித்தார். தமிழ் வழக்கு அயல்வழக்கினை வெற்றிபெறத் தொண்டு செய்தார்.*

*இறைவா, குலச்சிறையார், மங்கையர்க்கரசியார் போல, நானும் உனக்குப் பணி செய்ய மனமிருக்கிறது. ஆனாலும், நின்னருள் துணை தேவை. எடுக்கும் காரியம் யாவினும் வெற்றி பெறத் தொடர்ந்தருள் செய்க! சிந்தையில் தெளிவாக நின்றருள் செய்க!*

கு.X.20.

## அக்டோபர் 16

### தாயிற்சிறந்த தயாபரனே, அருள் செய்க!

*இறைவா, நீ ஆணுமல்லன்! பெண்ணுமல்லன்! அலியும் அல்ல. இவைகளைக் கடந்த பேராற்றல் நீ! நின்னை தாய் என்றே நாங்கள் பாராட்டுகின்றோம் ஆம், இறைவா! தந்தை நிலை பெரியதுதான்!*

*ஆனால், தாயிடம் அனுபவிக்கும் அன்பு-பரிவு தந்தையிடம் இல்லை! ஏன், பொறுப்புகூட இல்லை. தாய்தான் சுமந்து, நொந்து பெற்று வளர்க்கிறாள்! இறைவா! நான் குழந்தையாக இருக்கும் பொழுது என் தாயே எனக்காக மருந்துண்டாள்! பத்தியம் இருந்தாள்! நீயும் அப்படித்தான்!*

*எங்கள் பிறவிகெட, நீ மண் மேல் தோன்றினாயே. நின் தயவு தாயினும் சிறந்த தயவு! எனக்கு உடல் தந்து துய்க்கச் செய்தனை. பொன்னும் பொருளும், போகமும் தந்தருளினை! துய்க்கும் பொருள்களை எல்லாம் வழங்கியுள்ளனை!*

*உய்யும் நெறியெல்லாம் உய்த்துணரச் செய்தனை! ஒரோவழி என் மீதுள்ள பாசத்தால் கட்டுண்டு துரிசுகளுக்கும் கூட உடந்தையாக இருந்தனை! நின் கருணை அளப்பரிது! என்னைத் தொடர்ந்து வந்து வளர்க்கும் நின்னருளுக்கு கைம்மாறு ஏது?*

*இறைவா, தாயிற் சிறந்த தயவுடைய தயாபரனே, அருள் செய்க! வற்றாத அன்பு ஊற்றினை அருள் செய்க! கோடி கோடியாகப் பொருள்களை வழங்கு!*

*இறைவா, தளர்வறியாத மனத்தினைத் தா. நெஞ்சில் வஞ்சமில்லா இனம் தா. என்னை மன்னித்தருள். எனக்கு வேண்டுவன எவை என்று உனக்குத் தெரியாதா? எனக்கு வேண்டியதை அருள் செய்க, இறைவா!*

# அக்டோபர் 17

## இறைவா, திருவாசகம் ஓதி நின் திருவருள்பெற அருள்க!

*இறைவா! பண் சுமந்த பாடலுக்காகப் புண் சுமந்த புண்ணியனே! ஏழை வந்திக்கு, உண்ணும் பிட்டுக்காகக் கொற்றாளாக வந்த கோவே! மாணிக்கவாசகருக்காக குதிரைச் சேவகனாய் வந்த வள்ளலே!*

*அருமையில் எளிய நின் திருவிளையாட்டு நெஞ்சை உருக்குகிறது; நெகிழ்வினைத் தருகிறது! இறைவா, இன்று ஏன் எனக்காக இந்தத் திருவிளையாட்டைச் செய்யக் கூடாது? மாணிக்கவாசகர் பாடியதுபோல ஊனெலாம் நின்றுருகப் பாட எனக்குத் தெரியாது.*

*"உன் கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்" என்று சொல்லத் தெரியவில்லை. ஆயினும் இறைவா! ஏழைப் பங்காளா. என்னைக் கைவிடலாகாது. என்னைக் காப்பாற்று.*

*என்னை ஆட்கொள்ள நீ குதிரைச் சேவகனாக வரவேண்டியதில்லை. புண்ணும் சுமக்க வேண்டியதில்லை. இறைவா, நீ அன்று பெற்ற பரிசு–பண் சுமந்த பாடல்–திருவாசகம் என் கைவசம் இருக்கிறது. திருவாசகம் ஓதும் நினைவினைத் தந்தருள் செய்க! நான் கலந்து பாட அருள் செய்க!*

*திருவாசகத்தில் நின்றுருகச் செய்யும் அருட் பேற்றினை வழங்குக! திருவாசகம் ஓதி, ஓதி அதன் பயனாக நின்னை என் உடலிடத்தில் பெறுவேன். இதற்கு மேல் யாது வேண்டும்.*

*"வேண்டத்தக்கது அறிவோய் நீ! வேண்டமுழுதும் தருவோய் நீ!" இறைவா, திருவாசகத்தை நினைந்து நினைந்து அன்பில் நனைந்து நனைந்து ஓத அருள் செய்க!*

## அக்டோபர் 18

### ஆசைகளற்ற வாழ்க்கையை இறைவா, அருள் செய்க!

*இறைவா, உடல் அரிப்புப் போன்றது அவா! ஆசை! அரிப்புக்குச் சொறிந்தால் முதலில் இதம்! அரிப்பு நிற்குமா? நிற்காது. தொடர்ந்து சொறிந்தால் புண்! ஆம், இறைவா! அதுபோல ஆசையை நிறைவேற்ற முயன்றால் ஆசை வளரும்!*

*மேலும் மேலும் வளரும், வெள்ளம் போல் புதிய புதிய ஆசைகள்! இந்த ஆசைகளை நிறைவேற்ற முயன்றால் உடல் வருத்தம்! அவமானம்! துன்பம்! இப்படித்தான் போகும்!*

*இறைவா, ஆசைகள் இல்லாத அருள் வாழ்வை உன்னிடம் யாசிக்கின்றேன். என்னுடைய நல் வாழ்க்கைக்குப் பகையாகிய ஆசை வேண்டாம். சின்னதில் கூட ஆசை வேண்டாம். வேண்டவே வேண்டாம்.*

*துரும்பைக் கூட நான் ஆசைப்பட்டு அடையக் கூடாது. இறைவா! ஏன் உன்னிடத்திற்கூட எனக்கு ஆசை கூடாது. ஆம், இறைவா! ஆசையற்ற வாழ்வைக் கொடு.*

*அன்பு செய்ய ஆசைப்படுகிறேன்! நினக்கு ஆட்செய்ய ஆசைப்படுகிறேன்! ஆசையை ஒழிக்க வேறொரு ஆசை தேவைப்படுகிறது. ஆனால், அவல ஆசைகள் வேண்டாம். இறைவா, அருள் செய்க!*

*ஆசைகளற்ற அருள் வாழ்க்கையை, பாசங்கள் நீங்கிய புகழ் வாழ்க்கையை, அன்பே நிறைந்து வழியும் புண்ணிய வாழ்க்கையை அருள் செய்க! இறைவா, அருள் செய்க!*

## அக்டோபர் 19

### ஞானம் வழங்கிய வள்ளலே! வாழ்க, நின் கருணை!

*இறைவா, குருவாக எழுந்தருளிக் காட்டாமற் காட்டியும், சொல்லாமற் சொல்லியும் ஆட்கொண்டருளும் இறைவா! நின் கருணையை எங்ஙனம் வாழ்த்துவேன்.*

*இறைவா, ஆலமர் செல்வா! தெய்வ சிகாமணித் தேவனாய் எழுந்தருளிய என் ஞானமுதலே! "நான் யார்" என்றுணர்த்திய நாயகமே!*

*எனது உள்ளம் எத்தகையது? யாருக்கு, எதற்கு உரிமைப்படுத்தப் பெற்றுள்ளது? என்று உணர்த்தி-முன்னைச் சார்பு விட்டகன்று நின் திருவடியே சார்பு என்று அடைக்கல மாகி நிற்கும் எளியேனை-ஒரு சொல்லில் ஆட்கொள்!*

*ஞானம், எதுவென அறியாது கிடந்த என்னை, எடுத் தாண்டு ஞானத்தினை வழங்கும் ஞானத்தின் திருவுருவே! நின் கருணைக்கு ஏது கைம்மாறு?*

*இறைவா, 'நான்' அறிந்தேன், 'நான்' கெட ஒழுகுவேன். இனி என் உள்ளம் உன் வசமே. என் வசமன்று. ஞானம் - திருவடி ஞானம்! நன்றே செய்யும் ஞானத்தினை வழங்குக. இன்ப அன்பினை வழங்கும் ஞானத்தினை அருள் செய்க!*

*"நான்" அறியச் செய்த குருவே போற்றி! உள்ளங்கவர் தலைவா, போற்றி! ஞானத்தின் தலைவனே! எளியேனுக்கு ஞானம் வழங்கிய வள்ளலே! வாழ்க. நின் கருணை! போற்றி, போற்றி!*

## அக்டோபர் 20

### இறைவா, உடலைப் போற்றுதல் என் கடமை என்ற அறிவினைத் தந்தருள்க!

இறைவா, மூலநோய் தீர்க்கும் முதல்வா! மருந்தீசன், வைத்தியநாதன் என்றெல்லாம் திருநாமம் கொண்ட இறைவா! நோயற்ற உடல் தந்தருள் செய்க!

உடல் ஒரு உழைப்புக் கருவி! நுகர்வுக் கருவி! எனது உயிரின் வளர்ச்சிக்கு உற்ற துணையாய் அமைந்த கருவி. இந்த உடல் வாழ்க்கை, பூரணமாய்ப் பயன் பெற வேண்டும்! இறைவா, கழிபிணியில்லா யாக்கையை அருள் செய்க!

இறைவா, நோயில்லாமல் வாழ்ந்தால் மட்டும் போதாது. எப்போதும் என் உடல், உழைப்பிற்கு ஆயத்தமாய் இருத்தல் வேண்டும். எனது பொறிகள் எப்போதும் விழிப்பு நிலையில் இருந்து உயிருக்கு ஆக்கம் சேர்க்க வேண்டும்.

இறைவா, உடலை நோயணுகாது தடுத்தருள் செய்ய வேண்டும். இறைவா, அருள் பாலித்திடு! நல்லுடல் நயந்தருள் செய்க! எப்போதும் விழிப்பு நிலையில் உள்ள உடலினை அருள் செய்க!

ஓயாது உழைத்திடும் வலிமையை உடலினுக்கு அருள் செய்க! உழைத்தல் தவம்! உழைத்தல் நோயணுகாப் பாது காப்பு நெறி!

உடல், நீ எழுந்தருளும் திருக்கோயில்! உடலைப் போற்றுதல் என் கடமை என்ற அறிவைக் கொடு.

இறைவா, நோயணுகா வாழ்க்கை முறையில் என்னைப் பழக்கு. என் ஆக்கமும் அழிவும் உடல் நலத்தில் இருக்கிறது இறைவா, உடலைப் போற்றும் அறிவினைத் தந்தருள் செய்க!

## அக்டோபர் 21

### இறைவா, உழைத்தலே தவமாகும் உத்தம வாழ்வினை அருள்க!

*இறைவா, பல்லூழிக்காலமாக ஐந்தொழில் இயற்றிடும் தலைவா! நாளும் ஓயாது உழைத்திட வேண்டும். படைப் பாற்றல் மிக்க தொழில் செய்யவேண்டும். இறைவா, அருள் செய்க!*

*இறைவா, எப்போதும் உழைப்பிற்குரிய விழிப்பு நிலையில் வாழ்ந்திடுதல் வேண்டும்! உழைப்பிற்குரிய ஆயத்த நிலையில் வாழ்தலே வெற்றிகளைக் குவிக்கும்! ஊக்கம் உடையோனாக வாழ்ந்தாலே போதும். எல்லாப் பொருள் களையும் நுகரலாம்!*

*உழைப்பில்–பணியில் வேற்றுமை பாராட்டாமல் உழைக்கும் உளப்பாங்கு தேவை! உடலுழைப்பே உயர் வுடையது என்றருள் செய்யும் இறைவா. உழத்தல் போன்று உழைத்தலே உழைப்பு.*

*கழனியில் சேறு ஆவதற்கு மாடு திரும்பத் திரும்ப உழைத்தலைப் போல உழைத்திடும் மனப்பாங்கினை அருள் செய்! இறைவா, உழைத்து உண்ணும் ஒழுக்கத்தினை அருள் செய்க!*

*உளமார உழைத்தலே யோகமாகும். உடல் வருந்த உழைத்தலே தவமாகும்! உழைப்பில் மகிழும் வாழ்க்கையைத் தா!*

*இறைவா, காலங்காட்டும் கடிகாரத்தைப் போலச் சுழன்று சுழன்று சுறுசுறுப்பாக உழைக்கும் வரத்தினைத் தந்திடுக. உழைப்பால் மண்ணகத்தை விண்ணகமாக்கிடும் ஆற்றலைத் தந்தருள் செய்க!*

# அக்டோபர் 22

## சொல்லும் சொல்லில் அன்பு விளைய, இன்பம் நிறைய அருள் செய்க!

இறைவா, பேச்சிறந்த பூரணமே! சொல்லாமற் சொல்லும் இறைவா! சொல்லும் சொல்லில் சிக்கனம் தேவை!

சொல்லும் சொல், அன்பில் நனைந்திருக்க வேண்டும். சொல்லும் சொல் பயனுடையதாக அமைதல் வேண்டும். இறைவா, சொல்லப் பெறும் சொற்களுக்கு இவ்வளவு இலக்கணம் உண்டு.

சொல் இலக்கணம் அறிந்து சொல்லும் - பேசும் அறிவினைத் தந்தருள் செய்! பொய்ம்மை பேசாதிருக்க வேண்டும். வாய்மை வழாது பேச வேண்டும். தீமை பயக்கும் சொற்களைச் சொல்லவே கூடாது.

நன்மை பயக்கும் சொற்களையே சொல்ல வேண்டும். அன்பை விளைவிக்கும் சொற்களையே பேச வேண்டும். அறிவினை வழங்கக்கூடிய சொற்களையே கூறவேண்டும். பயன் மிகுதியும் விளையும் இனிய சொற்களைக் கூற வேண்டும். இறைவா, அருள் செய்க!

சொல்லும் சொற்களை எண்ணிப் பார்த்து தந்திட வேண்டும். இன்ப அன்பினை வழங்குதல் வேண்டும். அறம் விளைக்கும் சொற்களைச் சொல்லக் கற்றுத் தா!

இறைவா, சில சொல்லிப் பல கேட்கக் காமுறும் பாங்கைத் தந்தருள் செய்க! சொல்லும் சொல்லில் அன்பு விளைய, இன்பம் நிறைய அருள் செய்க!

## அக்டோபர் 23

### தாயாக வந்திருந்து என்னை வளர்த்திடு தயாபரனே!

*இறைவா! பெண்ணின் நல்லாளொடு வீற்றிருக்கும் பெருந்தகையே! தாயாக இருந்து வளர்க்கும் தயாபரனே! ஆம், என்னை வளர்க்க ஒரு தாய் தேவை! என் உடலினை வளர்க்க, என் உயிரினை வளர்க்க, என் உணர்வினை வளர்க்க ஒரு தாய் தேவை. ஆம் இறைவா, திருத்தமுற வளர்க்க ஒரு தாய் தேவை!*

*தாய்க்கே, என்மீது தணியாத அன்பு. குறிக்கோளற்ற அன்பு! என் தகுதிகளைக் கடந்த அன்பினைத் தாய்தான் பொழிவாள். இறைவா, தாயன்பு இணையிலாதது! என் தாயை எனக்குத் தா!*

*என் வாழ்வினின்றும் என் தாயைப் பிரிக்காதே! என் பசியை நினைந்து சோறூட்டுவாள். நோய் வராமல் பாது காப்பாள். அணைத்து அமுதூட்டுவாள். அடித்துத் திருத்து வாள்.*

*இறைவா, எனக்குத் தாய் தேவை. எப்போதும் தேவை. என் தாயை எனக்கு அருள் செய்! இல்லையேல் இறைவா, நீயே தாயாக வந்தருள் செய்!*

*இறைவா, தாயுமானவன் தானே நீ! அன்று தாயான உனக்கு இன்று தாயாக வந்தருள் செய்வது அரிதா? இன்றும் தாயாக வந்திருந்து என்னை வளர்த்திடு! வாழ்வித்திடு! இற்றைக்கும் ஏழேழ் பிறப்புக்கும் உனக்காட்செய்வேன்! அருள் செய்க!*

## அக்டோபர் 24

### இறைவா, என் கால்கள் சிறந்திட அருள் செய்க!

இறைவா, நின்னையடைதலே திருவடிப்பேறு என்கின்றனர்! நின் திருவடிகள் - தாள்கள் தாங்குந்தகையன! இறைவா, எனது கால்களுக்கு வலிமையைக் கொடு. உழைக்கும் பண்பைக் கொடு.

உற்பத்திப் பணிகளைச் சிறப்புடன் செய்து, வழி வழி வரலாற்றுக்குக் கால் கொடுத்து நிறுத்தும் பெற்றிமையை என் கால்களுக்குக் கொடு.

நடை என்றால் காலால் நடப்பது மட்டுமன்று. அது நல்லொழுக்கத்தையும் குறிக்கும். ஆம்! என் கால்களின் வலிமையில் - உழைப்பில்தான் ஒழுக்கம் கால் கொள்கின்றது.

இறைவா, என் கால்கள் எனது நல்லொழுக்கத்திற்குத் துணையாக அமைந்த கால்களாக விளங்க அருள் செய்க!

என் கால்கள் நாடெல்லாம் நடந்து வந்து நல்லன அறிய அருள் செய்க!

இறைவா, என் கால்கள் வழுக்கல் நிலங்களிலும் இழுக்கலாகா வண்ணம் நடந்திட அருள் செய்க! நின் திருக் கோயிலில் வலம் வரும் வாய்ப்பினை அருள் செய்க! நின் சந்நிதியில் நின்றே தவம் செய்யும் பேற்றினை அருள் செய்க!

இறைவா, என் கால்கள் சுறுசுறுப்பாக இயங்கி, என் வாழ்வை இயக்கமாக்கிட அருள் செய்க! என் கால்கள் சிறந்து, வழி வழிக் கால்களாக விளங்கிட அருள் செய்க!

## அக்டோபர் 25

### வாழ்வாங்கு வாழ்தல் உண்மையாக வேண்டும்! இறைவா, அருள் செய்க!

*இறைவா, எல்லா உலகமும் ஆனாய் நீயே! என்னைச் சுற்றியுள்ள பூத, பௌதிக உலகமனைத்தும் நீயே! என்னைச் சுற்றியுள்ள இயற்கை உலகத்தில் எவ்வளவு அறிவுச் செறிவு! ஆற்றலின் அடைவு! ஆக்கத்தின் தேக்கம்!*

*இறைவா, நான் இயற்கையோடிசைந்த வாழ்வினை வாழ்ந்திட அருள் செய்க! என்னைச் சுற்றியுள்ள அனைத் துலகத்திடமிருந்தும் ஆற்றலை ஈர்த்து எடுத்துக் கொள்ள வேண்டும்! புகழ்மிக்க வாழ்வு வாழ்ந்திடுதல் வேண்டும்!*

*இந்த உலகை, நான் முழுமையாகப் பயன்படுத்த வேண்டும். இந்த உலகில் நான் முழுமையாக வாழ்ந்திடுதல் வேண்டும். இறைவா, அருள் செய்க!*

*காய் கதிர்ச் செல்வனின் ஆற்றலும், தண் நிலவின் தண்ணளியும் எனக்குத் தேவை. இறைவா, அருள் செய்க! அறியாமை, வறுமை, பிணி, துவ்வாமை என்றின்னவை இந்த வையகத்திலேயே இல்லாமல் செய்தாக வேண்டும்.*

*"இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்ற வாக்கு உண்மையாக வேண்டும். வாழ்வாங்கு வாழ்தல் உண்மையாக வேண்டும். இறைவா, அருள் செய்க!*

## அக்டோபர் 26

### இறைவா, வெற்றிகள் நிறைந்த வாழ்வை அருள் செய்க!

*இறைவா, ஓங்கி உயர்ந்த திருவுருவில் எழுந்தருளியுள்ள தஞ்சைப் பெரிய திருவுடையவரே! மாமன்னன் இராசராசன் "தேவாரதேவர்" என்று புகழ்ந்து போற்றிய இறைவா!*

*இறைவா, நீ நடுவுநிலையுடையோனாய் இருத்தல் வேண்டாமா? ஆம் இறைவா! மாமன்னன் இராசராசன் ஆட்சி செய்த முப்பத்திரண்டு ஆண்டுகளில் மாபெரும் காரியங்கள் சாதித்துள்ளானே நின்னருளால்! தனது அரசை "சாம்ராஜ்ய" மாக்கியுள்ளான்! நினக்குத் தஞ்சையில் உலகமே வியக்கும் மாபெரும் கலைக்கோயில் எழுப்பியுள்ளான்! ஆண்ட ஆண்டுகளில் அளப்பரிய காரியங்கள், வாழ்ந்த நாள்களில் விழுமிய பணிகள் செய்து புகழ்மிக்க வாழ்வு வாழ்ந்திட அருள் செய்திருக்கிறாய்!*

*நானுந்தான் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆட்சி செய்துள்ளேன்! ஒரு திருப்பணி கூடச் செய்து முடிக்க முடிய வில்லையே! எடுத்த செயலில் எல்லாம் இடையீடுபட்டு எய்த்து நிற்கின்றேனே! இறைவா, இது நீதியாகாது. இறைவா, எனக்கும் முற்றாக அருள் செய்! நின் கோயில் திருப்பணிகள் செய்து முடித்திடுதல் வேண்டும்; நீ மகிழ்ந்து கேட்கும் தேவாரத்தை, நின் பூஜைக்குப் பயன்படுத்தும்படி செய் திடுதல் வேண்டும்.*

*தமிழினத்தை ஒருகுலமாக்குதல் வேண்டும். இறைவா அருள் செய்க! வெற்றிகள் நிறைந்த வாழ்வை அருள் செய்க!*

## அக்டோபர் 27

### இறைவா, ஒன்றேகுலம்! அதுவே உயிர்க்குலம் என்ற ஒழுக்கத்தில் என்னை நிறுத்துக!

*இறைவா, எந்நாட்டவர்க்கும் இறைவா! நான் மிகச் சின்னஞ்சிறு வட்டத்திற்குள்ளிருந்து வெளியே வர முடியாமல் தவிக்கின்றேன். குடை ராட்டினத்தில் ஏறிச் சுற்றும் குழந்தைகளைப் போல என் நிலை பரிதாபமாக இருக்கிறது.*

*இறைவா, நான், சிறு வட்டத்திலிருந்து வெளியே வர அருள் பாலித்திடுக! ஆம், இறைவா! மனிதகுலம் என்ற பெரிய வட்டமே எனது அன்புக்கு இலக்காக அமைய வேண்டும்.*

*சாதி, குலம், கோத்திரம், இனம், மதம் என்ற சின்னச் சின்ன வட்டங்களுக்குள்ளேயே சுழலுகிறேன். கிணற்றுத் தவளைபோல, கிணறே கடல் என்று கருதி ஆசைப்படுகிறேன். அமைவு கொள்கிறேன்! இறைவா, மானிடனாகிய எனக்கு ஏன் இந்த வட்டங்கள்!*

*"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று வாழ்ந்திட அருள் செய்க! "ஒன்றே குலம், அதுவே உயிர்க்குலம்" என்ற மேலாய ஒழுக்கத்தில் என்னை நிறுத்துக.*

*ஆன்மநேய ஒருமைப்பாடு காணும் தவத்தினைப் பயில அருள் செய்க! இறைவா, "எல்லா உலகமும் ஆனாய் நீயே" என்ற உண்மையை நான் உணர்ந்து உலகந்தழுவிய ஒழுக்கத்தில் நின்று வாழ்ந்திட அருள் செய்க!*

## அக்டோபர் 28

### இறைவா, மற்றவர் மகிழும் பணிகளில் ஈடுபடும் வரத்தினைத் தா!

*இறைவா, மூலநோய் தீர்க்கும் முதல்வா! அழுக்காற்றிலிருந்து என்னைக் காப்பாற்று. அழுக்காறு அன்புக்குப் பகை, நட்புக்குப் பகை, ஆக்கத்திற்குப் பகை. இந்த அழுக்காறு ஏன் எனக்கு?*

*பிறர் வாழ மகிழும் மனம் கிடைத்தால் போதும்! இறைவா, நீ அன்பின் திருவுரு! மனித குலத்தை நேசிக்கும் அன்பினை வழங்கு! பிறர் இன்புறுவது. தான் இன்புறுவது என்று கருதி வாழ்தல் வேண்டும்.*

*நான் பிறர் நலம் நாடுவதையே உயிர்நோன்பாக ஏற்றுக் கொள்ள அருள் செய்க! நீலமணிமிடற்றிறைவனே! சமூக வாழ்க்கை வாழ்தல் என்ற நிலை அழுக்காற்றைத் தராது. இன்புற்று வாழும் சிறப்பினை நல்கும்! இறைவா அருள் செய்க!*

*சமூக வாழ்க்கையை ஏற்று ஒழுகுதலே அழுக்காறுக்கு மருந்து! அழுக்காறற்ற வாழ்க்கை ஆக்கத்தைச் சேர்க்கும்; சுற்றத்தை நல்கும்; இந்த உலக வாழ்க்கையில் சொர்க்கத்தைப் படைக்கும்.*

*இறைவா, பிறரை வாழவைக்க அறிவறிந்த ஆள்வினையைத் தா! அனைத்துலகமும் எனது உலகம் என்று அணைத்துச் செல்லும் அறப்பண்பினைத் தந்தருள் செய்க!*

*அழுக்காறற்ற நெறி நயந்த அருள் வாழ்வை அருள் செய்! பிறர் மகிழ்வுறும் செயல்களில் ஈடுபட்டு, உளமாரச் செய்யும் வரத்தினைத் தந்தருள் செய்க!*

## அக்டோபர் 29

### இறைவா, என்தரத்தை உயர்த்திக் கொள்ளும் இயல்பினை அருள்க!

*இறைவா, வித்தின்றியே விளைவு செய்யும் இறைவா! எனக்கு ஆசைகள் அதிகம். ஆம்! நிறைய பொருள் வேண்டும். ஆம்! பொருள் வேண்டும்.*

*ஆனால், முயற்சியின்றியே நிறையபொருள் கிடைக்க வேண்டும். அதுவும் நீயே கொடுத்துவிட்டால் முழுநிறைவு. இப்படி என் மனம் எண்ணுகிறது! இது தவறு என்பதை உணர்கிறேன். நடவாதது, நடக்கக் கூடாதது என்பதையும் உணர்கிறேன்.*

*ஆனால், கடின உழைப்பினை ஏற்க மனம் மறுக்கிறது! இறைவா, என்னைத் திருத்து. எங்குக் கடின உழைப் பில்லையோ அங்குச் செல்வம் சேராது. சேர்ந்தாலும் நிற்காது. என்ற தத்துவத்தை என் வாழ்க்கையின் அனுபவ மாக்கும் அறிவினைத் தந்தருள் செய்க!*

*உழைப்பே தவம்! உழைத்தல் மூலமே உரிமை கால் கொள்கிறது என்ற உண்மைகள் என் வாழ்க்கையின் உண்மை களாக விளங்க அருள் செய்க!*

*பொருளைப் போற்றி வாழ்தலினும் என்னுடைய தரத்தை நான் உயரத்திக் கொள்ளுதல் சிறப்புடையது. இறைவா அருள் செய்க!*

## அக்டோபர் 30

### இறைவா, என் செவிகளுக்கு நற்செய்திகளை வழங்கி அருள்க!

*இறைவா, கேளாதனவெல்லாம் கேட்பித்து ஆட் கொள்ளும் இறைவா! நின் கருணை என்பால் விழ வில்லையே! ஏன் கால தாமதம்?*

*நான் எளிதில் கேட்க இயலாத மந்திரங்களை, மந்திரங் களின் உட்பொருளை, மந்திரங்கள் அனுபவமாகும் மெய் யுணர்வு வாழ்க்கையைப் பற்றிக் கேட்பது எப்போது? நீ வந்தருளிச் சொல்லக் காலம் தாழ்த்தினால் அதுவரை என் காதுகள் காத்திராதுபோல் இருக்கின்றன!*

*அம்மம்ம, உன் படைப்பில் என்ன விசித்திரம்! திறந்த காதுகள், ஒன்றுக்கு இரண்டு! நாள்தோறும் நான் கேளாதன கேட்க முடியவில்லை. கேட்கக் கூடாதன கேட்டு விகாரப் பட வேண்டியிருக்கிறது.*

*இறைவா, என் காதுகளுக்கு நான் அழைக்காமலே செவி உணவு பரிமாறுகிறவர்கள் வந்து விடுகிறார்கள்! இறைவா, அபசாரம்! பரிமாறப் பெறுவது செவியுணவன்று.*

*நெருப்புத் துண்டுகளனைய தீய சொற்கள்! புறங் கூறுதல், தீக்குறள்கள் இன்னோரன்ன உள்வடு ஏற்படுத்தும் தீயசொற்கள்! இறைவா, தீய சொற்களை இனிமேல் நான் கேட்கக் கூடாது.*

*இறைவா, நல்லவையே கேட்க வேண்டும். மற்றவர் அருங்குணங்களைப் பற்றிய செய்திகளையே கேட்க வேண்டும்! இறைவா, பிறர் புகழே, என் செவிச் செல்வம்! நின் புகழே எனக்கு உய்தி தருவது! இறைவா, இந்தப்படி என் செவிக்கு நற்செய்திகளை வழங்கி அருள் செய்க!*

## அக்டோபர் 31

### நாளும் நின்வழியில் கொல்லாமைநோன்பு ஏற்க அருள் செய்க!

இறைவா, இந்தப் பொல்லாத மனித சாதியொடு எத்தனை கோடி ஆண்டு காலமாகப் போராடி வருகின்றனை! நின் போர்க்குணம் வளர்க! வாழ்க!

இறைவா, நோன்பில் எல்லாம் உயர்ந்த நோன்பு எது? "ஒன்றாக நல்லது கொல்லாமை!" உலகம் முழுதும் கொலை தவிர்க்கப்பெறுதல் வேண்டும். கொலை! அதுவும் நிராயுத பாணியை, பெண்ணை, நல்லவர்களைக் கொலை செய்வது என்பது கொடுமை.

இன்றைய உலக அரசியலிலேயே, அணுகிப் பழகி நம்பிக்கையைப் பெற்று, கொன்று விடுதல் என்பது அரசியல் புத்தியாகிவிட்டது. இது கேவலம். இறைவா! உயிர்க் குலத்தைக் காப்பாற்றுக. கொலையிலிருந்து குவலயத்தைக் காப்பாற்றுக.

இறைவா, என் உள்ளத்தில் "கொலை" எண்ணம் வேண்டாம்! இறைவா, அருள் செய்க! என்னுடைய பகைவனைக் கூட கொலை மூலம் சந்திக்க நான் விரும்ப வில்லை! இறைவா, இந்த வண்ணமே அருள் செய்க!

கொலை கொடிய மனத்தில் தோன்றுவது. என் மனம் கொலை தழுவும் மனமாக மாறாமல் காப்பாற்றி அருள்க! கொலை செய்பவர்கள் ஏழேழ் பிறப்பிலும் நரகத்தில் ஆட்படுவார்கள். எங்கு வாழ்ந்தாலும் நரக வேதனையை அனுபவிப்பார்கள்.

இறைவா, 'கொலை' என்ற சொல்லே இல்லாமல் போக வேண்டும். எந்தச் சூழ்நிலையிலும் யாரையும் கொல்லா மனம் தந்தருள்க! நாளும் நின் வழியில் கொல்லாமை நோன்பு ஏற்க அருள்செய்க!

௩•X•௨௧.

## நவம்பர் 1

## இறைவா என் செவிகள் எனக்கு உய்வைத் தருவனவாக அமைந்திட அருள்க!

*இறைவா! தோடுடைய செவியை உடைய பெருமானே! என் செவிகள் செல்வத்தைச் சேர்க்கும் செவிகளாக விளங்க அருள் செய்க!*

*செவிச் செல்வம் எது? செல்வன் கழலேத்தும் செல்வமே செல்வம்! உனது பொருளுடைய புகழைக் கேட்டலே செல்வம்!*

*குறைவிலா நிறைவே! கோதிலா அமுதே! "நன்றுடையான், தீயதில்லான், இன்பன் காண், துன்பங்கள் இல்லாதான் காண்" என்றெல்லாம் நின் புகழ் கேட்கப்படுதல் வேண்டும்! இறைவா, கேட்கப் பெற்ற நின் புகழ் என் சிந்தனையாக வளர, அறிவாக மாற்றம் பெற வேண்டும்! நின் புகழ்மிக்க குணங்கள் என் வாழ்வாக அமைந்திட அருள் செய்க! நான் குறைகள் இல்லாது வாழ்ந்திடுதல் வேண்டும். குற்றங்களிலிருந்து விடுதலை பெற வேண்டும்! நன்றே கேட்க வேண்டும்! நன்றே செய்ய வேண்டும்! நல்ல வண்ணம் வாழ்ந்திடுதல் வேண்டும்! இறைவா, அருள் செய்க!*

*இறைவா, என் செவிகள் என்னை வளர்க்கும் செவிகளாக அமைதல் வேண்டும்! என் செவிகள் எனக்கு உய்வைத்தரக் கூடியனவாக இயங்குதல் வேண்டும்! இதுவே, எனது வேண்டுகோள்! தோடுடைய செவியனே! தோன்றாத் துணையாயிருந்து அருள் செய்க!*

## நவம்பர் 2

## இறைவா, மறையை, மறையின் பொருளை அறிந்து ஓத அருள் செய்க!

*இறைவா, மொழிக்குமொழி தித்திப்பான மூவர் சொன்ன தமிழ் கேட்டருளிய இறைவா! என் சொற்களை நின் செவி கேட்கலாகாதா? கருணை புரியலாகாதா? என் செவிக்கு உணவே கிடைக்கவில்லை! வழங்குவாரையும் காண்கிலேன்!*

*உலகம் "பொருள்" என்று கூறிக்கொண்டு பணத்தின் பின் அலைகிறது! நானோ என் வாழ்வை வளமாக்கும் அறநெறிசார்ந்த உணர்வினைச் சொல்லித் தரும் ஆசிரியர் களை நாடி அலைகின்றேன்!*

*ஆலமர் செல்வா! அன்று நால்வர்க்கு அறமுணர்த்திய அறவாழி அந்தணனே! மாணிக்கவாசகர்க்குக் குருந்த மரத்தடியில் எழுந்தருளி மறைப் பொருளை அருளி ஆட் கொண்ட திருப்பெருந்துறை இறைவா! என்னை மாணாக்க னாக ஏற்றருளி மறை பொருளை அருளிச் செய்து, உய்வைத் தருதல் வேண்டும்!*

*செம்பொருளே, செம்பொருளின் பயனை எடுத்துக் கூறி, ஆட்கொண்டு பிறவியை நீக்க வேண்டும். பிரணவத்தின் பொருள் ஈதென விளக்கி என் பிறப்பைப் புனித மடையச் செய்தருளல் வேண்டும்.*

*இறைவா, ஆலமர் செல்வா! அண்ணலே அருள் செய்க! மறையை மறையின் பொருளை, அறிந்து ஓத அருள் செய்க!*

## நவம்பர் 3

### இறைவா, சமுதாயம் தேர் போல் நிகழ்ந்திடத் திருவருள் செய்க!

*இறைவா, தேரூர்ந்த செல்வா! ஏன் தேரூர்ந்து வருகிறாய்! எனக்குக் காட்சி மூலம் படிப்பினைகளைச் சொல்லித்தர நீ தேரூர்ந்து வருகிறாய்! ஆம் இறைவா, இந்தச் சமூகத்தில் நல்வாழ்வு, ஒரு பெரிய தேரைப் போன்றது.*

*தேர் எளிதில் செய்யப் பெறுவதா? பல தச்சர்கள் கூடிப் பலநாள் உழைப்பால் உருவாக்கப் பெற்றது தேர்! அதுபோலச் சமுதாய நல்வாழ்க்கையைப் பலரும் கூடிப் பலநாள் முயன்றுதானே நடத்திடுதல் இயலும்.*

*சமுதாயத்தில் நல் வாழ்வு வாழ இயலவில்லையே! சமுதாய இணக்கமே உருவாக வில்லையே. இல்லை... இல்லை... இறைவா! இன்னமும் சமுதாய அமைப்பே உருவாக வில்லையே! ஏன்?*

*சமுதாயத்தில் உறுப்பாகிய குடும்பமே, வடிவத்தில் தான், குடும்பமாயிருக்கிறது. உணர்வில், ஒருமையில் சிறந்த குடும்பமே இன்னமும் தோன்றவில்லை; இறைவா, இரங்கத் தக்க நிலை. இறைவா, காப்பாற்று.*

*நான் ஒரு சமுதாயப் பிராணியாகவே வாழ ஆசைப் படுகிறேன்! எனக்கு, சமுதாயத் தினின்று பிரித்துக் காட்டும் தனித்தன்மை மிக்க சிறப்புக்கள், விளம்பரங்கள் எதுவும் வேண்டாம்.*

*சமுதாய அமைப்பின் பகையாகிய தனிநபர் வழி பாட்டை, வெறுக்கும் மனப்பாங்கை அருள் செய்க! சமுதாயம் தழுவிய அன்பை அருள் செய்க! வேற்றுமை களைக் கடந்து சமுதாய அமைப்பில்-ஒருமை நிலையில் வாழ அருள் செய்க!*

*சமுதாயத்தின் சராசரி நிலைக்கு மேலாக எனக்கு எதுவும் வேண்டாமையை விழுமிய செல்வமாக அருள் செய்க! சமுதாயம் தேர் போலானால் நீ எழுந்தருள் செய்வாய்! விரைந்து சமுதாயத்தேர் காண அருள் செய்க!*

## நவம்பர் 4

### என்னை ஒரு சொல்லால் திருத்தி ஆட் கொள்க, இறைவா!

*இறைவா! கங்கையைச் சடைக்கரந்தோனே! நீ கங்கை நீரைத் தலையில் வாங்கியது ஏன்? கங்கை வெள்ளம் பகுத்தறிவில்லாதது.*

*கங்கை நீர் எளிதில் பாய்ந்து பள்ளத் திசையிலேயே சென்று விடும். சென்று சேருமிடத்தின் தூய்மை பற்றி அறியாது. பயன்பாடு பற்றி அறியாது! ஆதலால் நீ தலையில் வாங்கி முறைப்படுத்தி நிலத்தில் விட்டனை!*

*இறைவா, கங்கைக்கு அளித்த கருணைமிக்க செயலை என் பொருட்டும் நீ செய்தருள வேண்டும்! என் வாழ்க்கை வறிதே பாழுக்கிறைத்ததாகி விடாமல் பாதுக்காக வேண்டும்! பயன்பாடு உடையதாக்க வேண்டும்!*

*பகுத்தறிவற்ற சடங்குகளில் என் ஆற்றல் பாழாகக் கூடாது! என் உயிரின் ஆற்றல் அனைத்தும் அறிவார்ந்த முயற்சிகளில் ஈடுபட வேண்டும்.*

*அன்பு நிறைந்த செயல்களையே செய்ய வேண்டும்! நின்னை நான் உயிர்க்குலத்திற்குச் செய்யும் தொண்டின் மூலமே காண வேண்டும்.*

*நடமாடுங் கோயில்களாகிய மானுடரின் உள்ளத்தில் நின்னை எழுந்தருளச் செய்து பூசனை செய்தல் வேண்டும். இந்த அருளைச் செய்தருள்! கங்கையைச் சடையிற் கரந்து தாங்கி அருள் செய்தனை! என் பொருட்டு உனக்கு அவ்வளவு துன்பம் வேண்டாம். நீ என்னை ஒரு சொல்லால் திருத்தி ஆட்கொள்ள முடியும்!*

*இறைவா, நீ என் வாழ்க்கையின் நெம்பு கோலாக, தூண்டுகோலாக விளங்கி அருள் செய்தால் போதும். நான் வாழ்வேன். வாழ்வாங்கு வாழ அருள் செய்க!*

## நவம்பர் 5

### என்னைப் புறம்போக விடாது அருள்க இறைவா!

*இறைவா, தாம் வளர்த்த மரம் நச்சுமரம் என்றாலும் கொல்லத் தயங்குகின்றனர். இறைவா, என் கருமேனி கழிக்கத் திருவுருவம் கொண்டருளிய கோவே! ஆணவ இருளில் அறிவும், செயலுமிழந்து கிடந்த என்னை, எடுத்தாண்டவனே!*

*இறைவா, அறியும் கருவிகளையும் செயற் கருவி களையும் வழங்கி வாழ்க்கையில் ஈடுபடுத்தினை! நுகர்வுக்குப் பொன், பொருள் ஆகியன தோற்றுவித்துப் போகத்தினையும் வழங்கியருளினை! இந்தப் பெருங் கருணைக்கு ஏது கைம்மாறு?*

*இறைவா, ஆயினும், நீயே எடுத்து வளர்த்த நினது உடைமையாகிய என்னை, இன்று பாராமுகமாகக் கைவிட்டு விட்டது ஏன்? இது நீதியா? என் நிலை கண்டு இரங்குவார் நின்னருள் பற்றி ஐயங்கொண்டு சிரிக்க மாட்டார்களா?*

*இறைவா, நின் புகழ் மாசுபடாமல் இருக்க என்னைக் காப்பாற்றுக! என்னைப் புறம்போக விடேல். என்னைத் திருத்தி நெறி நிறுத்துக. இது உன் கடமை. கடமை, பொறுப்பு இவற்றை நிறைவேற்ற வேண்டுமானால் தகுதி முதலியன பார்க்கமாட்டார்கள். நான் பாவியேன்! ஆனால், உன்னைப் பார்க்கத் தடை இல்லை. என் ஆளுடைய ஈசனே! என் வேண்டுகோள் முழுவதையும் நிறைவேற்று!*

*இறைவா, நீ என்னில் பிரியக்கூடாது. பிரியில் தரியேன். இனி நான் உன்னைப் பிரியேன்! இறைவா பட்ட பாடெல்லாம் போதும். இனி நான் தாங்க இயலாது. புறம்போக விடாது ஆட்கொண்டருள் செய்க!*

## நவம்பர் 6

### வழிவழிவரும் வாழ்வியலமைப்பை அடுத்த தலைமுறை யினருக்குப் பாதுகாத்தளிக்கும் ஆற்றலை அருள்க!

*இறைவா, துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவித் தருளும் என் தலைவா! "கடன்", "கடமை" என்ற சொற்களின் பொருள் எல்லை, இன்று குறுகிவிட்டது! இல்லை, உண்மை யான பொருளும் வழக்கில் இல்லை.*

*இறைவா, இன்று நான் துய்த்து மகிழ்ந்து வாழும் மொழிகள், பொருள்கள், திருக்கோயில்கள் அனைத்தும் எனக்கு முன்னே பல நூற்றாண்டுகள் வாழ்ந்தவர்கள் முயன்று செய்து வைத்துவிட்டுப் போனவைகளே! அவற் றைத் துய்த்து மகிழ்கின்றேன்!*

*இன்றைய வாழ்க்கை முறை எவ்வளவோ உயர்ந்து விட்டது. பண்டு இருந்த துன்பங்கள் இல்லை. இந்த அளவுக்கு வாழ்க்கை எளிமையாகவும் இன்பந்தரத் தக்கதாகவும், முன்பு ஒரு நாளும் அமைந்ததில்லை.*

*பல நூறு ஆண்டுகள் துன்பப்பட்டு மனிதகுலம் வாழ்ந்த இயக்கிய வரலாற்றின் பயனே இந்த வாழ்க்கை! இலக்கியம், கலை அனைத்தும் அப்படியே! இன்றைய திருக் கோயில்கள் உயிரனுபவத்திற்குரிய பண்ணைகள்!*

*இத்திருக்கோயில்களை முன்னம் பலர்கூடி, கட்டி, இன்று நம்முடைய அனுபவத்திற்குத் தந்துள்ளனர் ஆதலால், வழி வழி தரும் சமுதாய அமைப்பில் இன்று வாழ்வோர், சமுதாயத்திற்குக் கட்டுப்பட்டிருக்கின்றனர்! அது என்ன? நமது வாழ்வுக் களத்தை முன்னே வாழ்ந்தவர்களுக்கு - அமைத்துத் தந்தவர்களுக்குத் திருப்பித்தரப் போகிறோமா? அது இல்லை! இன்றைய வாழ்க்கையமைப்பைக் கேடு செய்யாமல் வளர்த்துப் பாதுகாத்து அடுத்த தலைமுறை யினருக்குத் தருவதே நமது கடன்.*

*இறைவா, நான் துய்ப்பன ஒவ்வொன்றையும் என் வழித் தலைமுறையினருக்குப் பேணிப் பாதுகாத்துத் தரும் பொறுப்புணர்வைத் தந்தருள் செய்க!*

## நவம்பர் 7

## இறைவா, துய்ப்பில் பூரணத்துவம் அடையும் அமர வாழ்வை அருள்க!

*இறைவா, பெண்ணின் நல்லாளொடும் வாழும் பெருந்தகையே! திருஞானசம்பந்தர் "மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்" என்றருளிச் செய்துள்ளார். "மண்ணில் நல்ல வண்ணம் துய்த்தும் களித்தும் மகிழ்ந்தும் வாழ்ந்தால், இன்ப அன்பாகிய கதி வாராமல் போகாது" என்றருளிச் செய்துள்ளார்.*

*இறைவா, நாள்தோறும் சில மூடர்கள் வாழ்க்கையை 'மாயை', என்கின்றனர். 'சம்சார சாகரம்' என்கின்றனர். 'நிலையிலாதது' என்கின்றனர்! இறைவா, என் மனம் மயங்குகிறது.*

*மூத்தபிள்ளையாரின் அருமறை வாக்கினை நடைமுறைப்படுத்துக என்று ஆணை பிறப்பிக்கிறாய்? இறைவா, நான் மண்ணில் வாழ்வதற்காகவே பிறந்தேன். என்னைச் சுற்றியுள்ள பொருள்கள் அனைத்தும் துய்ப்பதற்குரிய பொருள்கள்.*

*பொருள்களைத் துய்ப்பதிலேயே வாழ்க்கை வளர்கிறது. ஆதலால், இறைவா, கொடிய விரதங்கள் எனக்கு வேண்டாம். ஆனால் மனம் விகாரப்படாமல் துய்த்துப் பழகுதல் வேண்டும். இஃது ஒரு கலை.*

*துய்ப்பது துய்ப்பதற்காகவே நிகழ்தல் வேண்டும். துய்ப்பது தேவை. துய்ப்பது ஆசையாக வளர்ந்து விடக் கூடாது. இறைவா, துய்ப்பன துய்க்க அருள்செய்க! மண்ணில் நல்லவண்ணம் வாழ அருள் செய்க!*

*இம் மண்ணையும் விண்ணகமாக்கும் அருள் நலஞ் சார்ந்த உழைப்பினைத் தந்தருள் செய்க! துய்க்கும் பொருள்களின் நலம் கெடாமல் பாதுகாத்துத் துய்க்கும் பாங்கினைக் கற்றுத் தா! இறைவா, துய்ப்பில் பூரணத்துவம் அடையும் அமர வாழ்வை வழங்கி அருள் செய்க!*

# நவம்பர் 8

## மற்றவர்கள் மகிழ்ச்சியே என் மகிழ்ச்சியென மகிழ்ந்து வாழும் உயர்நிலையை அருள் செய்க!

*இறைவா, நீதியே! நான் உன்னை வணங்குகிறேன். திருவிழாக்கள் கொண்டாடுகின்றேன். நான் உனக்கு ஒரு பக்தன். இது என் புறவாழ்க்கை நிலை. ஆனால் இறைவா! என்னுடைய அகநிலையோ சொல்லுந் தரத்ததன்று. சம நிலையில் நிற்பது என்பது உயர்ந்த ஒழுக்கம். எனக்கும் சமநிலைக்கும் வெகுதொலைவு.*

*இறைவா, எனக்குத் தேவைப்படும் பொழுது யாரிடமும் அணுகுவேன். உறவு கொண்டாடுவேன். எனக்கு வேண்டாத பொழுது என்னை அணுகிவந்தாலும் நான் பார்க்க மாட்டேன். எனக்கு ஏன் இந்த மனநிலை? இப்படி ஒரு தன்முனைப்பு நிலை? இறைவா, கூடவே கூடாது. தன் முனைப்பு அறவே கூடாது.*

*இறைவா, ஆணவம் இல்லாமல் அடங்கிவாழும் அமர நிலையைத் தா. எந்தச் சூழ்நிலையிலும் நான் சம நிலையி லிருந்து பிறழக்கூடாது. இறைவா, அருள் செய்க!*

*அதிகாரப்பித்து வேண்டாம். வேண்டவே வேண்டாம். என்றும் எப்போதும் எல்லாருக்கும் நான் வேண்டிய வனாகவே இருக்க அருள் செய்க! நடுவு நிலை பிறழாத நன்னெஞ்சத்தைத் தந்தருள் செய்க!*

*மற்றவர்கள் வாழ்வதைக் கண்டு மகிழும் பேருள்ளத் தினைத் தந்தருள் செய்க! மற்றவர்கள் மகிழ்ச்சியே என் மகிழ்ச்சியென மகிழ்ந்து வாழும் மிக உயர்நிலையை அருள் செய்க!*

## நவம்பர் 9

### அறநெறிநிற்கும் வாழ்வே, அருள் நலம் சேர்க்கும் வாழ்வு! இறைவா அருள்க!

இறைவா, மனிதரை ஆட்கொள்ளும் தெய்வமே! மனித நேயம் மிக்க தலைவனே! எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்துவதாகிய மனித நேயத்தின் ஒரு திவலையை எனக்கும் அருள் செய்க! மனித நேயம்! ஆம்! மனித நேயமே தத்துவங்களின் முடிவு! இலக்கியங்களின் பயன். சொர்க் கத்தின் வாயில்.

மனித நேயம் அன்பை வளர்க்கும். போரிடும் கெட்ட உலகத்தைச் சாய்க்கும். மனித நேயம் வேற்றுமைகளைக் கடந்தது. மனித நேயம் எல்லைகளைக் கடந்தது.

மனித நேயம் பயன் கருதாதது! பண்புகளில் சிறந்தது. மனித நேயம் ஆணவத்தின் பகை: அன்பிற்கு ஊற்று. மனித நேயம் அன்பின் ஆக்கம்; உறவுகளின் அரண்; ஒப்புரவு சார்ந்த ஒழுக்கம். மனித நேயமிக்க வாழ்வினை அருளிச் செய்க!

யார் மாட்டும் அன்பு காட்டும் விரிந்த இதயத்தைத் தா! பகைமை எனும் பெரு நெருப்பு அண்டமுடியாத அருள் வாழ்வினை அருள் செய்க! மனித நேயத்தை வளர்க்கும் முகனமர்ந்த இன்சொல்லினைத் தா!

பிறர் இன்புறுதல் கண்டு மகிழும் பேருள்ளத்தினை அருள் செய்க! இறைவா, அர்ப்பணிப்பு உணர்வுடன் வையகம் வாழத் தொண்டு செய்யும் பெருவாழ்வினைத் தந்தருள் செய்க!

மனித நேயம் உயர்ந்தது. உயர்வற உயர்ந்தது! அறநெறி நிற்கும் வாழ்வே, அருள் நலம் சேர்க்கும் வாழ்வு. இறைவா, அருள் செய்க!

## நவம்பர் 10

### இமைப் பொழுதும் நின்னை மறவாமை வேண்டும்! இறைவா, அருள்க!

*இறைவா! எல்லா உலகமுமாய் இருக்கின்ற இறைவா! வாழ்க்கை வெள்ளத்தில் நின்றவர்கள் சிலர். அவர்கள் உன்னை நினைந்து ஆட்பட்டவர்கள். உன் கருணையால் நின்றவர்கள்–நிற்கின்றவர்கள்.*

*"உண்ணாமலும் நீர் பருகாமலும் இருக்கமுடியும். ஆனால் இறைவனை எண்ணாமல் பிரார்த்தனை இல்லாமல் என்னால் ஒரு நொடி கூட இருக்க முடியாது" என்றார் அண்ணல் காந்தியடிகள். இறைவா, எனக்கும் இந்த வரம் வேண்டும்!*

*இறைவா, உன்னை எப்போதோ ஒருநாள் கும்பிடு கிறேன். எனக்கு இடர்ப்பாடுகள் வந்த பொழுது விரைந்து உன் சந்நிதிக்கு வருகிறேன். ஆனால் என்றும் எப்பொழுதும் உன் நினைவு எனக்கு இல்லை. இறைவா, மன்னித்தருள் செய்க!*

*இறைவா, இமைப்பொழுதும் நின்னை மறவாமை வேண்டும். இறைவா, உனது அருள் நலங்கனிந்த திருவடி களை நிறைந்த வண்ணம் வாழ்தல் வேண்டும். நினது அருட் புனலில் என் நெஞ்சம் நனைதல் வேண்டும். பத்திமை தோய்ந்த பெரு வாழ்வினை அருள் செய்க!*

*இறைவா, உன் திருநாமமே எனக்கு நிதியாக வைத்த பொருள்! என் சித்தத்தை நின் திருநாமத்தைச் சிந்திப்பதில் ஈடுபடுத்துதல் வேண்டும். உனக்குப் பணி செய்ய உன்னை எந்நாளும் நினைக்க வேண்டும். உன் திருக்கோயில் வலம் வருதல் வேண்டும்.*

*உன் திருக்கோயிலைத் தூய்மை செய்ய வேண்டும். உன் புகழ் பாட வேண்டும். என் நா நின் திருநாமத்தை மறத்தல் கூடாது. என் நெஞ்சு நின்னை மறத்தலாகாது. இவ்வண்ணம் வாழ அருள் செய்க!*

## நவம்பர் 11

## இறைவா, இப்பொய்ம்மையான உலக வாழ்க்கையிலிருந்து எடுத்தாள்க!

*இறைவா! காரைக்கால் அம்மையை "அம்மை" என்று அழைத்த அண்ணலே! காரைக்காலம்மையார் தலையால் நடந்து கயிலையை அடைந்ததாகக் கூறுவர். நானும் தலை கீழாக நடக்கவே முயலுகின்றேன்.*

*ஆம், இறைவா! என்னை நாலு வார்த்தை புகழ்ந்து சொன்னால் போதும். அந்தப புகழ்ச் சொற்களை நான் முகமன் என்று எடுத்துக் கொள்வதில்லை. அல்லது ஆர்வ மூட்டும் சொற்களாக எடுத்துக் கொள்வதில்லை.*

*என்னைப் புகழ்ந்தால் புகழுக்கு உரியவனாகவே ஆகி விடுகிறேன். அதுமட்டுமா? தலை கனத்து விடுகிறது. உடனே உலகியலுக்கு உரிய "நடை" முதலியன இல்லாமல் தலை கீழாக நடக்கிறேன். நீ என்னைத் தடுத்தாளக் கூடாதா? இறைவா! தடுத்து ஆட்கொள்க!*

*திருக்கோயிலில் சண்டீசர் சந்நிதி உள்ளது. சண்டீசர், கடமைகளை நியமமாகக் கொண்டொழுகியவர். பெற்ற தந்தை என்ற பாசத்தைக் கூடக் கடந்து குறிக்கோளை உயிரெனக் கொண்டவர். தமது குறிக்கோளுக்கு இடையூறாக இருந்த தந்தையின் காலையே தடிந்தவர்! உன்னால் சண்டீசப் பதம் அளிக்கப் பெற்றவர். அவர் சந்நிதி கூட சின்ன வாயில் உடையது.*

*இறைவா, நான் எதைக் குறிக்கோளாகக் கொண்டுள் ளேன்? ஏதோ கிடைத்த வேலைகள் சிலவற்றைச் செய்கிறேன். இது சீரான வாழ்க்கையன்று. தலைகீழான வாழ்க்கை இந்தப் பொய்ம்மையான வாழ்க்கையிலிருந்து எடுத்தாள்க. குறிக் கோளில் நிற்கும் வாழ்வைத் தருக! அர்ப்பணிப்பு உணர் வுடன் பணியாற்றும் பாங்கைத் தருக!*

## நவம்பர் 12

### உணவைத் தேடி அலையும் நான் உணர்வினைத் தேட அருள் செய்க!

*இறைவா, தொழுது எழும் மக்கள் வினையை நீறாக்கும் வண்ணம் நீறணியும் அம்பலத்தரசே! திருநீறு உன்சின்னம்! உன்னை நினைவூட்டும் அடையாளம். உன்னை நினைக்கத் தூண்டும் தூண்டுகோல்.*

*இறைவா, திருநீறு தோற்றுவிக்கும் மங்கல விளைவு களுக்காக, திருநீறு அணிந்தாரையே போற்றினர். பாராட்டினர். இறைவா, நாள்தோறும் தூயவெண்ணீறு அணிந்து உன்னை - உன் திருநாமத்தை நினைந்திடும் இனிய பேற்றினை அருள் செய்க!*

*பூசுந் திருநீற்றினைப் போலவே என் உள்ளமும் தூய்மை யாக இருந்திட அருள் செய்க! மனத்தது மாசாக வாழ்தல் நன்றன்று. உடல் தூய்மை எளிதில் அமைந்து விடுகிறது. ஆனால், மனத்தூய்மைக்குரிய வாய்மை, வாழ்க்கையில் எளிதில் வந்து அமைவதில்லை.*

*வாய்மையை நல்கும் அன்பு, என் நெஞ்சத்தில் வந்து பொருந்துவதில்லை. நான் உடல் வசப்படுகின்றேன். உடல் தன்னலமே நாடுகிறது. அதற்குரிய துணையாகிய உயிர்க்கு ஊதியம் தேட அனுமதிப்பதில்லை.*

*உணவைத் தேடியலையும் நான், உணர்வினைத் தேட அருள் செய்க! வாய்மையில் வழாது நிற்க அருள் செய்க! மன்றுளானே! மனத்தூய்மையை அருள் செய்க! மனத் துய்மை காத்து வாழ்ந்திட வழிகாட்டி அருள் செய்க!*

## நவம்பர் 13

### ஒரே மனத்துடன் சிறந்த கூட்டுறவாளனாக வாழ அருள்க!

இறைவா, மூவர் தலைவனாய் விளங்கும் முதல்வா! எந்த உலகத்திலும் முழுமையான ஒருமைப்பாடு இல்லை. இறைவா, அமரர் உலகத்திலும் ஆயிரம் ஆயிரம் சண்டைகள். மானிட சாதியில் கேட்கவே வேண்டாம். கூடி வாழ்தல் என்பது இயற்கை வாழ்வு.

கூட்டுறவுப் பண்பு இயற்கைப் பண்பு. அன்பில் தழைக்கும் பண்பு; பிறர்க்கென முயலும் நோன்பில் உருவாகும் பண்பு; ஒப்புரவறிந்து ஒழுகும் உயரிய ஒழுக்கமே கூட்டுறவுப் பண்பு. இறைவா, வையகத்தில் கூட்டுறவு செழித்து வளர அருள் செய்க!

கூட்டுறவு வாழ்க்கை, சீலம் செறிந்த வாழ்க்கை. இறைவா, பலர் கூடினால் கூட்டுறவாகிவிடாது. பலர் ஒரு செயலில் ஈடுபட்டிருப்பதால் கூட்டுறவாகிவிடாது. ஒரே சிந்தனை வேண்டும். ஒரே மனம் வேண்டும்! இறைவா, நடக்கின்ற காரியமா? பலருக்கு மனமே இருக்கிறதா என்பது ஐயப்பாடு.

பலர் சிந்திப்பதில்லை. இல்லை! சிந்திக்கவே மறுக்கின்றனர். இறைவா, இந்தச் சூழ்நிலையில், பலர் விரும்புவதையே நான் விரும்பினால் ஒரே மனம் வந்து விடுகிறது. மனத்தின் தொடர்ச்சியாகச் சிந்தனையும் வந்து விடும்.

இறைவா, நாங்கள் சிலராவது ஒரே மனம், ஒரே சிந்தனை உடையவர்களாக வாழ்ந்திட அருள் செய்க! எங்களுக்கு ஒரே மனத்தினை வழங்கியருள்க! ஒரே சிந்தனையை அருள் செய்க! நான் ஒரு சிறந்த கூட்டுறவாளனாக வாழ அருள் செய்க!

## நவம்பர் 14

### கூட்டுறவு வாழ்க்கை வாழ அருள் செய்க!

*இறைவா! அறவாழி அந்தணனே! நான் வாழ ஆசைப் படுகின்றேன். நெடிய நாட்கள் வாழ ஆசைப்படுகின்றேன். நலத்துடன் வாழ ஆசைப்படுகின்றேன். ஆனால் நான் நினைக்கின்றபடி நடக்கவில்லையே! நான் வாழ முடிய வில்லையே! பிழைப்பை ஒட்டிக் கொண்டிருக்கின்றேன்.*

*என் வாழ்வில் நலம் என்பது நான் கனவில் கூடக் கண்டதில்லை. ஒவ்வொரு நாளும் இன்றோ, நாளையோ சாவு என்று, நாளை எண்ணிக் கொண்டிருக்கிறேன். இறைவா, நீ எனக்கு வழங்கியதெல்லாம் நல் வாழ்வுதானா? இறைவா, நானேதான் கெடுத்துக் கொண்டேனா? என்னை மன்னித்துவிடு!*

*வாழ்க்கையின் இயற்கையாக அமைந்த நியதி கூடி வாழ்தல், ஒத்துழைத்து வாழ்தல், ஒப்புரவாக' வாழ்தல் ஆகியன. இறைவா, உண்மை, உண்மை. இந்த விதிகள் என் வாழ்க்கையின் நியதிகளாக இல்லை.*

*நான் கூடித்தொழில் செய்து வாழவில்லை. ஒத்து ழைத்தல் என்பது இல்லவே இல்லை! ஒருமைப்பாடு இல்லை. இறைவா, என் வாழ்க்கையை ஆரவாரமான போட்டிகள் தாம் உந்து சக்தியாக இருந்து இயக்குகின்றன. அதனால் கூட்டுறவுப் பண்பு இல்லை. கூட்டு வாழ்க்கை இல்லை.*

*இறைவா, நான் சாவூருக்குச் செல்லும் வழியில் செல்லு கின்றேன். ஆனால், வாழ ஆசைப்படுகின்றேன்! இறைவா, சாவூருக்கு அழைத்துச் செல்லும் தன் முனைப்பு, ஆதிக்க உணர்ச்சி, சிறிதும் நலமில்லாத போட்டிகள், இவை நிறைந்த வழியிலிருந்து நான் திரும்பி வாழ்வூருக்கு வழியாகிய கூட்டுறவு வாழ்க்கை வாழ அருள் செய்க!*

## நவம்பர் 15

### இறைவா, நின் திருநாமம் மறவா நெஞ்சினை அருள் செய்க!

*இறைவா, உய்வார்கள் உய்யும் வகையில் ஆட்கொண்டருளும் கடவுளே! என்னை ஆட்கொள்வதற்குக் காலந்தாழ்த்துவது ஏன்? நான் உய்யுமாறு எங்ஙனம்? நான் உய்யும் நெறி எது? என்றெல்லாம் எண்ணாது, நீ அருள் செய்யவில்லை. நீ அருள் செய்யும் பாங்குடையான் இல்லை என்று கூறுவது எவ்வளவு பேதைமை!*

*இறைவா, நின் அருளுக்கு நான் பாத்திரமாக வேண்டாமா? சிந்தையில் தெளிவினைத் தந்தருள் செய்க! கருவுற்றநாள் முதல் உடனிருக்கும் கூட்டாளிகள் ஐவரின் கூட்டை நீக்கு. அல்லது அவர்களுக்கு மடை மாற்றம் தந்து நன்னெறிப்படுத்துக. இந்த ஐவர் என்னுடன் ஒத்துழைத்தாலே நான் உய்தி பெற்றுவிடுவேன். இறைவா, அருள் செய்க!*

*நின் திருநாமம் மறவா நெஞ்சினை அருள் செய்க! உன்னுடைய பொருள் சேர் புகழையே கேட்கும் புண்ணியப் பேற்றினை அருள் செய்க! உன்னை நினைந்து ஆடி மகிழ அருள் செய்க! என்புருகிப் பாட அருள் செய்க! நின் திருவடிகளுக்கு அரும்பொடு மலர்தூவித் தொழுது அரற்றிட அருள் பாலித்திடுக.*

*இறைவா நின் திருவடிகளை என் தலைக்கு அணியாகச் சூட்டிக் கொண்டு மகிழ அருள் செய்க! என்னை நின்னருள் பெறுவதற்குத் தகுதியில்லை என்று புறத்தே தள்ளாதே! துடைக்கினும் போகேன். நின் அருள் என் ஆவி! ஆவி காத்திட நின்திருநாமம் மறவா நெஞ்சினை அருள் செய்க!*

## நவம்பர் 16

### அன்பே உயிராக வாழ்ந்திடும் வகையினைக் கற்றுத் தந்திடுக!

இறைவா, அன்பின் வலையில் அகப்படும் அரும் பொருளே! உள்ளவாறு அன்பு செய்ய எனக்குக் கற்றுக் கொடு. ஆற்றல் மிக்க அன்பினை நான் பெற அருள் செய்க!

எல்லா உயிர்களையும் ஈர்த்துப் பிணிக்கும் இணையற்ற அன்பினை யான் பெற அருள் செய்க. இந்த மண்ணகத்தை விண்ணகமாக்கும் தூய அன்பை அருள்பாலித்திடுக. அன்பிலே கரைந்து ஒருலகமாகும் உன்னதப் பேற்றினை அருள் செய்க!

மானுடத்தை வாழ்விக்கும் வளமார்ந்த அன்பினை அளித்தருள்க. ஈரநெஞ்சினை நயந்தருள் செய்க! ஆருயிர் களுக்கு எல்லாம் நான் அன்பு செய்யும் வாழ்க்கையினை அருள் செய்க. அர்ப்பணிப்பு உணர்வுடன் பணி செய்யும் அன்பினை அளித்தருள்க!

பழகிய நட்பைத் தலைநாள் நட்பே போல வளர்த்துக் கொள்ள வழி காட்டுக! மற்றவர் கீழ்மையைத் தாங்கிக் கொள்ளும் அயரா அன்பினை அருள் செய்க. அருளினை ஈன்றருளும் அன்பினை அருள் செய்க!

இறைவா, நின் திருவடிக்குத் தொழும்பாய் ஆட்படும், அசைவில் அன்பினை அருள் செய்க. என்னுடைய அன்பே! ஆண்டவா! அனைத்துலகமும் அன்பில் இயங்கட்டும்!

அன்பே உயிராக வாழ்ந்திடும் வகையினைக் கற்றுத் தந்திடுக. வையகம் சிறந்திடும் அன்பு யாண்டும் முகிழ்த்திடுக. முன்னே வந்தருள் செய்க. அன்பே சிவமாய்ச் சிந்தித்து வாழ்ந்திட அருள் செய்க!

௲.x.௨௨.

## நவம்பர் 17

### மண்ணுக்கும் விண்ணுக்கும் இணைப்பூட்டும் இணையற்ற அன்பினை ஏற்றொழுகிட அருள் செய்க!

*இறைவா, அம்மை நீ! அப்பன் நீ! ஐயனும் நீ! அன்புடைய மாமனும் மாமியும் நீ! என்றெல்லாம் உறவு முறை காட்டி, உயிர்களிடத்தில் அன்பினாலாய இணக்கத்தை வளர்த்திடத் திருவிளையாடல் செய்தருளும் இறைவன் நீ!*

*ஆனால், என்னிடத்தில் உறவுப் பண்பு இம்மியும் கால் கொள்ளவில்லையே? இன்று தாய் - மகவு உறவு சீராக இல்லை. தந்தை மகன் உறவு சொல்லவே வேண்டாம். உடன் பிறந்தான் உறவும் பங்காளிக் காய்ச்சலாக மாறிவிட்டது.*

*இறைவா! இந்த உலகத்தில் பொருளாதாய வாழ்க்கை என்னைப் பாழ்படுத்தி விட்டது. இறைவா, என்னை எடுத்தாள்க. காப்பாற்றுக. மற்றவர்களுக்காக வாழும் அர்ப்பணிப்பு உணர்வினை உவந்தருள் செய்க!*

*அன்பினாலாய உறவுகளே இந்த உலக வாழ்க்கையின் பயன் எனக்கருதி, வாழ்ந்திடும் பேருள்ளத்தினை வழங்கிடுக. அனைத்துயிரும் சிவனருள் பெறும் பாத்திரங்கள் என்று கருதி அன்பு செய்யும் உள்ளத்தினைத் தா. ஆற்றலினைத் தா.*

*மண்ணுக்கும் விண்ணுக்கும் இணைப்பூட்டும் இணையற்ற அன்பினை ஏற்றொழுகிட அருள் செய்க! பிணக்கை நீக்கி உயிர்க்குலத்தை வாழ்வித்திடச் செய்யும் அன்பினை அருள் செய்க!*

*தியாகப் பெருவாழ்வுக்குரிய அன்பினை அருள்செய்க! அன்பினாலாய உறவில் உலகம் ஒன்றாகிட உவந்தருள் செய்க!*

## நவம்பர் 18

### இறைவா, சினம் அடங்கக் கற்றுக் கொடு!

இறைவா, "சினமடங்கக் கற்றிலை" என்ற அறிவுரை வாழ்க்கையாக உருக்கொள்ள வேண்டும். இதுவே என் பிரார்த்தனை! சேர்ந்தாரைக் கொல்லும் நெருப்பாகிய சினத்திலிருந்து விடுதலை பெறுதல் வேண்டும்.

சினம் கொள்ளுதலுக்குக் காரணங்கள் இல்லாமற் போகா! அதனால் நான் சினம் கொண்டு என்னாவது? சினம் கூடவே கூடாது! வேண்டவே வேண்டாம்! சினத்தின் வாயில்களையே அடைத்திட அருள் செய்க!

இறைவா, பணிகளைத் திட்டமிட்டபடி செய்யாமையால் எழும் சினமே மிகுதி. காரியக் கேடுகள் ஏற்படும் பொழுது சினம் வருகிறது. ஏன், நான் காரியக் கேடுகள் வரும் வரையில் வாளா இருக்க வேண்டும்? ஏன் பணிகளில் பலரை நம்ப வேண்டும்?

நான் முறையாகத் திட்டமிட்டு உறுதியாகப் பணிகளைச் செய்து வந்தால் காரியக்கேடு வராதல்லவா? நான், எனக்கு மற்றவர்கள் உபயோகப்படுவார்கள் என்று எண்ணி வாளா இருப்பானேன்?

மற்றவர்களை உபயோகப்படுத்திக் கொள்வதுதான் முறை - நடைமுறை சாத்தியம் என்ற உணர்வை உணர்த்தியருள்க. மறந்தும் ஏமாறக்கூடாது. சினத்தைத் தரும் ஏமாற்றங்களிலிருந்து விடுதலை பெற எப்போதும் விழிப்பு நிலையில் இருந்திட அருள் செய்க! நம்பியும் நம்பாமலுமிருத்தல் என்பதுதான் வாழ்க்கை நெறி முறை என்றறிய அருள் செய்க!

அழுக்காறு அவா வேண்டாம் என்ற விருப்பத்தினை அருள் செய்க. சினத்தின் காரணங்களை அறிந்து மாற்ற அருள் செய்க. சினத்தின் வாயில்களையும் அடைத்திட அருள் செய்க! சினமடங்கக் கற்றுக் கொடு. அமைதி தவழும் இனிய வாழ்க்கையினை அருள் செய்க!

## நவம்பர் 19

### உயிரினும் ஒழுக்கம் சிறந்ததெனக் கருதிப் பயின்றிடும் பாங்கினை அருள்பாலித்திடுக!

இறைவா, ஒழுங்கியல் அமைந்த உலகைக் கண்ட தலைவா! எனக்கு ஒழுங்கினைக் கடைப்பிடிக்கக் கற்றுத் தந்தருள் செய்க. ஒழுங்கில் உறுதியை அருள் பாலித்திடுக!

என்னுடைய முப்பத்திரண்டு பற்களும் ஒழுங்காக, வரிசையாக அடுக்கப் பெற்றிருப்பதால்தான் அழகாக இருக் கின்றன. உணவை அரைக்கப் பயன்படுகின்றன, ஒலிக் காற்றை முறைப்படுத்திச் சொற்களாக்கித் தருகின்றன! இதை நான் அன்றாடம் காண்கிறேன். ஆனால், வாழ்க்கையில் ஒழுங்கமைவுகள் இடம் பெறுவதில்லை!

காலால் நடப்பது மட்டும் நடையன்று. தமிழ் வழக்கில் 'நடை' என்றால் ஒழுக்கம். இன்று காலால் நிலத்தில் நடப்போர் பலர் சமூக அமைப்பில் தலையால் தருக்கி நடக்கின்றனர். இறைவா! என்னைக் காப்பாற்று.

ஒழுங்கினைக் கற்றுத் தந்து ஒழுங்கமைவினை அன்றாட வாழ்க்கையில்-பணியில் ஏற்கும் படி அருள் செய்க. நன்றுடையானே! நன்னடை அருள் செய்க! கடமைகளைச் செய்வதில் கால நியதி ஒழுங்குகள், சிந்தனையில் ஒழுங்குகள், நடைமுறை வாழ்வில்-பணிகள் இயற்றுவதில் ஒழுங்குகள் அருளிச் செய்க!

காலத்தொடு நிற்றல் கடமைகளைச் செய்தல், எண்ணக் குவியல்களில் ஒழுங்கமைவுகள், உறவுகளில் ஒழுங் கமைவுகள்-அருளிச் செய்க!

ஒழுங்குகளின் பயனாகிய ஒழுக்கத்தினை அருள் செய்க! எம் உயிரினும் ஒழுக்கம் சிறந்ததெனக் கருதிப் பயின்றிடும் பாங்கினை அருள் பாலித்திடுக!

## நவம்பர் 20

## இறைவா! பிரிவினை விரும்பாத பேருள்ளத்தினை அருள் செய்க!

இறைவா, சாதி, குலம், பிறப்பு எனும் சுழிப்பட்டுத் தடுமாறும் என்னையும் ஆட்கொண்டருளும் தலைவா! "ஒன்றே குலம்" என்பது நான் கற்றது. நான் விரும்புவது!

ஆனால் இந்தப் பொல்லாத உலக அமைப்பு எண்ணற்ற பிரிவினைகளை உண்டாக்கி விட்டது! அந்தப் பிரிவினைகள் என்னைச் சுற்றி இருப்பவர்களிடத்தில் ஆழ மாகப் பதிந்துள்ளன. அவர்கள் அந்த உணர்வோடு என்னை அணுகுகின்றனர்.

இறைவா, நீயோ எனக்கு நுண்ணுடல் மட்டும் தான் தந்தனை. இந்த மண்ணுலகில் பலரறிய நடமாடும் இந்தப் பருவுடலை எனக்கு என் தந்தையும் தாயும் பெருங்கருணை யுடன் தந்தனர்.

என் பெற்றோருக்கு ஒரு சாதி இருந்தது. குலம் இருந்தது. என் பெற்றோர் குலம், என் குலம் என்பது தவறல்லவே. இந்த அடிப்படையில் பலர் எனக்குச் சுற்ற மெனச் சூழ்ந்து வருகின்றனர்! எனக்கு அறச்சங்கட நிலை! இறைவா, என்ன சொல்கிறாய்! சுற்றம் போற்றுதல் தவறன்று.

குலம் தழீஇய வாழ்க்கை நிறையுடையதே. மனித குலத் தினின்றும் பிரிதல் கூடாது. வேற்றுமை கூடாது. அப்படியா, இறைவா, எனக்கு வேற்றுமையற்ற ஒருகுல உணர்வைக் கொடு. பிரிவினைகளை விரும்பாத பேருள்ளத்தினை அருள் செய்க!

மகவெனப் பல்லுயிரையும் ஒக்கப்பார்த்துப் பரிவுடன் கூடி வாழும் அருள் நெஞ்சத்தினை வழங்குக. நான் பிறந்து வளர்ந்த சுற்றந் தழீஇநின்று பேணும் பெருவாழ்வை அருள் செய்க!

## நவம்பர் 21

### இறைவா, குறிக்கோளினை நோக்கி என் வாழ்க்கையை இயக்குக!

இறைவா, ஞாலமாய் இவை வந்து போம் காலமாய் நின்றருள்பவனே! நின் சோதனைகளை ஏழையாகிய என்னால் தாங்க இயலவில்லை. பெற்ற தாயின் அன்பு எவ்வளவு உயர்ந்தது. அதனை நுகர்ந்தே மகிழ்ந்து வாழ்ந்து சாகலாம் என்றால், இடையில் தட்டிப்பறித்து விடுகிறாய். இது என்ன சோதனை!

இறைவா உனக்குக் கல்நெஞ்சமா? ஏன் உன்னையே காண்கிறேன். பேசி மகிழ்கிறேன்! உடனே ஓடி ஒளிந்து விடுகிறாய். ஏன் இந்தச் சோதனை இறைவா? இறைவா நன்றருளிச் செய்தனை! இந்த உலகின் அமைப்புகள் அனைத்தும் கடமைகளின் வழிப்பட்ட அமைப்பு. கடமை களின் வழி மாறி மாறிச் சுழலும்.

ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் செய்யும் பொறுப்பேற்க வேண்டும். சார்பு இருந்தால் பொறுப்பு வராது. அதனால் பொறுப்பேற்கும் பருவத்தில் காலத்தில் பிரிகின்றாயே! அப்படியா இறைவா!

நல்லவர்களுக்குப் பிரிவு அன்பை வளர்க்கும், கடமை உணர்வைத் தூண்டும். இறைவா, உன்பால் என்னுடைய அன்பு நிரந்தரமாக ஊற்றெடுக்கப் பிரித்தருள் செய்கிறாய்!

நானே என்னைக் காப்பாற்றிக் கொள்ளும் பொறுப் பேற்க என்தாயைப் பிரிந்தாய்! இறைவா, படைப்பியக் கத்தின் நுட்பம் புரிகிறது. மரணங்களின் உண்மை புலனா யிற்று.

நான் செத்தவர்களுக்காக அழமாட்டேன். அவர்கள் எதற்காகச் செத்தார்களோ அந்த நோக்கத்தை நிறைவேற்று வேன். வாழ்க்கை குறிக்கோளுடையது.

இறைவா, குறிக்கோளினை நோக்கி என் வாழ்க்கையை இயக்குக!

## நவம்பர் 22

### இறைவா, தீதிலா நன்மையே வளரும்படி செய்தருள்க!

*இறைவா, தீதிலா நன்மைத் திருவருட் குன்றே! நின் தீதிலா நன்மைக் காட்சியை அடியேனுக்கு அளிக்கக் கூடாதா? தீதிலா நன்மையை நான் என் வாழ்க்கையில் கடைப்பிடிக்கும்படி ஆற்றுப்படுத்தி அருள் செய்யக் கூடாதா?*

*இறைவா, இன்று என் வாழ்க்கையில் என்னைச் சுற்றிலும் தீதுடைய நன்மைகளே நடைபெறுகின்றன. இல்லை, இல்லை. இறைவா! தீமையை நன்மையென்று கருதிச் செய்கிறேன்.*

*இறைவா, நான் என்ன செய்ய? தீமை மிகுதியும் உடைய நன்மையையே நான் நன்மை என்று கருதியுள்ளேன். அது மட்டுமா? இறைவா! நீ மற்றவர்களுக்கு அமுதத்தினைக் கொடுத்தாய். நீ நஞ்சை உண்டாய். என் வாழ்க்கையில் தலைகீழ்ப்பாடம்.*

*நான் மற்றவர்களுக்கு நஞ்சினைத் தருகிறேன். நான் அமுதத்தை விரும்பி உண்கிறேன். இத்தகு தற்சார்பான வாழ்க்கைக்கு "வள்ளல்" பட்டம் வேறு! இறைவா, என்னைக் காப்பாற்று! நான் தீதிலா நன்மையாகிய வாய்மையை ஏற்று ஒழுக அருள் பாலித்திடுக.*

*என்னைப் போலவே மற்றவர்களும் என்று கருதி அவர் தம் வாழ்வுக்குரிய நன்மைகளை நாடிச் செய்ய அருள் பாலித்திடுக! நன்மை தொண்ணூற்றொன்பது பங்கும் தீமை ஒருபங்குமாக இருந்தாலும் பாலில் நஞ்சு கலந்தாற் போன்றது என்ற அறிவினை எனக்குத்தா. நான் நன்மையை எண்ண அருள் செய்க! நன்மையே செய்திட வாழ்த்தி அருள் செய்க!*

*இறைவா, நான் தீதிலா நன்மையுடையோனாக– நன்மையே செய்வோனாக வாழ்ந்திட அருள்செய்க! யாண்டும் எங்கும் தீதிலா நன்மையே வளரும்படி அருள் செய்க!*

## நவம்பர் 23

### என்னை உணர்த்தி நான் மனிதனாக வாழ அருள்க!

*இறைவா, எந்தையே! நின் திருவடி போற்றி! இறைவா! "நான் யார்?" என்று ஆய்வு செய்தால் அல்லவா நான் உய்தி பெறலாம். நான் யார்? இந்த உடலா? உடலினும் வேறாய உயிரா? இல்லை, நானே கடவுளா? "நான்" நானேதான்! எனக்குப் பெயர் "உயிர்" அல்லது "ஆன்மா" என்பது.*

*நான் என்றுமே உள்ளவன். எனக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை. நான் ஒரு அறிவுப் பொருள். எனக்குச் சுதந்தரம் உண்டு. என்னிடம் குறையும் உண்டு. நிறையும் உண்டு.*

*இறைவா, என்னைப்பார்! நான் என்பதற்குப் பொருள் கற்றுக்கொடு! நான் மரபால் உனக்கு மகன், தொண்டன் என்று உணர்த்துக. நீ என்னை அறிவில் வளர்த்திடுக! நான் உய்தி நெறியில் செல்ல ஆர்வப்படுத்துக.*

*இப்பிறப்பிலேயே இன்ப அன்பினை எய்திட அருள் செய்திடுக! இறைவா, அட்ட மாசித்திகளும் தா! ஆனால் அவை எனக்குத் துணையாக இருக்க நின் திருவடிக்காட் செய்யும் பேற்றினை அருள் செய்க!*

*இறைவா, நின் நிழலில் வாழும் நிலையினை அருள்க! நின் அருளில் திளைத்து வாழும் வாழ்க்கையை அருள் செய்க! நான்மனிதன்! மனிதனாகவே வாழ அருள் செய்க!*

## நவம்பர் 24

### இறைவா, நடுவுநிலை பிறழா நல்வாழ்வு பெற அருள்க!

*இறைவா, நீலமணிமிடற்றினை உடையவனே! நின் தோழன் நம்பியாரூராரின் கண்களைப் பறித்த கண்ணுதல் பரம்பொருளே! இறைவா, என் வாழ்க்கையில் ஓரம்சாரும் தீய இயல்பு இருக்கிறது.*

*வன்கணாளர்கள் என் இதயத்தைப் பறித்து விடுகின் றனர். இறைவா! ஒரு தராசு கூட தன்நிலையில் இருக்கிறது. நானோ, என்னிலையில் இல்லை; இருக்க முடியவில்லை. இறைவா, என் பிழை பொறுத்தாட்கொள். நான் நடுவுநிலை பிறழ்தல் கூடாது.*

*இறைவா, நான் எனக்காகப் போராடினால் விலங் கிற்கும் எனக்கும் என்ன வேற்றுமை? நான் என் வாழ்நாள் முழுதும் மற்றவர்களுக்காகவே போராடுமாறு அருள் செய்க! வல்லாங்கு வாழ்வாரிடம் வாழ்விழந்து அல்லற்படும் சாதாரண மக்களுக்காகப் போராடும் தூய வாழ்க்கையை அருள் செய்க!*

*இறைவா, எந்தச் சூழ்நிலையிலும் நீதியின் பக்கமே நிற்கும் பெற்றிமையை அருள் செய்க. இறைவா, நீயே நீதி! இறைவா, என்னை அதிகாரம், செல்வம் இவை விலை கொள்ள முடியாவண்ணம் முறைபிறழா நடுவுநிலையில் நான் நிற்க அருள் செய்க!*

*இறைவா, இச்சைகள் மிகுதியும் நிறைந்த தற்சார்பான ஆசைகள் என் வாழ்க்கையின் சீலத்தை அரித்தழிக்கா வண்ணம் நடுவுநிலைமையை உயிரெனப் பற்றி ஒழுகும் பெற்றிமையை அருள் செய்க!*

*ஆதியே! அந்தமே! நடுவே! என் வாழ்க்கையின் பயனே! நான் ஒரு நடுவு நிலையினனாக நின் நீதியைச் சார்ந்தே வாழ்ந்திட அருள் செய்க!*

## நவம்பர் 25

### இறைவா, என்னைப் புதிய மனிதனாக்குக!

*இறைவா, என்ன சிரிக்கிறாய்! நான் நகைப்பிற்கிட மானவனாகி விட்டால் உனக்குப் பெருமையா? அது எப்படி இறைவா? ஏன் என்னை இப்படி அவலப்படுத்துகிறாய்? எனக்கென்ன வாய் இல்லையா? பேசத் தெரியாதா? தர்க்கம் செய்யத் தெரியாதா?*

*இறைவா, நான் பேசியே கெட்டேன். உலகத்தின் இயக்கம் செயலாலேதான்! என்னை ஆண்டருள் செய்யும் பெருமானே! என் உடலில் உள்ள ஒவ்வொரு உறுப்பும், உறுப்பிற்குரிய உயர் பணிகளைச் செய்யத்தக்க வழியில் பயிற்சி கொடு.*

*என் கால்கள் நின் திருக்கோயில் வலம் வரட்டும்! என் கால்கள் வஞ்சிக்கப்பட்டு வாழ்விழந்தோர் வாழ்வு நோக்கி நடை பயிலட்டும். வயிறு, அற்புதமான உறுப்பு! ஓயாது உழைப்பது, உழைப்பின் பயனை உடல் முழுதுக்கும் தருவது, தூய்மை தழுவியது.*

*நெஞ்சு மனித நீதியில் நிலைத்து நிற்கட்டும். வாய் நின் புகழ் பேசட்டும். நின் புகழனைய வாய்மைக்கு வழக்காடட்டும். இறைவா, இந்தப்படி அருள் செய்! புதிய மனிதனாக்குக!*

*இறைவா, என்னைப் புதிய மனிதனாக்கி அருள்க! நெஞ்சம் நீதியில் நிலைத்திட அருள் செய்க!*

## நவம்பர் 26

### உழைத்துண்ணும் மனிதனாக என்னை மாற்றுக!

*இறைவா, நின் படைப்பின் அதிநுட்பத்தை அறியும் ஆற்றல் எங்களுக்கு ஏது? நீ எதிலும் உபரியிருக்கும் படியாகவே படைத்து இயக்குகிறாய். சான்றாக ஒரு வயிறு; இரண்டு கைகள்; இரண்டு கால்கள்.*

*கைகளும், கால்களும் இணைந்து உழைத்தால்-முறையாக உழைத்தால் ஒரு வயிற்றுக்குப் போதாதா? இறைவா, போதும்! போதும்! கூடுதல் உழைப்பின் உபரியை நம் வாழ்க்கைக்கு உதவியாக இருப்பவர்களுக்கும் தரலாம்!*

*ஆனால், இறைவா வயிறு முட்டச் சாப்பிட நினைப்பது போல - எத்தனையோ பேருக்கு முழு உழைப்பு உழைக்க மனமில்லையே? சுவைத்து உண்ண ஆசைப்படுவது போலத் தமது கடமைகளைச் சுவைத்து மகிழ்ச்சியுடன் செய்ய மனம் வரவில்லையே?*

*குறைபட்ட உழைப்பெல்லாம் குறைகளைத்தானே தரும். குறித்த நேரத்தில் பசிக்கிறது என்றுகூறி உணவுக்குத் தேடி அலைகிறேன். என் உடலுக்கு நான் ஒரு வஞ்சனையும் செய்ததில்லை. ஆனால் குறித்த காலத்தில் வேலை தேடித் திரிவதில்லை.*

*சோம்பல், கடமைப் பசியைத் தணித்துவிட்டது. இது மட்டுமா? மற்றவர்கள் உழைக்க அவர்களை ஏமாற்றிச் சுரண்டிப் பிழைப்பு நடத்தும் ஈனத்தனம் வேறு. உழைத்துண்ணும் மனிதனாக என்னை மாற்றுக!*

*கடமைகளைத் தேடி அலையும் மனம் தா! கிடைத்த கடமைகளையெல்லாம் பெரியது சிறியது என்று பாராமல் செய்யும் மனப்பாங்கைத்தா! கடமைகளை முழுமையாகச் செய்தலே நிறைவான வாழ்க்கையை அமைக்கும் பாதை. நான் உழைத்து வாழவே விரும்புகிறேன். உழைத்து, வாழும் மனம் தா. இறைவா, அருள் செய்க!*

## நவம்பர் 27

### இறைவா, நல்ல தமிழில் வழிபாடு செய்கின்றோம்! எழுந்தருள்க!

*இறைவா, புலித்தோல் உடுத்திய முதல்வா! உண்மையைச் சொல்! சமஸ்கிருதம், தமிழ்-இவ்விரண்டு மொழிகளில் எந்தமொழியைக் கேட்பதில் உனக்கு விருப்பம் அதிகம்?*

*இறைவா, நாடறிந்த ஓர் உண்மைக்குக் கேள்வியா என்று கேட்கிறாய்? ஆம், இறைவா! இன்று சிலர் சமஸ் கிருதம்தான் உனக்குரிய மொழி, தமிழ் அல்ல என்று கூறுகிறார்கள். வழக்காடுகிறார்கள். நீ உன் விருப்பத்தைச் சொல்லி வழக்கைத் தீர்த்து வைக்கக் கூடாதா?*

*நீ அன்று படிக்காசு கொடுத்துப் பைந்தமிழைக் கேட்டாய். பண் சுமந்த பாடல்களைப் பரிசாகப் பெறுவதற்கு வைகை ஆற்றங்கரையில் மண் சுமந்தாய். சுந்தரரின் செந்தமிழுக்காகத் திருவாரூர்த் தெருவில் நடந்தாய்.*

*தமிழ் மந்திரத்தை எழுதி நெருப்பிலிட்ட ஏடு எரிய வில்லை. வெள்ளத்தை எதிர் கொண்டு, கரை ஏறியது, ஆம், இறைவா! தமிழ், நீ விரும்பும் மொழி! இல்லை, இல்லை! தமிழே நீ! நீயே தமிழ்! என்ன இறைவா கூறுகிறாய்?*

*திருக்கோயில்களில் தமிழை அகற்றி, சமஸ்கிருதத்தை நுழைத்ததால்தான் தமிழிருக்கும் இடம் தேடிப் போய் விட்டாயா? அதனால்தான் உன்னைத் திருக்கோயிலில் தேடிப்பார்த்துவிட்டு, "கடவுள் இல்லை" என்று கூறுகிறார் களா?*

*இறைவா, எங்கள் தவறை மன்னித்து அருள்! நாங்கள் நல்ல தமிழில் வழிபாடு செய்கிறோம். இறைவா, திருக் கோயிலுக்கு வா! எழுந்தருளி வாழ்த்துக!*

## நவம்பர் 28

### நம்பிக்கை, எனது வாழ்க்கையின் ஆதாரமாகிவிட அருள் செய்க!

இறைவா, நம்பிக்கைக்கு மிகுதியும் உரிய அண்ணலே! உன்னை நம்பியே கைதொழுகின்றேன்! இறைவா, என் நம்பிக்கை பொய்க்குமா? "நம்பினார் கெடுவதில்லை. நான்கு மறைத்தீர்ப்பு" என்பர். இறைவா, வாழ்க்கையை இழுத்துச் செல்வது நம்பிக்கையேயாம்.

ஆனால் நம்பிக்கை என்பது வாழ்நாளின் தொடக் கத்தில்-காலை நேரத்தில் நல்லது. காலை உணவு உடலுக்கு நல்லது. இறைவா, காலை உணவு செரிக்கப் போதிய காலம் உள்ளது. உணவின் பயனாகிய உழைப்பை ஈடுசெய்யவும் இயலும். ஆனால் இரவு உணவோ பயன் குறைவுடையது.

இறைவா, வாழ்க்கையில் காலைப் பொழுதில் கொள்ளும் நம்பிக்கை, காலை உணவைப் போன்றது. மாலைப் பொழுது நம்பிக்கை என்பது இரவு உணவைப் போன்றது; பயன்குறைவானது.

என் வாழ்க்கையில் நம்பிக்கை கால் கொள்ளட்டும். காலை உணவு பயன்படுவதுபோல காலைப் பொழுதில் நான் கொள்ளும் நம்பிக்கை, நாள் முழுவதும் என் வாழ்க் கையே ஆவேசித்து நடத்தட்டும்.

இறைவா, நான் என்னை முதலில் நம்ப வேண்டும். என் ஆற்றலில் எனக்கு நம்பிக்கை வேண்டும். இந்த உலகத்தில் நான், என் வாழ்க்கையில் நிறையச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை வேண்டும்.

நம்பிக்கை எனது வாழ்க்கையின் ஆதாரமாகிட அருள் செய்க! என்னைச் சுற்றி இருப்பவர்களை நான் நம்ப வேண்டும். இறைவா, என்னுடைய வாழ்க்கையின் ஆதாரம் நம்பிக்கையே! இறைவா அருள் செய்க!

## நவம்பர் 29

### என் மனோசக்தி தொழிற்பட அருள்செய்க!

*இறைவா, நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவனே! போற்றி! போற்றி! இறைவா, நான் யார்? என் உயிர் எது? இறைவா, என் உயிர், உடல் முழுதும் பரவி நீக்கமற நிறைந்து நிற்கிறது.*

*இறைவா, என் உச்சந்தலையில் உள்ள உரோமத்தி லிருந்து கால் நுனியில் உள்ள நகம் வரையில் எங்கணும் என் உயிர் இருக்கிறது! ஆயினும் உயிரின் இயக்கம் மனத்தினாலே யாம்.*

*"மனமுண்டேல் வழியுண்டு" என்பதன் தத்துவப் பொருள் விளக்கம் என்ன? மனமிருந்தால் அறிவும் இயங்கும். இறைவா, என் மனத்தை மீட்டுத்தா!*

*இறைவா, என் மனத்தில் நீ எழுந்தருளியிருந்து கொண்டு என் மனத்தைப் புறம் போகவிடாமல் எனக்குத் துணையாக இருக்கும்படி அருள் செய்க. என் மனம் என்வசம் இருக்கும்படி அருள் செய்க! என் மனம் அட்ட மாசித்தியும் இயற்றிடும் ஆற்றலைப் பெற்று விளங்க வேண்டும்!*

*இறைவா, மனம் போல வாழ்வு! என் வாழ்வும் மனமும் இசைந்தவை. நான் வாழ்ந்திட, வாழ்வாங்கு வாழ்ந்திட அருள் செய்க! மனமது செம்மையாகிப் புது வாழ்வு பெற்றிட அருள் செய்க! என்மனம்! ஆம், அதிசக்தி வாழ்ந்தது. என் மனோசக்தி தொழில்பட அருள் செய்க!*

## நவம்பர் 30

## என்கடன் பணி செய்து கிடப்பதே! இக்குறிக்கோள் அமைய வரம் தா!

*இறைவா, எனக்கு ஏன் இந்த ஆசை! ஆம், இறைவா வெளியில் தலைகாட்டிக் கொள்ள, அதாவது என்னை மிகைப்படுத்திக் காட்டிக்கொள்ள ஆசை! இது நல்லதா?*

*முந்திரிப் பழத்தில் கொட்டை வெளியே துருத்திக் கொண்டிருக்கிறது! அதனால் பழம் சுவையற்றுப் போய் விடுகிறது! ஒரே காரம்! கொட்டையும்கூட எளிதில் சுவைக்க முடியாத ஒன்று.*

*மாம்பழத்துக்குள் கொட்டை ஒடுக்கம். அதனால் பழம் சுவையாக இருக்கிறது. கொட்டைக்குள் இருக்கும் பருப்பும் மருத்துவத்திற்கு உபயோகம் ஆகிறது.*

*உலகின் எல்லா மரவகைகளின் வேர்களும் மண்ணிற் குள் மறைந்துதானே கிடக்கின்றன. ஆனால் மறைந்து கிடக்கும் வேர்களின் தொண்டால் மரங்கள் செழித்து வளர்கின்றன. மனிதகுலத்திற்குப் பயன்படுகின்றன.*

*இறைவா, எனக்கு ஏன் பெயர்? புகழ்? பெருமை? இவையெல்லாம் வளரும் வாழ்க்கையில் விழும் பூச்சிகளாகப் போய்விடும். வேண்டவே வேண்டாம். இறைவா. எங்கும் நின் புகழே நிலவுக! மற்றவர்கள் புகழே நிலவுக!*

*எனக்கு அடக்கமாக அமைதியாக இருக்கும் வரத்தைத் தா! பணி செய்யும் பண்பினைத் தந்தருள் செய்க! "என் கடன் பணி செய்து கிடப்பதே". இது என் வாழ்க்கையின் குறிக்கோளாக அமைய வரம் தா! இறைவா, அருள் செய்க!*

## டிசம்பர் 1

## என் அறியாமையை நானறிந்து அறிவை நாடிடும் ஆர்வத்தினை அருள்க!

இறைவா, பையவே கொடுபோந்து பாசமெனும் தாழ் உருவும் உத்தமனே! நாவிற்குச் சுவையான உணவு! உடலுக்கு நலமான உணவு! இவையிரண்டில் நாவிற்குச் சுவையான உணவு தயாரித்தலில் வேலை மிகுதி. பொருள்கள் நிறையத் தேவை! எனினும் உணவு, என் நாவிற்குச் சுவையாக அமைந் தாலும் உடலிற்கு நலமளிக்குமா என்பது ஐயப்பாடே!

இறைவா, இந்த உலகில் உயிர்க்கு மகிழ்வைத்தரும் சூழல்களை எல்லாம் நீ கருணையோடு அளித்துள்ளாய். பொன் உண்டு. மணி உண்டு. பொருள் உண்டு. துய்ப்பனவும் உண்டு. உய்ப்பனவும் உண்டு. யாதுமோர் குறைவில்லை. ஆயினும் ஏன் நான் கள் குடித்த குரங்குபோல் ஆனேன்? இல்லை, இல்லை! கள் குடித்த குரங்கை – தேள் கொட்டியது போல் ஆனேன். இவற்றையெல்லாம் முறையாகத் துய்க்கத் தெரியாமல் மன விகாரப்படுகிறேன். ஆசைப்படுகிறேன். இறைவா, என்னைக் காப்பாற்று.

என் பிழையைப் பொறுத்தருள். இனிமேலும் பிழைகள் வராமல் பாதுகாத்தருள் செய்க! என்னுடைய பொறிகளைச் சுவை நோக்கி அலையாமல் பயன் நோக்கி அடைந்து துய்க்கச் செய்யும் துணிவைத் தந்தருள் செய்க!

என் புலன்களின் மீது எனக்கு மேலதிகாரம் இருக்கும் படி, அருள் செய்க! என் புலன்களைத் தூய்மையாகப் பேணத் துணை செய்க! என் அறியாமையை நானறிந்து கொண்டு அறிவை நாடிடும் ஆர்வத்தினை அருள் செய்க!

வேண்டுதல் வேண்டாமை இல்லாத தூயவாழ்வினை அருள் செய்க! வேண்டாமை என்ற விழுப்பம் மிக்க செல்வம் பெறத் துணை செய்க! வாழ்க்கையில் ஒளி நிறையட்டும்! அறிவை நாடும் ஆர்வத்தினை அருள் செய்க!

## டிசம்பர் 2

### இறைவா, அருள், என் வாழ்க்கையின் ஆக்கமாக அமையட்டும்! அருள் செய்க!

இறைவா, கயிலையைக் காணவேண்டும். கயிலையில் எழுந்தருளியுள்ள நின்திருக்கோலத்தைக் காணவேண்டும். இறைவா! உன் கோட்டையின் கதவுகள் சாத்தப் பட்டுள்ளன. பூட்டப்பட்டுள்ளன. அதைத் திறப்பதற்குரிய சாவியைத் தேடிக் கொண்டிருக்கின்றேன்!

இறைவா, நின் கோட்டையைத் திறப்பதற்குரிய சாவியாகிய அருள், வேண்டும். "அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை." என்பது அருள்வாக்கு. அருள்-அன்பீனும் சேய். அன்பில்லாது அருள் வாராது.

அனைத்துயிர்களிடத்திலும் அன்பு காட்டுதல் என் ஒழுக்கமாக வேண்டும். என் வாழ்க்கையின் உயிர் நிலையாக அன்பு அமைதல் வேண்டும். அன்பை ஈன்று வளர்த்துப் பேணுவது உயிரிரக்கமாகிய பண்பாடே.

இந்த உலகத்தில் வாழும் அனைத்துயிர்களிடத்திலும் எனக்கு அன்புவேண்டும். எந்த உயிருக்கும் தீங்கு நினைக்க லாகாது. இறைவா! இந்தப் பாக்கியத்தினை எனக்கு அருள் செய்க!

வையம் உண்ட பிறகு உண்ணவும், வையம் உடுத்திய பிறகு உடுத்தவும் எனக்குக் கற்றுத் தா. துய்த்தலிலும் துறத்த லிலும் என்னை ஈடுபடுத்து. உயிரிரக்கம் என் வாழ்க்கையின் கொள்கையாகட்டும். அன்பு செய்தல் என் வாழ்க்கையின் ஒழுக்கமாகட்டும். அருள் என் வாழ்க்கையின் ஆக்கமாக அமையட்டும். இறைவா, அருள் செய்க!

௫-X-௨௩.

## டிசம்பர் 3

### சமுதாய விதிக்கேற்ப நான் நடந்திட அருள்க!

*இறைவா! நீதியே! நியதியே! நின்னருள் போற்றி! போற்றி! இறைவா, இந்த உலகின் இயக்கத்தில் எண்ணற்ற நியதிகள் உள்ளன. நியதிகளே உலக இயக்கத்தை நடத்து கின்றன.*

*இந்த உலக இயக்கம் நியதிகளின் வழி நடப்பது. இறைவா, என் வாழ்க்கை விதியின்வழி நடப்பது. நடக்க வேண்டியது. விதி என்றால் என்ன இறைவா? “தலை விதி” என்று கூறுகிறார்களே, அந்த விதியா? இறைவா, என்னை மன்னித்து விடுக. நான் தலை விதியில் நம்பிக்கை இல்லாதவன்.*

*இறைவா, விதி நியதியைப் போன்றது; விதி என்பது வகுத்துக் கொண்ட வழிமுறை. என் வாழ்க்கையின் விதி முறை, இந்த உலகத்தை இயக்கும் இயற்கையின் விதிமுறைகளுடன் இசைந்து நடக்க வேண்டும். இயற்கையோ டிசைந்த வாழ்க்கையே வாழ்க்கை. இயற்கையோடிசைந்த வாழ்க்கையே இன்ப வாழ்க்கை.*

*இறைவா, நான் தனிமனிதன். ஆனால் ஒரு சமுதாயத் தில் ஓர் உறுப்பினனாக வாழ்கின்றேன். ஆதலால் என்னோடு வாழும் மற்றவர்களின் நலமே என் நலம். ஆதலால் அவர்கள் மகிழ்வதற்குரிய விதிமுறைகளே என் வாழ்க்கையின் விதி முறை.*

*இறைவா சமுதாய வாழ்நிலையே என் விதி, என் வாழ் நிலை. ஒரு விதி இன்பத்திற்கு முரணாக இருந்தால், அந்த விதியைச் சமுதாய விதியாக மாற்ற வேண்டும். இதுவே என் வாழ்நாளின் விதி. விதித்துள்ள கடமை. இறைவா அருள் செய்க!*

*இறைவா, நாடு உவப்ப நடக்கும் விதிமுறைகள் உயர்ந்தவை; உய்தி தருபவை. அந்த உயர்ந்த விதிமுறையின் வழி என் வாழ்வியல் நிகழ அருள் செய்க!*

## டிசம்பர் 4

### உழைத்தால் உறுதி உண்டு எனும் ஞானம் உணர்த்திய இறைவா, போற்றி!

*இறைவா, உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் விளையாட்டுக் கொண்டருளும் தலைவா! போற்றி! போற்றி! உன்னிடம் நிறையக்கேட்க வேண்டும் என்றுதான் நின் சந்நிதி அடைந்துள்ளேன்! நீ அருளிச் செய்வதோ போதாது!*

*இறைவா, நீ குறைவிலா நிறைவு! நான் வேண்டியவாறு குறைவிலாது கொடுத்தருளினால் உனக்கென்ன குறை வந்துவிடப்போகிறது. நின் அருளிச் செயலுக்கும் அளவுகள்-நியதிகள் உண்டா?*

*நான் உன்னை, உன் நாமத்தை ஒரு தடவை சொன்னால் கூடப்போதும். நீ உடனே அருளிச் செய்வாய். நான் நிறையப்பெற்றுக் கொள்ளலாம் என்றிருந்தேன். நீ என் தகுதியறிந்து அருளுவதாக இருந்தால் நான் அடையக் கூடியது ஒன்றும் இல்லை.*

*எனக்கு இயல்பான பழக்கம் குறைவாக வேலை செய்து நிறையக் கேட்பது என்பது. இறைவா நான் ஒரு நாள் உழைக்கின்றேன். ஆனால் ஒன்பது நாள் ஊதியம் கேட்கின்றேன். சற்றே அன்புடையான் போல நடிக்கின்றேன். இந்த நிலையில் நான் எப்படி உன்னை அடைய முடியும்?*

*இறைவா, அறிவு அரும்புகிறது. தெளிவு தோன்றுகிறது. இறைவா, நீ ஒரு மதிப்பீட்டாளன்! அவ்வளவுதான். நான் நன்றாகச் செய்தால் நிறையக் கொடுப்பாய். இறைவா, நான் முற்றாக - முழுநலம் படைக்கத்தக்க உழைப்பினை வழங்க அருள் செய்க!*

*இறைவா, நான் பொய்யெலாம் தவிர்த்த அன்பினைக் காட்டுகிறேன். இறைவா, அருள் செய்க! உழைத்தால் உறுதி உண்டு. இது நல்ல ஞானம்! இதனை அருளிச் செய்த பெருங்கருணைக்கு ஆயிரம் ஆயிரம் போற்றிகள்.*

## டிசம்பர் 5

## இறைவா, நான் வாழ்வாங்கு வாழ்ந்திட அருள் செய்க!

*இறைவா! களிற்றுரிவை போர்த்த புண்ணியனே! யானை ஒரு பெரிய மிருகம். எனினும் யானைக்குத் தன்னைத் தெரிந்து கொள்ளும் ஆற்றல் இல்லை. யானை தன்னைச் செலுத்துகின்ற பாகனையும் அறிந்து கொள்ள இயலாதது; தன் தலையில் தானே புழுதியை அள்ளிக் கொட்டிக் கொள்வது; ஏன் தன்னைக் கட்டும் சங்கிலியைத் தானே எடுத்துக் கொடுப்பது!*

*இந்தப் பெரிய யானையைப் போல நான் வாழ்கிறேன். என்னைப் பற்றியே நான் அறிந்து கொண்டேனில்லை. நான் யார்? என்னுடைய உடலியல்பு என்ன? என் பொறிகளின் ஆற்றல் என்ன? என்னுடைய புலன்களின் இயல்பென்ன?*

*நான் வழிவழியாக வாழ்ந்த வாழ்நிலைகளின் படிப் பினைகள், பெற்ற அனுபவங்கள், அனுபவங்கள் வழியாக வந்தமைந்த குணங்கள் ஆகியன ஊழென உருக் கொண்டு வந்த பழவினையின் தன்மை என்ன? இவைகளைப்பற்றி யெல்லாம் நான் பூரணமாக அறிந்து கொள்ளாத நிலை!*

*இறைவா, ஏதோ உனக்கு, உன்னுடைய கணக்கு வழக்கைக் கடந்த கருணைக்கு வேலை வேண்டுமே என்பதற்காக, நான் உடம்பொடு புணர்த்தப் பட்டேன். என் பெற்றோர் விழைந்த காதலின்பத்தின் விளைவாக நான் பிறந்தேன்! இதில் என் விருப்பம் இல்லை. அதிகாரமும் இல்லை. எனினும் நான் ஒரு மனிதன்!*

*என் பொறிகள் செயல்திறன் உடையவை. என் புலன்கள் அறிவு நலம் செறிந்தவை. அறிவித்தால் அறியும் தன்மையுடையவை! என் வாழ்க்கையின் சென்ற காலம் அப்படியொன்றும் மோசமில்லை என்பது மானுடனாகப் பிறந்திருப்பதனாலேயே தெரிகிறது! ஆதலால், வாழ்வாங்கு வாழமுடியும்! வாழ்வாங்கு வாழ்ந்திட அருள் செய்க!*

## டிசம்பர் 6

### சாதி, ஆசாரங்கள் எனும் சிறுபிள்ளை விளையாட்டுகளிலிருந்து விடுதலை செய்க, இறைவா!

*இறைவா! எட்டினோடு இரண்டும், அ, உ, ம் என்ற ஓம் எனும் பிரணவ மந்திரத்தை அறியாத என்னைப் பட்டி மன்றம் ஏற்றினை! ஏற்றினை! நின் அருட் செயலுக்குப் பல நூறாயிரம் போற்றிகள்! ஆனால் இறைவா, நின் செயல் நற்பயனை விளைத்து வருகிறதா? கூர்ந்து நோக்கில் பயன் நன்றாக இல்லை.*

*இறைவா, பொய்-மெய் துணிதலே வாழ்க்கையின் நோக்கம்; பிறவியின் பயன். ஆனால், இன்றோ பெரும் பான்மையான விவாதங்கள் பொய்-மெய் துணிவதற்காக இல்லை. விவாதம் ஒரு பொழுதுபோக்கு. பலர் திண்ணையில் உட்கார்ந்து விவாதிப்பதிலேயே பொழுதைக் கழிக்கின்றனர்.*

*பல சமயங்களில் இந்த விவாதம் சூடேறி விபரீதமாகி விடுகிறது. பகைமூண்டு விடுகிறது. பிணக்குகளும் தோன்றி விடுகின்றன. விவாதத்தால் இந்த உலகில் விளைந்த தீமைக்கு அளவே இல்லை. இன்றும் அந்தத் தீமைகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. மத விவாதங்கள், மதச் சண்டைகளாக மாறி மதத்திற்கு நேர் எதிரான பலனைத் தந்துள்ளன.*

*இறைவா, நான் உன்னை நம்புகிறேன். உன்னைப் போற்றுகின்றேன்! உன் வழியில்-அறவழியில் வாழ்கின்றேன்! உன்னுடைய இந்தப் பரந்த உலகத்திற்குத் தொண்டு செய்கின்றேன்! இது போதாதா?*

*இறைவா, எனக்கு எதற்கு மதம், சாத்திரக் குப்பைகள், சடங்குகள்?*

*சாதி ஆசாரங்கள் எனும் சிறுபிள்ளை விளையாட்டுக் களிலிருந்து விடுதலை செய்க! "நீயுண்டு நானுண்டு" என்று வாழ்ந்திட அருள் செய்க! இறைவா, அருள் செய்க!*

## டிசம்பர் 7

### நிறை காணும் பண்பை எனக்கு வழங்குக!

*இறைவா, எந்த ஒன்றிலும் குறை காண முடியும். யார் மீதும் குறை காண இயலும். இதனால் என்ன நன்மை? "நிறையில்லாதவர் கண்களுக்கே குறை தென்படும்" என் ஆப்தமொழி நினைவிற்கு வருகிறது.*

*குறை-குற்றங்கள் காணல் எளிது; தூற்றுதல் எளிது. நிறை காணல் அரிய முயற்சி. நிறை காணும் முயற்சி யிலேயே அன்பு வளரும். உறவு வளரும். இறைவா, இந்த இனிய நிறை காணும் பண்பை எவ்விடத்தும் காணோமே?*

*இறைவா, என் மனம் ஏன் ஆத்திரப்படுகின்றது? அலமருகிறது? மற்றவர்கள் குறை காண்பதில்தானே சுறு சுறுப்பு. குறையை மறந்து நிறை காண முயன்றால் அது எனக்கும் நல்லது; மற்றவர்களுக்கும் நல்லது.*

*இறைவா, நிறைகாணும் பண்பை எனக்கு வழங்கு! குறைகளைக் கடந்ததே நிறை! அன்பு! ஆர்வம்! நட்பு! அமைதி!*

*இறைவா! உண்மைக்கு மட்டும் விசுவாசமாக இருந் தால் போதாது. ஒருவரிடம் கொண்ட நட்புக்கும் உறவுக்கும் கூட விசுவாசமாக இருக்க வேண்டும். அதற்குப் பிறகுதான் உண்மையிடம் விசுவாசம்.*

*இறைவா! உறவே முதல்-முடிவு எல்லாம்! இறைவா, நட்பு செய்யும் பாங்கினை அருள் செய்க! நிறைகாணும் பண்பை அருள் செய்க!*

## டிசம்பர் 8

### ஆற்றலில் சிக்கனம் வேண்டும்! இறைவா, அருள்க!

*இறைவா, என்னுடைய சேமநிதியே! நான் விரும்பும் துன்பத் தொடக்கிலாத சமுதாய அமைப்பைக் காண, உன் அருளால் வளர்த்துக் கொண்டுள்ளேன். நான் இன்று ஆற்றலுடையேன். ஆயினும் போதாது.*

*இறைவா, என்னுடைய பெருகி வளர்ந்த ஆற்றலை ஒருமுகப்படுத்தவில்லை. வெள்ளம் போன போக்குப் போல என் ஆற்றல் போய்க் கொண்டிருக்கிறது. என் ஆற்றல் ஒருமுகப்படுத்தப் படவில்லை! ஆதலால், ஆற்றல் இருந்தும் ஆற்றல் இல்லை என்பது போலாயிற்று!*

*இறைவா, நான் என்ன செய்ய? வேண்டி விரும்பிச் செய்கிறேன் இல்லை. தொல்லை தாங்க முடியவில்லை. இறைவா, நன்றருளிச் செய்தனை! என் ஆற்றலை ஒருமுகப் படுத்தச் சொல்கிறாய். நான் முயற்சி செய்கிறேன்.*

*எனக்குக் கொஞ்ச நாளாகவே பேச விருப்பமில்லை. இறைவா, இனிப் பேசாமல் குறிக்கோளை அடையும் வரையில் மௌனமாக இருந்து விடலாமா என்று கூட எண்ணம் வருகிறது.*

*ஆம், இறைவா, நீ அருளிச் செய்வது உண்மை! என் ஆற்றல் செய்ய வேண்டிய செயல்களுக்காக மிச்சப்படுத்தப் பெறுதல் வேண்டும். இறைவா, நான் இன்று முதல் சிக்கனத்தை என் ஆற்றலில் காட்டி என் ஆற்றலினை நான் ஏற்றுக் கொண்டுள்ள பணியில் ஈடுபடுத்த அருள் செய்க!*

*சிக்கனம் ஆற்றலில், பேச்சில், காலத்தில், செல்வத்தில் வேண்டும்! அச் சிக்கனத்தை என் வாழ்க்கையில் கடைப் பிடிக்க அருள் செய்க!*

## டிசம்பர் 9

### இறைவா, ஞானத்தை அருள்செய்க!

*இறைவா! 'கற்க' என்று திருக்குறள் சொல்கிறது. நாள் தோறும் கற்கின்றேன். எண்ணற்ற நூல்களைக் கற்கின்றேன். கற்றார் வாய் கேட்கிறேன். ஆயினும் என் இதயம் அடங்க வில்லை.*

*"நான்" என்ற முனைப்பு முடங்கவில்லை. "எனது" என்ற அகந்தை அடங்க வில்லை. எல்லாம் வேண்டும் என்ற ஆசை. மற்றவர்க்கும் வேண்டும் என்ற எண்ணம் இல்லை, கவலை இல்லை! மற்றவர் படுந்துயரம் கண்டு இரக்கப் படுகின்றேன் இல்லை. நான் எப்படி உய்வது?*

*இறைவா, "கற்பனவும் இனி அமையும்" என்ற ஆப்த மொழியை வாழ்க்கை மொழியாக ஏற்கலாமா? ஆம்! எண்ணற்ற நூல்களைக் கற்கும் முயற்சியினால் மட்டுமே நான் உய்தி பெறல் இயலாது.*

*இறைவா, அருளையே கண்ணாகக் கொண்டு - கலை ஞானத்தைக் கற்க முயன்றால் எளிதில் ஞானம் சித்திக்கும். இறைவா, "நான்" அடங்க வேண்டும். உன்னுடைய பேருருவாக விளங்கும் மனித சமுத்திரத்துக்குள் சங்கமமாக வேண்டும்.*

*இறைவா, நீ காட்ட நான் காண வேண்டும். அப் பொழுதுதான் காணாதனவெல்லாம் காணமுடியும். கேளா தனவெல்லாம் கேட்க முடியும். இறைவா அருள் செய்க! நின்னருள் வழியதே என்னறிவு, உணர்வு, செயல், ஞானம் எல்லாம். இறைவா, அருள் செய்க!*

## டிசம்பர் 10

### கணக்காக வாழ்ந்திட அருள்க!

*இறைவா, கணக்கு வழக்கைக் கடந்த நின் திருவடிகளைக் கண்டு தொழ அருள் செய்க! இறைவா, நின் அருள் நிலை கணக்கு வழக்கைக் கடந்தது. நானோ கணக்கினைக் கடக்கவில்லை. கடக்கவும் கூடாது. நான் எதிலும் கணக்காக இருப்பது என் வாழ்க்கைக்கு நல்லது!*

*இறைவா, எல்லையற்றவை, கணக்குகளைக் கடந்தவை யாக இருக்கலாம். நானோ எல்லாவற்றிலும் எல்லைகளை உடையவன் இல்லை. இறைவா! எல்லைகள் இல்லை யானாலும் எல்ல்லகளை உருவாக்கிக் கொண்டே வாழ்ந்து வருகிறேன்!*

*எல்லைகளையுடைய சூழ்நிலையில் நான் கணக்கைக் கடத்தல் இயலுமா? ஒருகாலும் இயலாது! நான் இம்மியும் பிழைபோகாது கணக்கோடு வாழ்ந்தால்தான் வாழமுடியும். இல்லையானால் படுதோல்வி வந்தடையும்.*

*ஒரு வேடிக்கை இறைவா, எங்கள் மனித உலகத்தில் காசு பணத்துக்குமட்டுமே கணக்கு வைக்கின்றனர்! வாழ்க் கையின் முதல், "காலம்" அல்லவா? காலத்திற்கு யாரும் கணக்கு வைப்பதுமில்லை. கேட்பதும் இல்லை! பலநொடிப் பொழுதுகள் கணக்கில்லாததால் பாழாகிப் போகின்றன.*

*இறைவா, நான் என் காலத்திற்குரிய பணிகளைத் திட்டமிட்டு அளந்து பயன்படுத்தும் உளப் பாங்கினை அருள் செய்க! இறைவா, என் வாழ்க்கையில் அடுத்த முதல் ஆற்றல்! ஆற்றலுக்குக் கணக்கு வைக்கும் பாங்கினை இனிமேலாவது தா!*

*என் ஆற்றல் கணக்கிடப்பட்டு, பணிகளுக்குத் தகுந் தாற்போலப் பகிர்ந்தளிக்கப் பெற்றால் ஏராளமான பணிகள் நிகழும். என் வாழ்வு கணக்காக அமைந்து கங்காளனாகிய நின்னை அடைய அருள் செய்க! இறைவா, கணக்காக வாழ்ந் திட அருள் செய்க!*

## டிசம்பர் 11

### இறைவா, நான், என் நெறியில் நிற்கும் உறுதியினை அருள்செய்க!

*இறைவா, பித்தனே! உன்னைப் "பித்தன்" என்று பாடிய பாடல்களைப்பாடி நான் மகிழ்கின்றேன்! ஆனால், புகழை விரும்புகின்றேன்! பெருமையை விரும்புகிறேன். ஏன் இறைவா, இந்த முரண்பாடு.*

*நான் பெருமையை விரும்பினால், புகழை விரும்பினால் அதைக் கொடுப்பவர்களையே நாடுவேன்! அவர்கள் பெரும்பாலும் இச்சை மொழிகளையே பேசுவார்கள்! அது போலவே, திரும்பிக் கொச்சை மொழியும் பேசுவார்கள்.*

*இறைவா, இந்த உலகத்தில் எல்லோரையும் திருப்தி செய்ய இயலுமா? ஒருபொழுதும் இயலாது. இறைவா, எனக்கு உடன்பாடில்லாதவர்களே இந்த உலகில் மிகுதி.*

*என்மீது பொறாமை கொண்டுள்ளவர்களே அதிகம்! இவர்களையெல்லாம் நான் திருப்தி செய்வது என்பது இயலாத காரியம், அவசியமில்லாத ஒன்று. இறைவா, நீ என் நெஞ்சத்தில் நின்றுணர்த்துகின்றனை! என் ஞானாசிரியர்கள் அப்பரடிகளும், திருவள்ளுவரும் உள்நின்று உணர்த்து கின்றனர். இது போதாதா எனக்கு!*

*இந்த வையகத்தில் நடந்து வந்த வரலாற்றின் வழி, எதிர் காலத்தை உய்த்துணரும் பொழுதில் என் நடையே சரி என்று தோன்றுகிறது. இதுபோதும். இறைவா! எனக்கு மற்றவர்கள் என்ன நினைக்கின்றார்கள், என்ன கூறுகின்றார்கள் என்பது பற்றிய கவலை வேண்டாம்.*

*நான் என் நெறியில் நிற்கும் உறுதியினை அருள் செய்க! சமூகம், "பேய்" என்று கூறினாலும் சரி! ஊரார் கூறும் வசையெலாம் வாழ்த்தென ஏற்றுக் கொள்ளும் இதயத்தினை அருள் செய்க! நான் உன் அடியான்! மக்கள் சேவகன்! இதுவே என் வாழ்வாக அமைய அருள்செய்க!*

## டிசம்பர் 12

### இறைவா, புகழ் விரும்பும் இச்சையைத் தவிர்த்தருளுக!

*இறைவா, என் நெஞ்சத்தில் துணையாய் அமர்ந்து துறப்பிக்கும் தூய தலைவா! இறைவா, துறக்கவேண்டும். மண், பெண், பொன், புகழ் ஆகியவற்றைத் துறக்க வேண்டும் என்று சான்றோர் கூறியுள்ளனர்.*

*இறைவா, ஆனால் இன்றைய துறவு நிலை? மண்ணைத் துறக்கவில்லை! பல ஆயிரம் ஏக்கர் நிலத்துக்குத் துறவி சொந்தக்காரர்! பொன்!-சொல்லவே வேண்டாம்! பொன் னணிகளையே அணிந்து கொள்கின்றனர்! இறைவா, பெண் துறக்கப்பட்டிருக்கிறாள்! பெண்வழித் துறவுகூட அச்சத்தின் வழிப்பட்டதே!*

*இறைவா, "புகழ்" எந்த ஒரு துறவியினாலும் இது துறக் கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை! இன்றைய துறவிகள் புகழுக்கு ஏங்கிக் கிடக்கிறார்கள்! இன்றைய துறவிகளிடம் பக்தர்களைவிட பத்திரிகைக்காரர்களுக்கே செல்வாக்கு அதிகம்!*

*இறைவா, புகழ் எதற்காக? அதுவும் வாழ்நாளில் சொல்லப் பெறுவது புகழா? இல்லை! இல்லை! வாழ்நாளில் சொல்லப்பெறுவது முகமன். முகம் நோக்கி அச்சத்தின் காரணமாகவோ, எதையோ ஒன்றை இச்சித்தோ சொல்லப் பெறுவது முகமன்! இது புகழன்று!*

*இறைவா, நான் முகமன் கேட்கும் விருப்பம் இல்லா திருக்க அருள் செய்க! புகழ் விரும்பும் இச்சையைத் தவிர்த் தருள்க! எனக்குப் புகழ் வேண்டாம். நான் உழைக்கக் கடமைப்பட்டவன்!*

*வேலை செய்வது எனது பிறப்புரிமை! ஒப்புரவு செய்தல் எனது சமுதாயக் கடமை! இவற்றை நான் செய்து வாழ அருள் செய்க! இறைவா, புகழ் எல்லாம் உனக்கே யாகட்டும்! இறைவா, புகழ் விழையா மனம் அருள்க!*

## டிசம்பர் 13

## இறைவா, உணர்ச்சி வசப்படுவதிலிருந்து என்னைக் காப்பாற்றுக!

*இறைவா, மோனத் தவமிருக்கும் முதல்வனே! உணர்வெலாம் கடந்த ஒருவனே! நின் திருவருள் போற்றி! போற்றி! இறைவா, என்னைச் சிலர் உணர்ச்சியற்றவன், மரக்கட்டை, என்றெல்லாம் ஏசுகிறார்கள்!*

*இறைவா, வாழ்க்கைக்கு உணர்ச்சி தேவையா? இறைவா, ஆம் உண்மைதான்! வாழ்க்கைக்கு ஏன் உணர்ச்சி? எதற்காக உணர்ச்சி? உணர்ச்சி விலங்குகளுக்கே உரியது!*

*மானிடர்க்கு ஏன் உணர்ச்சி? அவசியமில்லை! அப்படியா இறைவா? உணர்ச்சி புலால் தொடர்புடையது; புற உலக வயமானது. எளிதில் அழிக்கக்கூடியது, அழியக் கூடியது! உணர்ச்சி தன்னை நோக்கியதே. பிறரை நோக்கியதன்று.*

*இறைவா, என்ன அற்புதம்! உணர்ச்சியைப்பற்றி ஓராயிரம் உணர்த்தியருளிய நின் கருணைக்கு ஏது கைம்மாறு? இறைவா, நான் இனி உணர்ச்சி வசப்பட மாட்டேன்!*

*உணர்ச்சிக் களங்களை, காரண காரியங்களை ஆராய்ந்தறியும் துறையில் மடைமாற்றம் செய்து பயன் கொள்வேன்.*

*உணர்ச்சிக்கு எளிதில் ஆளாகும் பொறிகளை ஆளுமையுடன் தீர்வு காணும் நெறியில் திருப்பி விடுவேன். உணர்ச்சிக்கு எளிதில் இடம் தரும் சுயநலத்தை அடியோடு மாற்றிப் பிறர்நலம் பேணும் பெருநெறியில் சிறந்து நிற்பேன்!*

*உணர்ச்சிக்கு எளிதில் இடம் கொடுக்கும் தன் முனைப்பை அடியோடு மாற்றுவேன்! இறைவா! உணர்ச்சி வசப்படுவதிலிருந்து என்னைக் காப்பாற்று! நான் மனிதனாகச் சிறந்து வாழ்ந்திட அருள் செய்க!*

## டிசம்பர் 14

## இறைவா, இப்பிறப்பிலேயே விடுதலை பெற அருள் செய்க!

*இறைவா, பந்தமும் - வீடும் ஆகிய பரம்பொருளே! இறைவா, நீயே எனக்குக் கட்டுக்களையும் அருளிச் செய்தாய்! பின், வீட்டையும் அருளக் காத்திருக்கிறாய்!*

*இறைவா, நான் ஒரு பட்டுப் பூச்சி போல் ஆனேன்! நானே எனக்கு ஒரு சிறையை உண்டாக்கிக் கொண்டேன், பட்டுப்புழு தனக்கு ஒரு கூட்டைத் தானே செய்து அடைத்துக் கொண்டாற்போல! கூட்டில் அடைபட்ட பட்டுப்புழுதான், பட்டுப் பூச்சியாகிறது; பின் கூட்டை உடைத்து வெளியே வருகிறது, விடுதலை பெறுகிறது!*

*இறைவா! நான் எனக்காக விலங்கின் குணத்தன்மை யுடன் ஒரு சுற்றுவட்டம் அமைத்தேன்! அது ஒரு சிறைக் கூடம்! என்னடையது அது; "நான்" அதற்குக் காவற்காரன்! காலப்போக்கில், என்னைச் சுற்றி இருந்த சுற்றத்தை என்னுடைய நலன் கருதி நேசித்தேன்! பாவனையாக நேசித்தேன்! இதுவே என்னை மெல்ல மெல்ல வளர்த்தது. மனிதனானேன்!*

*நான் மனிதனான நிலையில் சுற்று வட்டத்தை உடைத்தேன்! மற்றவர்களிடமும் அன்பு காட்டினேன்! அவர் களுக்காக வாழ்ந்தேன். இறைவா, இதுவே என் வளர்ச்சி!*

*இறைவா, பட்டுப்பூச்சி கூட்டை உடைத்துக் கொண்டு விடுதலை பெற்றது போல நான் பூரண விடுதலை பெற அருள் செய்க! தியாகம் செய்யும் பாங்கினை அருள் செய்க, புகழ் பெறும் இச்சையிலிருந்து விடுதலை பெற அருள் செய்க!*

*இறைவா, நான் இப்பிறப்பிலேயே விடுதலை பெற வேண்டும்! இனியும் காலந்தாழ்த்த இயலாது இறைவா, கனிந்த அன்பு, தியாகம், சீலம், நோன்பு, ஞானம் இவற்றை அருளி இப்பிறப்பிலேயே ஆட்கொண்டருள்க!*

## டிசம்பர் 15

### இறைவா! வாழ்க்கையின் அச்சாகிய நம்பிக்கையை என் உயிரினும் மேலாகப் போற்றிட அருள்க!

இறைவா, நம்பினார் கெடுவதில்லை! இது நான்கு மறைத் தீர்ப்பு! இறைவா, நல்வாழ்க்கையின் அடித்தளம் நம்பிக்கை! தன்னம்பிக்கையும், பிறர்மீது நம்பிக்கையும் இன்றியமையாதன!

தன்னம்பிக்கையின்மை தன் வாழ்வையே கெடுக்கும்! பிறர் மீது நம்பிக்கையின்மை சமூக வாழ்க்கையைக் கெடுக்கும்! இறைவா, எனக்குரியன இரண்டு நம்பிக்கைகளுமே! இறைவா, என்ன இப்படிச் சொல்கிறாய்! எனக்கு இரண்டு நம்பிக்கைகளுமே இல்லையென்றா கூறுகிறாய்!

இறைவா, மன்னித்துக்கொள், மறுத்துக் கூறுவதற்காக! இறைவா, இரண்டுமே உண்டு! உண்டு என்று கூறக் கூடியவாறே இல்லை என்று கூறக்கூடிய அளவுக்கும் இருக்கு கிறது. இதுவே உண்மை!

இறைவா, மின் இணைப்பில் மின் தொடர்புக்கட்டை இறுக்கமான தொடர்பு இல்லையானால் மின்னோட்டம் நிகழாது மின்சாரமும் பயன்பாட்டுக்கு வராது.

இனி, நான் மனிதர்களை நம்புகிறேன். முற்றாக, முழுவதுமாக மனிதர்களை நம்புகிறேன்! நான் என்னை மேலும் செழுமைப்படுத்திக் கொள்வதன் மூலம் இன்னொருவரையும் செழுமைப்படுத்திக் கொள்ளும்படி செய்வேன்! இது இயலும்!

இனி நான் யாரையும் குறை சொல்ல மாட்டேன். யாரிடமும் குற்றம் காண மாட்டேன். அவர்களை முறைப் படுத்த ஓயாது உழைப்பேன்.

என் வாழ்க்கையில் நம்பிக்கையின் வெளிப்பாடுகளாகிய நாணயம், நேர்மை, திறந்தமனம், திறந்த வாழ்க்கை முறை ஆகியவைகளை நான் பேணிப் பாதுகாப்பேன். இறைவா, வாழ்க்கையின் அச்சாகிய நம்பிக்கையை நான் என் உயிரினும் போற்றுவேன்! இறைவா அருள்க.

## டிசம்பர் 16

### நீ, கற்பிக்கும் பாடம் உணர்ந்து வாழ, அருள்க!

*இறைவா! ஆலமர் செல்வா! கல்லாலின் கீழ் அமர்ந்து ஆசிரியப் பணி செய்த ஆண்டவனே! தென்முகக் கடவுளாக அமர்ந்து அறம் உணர்த்திய ஆசிரிய அண்ணலே!*

*நின் போதனையில் யாதொரு குறையுமில்லை! நான் தான் கற்றேன் இல்லை. இறைவா, வலது திருவடி மடித்து, இடது திருவடியை நிலத்தின் ஊன்றி அமர்ந்துள்ள காட்சியே ஒரு பாடம். ஆம், இறைவா! சக்தியால், உழைப்பால் நிலத்தில் ஊன்றி வளர்க என்பது பாடம்!*

*இறைவா, நின் கைமுத்திரை, சின்முத்திரை ஒரு காட்சியால் உணர்த்திக் கற்பிக்கும் பாடம். சுட்டுவிரலாகிய— உயிராகிய நான் ஆணவத்தால் தன் முனைப்புடன் கூட்டணி அமைத்துக் கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறேன்! செருக்கால் நிமிர்ந்த நிலை!*

*இந்த செருக்கு நிலை வாழ்க்கைக்குப் பயன்படாது. நான் கூட்டணியிலிருந்து முதலில் விடுதலை பெற வேண்டும். விலக வேண்டும். உன் திருவடியை அடைய வேண்டும்!*

*இறைவா! நல்ல பாடம்! ஆணவம் எனும் செருக்கி லிருந்து மீள அருள் செய்வாயாக! பொருள்மயக்கத்திலிருந்து மீட்பாயாக!*

*என்னை ஊழ்வினையின் பிடியிலிருந்து மீட்பாயாக! நின் தாளில் என் தலை பதித்து வணங்க அருள் செய்க! இறைவா, நீ கற்பிக்கும் பாடம் உணர்ந்து வாழ்வாங்கு வாழ அருள்க!*

## டிசம்பர் 17

### இறைவா, சடங்கு வழிபாட்டினின்றும் விலகி நின்னை நினைந்து அழுதுநிற்பேன்! அருள் செய்க!

*இறைவா, உன் திருவிளையாட்டு என்று சொல்வதா? அல்லது என்னையே நான் நொந்து கொள்வதா? என் மனம் உன்னைத் தேடுவதில்லையே! உன்னில் ஒன்றுவதில்லையே!*

*ஆனால், சடங்குகளே நின்னைக் காணும் வழி என்று நம்பி அலைகிறார்கள். சடங்குகளுக்கு நிறைய பேர் கூடு கிறார்கள்; பணம் நிறையச் செலவழிக்கிறார்கள்! பாழுக் கிறைத்துப் பழுதாகும் வாழ்க்கை! இறைவா, காப்பாற்று!*

*பாழுக்கிறைத்து பழுதாகுபவர்களைக் காப்பாற்று! உன்னைக் காண வந்தருள் செய்க! நின்னைக் காட்டு! என் கண்களால் காணத்தக்கவாறு வந்தருள் செய்க! நினக்குத் தொண்டு செய்ய அருள் பாலித்திடுக. நின் புகழ் பாட அருள் செய்க!*

*இறைவா, இனி, நின் புகழ் பாட வேண்டும். நின் னையே நினைந்து நினைந்து அழுதுநிற்பேன்; அருள் செய்க! நின்னை மறவாதிருக்க அருள் செய்க! ஒருகால் மறந்து விட்டால் நீ என்னை மறவாது இருக்கும் வரந் தர வேண்டும்.*

*இறைவா! எனக்குத் தந்தை நீ! ஆதலால், உனக்குப் தொழும்பாய்ப் பணி செய்வது என் கடன்! நீ எனக்குத் தந்தை போல இருந்தருள் செய்க! இது நம்மிருவருக்கும் பல தலைமுறைகளாக இருந்து வரும் கடன்! இறைவா, நினக்குத் தொண்டு செய்து, புகழ்பாட அருள் செய்க!*

## டிசம்பர் 18

## இறைவா, உனக்கு அடிமை பூண்ட நான் அவலப்படுதல் ஆகாது! அருள் செய்க!

இறைவா! ஏன் இந்தச் சோதனை? நான் அறியாதவன்! வலிமையற்றவன்! உன் கருணையால் உய்ய வேண்டியவன்! அப்படி இருந்தும் ஐம்பொறிகளாகிய கள்வரோடு கூட்டு வைத்துக் கொடுத்தனை!

ஐம்பொறிகளின் கூட்டு, என் வளர்ச்சிக்குத் துணை யாக இல்லை! நான் நாள்தோறும் இவைகளுடன் தொடர்ந்து போராட வேண்டியிருக்கிறது! போராட்டத் திலும் அவைகளே வெற்றி பெறுகின்றன! இறைவா, என்னைக் காப்பாற்று!

இவைகளுடன் கூட்டு இப்போதைக்கு அகலாது போலிருக்கிறது. இவைகளுக்கு வேறு நல்ல வேலை கொடுத்து எனக்கு உண்மையான கூட்டாக இருக்கப் பணித்தருள் செய்க!

ஐம்பொறிகளின் சேட்டைகளால் நான் செய்த பிழை களைப் பொறுத்தாள்க! இனிமேல் பிழைகள் வராமல் காத்தருள்க! நான் உனக்கு அடிமை; நீ என்னை ஆண்டருள் செய்யும் கடமை உடையவன்! உனக்கு அடிமை பூண்ட நான் அவலப்படுதல் ஆகாது! என்னைக் காப்பாற்று!

என் கண்களுக்குக் கைபுனைந்து இயற்றாத அழகு மிக் குடைய இயற்கை எழிலைக்கண்டு மகிழ ஆணை தந்திடுக! என் செவிகள் நல்லனவே கேட்க, நின்னுடைய பொருள் சேர் புகழைக் கேட்கவேண்டும்.

இறைவா, நின் புகழை நான் நாளும் இசைத்திடுதல் வேண்டும். நின்னுடைய மணமே நுகர்ந்து அனுபவித்திடுதல் வேண்டும். இறைவா! இயற்கை எழிலைக் கண்டு மகிழ்ந்து வாழ அருள் செய்க!

கு. X. ௨௪.

## டிசம்பர் 19

### இறைவா, உயிரிரக்கமே என்னுடைய ஒழுக்கமாக அமைந்திட அருள் செய்க!

*இறைவா! நான் பக்தி செய்ய ஆசைப்படுகின்றேன். நான் பக்தனாக வேண்டும் என்ற ஆர்வத்தால், நாள்தோறும் உன் சந்நிதிக்கு வருகின்றேன்! வணங்குகின்றேன்! உன்னைப் புகழ்ந்து பாடுகின்றேன்! ஆனால் என் மனத்தில் நெகிழ்ச்சி இல்லை; மனம் உருக மறுக்கிறது? ஏன் அழுவதற்குக்குக் கூட வெட்கப்படுகிறது? ஏன் இறைவா?*

*அப்படியா, இறைவா! நான் உன்னைச் சுற்றிச் சுற்றித் தான் வருகின்றேன்! இந்த உலகம் உன்னுடையது என்பதை நான் மறந்து விடுகின்றேன்! எல்லா உயிர்களும் உன்னுடைய வடிவம் என்பதை மறந்து விடுகின்றேன்!*

*அம்மையப்பராகிய நீயே இந்த உலகுக்கு அம்மை யப்பர்! எல்லா இடத்திலும்-எல்லா உயிர்களிடத்திலும் நீ பரவி இருக்கின்றாய். நீ இன்றி ஒன்றில்லை. இந்த உண்மையை நான் அறிந்தும் உணர்ந்தும் ஒழுகுதலே பக்தி.*

*இதனால் எவ்வுயிரிடத்தும் நான் மாறுபடுதல் கூடாது! பகை கூடாது! இவை சிந்தையிலும் கூடாது. உயிரிரக்கமே பக்தியின் களம்; உயிரிரக்கமே பக்தி.*

*உயிரிரக்கம் அன்பினைத் தரும், இன்ப அன்பினைத் தரும், அருளைத்தரும். இறைவா! எல்லா உயிர்களிடத்தும் உள்ளத்தாலும் செயலாலும் அன்பாக இருக்கும் அருளைச் செய்வாயாக! உயிரிரக்கமே என்னுடைய ஒழுக்கமாக அமைந்து மன நிறைவு பெற்றிட அருள் செய்க!*

## டிசம்பர் 20

### "சத்து—சித்து—ஆனந்தம்" சச்சிதானந்தமே! நின்னருளே துணை! அருள் செய்க!

*இறைவா! என்னுடைய அன்பே! இன்பமே! நான் இன்பத்தை விரும்புகின்றேன்; எல்லையற்ற இன்பத்தை விரும்புகின்றேன். இன்பம் என்ன? வாங்குவதற்குக் கடைச் சரக்கா? இல்லையே!*

*இன்பத்தின் வாயிலாகிய சத்தியத்தை-உண்மையை நான் பற்றினால்தானே இன்பம் கிடைக்கம். சத்தியம்-உண்மை இன்பத்தின் ஊற்றுக்களன்! நான், மனம், மொழி மெய்களால் உண்மையைக் கடைப்பிடிக்க வேண்டும்.*

*அகமும்-புறமும் ஒத்து வாழ வேண்டும்! இறைவா அருள் செய்க! அறிவு தேவை. உலகம் வளர்கிறது! நானும் வளர்கிறேன். வளர்ச்சி நிலைமைகளுக்கு ஏற்ப அறிவும் வளர வேண்டாமா? வளர வேண்டும்.*

*அறிவு தேடும் வேட்கை தேவை. நூலறிவு, செவியறிவு, பட்டறிவு மூன்றும் தேவை! இறைவா! இந்த அறிவை அயர்வின்றித் தேடிப் பெறும் உணர்வினை வழங்கி அருள்க!*

*உண்மையும் அறிவும் என் வாழ்க்கையில் இடம் பெற்றால்தான் ஆனந்தத்தினை அடைதல் கூடும். இந்த மெய்ப் பொருளை விளக்கத்தானே இறைவா, சத்து—சித்து—ஆனந்தம் (சச்சிதானந்தம்) என்ற பெயர் பெற்றனை!*

*இறைவா, நான் உனையடைந்தேன்! சத்திய வேட்கையைக் கொடு! அறிவை நல்குக! இன்ப அன்பாக என்னிடத்தில் நின்றருள் செய்க! இறைவா! சச்சிதானந்தமே! நின்னருளே துணை! மகிழ்ந்து மன நிறைவு பெற்றிட அருள் செய்க!*

## டிசம்பர் 21

### இறைவா, நான் விளக்கமுற நானே பொறுப்பேற்கும் நயத்தக்க வாழ்வினை நல்கியருள்க!

*இறைவா, தேசமெலாம் விளக்கும் என் தெய்வமே! அந்தத் தேசத்தில் நான் ஒருவன் இல்லையா? என்னை விளக்கமுறச் செய்யக் கூடாதா?*

*இறைவா, எனக்கு ஏராளமான செய்திகள் தெரியும். அதுவும் அடுத்தவர் குற்றங்கள் அனைத்தும் தெரியும்! ஆனால், இறைவா, எனக்கு என்னைப் பற்றித் தெரியாது! எனக்குத் தெரிந்ததும் தெரியாது! தெரியாததும் தெரியாது! நான் யார்? ஒரு மனித உருவம். அவ்வளவுதான்! இறைவா, இஃதோர் இரங்கத்தக்கநிலை. என்னைக் காப்பாற்று!*

*என்னை நானே துன்பத்தின் ஆட்படுத்திக் கொள் கிறேன்! எனக்கு நானே எதிரி! இறைவா, என்னை அறியும் அறிவை, துணிவை எனக்குத் தந்தருள் செய்க!*

*நாள்தோறும் என் வாழ்நாளின் கணக்கையும் சரி பார்த்து ஆன்ம லாபத்தில் இழப்பு-ஈட்டம் பார்க்கும் பழக்கத் தினை ஏற்றுக் கொள்ள அருள் செய்க! நான் விளக்கமுற என்னை நானே ஆய்வு செய்து கொண்டு திருத்தமுறுதல் வேண்டும்.*

*இறைவா, தன்னாய்வு முறையைத் துணிவோடு ஏற்கும் நிலையினை அருள் செய்க! ஒரோவழி என்னை மற்றவர் ஆய்வு செய்து சொன்னாலும் ஏற்கும் மனப்பாங்கினைத் தா! நான் விளக்கமுற நானே பொறுப்பேற்கும் நயத்தக்க வாழ்வினை வழங்கி அருள் செய்க!*

## டிசம்பர் 22

## எனது நாடு அமைதியோடு நிலவிடவும் எல்லோருக்கும் நான் அன்பு காட்டவும் இறைவா அருள்க!

*இறைவா, பொதுவில் ஆடும் ஆடல் வல்லானே! போற்றி! போற்றி!! எனது நாடு இப்படிக் கலகக்காடு ஆகிறதே! இறைவா, இதனைக் காக்க உனக்குத் திருவுள்ளம் இல்லையா?*

*இறைவா, நீ மகிழ்ந்து திருவிளையாடல்கள் நிகழ்த்திய நாடல்லவா? புண்ணிய பூமி என்றெல்லாம் புகழ்கிறார்கள்! ஆனால் இன்றைய நடப்புகள் அப்படி இல்லையே? இறைவா! என் நாட்டைக் காப்பாற்று!*

*இறைவா, ஆம், உண்மை! நீ ஆயிரம் ஆயிரம் தடவை அருளாளர்கள் மூலம் எனக்கு எடுத்துக் கூறியும் நான் திருந்திய பாடில்லை! தனி மனித முனைப்பு, அலட்சியப் புத்தி, தன்னயப்பின் மிகுதி, இவைகளால் நின் அடியார்கள் கற்றுத் தந்த அறிவுரைகள் பயன்படாமல் போய் விட்டன!*

*நான் சார்புகள் காரணமாக அன்பு காட்டுவதில்லை. ஏன்? என்னைச் சாராதவர்கள் எனக்கு உடன்பாடில்லாத வர்கள்; இந்த உலகில் வாழ உரிமையில்லாதவர்கள் என்றே முடிவு செய்கிறேன்! நானே அதிகாரத்தைக் கையில் எடுத்துக் கொள்கிறேன்! இறைவா, இந்த நிலையிலிருந்து எடுத்தாள்க!*

*இறைவா என் நாட்டை மீட்டருள்க! நான் விருப்பு வெறுப்பின்றி எச்சார்புகளையும் சார்ந்து வாழ்தல் வேண்டும். இத்திறனை அருள் செய்க!*

*இறைவா, எல்லாருக்கும் நான் அன்பு காட்டுதல் வேண்டும். நல்லன செய்ய வேண்டும்! உலக உயிர்கள் அனைத்தும் மகிழ்வாய் வாழ வேண்டும்! இந்த உயர் உள்ளத் தினை இறைவா, எனக்குத் தா! அன்பு அமைதி பெருக அருள் செய்க!*

## டிசம்பர் 23

### இறைவா, எந்நாளும் பணி செய்து கிடக்க அருள் செய்க!

*இறைவா! இருளும் ஒளியும் ஓரிடத்தில் கண்ணுக்குத் தெரியும் வகையில் இருக்காது, இருத்தல் இயலாது. இறைவா! "நான்" இருக்கும் வரை நீ இருத்தல் இயலாது. "நான்" என்பது பொதுமையுள் அடங்க வேண்டும் அல்லது அற்றுப் போக வேண்டும்.*

*"நான்" எளிதில் அடங்காது; அதுவும் இந்த யுகத்தில் அடங்காது. இறைவா! இது ஜனநாயகயுகம்! மக்களாட்சி முறையில், அதிகாரத்திற்கு இடம் இல்லை. தொண்டு உண்டு, பணி இருக்கும்; ஆயினும் இந்த நாட்டு நிலை வேறு.*

*இந்நாட்டில், அடங்காத அதிகாரப் பசி; இந்தப் பசி யையும் எடுத்து விழுங்கும் விளம்பரப் பசி! ஆம், இறைவா, காரியம் நடக்கிறதோ இல்லையோ? பத்திரிகைச் செய்தி- பாராட்டுக் கூட்டங்கள் ஆகியன இன்றைய சமுதாயத்திற்கு வெளிச்சம் போல்வன!*

*இந்தயுகத்தில் "நான்" எப்படி அடங்கும்? நான் என்னும் அகங்காரம் நீங்க வேண்டும். அந்த இடத்தில் நின் அருளாட்சி நடக்க வேண்டும், இறைவா, திருவுள்ளம் பற்றுக!*

*'நான்' இருப்பது தெரியாமலே வாழ்தல் வேண்டும். என் தலை வெளியே தெரியக் கூடாது. மண்ணிற்குள் வேர் போல இருக்க வேண்டும். இறைவா அருள் செய்க! பணி செய்து கிடக்க அருள் செய்க! நாளும் நினக்குப் பணிசெய்து கிடப்பதே என் பணியாக அருள்க!*

## டிசம்பர் 24

**வையகம் துயர் நீங்க நான் துன்புறும் வாழ்க்கையை அருள்க!**

*இறைவா! துன்பப்படுகிறவர்கள் பாக்கியவான்கள். இது நின் அருள் வாக்கு! இறைவா, துன்பப்படுவதில் எனக்கு மறுப்பு இல்லை!*

*இறைவா, ஏசுபிரான் மற்றவர்கள் பாவத்தைக் கழுவ, சிலுவையில் துன்பப்பட்டார். அப்பரடிகள் நீற்றறையில் கிடத்தப்பட்டுத் துன்புற்றார்! திருஞானசம்பந்தர் தங்கியிருந்த இடம் தீயிடப் பெற்றுத் துன்புற்றார்.*

*உலக உயிர்களின் உய்திக்காகவும் உயர் நோக்கங்களுக் காகவும் விழுமிய துன்பங்களை அனுபவித்தால் அது பேறு; பாக்கியம் ஆகும்! இறைவா! எனக்கு இத்தகைய துன்பங்கள் யாதொன்றும் வரவில்லை!*

*உடற்பிணியால் துன்பம்! வறுமையால் துன்பம்! உட்பகையால் துன்பம்! இவையெல்லாம் விலைமதிப்பு மிகுதியுடைய வாழ்க்கையைக் கெடுக்கின்றன. இம்மையையும் கெடுக்கின்றன. ஏழேழ் பிறப்பையும் கெடுக்கின்றன!*

*இறைவா, நான் துன்புற்று உழலவே விரும்புகின்றேன்! அத்துன்பம் விழுமிய துன்பமாக இருக்க வேண்டும்! விண்ண கத்தைத் தரும் துன்பமாக இருத்தல் வேண்டும்! உயிர்க் குலத்தின் உய்திக்காகப் படும் துன்பம் இன்பமாக அமைதல் வேண்டும்!*

*இறைவா, வையகத்தின் துயர் நீங்க நான் துன்புறும் வாழ்க்கையை அருள் செய்க! வையகம் வளர, வாழ உழைத்திடும் துன்ப வாழ்க்கையே என் பேறு! அருள் செய்க!*

## டிசம்பர் 25

### இறைவா, மண்ணில் ஞானதீபம் ஏற்றுக!

இறைவா, அன்று ஏசுபெருமான், மண்ணில் விண்ணரசு வேண்டும் என்று விண்ணப்பித்தார்! அது மிகப் பெரியது மட்டுமன்று. புத்திசாலித் தனமான வேண்டுகோளு மாகும். ஆம், இறைவா!

இன்று மண்ணை மனிதர்கள் ஆளுகின்றனர்! எப்படி ஆளுகின்றனர்? இறைவா, இந்த அரசினால் யாது நன்மை? மாறாகத் தீமையே நன்மைபோல ஊடுருவுகிறது! ஆம், இறைவா! சாராயக்கடைகளின் சாம்ராஜயம்! பரிசு மழை? விலைவாசிகள் கட்டுப்பாடின்றி ஏறிக்கொண்டே போகின்றன!

ஆசிரியர்கள் அடியாட்களாகின்றனர்! சாமியார்கள் கலகக்காரர்களாகின்றனர்! முற்றுந்துறந்த முனிவர்களிடையிலும் புகழ்ப்போட்டி! இறைவா, தாங்க முடியவில்லை இந்தக் கொடுமை! இறைவா, நின்னரசை மண்ணில் நிலைநாட்டு! இறைவா, மண்ணில் ஞானதீபம் ஏற்றுக!

"நான்", "எனது" என்னும் செருக்கினை அகற்று. சாராயக் கடைகளை மூடு! பரிசுச் சீட்டுகளை நிறுத்து! அன்பமைதியே வாழ்க்கை! அன்பமைதியை வழங்கி வாழ்வித்திடுக! இறைவா, அன்பு ஊற்றெடுக்கும் இதயமே எனக்குத் தேவை. மண்ணில் ஞானதீபத்தினை ஏற்றி அருள்க!

## டிசம்பர் 26

### இறைவா, பழகிய பழக்கத்தைத் தொடர்ந்து பராமரிக்க அருள்க!

இறைவா, ஏறுமயிலேறி விளையாடும் அண்ணலே! ஆம் இறைவா! சூரன் வாழ்க்கையில் ஏறும் இயல்பினன்! ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையில் ஏற்றம் பெறும் இயல்புகள் உண்டு! ஆனால், வழிதவறிப் போகும்பொழுது ஏற்றத்தை இழக்கின்றனர்! அப்போதுதான் இறைவனின் கருணை தேவைப்படுகிறது!

இறைவா, நீ சூரனின் இயல்பறிந்து அவனுடைய துடுக்குத் தனத்தைப் பார்த்து வெறுத்துப் புறத்தே ஒதுக்க வில்லை. நீ அருளும் திறத்துடன் சூரனுடன் போராடினாய். பின் ஆட்கொண்டருளினாய்! இறைவா, பின்பும் அவனைத் தனியே விட்டுவிடவில்லை. அவனை அருகிலேயே வைத்துக் கொண்டாய்! ஏறுமயிலாகப் பயன்படுத்திப் பெருமை அருளினை!

இறைவா, நின் செயல் ஒரு வாழ்க்கைத் தத்துவத்தின் வெளிப்பாடு! "விடப்பட்டவர்கள் பேய்களாவார்கள்" என்பது ஓர் உண்மை! இறைவா, என் வாழ்க்கையிலும் இந்தச் செயற்பாடு அமைய அருள் செய்க!

இறைவா, நான் யாரையும் அந்நியமாக ஆக்கக் கூடாது! பழகியவர்களை இடையில் விடக்கூடாது! பழகிய வர்களிடம் பகைகொள்ளக்கூடாது! இறைவா, அருள் செய்க! நான் சுற்றிச் சுற்றி வந்து பெற்ற மனித உறவுகளைப் பராமரிக்க வேண்டும்!

இறைவா, என்னோடு பழகிய ஒவ்வொருவரும் நான் அவர்களை நினைவில் வைத்திருப்பதாக எண்ணி மகிழ்ச்சி அடையத் தக்க வகையில் என் கடப்பாடுகள் அமைய அருள் செய்க! இறைவா நிலையான அன்புடன் அனைத்து உயிர் களிடத்தும் பழகி மகிழ அருள் செய்க!

## டிசம்பர் 27

### தீமைக்குக் காரணமாகிய தற்சார்புகளை நீக்கி ஒருமைப்பாட்டுடன் வாழ அருள் செய்க!

*இறைவா! எந்நாட்டவர்க்கும் இறைவா! நீ ஒரு விசித்திரமான தலைவன். நீ அன்பு! நீயே அன்பு! நீ கருணைக் கடல்! ஆயினும் உனக்குப் பன்னெடுங்காலமாகத் தொழும்பு பூண்ட இந்த மானிட சாதியை ஏன் பகை மூட்டத்திற்குள் சிக்கித் தவித்து அழியும்படி செய்கிறாய்!*

*ஐயனே! எண்ணத் தொலையாத பிரிவினைகள்! பிரிவினை வழிப்பட்ட நச்சுத்தன்மை வாய்ந்த கசப்புணர்ச்சி, காழ்ப்புணர்ச்சி, பகைமை, கலகம், கொலை, இன்னோரன்ன தீமைகளில் இந்த மனித உலகம் அழிந்து கொண்டிருக்கிறது! இறைவா, உனக்குக் கருணை இல்லையா? எங்களைக் காப்பாற்று.*

*மனித உலகில் எந்தப் பிரிவினையும் கூடாது. வேற்றுமைகள் அனைத்தும் செயற்கை; மனிதனின் படைப்பு! இறைவா, உலகம்— மனித உலகம் வாழ ஒருமைப்பாடு தேவை! ஒருமைப்பாடு உடைய மனித உலகத்தைக் காணும் ஆற்றலினை அருள் செய்க!*

*இறைவா, நான் சார்புகளின் வழி அமைபவன்! என் சுபாவம்கூட என் சார்புகளுக்கு ஏற்றாற்போல விளங்க வேண்டும். புதிய சார்புகளைப் பெறுதல் என்பது நின் திருவுள்ளம்! தீமைக்குக் காரணமாகிய தற்சார்புகளை நீக்கி வாழ்ந்திட அருள் செய்க!*

*இந்த உலகம் உன்னுடையது! இந்த உலகில் உள்ள அனைத்தும் உன்னுடைய உடைமைகளே! எனக்கிங்கே என்ன அதிகாரம் வேண்டியிருக்கிறது? அதிகாரம் வேண்டவே வேண்டாம், இறைவா!*

*இறைவா! ஒருமைப்பாடே உன்னை வழிபடும் மந்திரம்! ஒப்புரவே உனக்குச் செய்யும் வழிபாடு! ஒருமைப்பாடு, ஒப்புரவு ஒழுக்கங்கள் என்பால் அமைய அருள் செய்க! இறைவா, ஒருமையுடன் நின் மலரடி போற்றி மகிழ்ந்து வாழ அருள் செய்க!*

## டிசம்பர் 28

### இறைவா! உன்னைக்காணும் வழியை உணர்த்துக!

இறைவா! "மெய்ப்பொருள் காண்பதறிவு" என்பது திருக்குறள். அதாவது உண்மையைத் தேடுதல் அறிவு! இறைவா! எது உண்மை, எது உள்பொருள், எது என்றும் உள்ள பொருள் என்று தேடுவது?

எந்தப் பொருளால் நிலையான பயன் கிடைக்குமோ அது உள்பொருள்; உண்மைப் பொருள்! இறைவா, நீயே உண்மை! நீயே, மெய்ப்பொருள்! ஆனால் உன்னைத் தேடும் ஆர்வம் இல்லையே? ஒரோவழி தேடினாலும் நீ இருக்கும் இடத்தில் நான் தேடுவதில்லை.

இறைவா! நீ எங்கிருக்கிறாய்? இறைவா! நீ எங்கும் இருக்கிறாய்! சில இடங்களில் விளங்கித் தோன்றுகிறாய்! இறைவா! எல்லா உயிர்களிடத்திலும் நீ விளங்கித் தோன்று கிறாய்!

இறைவா, உலக உயிர்களை நேசித்து அன்பு காட்டி னால் உன்னைக் கண்டு கொள்ளலாம். இதுவே உண்மை! முதலில் உன்னைத் தேடும்வழி சரியாக இருத்தல் வேண்டும். நீ வேறு, நான் வேறு! நானே நீ என்றாகி விட்டால் தேடும் முனைப்புத் தோன்றாது.

இறைவா, நீ என்உள்ளும் இருக்கிறாய்! உன்னை நான் காண வேண்டும். உன்னைக் காண்பதற்குரிய ஒரேவழி உயிரிரக்கம் காட்டுவதேயாகும்.

மனத்தால்—மொழியால்—உடம்பால் மற்ற உயிர் களுக்கு நன்மை செய்து வாழ்வதே— உண்மையைத் தேடுவ தற்கு— உன்னைத் தேடுவதற்குரிய ஒரே வழி! இறைவா உன்னைக் கண்டு மகிழும் வழியை அருள்க!

## டிசம்பர் 29

## இறைவா, மற்றவர்க்குச் சங்கடம் தரும் உண்மையினைச் சொல்லாத நெறி நிற்க, அருள் செய்க!

இறைவா! உண்மையுமாய், இன்மையுமாய் விளங்கும் இறைவா! உண்மையைச் சொல்லத்தான் ஆசைப்படுகிறேன்! ஆனால், அச்சம், உண்மை சொல்வதைத் தடை செய்கிறது! இறைவா, என்ன அச்சம் என்றா கேட்கிறாய்?

நான் உண்மையென்று நினைப்பதைக் கூறினால் பலருக்கு நெஞ்சினை உறுத்தும், வருத்தமுறச் செய்யும் என்று எண்ணுகிறேன்! இறைவா! ஆம் இறைவா, அதுவும் கூட உண்மைதான்! அவர்களால் நமக்குத் தீங்கு நேர்ந்தால் என்ன செய்வது என்ற தயக்கம்! இறைவா, இவ்வகையான அச்சம் கோழைகளினுடையதா?

தீங்குவரும் என்று கருதித் தீங்கு செய்யாமை அற மன்று! தீங்கு செய்யக்கூடாது என்பதற்காகவே தீங்கு செய்யா திருப்பதுதான் அறம், ஒழுக்கம் வாய்மை நெறி! ஆம் இறைவா, உண்மையைச் சொல்லாது போனால் பொய்ம் மையை எப்படி நீக்குவது?

ஒரு தீமையை நீக்கப் பிறிதொரு தீமை செய்வது அறமன்று; வாழ்வியல் நெறியுமன்று! தீமைக்குத் தீமை என்றால் தீமையின் வட்டமே சுழன்று கொண்டிருக்கும். பொய்ம்மையை — பொய்ம்மையுடையவரை அணுகி வாய்மை நெறி காட்டிப் (பொய்ம்மையைக் காட்டாமல்) பழகினாலே பொய்ம்மை அகலும்!

"பையத் தாழுருவி" என்ற திருவாசகம் நினைவுக்கு வருகிறது. "பொய்ம்மையும் வாய்மையிடத்த" என்றார் திருவள்ளுவர்! ஆதலால் இறைவா! நான் உண்மையைத் தேட அருள் செய்க! ஆனால், மற்றவர்க்குச் சங்கடம் தரும் உண்மையினைச் சொல்லாமை என்ற நெறி நிற்க அருள் செய்க!

## டிசம்பர் 30

### நீ பெரியோன்! வள்ளல்! அதற்கேற்ப அருள் செய்க!

*இறைவா, நான் உனக்கு அடிமை! ஆயினும் உன்னுடைய அருளை யாசிக்கின்றேன்! அன்பிலே, உவகையின் முகட்டிலே நிற்கும் பொழுதெல்லாம் என்னை இழக்கின்றேன். இந்த நிலையில் அறிவும் கை கொடுப்பதில்லை.*

*இறைவா, அறியாமைச் சூழ்நிலையில் நான் அனாசாரமான காரியங்கள் பலவற்றைச் செய்கின்றேன். இறைவா, உனக்கு உவப்பில்லாதனவாகவுள்ள காரியங்களையும் செய்கின்றேன். இறைவா! இவையெல்லாம் நான் வேண்டும் என்று செய்வதில்லை! அறியாமையினால் செய்கிறேன்.*

*இறைவா என் சிறுமை கருதிப் பொறுத்தருள் செய்க! நான் என் பிழைகளைத் திருத்திக் கொள்ள முயல்கின்றேன்! நீயும் என்னைப் பிழைகளிலிருந்து மீட்பாயாக!*

*இறைவா! நான் அறிவில்லாதவன் என்ற உண்மையை அறிந்தே என்னை ஆட்கொண்டனை! நான் அறியாப் பதங்களைத் தந்தருளினை! இன்று என் பிழைகளைக் கண்டு சீறலாமா? அல்லது பாராமுகமாய்த்தான் இருக்கலாமா? ஒருகாலும் கூடாது.*

*இறைவா, எங்கள் நாட்டில் பிழுக்கையை நீக்கி பாலைக் கொள்வர். மணல் ஒட்டிய கனிகளை ஊதித் தூய்மை செய்து உண்பர்! இறைவா! அங்ஙனமே நான் உனக்கு!*

*இறைவா, நான் உன் அடிமை. என் பிழைகளைத் தவிர்த்து என்னை ஆட்கொண்டருள்க! நீ பெரியோன். அதற்கேற்ப அருள் செய்க!*

## டிசம்பர் 31

### இறைவா, ஞானப்பேரொளி வழங்கி அருள்க!

*இறைவா, ஜோதியே! சுடரே! சூழொளி விளக்கே! நீ அருட்பெருஞ்ஜோதி! ஞானப்பேரொளி! உன்னை அறிவால் அறிதல் இயலாது. பொருளால் அறிதல் இயலாது!*

*நாளும் புருவ நடுவில் ஒளிச்சுடர் ஏற்றிக் காணின் காணலாம்! உன்னைக் காண, அறிய, அனுபவிக்க ஆயிரம் ஆயிரம் சடங்குகள் செய்கின்றேன்! ஆயினும் நின்னைக் கண்டறிந்தேனில்லை.*

*இறைவா, நின்னைக் காண உள்ளத்தே நோக்க வேண்டும்! ஒருகணம் நோக்கினும் சாலும்! இறைவா, அது தானே இயல்வதில்லை! உன் ஞானத்தை அனுபவிக்க, கற்ற நூல், அறிவு, கை கொடுப்பதில்லை! நோன்புகளும் துணை செய்வதில்லை!*

*இறைவா, நீயே பற்றுக்கோடு என்ற தெளிவுமிக்க துணிவு தேவை! இறைவா, இந்த ஞானத்தைக் கொடு! ஒவ் வொன்றாக ஒழிந்து ஒடுங்கும் தவத்தினைத் தந்தருள் செய்க! உயிர்க்கு உயிராக விளங்கும் உன்னை ஒளி விளக்காக— அறியாமை இருளகற்றும் ஞான விளக்காக ஏற்றிப் போற்றிட அருள் செய்க!*

*ஞானத்தினை அருள் செய்க! ஞானத்திற்குரிய பர மோனத்தை அருள் செய்க! மோனத்தின் எல்லையில் ஆன்மாவின் பரபரப்பு அடங்கட்டும்! அறிவின் ஆர்ப் பாட்டங்கள் அடங்கட்டும்! செல்வத்தின் அகந்தைகள் அழியட்டும்! என் அகத்தே வளர்ந்துள்ள அகந்தைக் கிழங்கு அகழ்ந்தெடுக்கப்படட்டும்! இறைவா, அருள் செய்க!*

*ஒளி வழங்கி அருள்க! ஞானப் பேரொளி வழங்கி அருள்க! ஜோதியாக நின்று என் ஆணவக்காட்டை எரித்து அருள்செய்க! என் ஆன்மா, உடல் அனைத்தும் ஒளிமயமாகி நின்றிட அருள் செய்க! சூழொளி விளக்காகி என்னைக் காட்டியருள்க! சுடரொளியாகி இந்த உலகைக் காட்டி அருள் செய்க! இறைவா ஞானப் பேரொளி வழங்கி ஆருள் செய்க!*

# மணிவாசகர் பதிப்பகத்தின் பரிசு பெற்ற நூல்கள்

உலகப் பெருங்கவிஞர் கம்பர்
திருமுறையும் திருக்கோயில்களும்
கலைவாணன் கவிதைகள்
சுற்றுலா வளர்ச்சி
வண்ணங்கள் வடிவங்கள்
கம்ப்யூட்டர்
தமிழ்நாட்டுச் சத்திரங்கள்
சிறுவர் நல்வழிப்பாடல்கள்
தமிழ்நூல் தொகுப்புக் களஞ்சியம்
பண்பாட்டு மானிடவியல்
தனித்தமிழ் இயக்கம்
நோய் அறிதல்
மண்சுமை
கல்வெட்டில் வாழ்வியல்
மலையாள மொழியில் முதல் இலக்கணம்
தகவல் தொடர்பியல்
அறிவியல் ஆயிரம் தொகுதி (1-2)
தமிழிசை இயக்கம்
மரங்கள்
உரையாசிரியர்கள்
பரிபாடல் திறன்
இசையியல்
கம்பர்
திருவருட்பா சிந்தனை
திருக்குறள் கூறும் உறுதிப் பொருள்

தமிழ் மொழி வரலாறு
தாகூர்
தொழுநோய்
மொழி வளர்ச்சியும், மொழி உணர்வும்
மணிக்கொடி காலம்
வீரர் உலகம்
ஊருக்குள் ஒரு புரட்சி
வேரில் பழுத்த பலா
தமிழகக் கலை வரலாறு
இலக்கண வரலாறு
கல்லெழுத்துக் கலை
இந்திய அரசமைப்பு
இரணியூர்க் கோவில்
நேமம் கோவில்
இலக்கண உருவாக்கம்
பகுத்தறிவுக் கும்மி
தமிழ்நாடு சட்டமன்ற மேலவை
வயிரவன் கோயில்
ஐ.நா. மனிதகுல நம்பிக்கை ஒளி
காதல் காவியம்
இதழியல்
மாணிக்கச் செம்மல்
சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே
கவிதை உருவாக்கம்
திரைஇசை அலைகள்
காமன்வெல்து நாடுகள்
சங்க இலக்கியக் களஞ்சியம்

தமிழ்மாமுனிவர்
தவத்திரு

# குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை

திருக்குறள்
இலக்கியம்
சமய இலக்கியம்
சமயம்
பொது